# சித்தர் சிவவாக்கியரின் பாடல்களில் வாழ்வியல் சிந்தனைகள்

பாரதிதாசன் பல்கலைக்கழக முனைவர் (Ph.D.) பட்ட ஆய்வேட்டுத் திட்டப் பாடப்பகுதிக்காக அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**ஜெ. திருப்பதி,** எம்.ஏ., பி.எட்.,

(பதிவு எண். : Ref. No: 07645/Ph.D.K6/Tamil/F.T/April – 2014)

நெறியாளர்

**முனைவர் ம. செல்வராசு,** எம்.ஏ., எம்ஃபில்., பி.எட்., பிஎச்.டி.,

இணைப்பேராசிரியர் & துறைத்தலைவர்

கணேசர் கலை அறிவியல் கல்லூரி

மேலைச்சிவபுரி - 622 403





**தமிழ் உயராய்வு மையம்**

**கணேசர் கலை அறிவியல் கல்லூரி**

**மேலைச்சிவபுரி – 622 403**

**புதுக்கோட்டை மாவட்டம்**

**பிப்ரவரி - 2019**

# ஆய்வாளர்உறுதிமொழி

**ஜெ.திருப்பதி எம்.ஏ.,பி.எட்**
**பதிவு எண்:**(Ref. No: 07645/Ph.D.K6/Tamil/F.T/April – 2014)
**முழு நேர முனைவர் பட்ட ஆய்வாளர்**
**தமிழ் உயராய்வு மையம்**
**கணேசர் கலை அறிவியல் கல்லூரி**
**மேலைச்சிவபுரி - 622 403**
**புதுக்கோட்டை மாவட்டம்**

**"சித்தர் சிவாக்கியரின் பாடல்களில் வாழ்வியல் சிந்தனைகள்"** என்னும் தலைப்பில் அமைந்த இவ்வாய்வேடு பாரதிதாசன் பல்கலைக்கழகத்தில் முனைவர் பட்டம் பெறுவதற்காகச் செய்யப்பட்டதாகும். இவ்வாய்வேடு என்னால் தன்னிச்சையாகச் செய்யப்பட்டதென்றும், இதற்கு முன்னர் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டமும் பெற இவ்வாய்வேடு அளிக்கப் பெறவில்லை என்றும் உறுதி கூறுகிறேன்.

இடம் : மேலைச்சிவபுரி ஆய்வாளர்
நாள் :

நெறியாளர்

# நெறியாளர்சான்றிதழ்

**முனைவர் ம.செல்வராசு எம்.ஏ.,எம்ஃ.பில்.,பி.எட்.,பிஎச்.டி**
**இணைப்பேராசிரியர்&துறைத்தலைவர்**
**தமிழ் உயராய்வு மையம்**
**கணேசர் கலை அறிவியல் கல்லூரி**
**மேலைச்சிவபுரி**

**“சித்தர் சிவாக்கியரின் பாடல்களில் வாழ்வியல் சிந்தனைகள்”**என்னும் தலைப்பிலான இவ்வாய்வேடு பாரதிதாசன் பல்கலைகழகத்தில் முனைவர் பட்டம் பெறுவதற்காகச் செய்யப்பட்டதாகும். ஆய்வாளர் ஜெ.திருப்பதி (Ref.No:07645/Ph.D.K6/Tamil/F.T/April – 2014) அவர்கள் மேலைச்சிவபுரி கணேசர் கலை அறிவியல் கல்லூரி தமிழ் உயராய்வு மையத்தில் செய்துள்ள இம்முனைவர் பட்ட ஆய்வேடு என்னுடைய நெறியாள்கையின் கீழ் ஆய்வு செய்த காலத்தில் ஆய்வாளரால் தன்னியலாகச் செய்யப்பட்டதென்றும், இவ்வாய்வின் மீது வேறெந்த பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

இடம் : மேலைச்சிவபுரி நெறியாளர்

நாள் :

முதல்வர்

# நன்றியுரை

சித்தர் சிவாக்கியரின் பாடல்களில் வாழ்வியல் சிந்தனைகள் என்னும் தலைப்பில் முனைவர் பட்ட ஆய்வு மேற்கொள்வதற்கு அனுமதி அளித்த பாரதிதாசன் பல்கலைகழகத்திற்கும், பாரியின் பறம்பு மலைச் சாரலில் அமைந்துள்ள சிற்றூராம் மேலைச்சிவபுரியில் பன்நெடுங்காலமாகத் தமிழ் வளர்த்துக் கொண்டிருக்கும் கணேசர் கலை அறிவியல் கல்லூரி தமிழ் உயராய்வு மையத்திற்கும், கல்லூரி முதல்வர் முனைவர் சிவ.சொர்ணம் எம்.ஏ.,எம்.ஃ.பில்.,பிஎச்.டி அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

ஆய்வு காலத்தில் என் ஐயங்களை நீக்கி என்னை நெறிப்படுத்தி இவ்வாய்வின் செம்மைக்கும் முழுமைக்கும் முழுமுதற்காரணமாக விளங்கிய நெறியாளர் பேராசான் முனைவர் ம.செல்வராசு எம்.ஏ.,எம்.ஃ.பில்.,பி.எட்.,பிஎச்.டி அவர்களுக்கு என்றென்றும் நான் நன்றியுடையேன் ஆவேன்.

ஆய்வில் ஏற்படும் ஐயங்களை நீக்கியதோடுல்லாமல் துறை சார்ந்த அனைத்து உதவிகளையும் செய்து கொடுத்த மேனாள் முனைவர் க.கனகராசு அவர்களுக்கும், மேனாள் தமிழத்துறை தலைவர் முனைவர் தெ.திருஞானமூர்த்தி அவர்களுக்கும் மற்றும் தமிழ்த்துறை பேராசிரியர்கள் அனைவருக்கும் என் நன்றியை உரித்தாக்குகின்றேன்.

என் ஆய்வுத்தேடலுக்குத் தேவையான நூல்களைத் தந்துதவிய நூலகர் திருமதி தெய்வானை அவர்களுக்கும், பாரதிதாசன் பல்கலைகழக நூலகர் அவர்களுக்கும், மதுரை காமராஜர் பல்கலைகழக நூலகர், காரைக்குடி அழகப்பா பல்கலைகழக நூலகர் ஆகியோர்க்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

என் முதல் ஆசான் எந்தை அழ.ஜெகநாதன் தாயார் ஜெ.கல்யாணி அவர்களுக்கும் என் உடன் பிறந்த சகோதரர்கள் ஜெ.மாணிக்கம், ஜெ.மணிமுத்து சகோதரி வாசுகி ஐயப்பன் அவர்களுக்கும் மற்றும் ஏனைய என் குடும்ப உறுப்பினர்கள் அனைவருக்கும் மேலும் என் ஆய்வு காலத்தில் எனக்கு உற்ற துணையாக நின்ற என் வாழ்க்கை துணைவி திருமதி சுதா அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். எனது ஆய்வு காலத்தில் எனக்கு பக்க பலமாக நின்ற நண்பர்கள் முனைவர் மீ.சுரேஷ், வே.சிவகுமாரன், அருள் ஆகியோருக்கும் நான் என்றும் நன்றியுடையேன்.

சீரிய முறையில் கணினி அச்சேற்றித் தந்த நண்பர் வீ.பாலசுப்பிரமணியன் அவர்களுக்கும் ஆய்வேட்டை நல்ல முறையில் பைண்டிங் செய்து கொடுத்த ஸ்ரீ பாலாஜி பிரண்டிங் பிரஸ் நிறுவனத்திற்கும் என் நன்றியை உரித்தாக்குகின்றேன்.

# பொருளடக்கம்

# முடிவுரை

தமிழ் இலக்கியப் படைப்புகள் காலந்தோறும் வடிவத்தாலும், பொருளாலும் மாறுபட்டு வந்துள்ளன. இலக்கிய வடிவங்கள் சுருக்கமும் செறிவும் வாய்ந்த வடிவமாதலால் தமிழர்கள் எல்லாவற்றையும் பாட்டு என்ற வடிவத்திற்குள்ளேயே ஆக்க முற்பட்டனர். தமிழில் காலந்தோறும் ஏற்பட்ட பதிவுகளில் சித்தர்களின் சிந்தனைப் பதிவும் குறிப்பிடத்தக்கது. சித்தர் இனம் நீண்ட நெடுங்காலமாக இந்த நிலத்தில் வேரூன்றி விழுது பரப்பி வருகிறது.

“எனக்கு முன்னே சித்தர்பலர் இருந்தார் அப்பா!” யானும் வந்தேன் ஒருசித்தன், இந்த நாட்டில்! என பாரதி தன்னைச் சித்தர் பரம்பரையில் இணைத்துக்கொண்டு பெருமைப்படுத்துகிறார். பட்டினத்தாரும், தாயுமாணவரும், வள்ளலாரும் சித்தர் தத்துவங்களைக் கோட்பாடுகளாக்கிக் கொடுத்தவர்கள் .உள்ளொளி பெற்ற சித்தர்கள் உண்மையை உணர்ந்து ஊருக்கு உபதேசம் செய்தனர். மெய்ஞ்ஞானம் மேவியோர் மேதினியில் ஐம்புலன் நுகர்வுகளை, ஆசாபாசங்களை, நலந்தீங்குகளை, அவலங்களைத் தத்துவப் பாடல்களாக வகுத்தனர் .

சித்தர் இலக்கியம் தமிழில் தனிவகை இலக்கியம், குறியீட்டு இலக்கியம், காலந்தோறும் வளர்ந்த இலக்கியம்,தத்துவ இலக்கியம், சித்தர்களின் நுண்ணுணர்வு, ஆழ்நிலை எண்ணங்கள், வெடிப்புறு சிந்தனைகளில் வீசும் அலைகள் பொறி போலச் சுடர்விடுகின்றன. சித்தர் சிந்தனை வளமும் கருத்துக் கொடைகளும், எண்ண விரிவுகளும் தவஞானியர்களின் சிந்தனை எச்சங்களாக மொழியைச் செழுமைப்படுத்துகின்றன.

தமிழ் நாட்டு வரலாற்றிலும், இலக்கிய வரலாற்றிலும் சித்தர்கள் இன்றியமையாதொரு இடம் பெறத்தக்கவர்கள். அவர்கள் பெயரில் கிடைக்கின்ற அச்சில் வெளிவந்துள்ள நூற்றுக்கணக்கான நூல்கள் மூலமாகவும், வெளிவராத ஏடுகள் மூலமாகவும் மக்களுக்கும், மொழிக்கும் ஆற்றியுள்ள தொண்டினை நன்கு முடிகிறது.

சித்தர்களின் மெஞ்ஞான தத்துவமும், விஞ்ஞான உணர்வும், காலத்தை வென்ற கருத்தும் தமிழுக்கு அழகையும் வலிமையும் வனப்பையும் தந்துள்ளதைக் காணமுடிகிறது. மருத்துவம், மந்திரம், ரசவாதம், யோகம், ஞானம் முதலிய பல்வேறு துறைகளில் எளிய தமிழில் பல்வேறு யாப்பு, சந்தம் முதலியவற்றோடு பாடல்களை இயற்றித் தமிழ் இலக்கிய உலகிற்குப் பெருமை சேர்த்துள்ளனர். சித்தர்கள் பேசாப் பொருளை பேசிய திறமும், உயிரின் இயல்பை உணர்த்திய திறமும், யோகத்தின் ஒருமையினை பெருமையினைப் பேசிய திறமும் பெருந்திறமாகும்.

உண்மையறியாது வாழ்க்கையில் உழலும் மக்களுக்கு உண்மைப் பொருளை உணர்த்தும் நோக்குடன் கருதிய பொருளை வினாவாக்கி அதற்கமைந்த விடையுடன் உணர்த்துவனவாகவும் சித்தர் இலக்கியங்கள் அமைவதைக் காணலாம்.

பாமர மக்களுக்கு விளங்கும் மொழிநடையில் சின்னஞ்சிறிய சொற்களால் கருத்துக்களை அளவிட்டுரைக்கின்றன. தென்பாங்கு, கும்மி, களிப்பு, கன்னி, தும்பி போன்ற கிராமிய விளையாட்டுப் பாடல்கள் நடையில் தாம் கருதிய பொருளைப் பக்குவமாகப் எடுத்துக் கூறுகின்றனர். கற்றோரும் வியக்குமாறு யாப்பு நலத்தாலும், சொல்லடுக்குகளாலும், சொல் மாலைகளாலும் பொருள் நலம் பயப்பதாகவும் விளங்குகின்றன சித்தர் பாடல்கள்.

சமயமும், வைதீகமும் வளர்த்த பொய்மைப் பூசனைகளை எடுத்துக்காட்டி அதன் பயனின்மையினை உணர்த்தியும், சாதி சமயங்களைச் சாடியும் சமரச சன்மார்க்க நெறியினைக் காட்டிடும் புரட்சி வழிபாட்டு இலக்கியமாகவும் அமைகின்றன. பாமர மக்களின் உடல் நோய்க்கு மருந்து உரைக்கும் மருத்துவ இலக்கியமாகவும், உள்ள விழைவிற்கான இரசவாதம், அட்டமாசித்திகள், யோகம் முதலியனவற்றை உரைக்கும் சித்து இலக்கியமாகவும், உயிர்கள் மேன்மையடையும் முத்திக்குறிய ஞானமுரைக்கும் ஞான இலக்கியமாகவும் நின்று தமிழ் கூறும் நல்லுலகிற்கு பன்முக இலக்கியத் தன்மையின் வழிச் செல்லும் சித்தர் இலக்கியம் தமிழ் இலக்கிய வகைமையில் செழுமையினை நிறுவியதனை இங்கு காணமுடிகிறது

சித்தர்களின் மெஞ்ஞான தத்துவமும், விஞ்ஞான உணர்வும், காலத்தை வென்ற கருத்தும் தமிழுக்கு அழகையும் வலிமையும் வனப்பையும் தந்துள்ளதைக் காணமுடிகிறது என்ற கூற்றினோடு, சித்தர்கள் தமிழ் மொழிக்கு ஆற்றியுள்ள தொண்டினையும் எடுத்துக்கூறி, சித்தர்களின் பங்கு மொழி என்ற அடிப்படையிலும், மெஞ்ஞான தத்துவமும், விஞ்ஞான அறிவும் கலந்த அவர்களின் அனுபவங்கள் தமிழ் இலக்கியத்தில் பெறும் இடத்தை தெளிவுருத்துவதாக முதல் இயல் அமைகிறது.

சித்தர்களுள் தலைச்சிறந்தவர் சிவவாக்கியர், திருமூலரின் திருவிளக்கமாகத் தோன்றியவர். தாயுமாணவரால் குறிப்பிடப்படும் பெருமைப் பெற்றவர். வரன்முறை நாத்திகக் கொள்கைகளைத் தெளிவாகவும், நிறைவாகவும் வெளியிட்டு உருவ வழிபாட்டினையும், சமயச் சடங்குகளையும், சாதி பேதங்களையும், ஆசார வேடமாகும் பிறவற்றையும் கடிந்து “உண்மைப் பொருளை” உணரக் கூறி மக்களைக் கடைத்தேற்றும் குறிப்பில் விழைந்து நின்ற சித்தராகத் திகழ்பவர் இவர்.

சிவவாக்கியர் வாழ்க்கை வரலாற்றைப் போகமுனிவர் சித்தகாண்டம், முருகதாச சுவாமிகளின் புலவர் புராணம், மா, வடிவேலு முதலியாரின் சிவவாக்கியார் பாடல் 500, கு. அருணாச்சலக் கவுண்டரின் சித்தர் பாடலும் அவர்தம் தத்துவமும் – ஒரு கண்ணோட்டம், அபிதான சிந்தாமணியிலும், தி. வி. சாம்பசிவம் பிள்ளை அவர்கள் எழுதிய தமிழ் – ஆங்கில மருத்தவ அகராதி ஆகிய நூல்களின் வாயிலாகவும் அறிய முடிகின்றது.

சித்தர் சிவவாக்கியார் தொடக்க காலத்தில் இயல்பான குடும்ப வாழ்க்கை மேற்கொண்டு பின்னர் துறவியானதாக அறியப்படுகிறது.

சித்தர் சிவவாக்கியார், திருமாலின் அருள்பெற்ற திருமதியாழ்வார் என்றும் , சிவனின் அருள் பெற்ற சிவவாக்கியார் என்றும் போற்றப்பட்டார் என்பதை நூல்கள் வாயிலாக அறிய முடிகிறது.

சிவவாக்கியர் கருவிலே இருந்த பொழுது, இவரது தாயார், சதா சர்வகாலமும் சிவ நாமத்தைக் கூறியப்படி இருந்தார். அதனால் தான் என்னவோ, இவர் பிறக்கும் பொழுது,“குவா, குவா” என்று அழாமல். “சிவா, சிவா” என்று அழுதார். இதனாலேயே இவருக்கு “சிவவாக்கியர்” என்ற பெயர் சூட்டப்பட்டது. காசிக்கு சென்ற இவர், செருப்புத் தைக்கும் சித்த யோகி ஒருவரிடம், உடலை “அன்ன கோசத்தால்” ஆக்காமல் “பிராண கோசத்தால்” ஆக்கும் வித்தையைத் தெரிந்து கொண்டார் என்பதை அறிய முடிகிறது.

சிவவாக்கியரை தன் சீடராக ஏற்றுக் கொண்ட, செருப்புத் தைக்கும் சித்த யோகி தனக்குத் தெரிந்தவற்றை எல்லாம் அவருக்கு சொல்லித் தந்தார். இறுதியில் சிவவாக்கியருக்கு அந்த குரு, யாருமே சமைக்க முடியாத கசப்பு மிக்க ஒரு பேய்ச்சுரைக்காயையும், கங்கை நதி மணலையும் அள்ளி சிவவாக்கியர் வசம் தந்து, இதனைக் கொண்டு உணவு சமைக்க முடியும் என்று நம்பி, உணவும் சமைத்து எவள் ஒருத்தி உனக்கு அன்னமிடுகிறாளோ அவளே உன் மனைவி என்று கூறினார். மேலும், அந்த குரு, சிவவாக்கியரிடம் “உனது விதிப் படி, குடும்ப வாழ்க்கையை நீ அனுபவித்த பிறகு தான் சித்த நிலையை அடைய முடியும்” என்றும் கூறி அனுப்பினார். இதிலிருந்து சிவவாக்கியாரின் இல்லற வாழ்வையும் துறவற வாழ்வையும் அறிய முடிகிறது.

சிவவாக்கியர், குறமகள் ஒருத்தியைக் கண்டார், அவளிடம் குரு தந்த பேய்ச்சுரைக்காயையும் மணலையும் கொடுத்து சமைக்க இயலுமா என்று கேட்க அதன், தாத்பரியத்தை உணர்ந்து கொண்ட குறமகள், அதனை அறுசுவை பட சமைத்தும் (சிவவாக்கியருக்குக்) கொடுத்தார். அவரும், அவளை அன்புடன் மணந்து கொண்டு இல்லற வாழ்வில் ஈடுபட்டார். இல்லற வாழ்க்கையில் ஈடுபட்ட பொழுதிலும், தனது யோக மார்கத்தை மறக்க வில்லை. இளமையிலேயே யோக வாழ்க்கை வாழ்ந்தவர் சிவவாக்கியார் என்பதை அறிய முடிகிறது.

சிவவாக்கியாரின் ஆசையை (உலகப்பற்றை) கொங்கணர் என்ற சித்தர் சோதித்து அறிந்தார் என்பதை அறிய முடிகிறது.

பின்னாளில் சிவவாக்கியர் தனது தவ வலிமையை உயர்த்திக் கொண்டார். சில, மூலிகைகள் மூலமாக "அன்னமய கோசமாக" இருந்த தனது உடலை "பிராணமய கோசமாக" மாற்றி, அதன் பின் "மனோமயத்துக்கும்" அதன் பின் "ஆனந்தமய கோசத்துக்கும்" மாற்றி ஆன்மீகத்தின் உச்ச நிலையை அடைந்துள்ளார் என்பது தெரிய வருகிறது.

புலவர் புராணம் என்ற நூலின் வழியும் உரையாசிரியர் மா.வடிவேலு முதலியார் அவர்களின் உரைக் குறிப்பிலிருந்தும் சிவவாக்கியாரின் வாழ்க்கை வரலாற்றை அறிய முடிகிறது.

. "சித்தர் பாடலும் அவர்தம் தத்துவமும் ஒரு கண்ணோட்டம்" என்னும் தலைப்பில் கு. அருணாசலக் கவுண்டர் கூறுவதாவது," சிவவாக்கியர் என்னும் பெயருடைய இச்சித்தர்,பலசமயங்களில் புகுந்தும், உணர்ந்தும், ஆய்ந்தும் பெற்ற அனுபவத்தில், சைவமே நிலையெனச் சார்ந்தார்: பல பாடல்களை இயற்றினார். சிவனருளாலே பல நாடுகளுக்குச் சென்று பிற மதங்களை வென்று, திருமயிலை வழியாக வந்தார். அப்போது அவரைப் பேயாழ்வார் கண்டார், இவரை வைனவராக்க மனங்கொண்ட பேயாழ்வார் சிவவாக்கியரின் குறைகளை எடுத்துக்கூறி வைணவத்தின் மீது இருந்த தவறான கருத்தை மாற்றினார். இதுவரை செய்து வந்த வாத, பிரதிவாதங்களை எண்ணிப்பார்த்த சித்தர் சிவவாக்கியர் "அட்டமாசித்திகள் கைவரப்பெற்றுப் பிறரை மயக்கி, தம்மையும் மயக்கி, திரிவதைக் கட்டிலும் சிறந்த குறிக்கோள் வேறு ஏதும் இல்லையா?" என்று தமக்குள் சிந்தித்தார். பேயாழ்வாரிடம் கலந்து உரையாடி, தெளிவுபெற்றார். "பக்திசார்" எனும் பெயர் பெற்று, வைனவரானார். வைனவவுலகம் இவரை "திருமிழிசையாழ்வார்" என்று அழைத்தது என்று பின்வருமாறு கூறுகிறார்.

கு. அருணாசலக்கவுண்டர் பார்வையில், சிவவாக்கியர், சைவராக இருந்து வைணவராக மாறினார். வடிவேல் முதலியார் எழுத்தாக்கத்தில், சிவவாக்கியர் வைணவராக இருந்து சைவராக மாறியிருக்கிறார். தத்தம் சமயக் கருத்தாக்கங்களை முன்னிறுத்திச் சொல்லப்படும் இவ்வரலாற்றின் மெய்த்தன்மையை அறிய, சித்தர்கள் பாடல்களை ஆராய்வது அவசியமாகிறது.

போகர், தமது சத்தகாண்டத்தில்,"சிவவாக்கியர்" திருமூலர் மரபினர் என்று குறிக்கிறார்.

சித்தர் மரபில், தனக்கு முன் வாழ்ந்தவர்களில் சிறந்தவர்களை, அருள் உபதேச அடிப்படையில், தனது முன்னோர் எனக்குறிப்பது வழக்கம். இம்மரபின் அடிப்படையில், திருமூலர் தன்னை "நந்தி மரபினர்" என்று காட்டுவார். இதன்படி, சிவவாக்கியரையும் "திருமூலர் மரபினர்" என்று

குறிபிடுவது கொள்ளத்தக்கதாகும். மேலும், திருமூலரின் கருத்துகள், யாப்பமைதி மற்றும் சொல்லும் முறைகள், இவரது பாக்களிலும் ஒத்திருப்பதைக் காணமுடிகிறது.

புலவர்புராண ஆசிரியர் குறிப்பிடும், “ஆன்மிக உயர்வுக்கு, மேல்கீழ் வேறுபாடுகள், வருணபேதங்கள் ஏற்புடையன அல்ல” என்பதற்கும், குறமகளோடு இச்சித்தர் இணைந்து வாழ்ந்ததற்கும் உரிய சுவடுகளை, சிவவாக்கியர் பாடல்களின் வழியே காணமுடிகிறது.

“பறைச்சி போகம் வேறதோ, பனத்திபோகம் வேறதோ” என்ற தொடரும், “மூங்கில் வெட்டி நாருரித்து” என்ற தொடரும் இவற்றிற்குத் தக்க அக்ச்சான்றுகளாக அமைகின்றன.

ஆகவே, நமக்குக் கிடைக்கக்கூடிய அகச்சான்றுகளை அடிப்படையாகக் கொண்டு பார்க்கிறபோது, சிவவாக்கியரின் காலம் கி.பி. 10 ஆம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டது என்பது உறுதியாகிறது.

மேலும் மு. அருணாசலம் குறிப்பிட்டுள்ள காரணங்களையும் ஒப்பிட்டுப் பார்க்கும்போது சிவவாக்கியர் காலம் கி.பி. 14 ஆம் நூற்றாண்டு என்பது நிறுவப்படுகிறது. கொங்கு மண்டலத்தைச் சார்ந்த ஈரோடு மாவட்டத்தில் உள்ள பகுதி சிவன்மலையாகும், இது காங்கேயத்திலிருந்து திருப்பூர் செல்லும் வழியில், ஐந்து கி.மீ, தொலைவில் உள்ளது. இங்குள்ள மலைமேல் சிவவாக்கியர் பலகாலம் வாழ்ந்து தவம்புரிந்ததால் இம்மலை “சிவவாக்கியர் மலை” என்று பெயர் பெற்றுது “சிவவாக்கியர் மலை” என்பது நாளடைவில் மருவி, “சிவமலை” என்று ஆனது பின்னர், “சிவன்மலை” என்று தற்போது அழைக்கப்பட்டு வருவதை அறிய முடிகிறது.

சித்தர் சிவவாக்கியர் இறைவாகச் சீவசமாதி அடைந்த இடம், பெருங்களூர் என்னும் ஊராகும். இவ்வூர், புதுக்கோட்டையிலிருந்து தஞ்சாவூர் செல்லும் நெடுஞ்சாலையில் உள்ளது. இவ்வூருக்கு புறத்தே ஓர் காட்டுக் கோயில் இருக்கிறது. இதனுள் சிவவாக்கியர் சமாதி மண்டபம் அமைந்திருக்கிறது. அன்றிலிருந்து இன்றுவரை அப்பகுதி மக்கள் ஆண்டுதோறும் தை மாதம் மக நட்சத்திரத்தன்று சிவவாக்கியர் விழாவைச் சிறப்பாகக் கொண்டாடி வருகின்றனர்.

சிவவாக்கியரும் தம் வாழ்வின் முற்பகுதியைப் புறவழிபாட்டுக்களில் செலுத்திப் பயன் காணாமல் வாடி அகவழிபாடாம் ஞானமார்க்கத்துக்கு வந்து சித்தரானார் என்றே தோன்றுகிறது ஆலயங்களில் வடித்து வைக்கப்பட்ட உருவச் சிலைகளை இறைவன் என எண்ணினார். அவற்றுக்கு நீர் சொரிந்து மலர் தூவி மந்திரங்கள் செபித்தார். ஆலயங்களை மீண்டும், மீண்டும் வலம் வந்து வணங்கினார். எங்கும் நிறைந்த இறைவன் தன்னுள்ளும் இருக்கிறான் என்ற ஞானமின்றிப் பல்லாண்டுக்கால வாழ்வைப் புறவழிபாட்டில் கழித்திருக்கிறார் உலகியலில் உழன்று, தேர்ந்து, தெளிந்து, துறந்து

சித்தராயனரின் தத்துவங்கள் அனைத்தும் சிவவாக்கியர் பாடல்களில் இடம் பெற்றுள்ளன.

சிவவாக்கியர் உணர்த்தியுள்ள கருத்துக்களில், சித்தநெறிக் கொள்கைகள் சிறப்பாக விளக்கப்பட்டுள்ளதுடன், சமரச சன்மார்க்க நெறியும், ஒருமைப்பாட்டின் உயர்வும் தெளிவாக அமைந்துள்ளன. இவர், தம்முள்ளே சதாசிவம் கண்ட சித்தராதலின், சாத்திரங்களும் வேதங்களும் காட்டும் தெய்வ விளக்கங்களைப் புறக்கணிக்கின்றார். எங்குமாகி நிற்கும் சோதி தன்னுளே இருப்பதால் தாமே உலகம் எனும் தத்துவத்தில் நின்றவர். பூசனை, வாசனை, கோயில்கள், குளங்கள் இவற்றால் இறைமையை உள்ளவாறு உணரலாகாது என்பதுடன், சாதியையும், வேதாகம விதிகளையும் பொய்யென்று ஆக்கும் பொற்புடையவராகவும் விளங்குகின்றார்.

இளநீரை எடுத்துக்காட்டி, ஓட்டினுள் இனிய நீர் அடங்கி இருப்பது போல, மானுட உடம்பினுள்ளே இறைவன் இருக்கும் மாண்பினைச் சுட்டிக்காட்டுவதுடன், அரிவேறு அரன்வேறு என்று கூறி ஒன்றற்கொன்று எற்றத்தாழ்வென்று பேசி வழக்கிடும் சைவ, வைணவ சமய வெறியாளர்கட்கு, எல்லாம்வல்ல இறைமையின் உண்மை வடிவினை உணர்த்துமுகத்தான், நீரோடு கலந்த உப்பின் நிலையை, உவமையாக்கி, அரியும், சிவனும் ஒன்றென்றும் ஆழ்ந்த தத்துவத்தினை அளவிட்டுக் கூறித் தெளிய வைக்கிறார்.

எங்கள் தேவர், உங்கள் தேவர் என்று பல தெய்வங்கள் உள்ளனவோ? என்ற வினா தொடுத்து, அதற்குப் பதிலாக ஒருவனே தேவன் என்று உணர்வீர் அறிவிலிகளே! என்று விடையும் அளிக்கின்றார். சிவவாக்கியர் தம் பாடல்களில் உயிர் காக்கும் கலையாம் 'பிராணாயாம' முறைகளை விரிவாக விளக்கியுள்ளார். அவர் நாக்கை மூக்கிற்கு நேராக உட்புறமாக மடித்து வீணாதன்டில் கும்பகம் செய்ய வேண்டும் இந்நிலையில் இரேசகத்திற்குரிய பதினாறு மாத்திரைகளும் வெளிவிடாதிருக்க வேண்டும் அதனால் யாக்கை மூப்பெய்தாது உலகம் பரப்பிரமமாகத் தோன்றும் வழிகளை இவர் பாடல்கள் மூலம் தெரிந்துகொள்ளலாம்.

கறியைச் சுடவைக்கும் சட்டியும், சத்துவமும் அந்தக் கறியின் சுவையை அறியாதது போல உனக்குள் உள்ள நாதனையும் நீயும் அறியவில்லை. மந்திரமும் தெய்வமும் உமக்குள் தான் உள்ளன என எடுத்துக்காட்டுடன் கேட்கும் இவரின் எழுச்சி உரை சித்த நாத்திகத்தின் திறனைக் காட்டுவதாகும். அன்பின் வழிப்பட்ட அறநிலையாக விளங்கும் இவர், பசிப்பிணி போக்கும் அன்னதானச் சிறப்பினை, பிறருக்கு உணவு அளித்த புண்ணியம் செய்தோர் பலகோடி காலம் வாழ்வார்கள். தங்கத்தைத் (சொர்ணம் – சொன்னம்) தானமாக இட்டவர்கள் அரசாட்சி செய்வார்கள். இவை போல் உதவி செய்யாதவர்கள் (பின்னம் – வின்னம்) நரகத்தில் வீழ்வார்கள். கன்னம் வைத்துத் திருடியவர்களுக்கு கடவுள் அருள் காக்காமல் விலகிச் செல்லும். இது உறுதியாகும். என்று வாழ்த்துகின்றார்.

இதனால் இவரின் சன்மார்க்க நெறி புலனாவதுடன் தன்னுயிர் போல் மன்னுயிரையும் காக்க வேண்டும் என்ற மாண்பினையும் எடுத்துக் காட்டுகிறது

சைவம் என்று மக்கள் அமைத்துக்காட்டும் அமைப்பில் ஊன் உண்ணாமையே சிவமாகும் எனும் குறிப்பு நிற்பதனைக் கண்டு மயங்கிய சிவவாக்கியர் வேதியர்கள் மீன் இறைச்சியைச் சாப்பிடுவது இல்லை. ஆனால் மீன் வாழும் நீரில் தான் குளிக்கிறார்கள், அதைத்தான் குடிக்கிறார்கள் வேதியர்கள் மான் இறைச்சியை உண்பது இல்லை, ஆனால் மான்தோலில் தான் பூணூலில் ஒரு முடிச்சுக் கட்டுகிறார்கள். பசுவின்பாலும், ஆசனத்தோலும், மார்புநூலில் அணிவதும் பிராணிகளின் இரத்தமும் இறைச்சியுமாக இருப்பதை எடுத்துக்காட்டி, ஆருயிர்க்கெல்லாம் மனிதன் அன்பு செயும் நெறியே சைவ நெறி எனும் உண்மையினை உணர்த்துகின்றார்.

சிவவாக்கியர் சிவபக்தி நிறைந்த சித்தராகவே காணப்படினும், சமரச சன்மார்க்க ஞானியாகவே விளங்குகின்றார். அதற்குக் காரணம் அவர் வாழ்ந்த காலத்தில் சைவ வைணவ சமயப் போர்களும், புத்த சமண மதங்களின் போராட்டங்களும் வைதீக நெறியின் வளர்ச்சிக்காக நாடெங்கும் வளர்க்கப்பட்ட முறைகளுமேயாகும்.

ஐம்புலங்களும், ஐம்பூதங்களின் தொடர்புடையன. இது பிண்டமாகிய உடலை அண்டமாகிய பிரபஞ்சம் வரையில் விரித்துச் செய்யும் தியானமாகும். ஆத்மா பிரபஞ்சம் முழுதும் விரிந்தது அறிந்து கொள்க. என வழிபாட்டுச் சடங்கினை மானுட உடலினுள்ளேயே கண்டு யாவருக்கும் தெளிவாக எடுத்துரைக்கின்றார்.

சிவவாக்கியர் எல்லாச் சமயங்களைப் பற்றியும் குறிப்பிடுகின்றார். எல்லாச் சமயத்தைப் பற்றிக் கூறினாலும், அவர் ஊனிலே உருகி உள்ளத்தில் கலந்து உண்மையறிவாய் நிற்பது சைவம் என்பது மட்டுமே என்று தெளிவுபடுத்துகிறார். சிவவாக்கியர் சமுதாயத்தின் மீது மிக்க அன்பு கொண்டதால்தான் தவறான பாதையில் சென்றுகொண்டிருக்கிற உலகத்தை தேவையற்ற சாதி, சமய வேற்றுமை, சடங்குகள் இவற்றுக்கு மாறாகச் சாதி சமயப் பூசலற்ற, எல்லாச் சமயத்தையும் ஏற்றுக்கொள்கின்ற சமயக்கால்பற்ற, ஆன்மாக்களின் உள் இருக்கின்ற இறைவனை மெய்யறிவுப் பாதையில் உணர வழிகாட்டினார்

மக்கள் சமுதாயத்தில் நிலைத்திருக்கும் அனைத்து மூடத்தனத்திற்கும் காரணமாக அமைவது கல்வியின்மையே. அதாவது சாதி வேற்றுமை, மதவேற்றுமை, தேவையற்ற மூடத்தனமான சடங்குகள், பெண்களின் பெருமை அறியாது இல்லறத்தை இகழ்ந்து பேசல் போன்ற இவையனைத்திற்கும் காரணமாய் அமைவது கல்வியின்மை மட்டுமே. கல்வியின்மை என்பதையும் பொதுவாகக் கூறாமல் காணுமிடமெங்கும் நீக்கமற நிறைந்திருக்கும்

இறையை உணரத் தேவையாகும் ஞானக்கல்வி அல்லது ஆன்மீக் கல்வி இல்லாமை மட்டும்தான் என்பதனை எடுத்துக்கூறுகிறார்.

ஆனாதிக்கமும், பெண்ணடிமைத் தனமும் ஓங்கியிருந்த அந்த கால கட்டத்தில் பெண்ணடிமைத்தனம் அல்லது ஆண்,பெண் பாகுபாட்டினை எதிர்த்து கலகக் குரல் கொடுக்கிறார் சிவவாக்கியர்.

இறைவனின் பெயரில் நடக்கும் உயிர்ப்பலியைக் கூடாது என தமது பாடல்வழியாக கண்டிக்கவும் செய்கிறார் சிவவாக்கியர். இறைவனின் பெயரில் நடக்கும் உயிர்ப் பலியினை வன்மையாகக் கண்டிப்பதுடன், அவ்வாறு பலியிடுவதனால் உங்கள் தெய்வமே உங்களைப் வஞ்சிக்கும் என்றும் கடும் சினம் கொண்டு வலியுறுத்துகின்றார்.

தம் வாழ்நாளின் முற்பகுதியைப் புறவழிப்பாட்டில் செலுத்திப் பயனில்லாமல், வாடி அகவழிபாடம் ஞானமார்க்கத்திற்கு வந்ததடைந்ததை சிவவாக்கியரின் வாழ்க்கைக் குறிப்புக் காட்டிடுவதை அறியமுடிகிறது. ஆருயிர்கட்கெல்லாம் அன்புசெயல் வேண்டும் என்னும் அன்புநெறிக் கூறும் இவர் தம் பாடல்கள் மூலம் தீண்டாமையினைத் திட்டமாக வெறுக்கும் மகாத்தமாவாகவும் உருவ வழிப்பாட்டினை ஒப்புக்கொள்ளாத நிலையிலும் சமயங்கள் கொண்ட தனித்தனிக் கடவுளரை ஒன்றே என்றுணர்த்தும் உண்மைத் தன்மையினையும் கொண்டே தம் வாழ்வையும் தொண்டினையும் மக்களுக்கு ஆற்றுகிறார் என்ற நிலையைத் தெளிவுபடுத்துவதாக இரண்டாம் இயல் அமைகிறது.

சித்தர்கள் யாவரும் மனித நேயம் மிகுந்தவர்கள். சாதி சமய வேறுபாடு அற்றவர்கள். சமரச சன்மார்க்கத்தைப் போற்றுபவர்கள். போலிச் சடங்குகளையும், பொருளற்ற செயல்களையும், மூடநம்பிக்கைகளையும் கண்டிப்பவர்கள். அவர்கள், மனித வாழ்வு மிக உயர்ந்தது என்ற கருத்தை முன் வைத்துள்ளார்கள்.

சிவவாக்கியர் உருவ வழிவாடுகள், நாள், கோள் – பார்க்கும் சோதிடம், விரதங்கள் ஆகியவற்றால் வேடமிட்டு மக்களை ஏய்க்கும் சமயவாதிகளின் போலிச் செயல்களைப் புலப்படுத்தி, அவ்வழி உண்மைத் தத்துவங்களை உணர்த்துகின்றார். இதனை ஆழ்ந்து நோக்குங்கால் நிறைவான பகுத்தறிவு வாதங்களாகவே இவை அமைகின்றன. இத்தகைய சித்த நாத்திக உண்மை நெறிகளை, மக்களின் வாழ்க்கைக்குத் தேவையான அரணாக்கி பல அறங்களை எளிய முறையில் தம் பாடல்களில் வெளிப்படுத்துகிறார்.

சித்தர் சிவவாக்கியரின் அறிவியல் அறிவுரைகள் சமயக் குப்பைகளைச் சாடி நின்று, பொய் மதங்களைப் புறக்கணித்து போலிகளைத் தோலுரித்துக் காட்டுகின்றது. ஆசையால் தினமும் பிறர் பொருளை மோசம் செய்து அபகரிக்க சிலர் பூசை, நேமம் (வழிப்பாட்டு முறைகள்), நிட்டை (தியானம்) போன்றவற்றை சிறப்பாகச் செய்துக் காட்டுவர். அவ்வாறு

இருக்கும் போலிகள் இவ்வுலகில் அவர்களுக்காக காத்திருக்கும் நரகிற்கே போக நேரிடும் என்கிறார்.

முத்திக்குப் போக இங்கேயே சித்தி தருவேன் பார் என்று சத்தியம் சொல்லி எங்கும் சாமிவேடம் கொண்டு, தினமும் வயிறு வளர்ப்பதற்காக நீதி ஞானம் பேசும் இத்தகைய போலித் துறவிகள் பக்தியைச் சொல்லிச் சொல்லிப் பணம் பறிப்பார். இறுதியில் பாழ்நரகில் வீழ்வார்கள்.

இவ்வாறாக மேற்கண்ட பல பாடல்கள் மூலமாக போலி வேடதாரிகளின் புரட்டினை சாடியும், சாதி சமய வேடப் போலிகளைத் தட்டிக் கேட்டும், உண்மை நெறிகளை உணர்த்தியும்,சாதி சமய சடங்குகளின் மூடநம்பிக்கைகளையும் அதன் வாயிலாக எழுகின்ற பொய்மைகளையும் புலப்படுத்தி மக்களின் சித்தத்தைத் தெளிய வைக்கிறார்.

வாழ்வியல் உண்மைகளை ஞானத்தால் பகுத்தறிந்து மெய்ஞ்ஞானம் பெற்ற சித்தர்களே விஞ்ஞான கலரென்று குறிக்கப்பெற்றனர். அவ்வகையில் சித்தர் சிவவாக்கியர், அஞ்ஞானமாகிய அறியாமை நீங்க அவர் தந்த அறிவியல் தத்துவங்கள் யாவும் சித்த விஞ்ஞானமாகும். அறங்களிலே சிறந்தது இல்லறம் போற்றும் நல்லறமேயாகும் என்பதனை தம் பாடல் வழியாகவும் எடுத்துக்கூறுகிறார்.

சிவவாக்கியரின் படைப்பினை முழுமையாக நோக்குமிடத்து அவை அனைத்தும் “சமூகச்சீர்மை” எனும் மையப்புள்ளியை நோக்கிச் செல்வதை உணர முடிகிறது. ஒன்றேயாகிய பரம்பொருள் எங்கும் எதிலும் எவருக்கும் பொதுவாய் நிறைந்திருக்கிறது எனும் இயற்கைக் கோட்பாடும், இறையின்பம் துய்க்க இடைத்தரகரும், பொருட்செலவு மிக்க புறவழிபாடுகளும் தேவையில்லை எனும் புறவழிபாட்டு மறுப்பும், இறையின்பம் ஆகிய அகக்காட்சி அனுபவம் சாதி, சமய, சமூக மதிப்பு எனும் வேறுபாடுகளின்றி மக்கள் அனைவருக்கும் பொதுவானது என்ற எடுத்துரைப்பும், “ஆன்மீகப் பொதுவுடைமை” கூறும் சிவவாக்கியரின் கருத்துக்கள் யாவும் சமூகச் சீர்மையை நோக்கிச் சிறப்புற அமைந்துள்ளதைக் காணமுடிகிறது.

சமுதாயத்தில் மலிந்து நின்ற பொய்மைகளை எதிர்த்துப் புரட்சிக்குரல் கொடுத்தவர்களுள் குறிப்பிடத்தக்கவர் சிவவாக்கியர் ஆகிறார். தாம் வாழும் சமுதாயத்தைப் பற்றி அதிகம் அக்கறை கொண்டும் அவர் சமூக ஏற்றத்தாழ்வுகள், ஏமாற்றுகள் ஆகிய சமூகக் கேடுகளைக் களைந்து மக்கள் அனைவரும் இணைந்து அன்புடன் வாழ்ந்திட நெறிப்படுத்துகிறார்.

இறைவன் படைப்பில் எல்லோரும் சமம். இதில் உயர்ந்தவர் தாழ்ந்தவர் என்ற பேதம் இல்லை. மனிதருக்குள் வேறுபாடு காண்பது அவனுடைய அடிப்படை உரிமையையே (Constitutional Rights) பறிப்பதாகும் என்று தீண்டாமைக்கு எதிராக குரல் எழுப்புகிறார் சிவவாக்கியர். சாதிபேதங்களால் திளைந்து எழுந்த சர்வசீவன் ஆனபின் இறையோடு கலந்து

பல் பிறப்புகள் எய்தியபின் ஞானியாகி நிற்கும் பேறு கிட்டும் என்பது விளக்கமாகும் என்று உண்மையில் ஞானிகள் சாதி பேதத்தை ஏன் ஏற்பதில்லை என்பதற்கு விளக்கம் அளித்தவர் சிவவாக்கியர் மட்டுமே ஆவார்.

"பிறப்பொக்கும் எல்லாவுயிர்க்கும்" என்பது வள்ளுவம் கூறும் வாக்கு. சித்தர்களின் பார்வையும் அத்தகையதே. சிவவாக்கியரும்,"பிறப்பால் அனைவரும் ஒருவரே" என்ற கருத்தை அடியாகக் கொண்டு, எல்லா மனிதரும் சலம் திரண்ட நீராலே உருவானவர்கள் என்றிருக்கையில் "சாதி எங்கே" என்கிறார் சாத்திரங்களை மேற்சாதியினராகிய ஒரு சிலர் மட்டுமே கற்கும் வாய்ப்பினைப் பெற்றிருந்தனர். அவ்வாறு கற்றவர்கள் அவற்றை அறியாத பிறரை இழிவாக மதித்தனர். இவ்வாறு இழிவுபடுத்தச் சாத்திரங்களைத் துணைக்காக்கும் சாத்திரிகளையும், வேதம் ஓதும் அந்தணர்களையும் சிவவாக்கியர் கடுமையாகச் சாடுகிறார்.

சாத்திரங்களுக்கு அடுத்தநிலையில், பூசைகள், வழிபாட்டு முறைகள் போன்றவற்றில் சடங்குகளைப் பின்பற்றி மக்களைத் திசைமாற்றிவிடுகின்ற அவலமும் சமுதாயத்தில் நிலவுவதைக் கண்ட சித்தர்கள் அவற்றையும் கடுமையாகச் சாடுகின்றனர்.

கோவிலும் குளங்களும் வழிபாட்டுக்குரிய சிறப்புச் சாதனங்கள்தாம். என்றாலும், அவற்றின் உட்பொருள் அறியவொட்டாமல் புறச் சடங்குகளாக அவை போய்விட்ட நிலை கண்டு வெகுண்டு பாடும் சிவவாக்கியர் "**உள்ளமே கோயில் எண்ணமே தெய்வம்**" எனும் தெளிவைத் தருகிறார். கல்லொன்றை நட்டுக் கடவுள் என்று பேரிட்டுச் சுற்றிவந்து, என்னவென்று விளங்கிக் கொள்ள முடியாத வார்த்தைகளையும் தெளிவற்ற ஒலிச்சத்தத்தையும் மந்திரங்களென்று முணுமுணுக்கிறவர்களையும் கடுமையாகக் கண்டிக்கிறார்.

உருவநிலையிலும் அருவநிலையிலும் அருவுருவ நிலையிலும் வைத்து இறைவனைப்போற்றும் மரபு சமய உலகில் உண்டு. அதைபோல் உருவவழிபாட்டின் மூலமாக மக்களை ஏமாற்றிப் பணம் பண்ணுவதும் ஆன்மீகத்திற்குப் புறம்பான தீங்குகள் புரிவதும் ஆகிய நிலை கண்டு வெதும்புவது சிவவாக்கியர் தம் இயல்பாக இருப்பதைப் பார்க்கமுடிகிறது.

சமய வழிபாட்டில் ஒதுக்கத்தக்கதாய் இன்றைக்கும் அமைந்து மானுடருள் பேதம் பெரிதும் விளைக்கும் ஒரு நம்பிக்கை தீட்டாகும். இது பெரிதும் பெண்களைப் புறக்கணிக்கும் ஒரு போக்காகும். இதனை முன்னிறுத்தி அவள் சமய, சமுதாய, நிகழ்வுகள் அனைத்திலும் புறக்கணிக்கப்படுகிறாள் மாதந்தோறும் பெண்களுக்கு உண்டாகும் உதிரத்திரட்சி வெளிப்பாடு இயல்பாக நிகழ்கிறது. இது நிகழாவிடில் மகப்பேறு இல்லை. உயிர்கள் உடம்பெடுத்தலுக்கு இது இன்றியமையாதது. இதனை அறிந்திருந்தும், அவ்வகைச் சூழ்நிலையில் பெண்களைத் தீட்டு என்றுப் புறந்தள்ளுவதைச் சிவவாக்கியர் பெரிதும் சாடுகின்றார்.

ஒவ்வொரு தனிமனிதரும் ஒழுக்கம் நிறைந்தவராக மாறிவிடின் ஒட்டுமொத்த சமுதாயமும் திருந்த வாய்ப்புண்டு. அந்தவகையில் சித்தர்கள் சமுதாய ஒழுக்கத்தை மேம்படுத்தத் தனிமனித ஒழுக்கத்தை நன்கு வழியுறுத்துகின்றனர். மனத்திலே அழுக்கினை நீக்காத மௌனஞான யோகிகள் வனத்தகத்து இருந்து தவம் புரிந்தாலும் மன அழுக்குடையோராய் இருப்பர். மனத்தகத்து மாசு அறுத்த மௌனஞான யோகிகள் மாதரொடு முயங்கியிருந்தாலும் மனத்தால், தூய்மை உடையோராய்த் திகழ்வர். என்று சிவவாக்கியர் விளக்குகிறார்.

“சமயப் பிரிவுகள் மக்களிடையே ஏற்படுத்திவிட்ட பூசல்களையும் பகைமை உணர்வையும் கண்டு சித்தர்கள் மனம் வருந்தினர். அன்பைப் பெருக்க வேண்டிய சமயம், அறிவுக்குப் பொருந்தாத செயற்கைப் பிரிவுகளால், மக்களிடையே வெறுப்பையும், வன்முறையும் வளர்த்தது. இந்தச் சமயப் பூசல்கட்குக் காரணங்களைக் கண்டு அவற்றைக் களைவதில் முற்பட்ட சிவவாக்கியர் முதன்மையாகிறார்.

அவரது நோக்கில், **“அரியும் சிவனும் ஒருவரே”**. **“சைவமும் வைணவமும் ஒன்றேயாம்”**. ஒரு பரம்பொருளின் இருகூறுகளாகச் சிவனையும் மாலையும் அவர் சுட்டிக்காட்டுகிறார் சித்தர் சிவவாக்கியர் தீமைகளை, சமூக அநீதிகளை மட்டும் எதிர்த்தார் அல்லர். அவற்றுக்கு எதிராக நன்மைகளையும் சமூக நீதிகளையும் நிலைநிறுத்தினார். பொய்ம்மையை எதிர்க்க அவருக்குள் வலுவாக நின்றது உண்மைத் தெளிவேயாம். அவர் மறுதலித்த அத்தனை சமுதாயத் தீமைகளுக்கும் எதிராக நற்பயன் நல்கும் மாற்றுச் சிந்தனைகளையும் அவர் முன்வைத்திருக்கிறார் எனபதே இங்கு இவரின் செயலில் காணக்கிடைக்கும் சிறப்பாகும்.

தனிமனித ஒழுக்கத்தின் இன்றியாமையாததின் தன்மையினை அறிவுறுத்தல், சமய ஒருமைப்பாட்டினை வழியுறுத்தல் போன்றவற்றைப் பற்றி எல்லாம் அறிவியல் பூர்வமாக அணுகி, அணுகிய அவ்வனுபவங்களை அறங்களாக்கி மக்களுக்கு தம் பாடல்களில் வார்த்திருக்கிறார் சித்தர் சிவவாக்கியர் என்கிற நிலையினைத் தெளிவுபடுத்துவதாக இம்மூன்றாம் இயல் அமைகிறது.

**“ஆறிவுதான் ஆண்டவன்”** என்பதனை உணர்ந்து, அக்கோட்பாட்டின் கண் வழிப்பட்டுத் தன்னையறிந்து, தன் தலைவனை உணர்ந்து, வாழ்வின் உண்மையில் ஒன்றுப்பட்டு நின்ற சித்தர் சிவவாக்கியர் வாழ்வியல் கூறுகளை தம் பாடல்களில் கூறி சென்றுள்ளமையை காணமுடிகிறது.

ஒன்றே பலவாக பரிணமித்திருக்கிறது என்பது இந்தியத் தத்துவங்களில் பரவலாகக் காணப்படும் கொள்கை. சித்தர்கள் பலரும் இக்கொள்கை உடையவர்களே. உயிரும் உடலும் சேர்ந்து உலகியல் வாழ்வுக்கு வருவதைப் பிறப்பு என்பது சிவவாக்கியாரின் கருத்தாக உள்ளது.

கருவில் நாம் உருவாகும் முன் நமக்குரிய உடம்பு எங்கே காத்திருந்தது? உருவம் உடம்பிற்கு உண்டாவதற்கு முன்பு உயிர்ப்பு எவ்விடம் இருந்ததது? கருவில் உடல் உண்டாகும் முன்பு அது எங்கே இருந்தது என்றால் அது சோதியில் என உணர்க. உரு உண்டாவதற்கு முன் உயிர்ப்பு எங்கே இருந்தது என்றால் அது நீரிலேயாகும் என்றும் விளக்கியுள்ளார்.

விதையில் வளரும் ஆலமரம் அதற்கு முன்பு எங்கிருந்தது? அது சூரிய ஒளி சூழ்ந்த பரவெளியில் இருந்தது. அதன் துணையுடன்தான் மரம் வளர்ந்தது. உணர்வு கூட இந்த வெளியில்தான் உள்ளது. எல்லாமே வெட்ட வெளியில்தான் உள்ளன என்ற உண்மையை விளக்கியுள்ளார்.

தானேயாய் மலர்ந்த தாதுவாகிய மூலப்பிரகிதியிலிருந்து பூமியானது தோன்றியதும், அந்தப் பூமியில் பல பொருள்களும் கலந்து நிரம்பியதும், பிறகு அவை பிரிந்ததும், ஐந்து புலன்களும், பொறிகளும் தமக்குள் கலங்கியே பூமியில் விழுந்து உடல்களாக வந்தன எனவும் இந்த உலகின் தோற்றத்திற்கு காரணமாக இருக்கும் நிலையைக்கண்டு தெளிவுப்படுத்துகிறார்.

ஆதியும் அந்தமுமாகிய மூலப்பிரகிதியிலிருந்து விந்துவும் நாதமும் (ஒளியும், ஒலியும்) தோன்றி ஐந்து பூதங்களாய் விரிந்தன. இதேபோல் உடம்பிலும் மூலாதாரத்திலிருந்து ஒளியும், ஒலியும் தோன்றி ஐம்பூத ஆதாரங்களாக விரிந்தன. இவ்வாறாக அண்டத்திலும் உடலாகிய பிண்டத்திலும் மூலப்பொருள் விந்து நாதங்களாகத் தோன்றுவது அவைகளாகவே அடங்குவதும் சிவாயத்தாலே என்கிறார்

ஆணும் பெண்ணும் கூடியதால் கருத்தரித்து குழந்தைப் பிறக்கிறது. கருத்தரிப்பதற்கு முன் காயம் (உடல்) என்பது வெப்பமாய் இருந்தது என்றும், உருவம் தரிப்பதற்கு முன் உயிர் என்பது நீராய் இருந்தது என்றும், சிவவாக்கியர் தன் பாடலின் வழியாகத் தெளிவுபடுத்தியோடு மட்டுமன்றி, உருத்தரிப்பதற்கு முன்பு உயிரானது, ஆடவரிடம் விந்து என்ற நாதத்துடன் கலந்து நிற்கும் என்பதனையும், கருத்தரிப்பதற்கு முன்பு உடல் எனும் காயம், பெண்ணிடம் தோன்றும் சுரோனிதம் என்னும் சோவிதத்திலே நிலை கொண்டிருக்கிறது என்றும் தெளிவுபடுத்துகிறார்.

விந்து என்ற சுக்கிலமே மானுடப் பிறப்புக்கு வித்தாகிறது. அந்த வெண்ணிறமாகிய நீரே பெண்ணுடல் கலந்தபின் கருத்தரித்து உருவாமாகிறது. அவ்வாறு உருப்பெற்று, மனிதனிடமே மீண்டும் தோற்றமெடுப்பதுவும் அதுவேயாகும். அது தொடர்ந்து இடையறாமல் செயல்படுகிறது என்றும் விளக்கமளிக்கிறார்.

அண்டத்தில் உள்ளது பிண்டத்திலும் உள்ளது. தானேயாய் மலர்ந்த தாதுவாகிய மூலப்பிரகிதியிலிருந்து பூமியானது தோன்றியதும், அந்தப் பூமியில் பல பொருள்களும் கலந்து நிரம்பியதும், பிறகு அவை

பிரிந்ததும். ஐந்து புலன்களும், பொறிகளும் தமக்குள் கலங்கியே பூமியில் விழுந்து உடல்கள் வந்தது எனச் சிவவாக்கியர் கூறுகிறார்.

புவியில் முதல் உயிரானது வேதியில் தாக்கங்களின் விளைவால் நீரினடியிலே உருவாகின. இதற்கான சூழல் தரையில் இல்லாமையால் ஆழமான நீரே இதற்குப் பொருத்தமான ஊடகமாகத் திகழ்ந்தது. இந்த வேதியல் தாக்கங்களுக்கான சக்தி கடலடி எரிமலைகளாலும், புற ஊதாக் கதிர்களாலும், மின்னலாலும் கிடைக்கப்பெற்றன.

பரந்த இந்த அண்டம் பருப்பொருட்களினால் ஆனது, இந்தப் பருப்பொருள், பல தனிமங்களால் உண்டானது. இப்பலத் தனிமங்களே வாயுக்களாக பரிணமித்தது, இந்த வாயுக்களே பஞ்சப் பூதங்கள் (தனிமங்கள்) என வழங்கப்பட்டு உலக உருவாக்கத்திற்கு அடிப்படைக் காரணம் எனக் கொள்ளப்படுகிறது. இந்தப் பஞ்சப் பூதங்களே புவியில் உயிர்களின் தோற்றத்திற்கு தோன்றுவாயாக அமைந்திருக்கிறது என்பது மிகவும் நுட்பமான அதே வேளையில் தின்னமாகும் என்று சித்தர் சிவவாக்கியர் பாடல்களின் வழியாக அறிவியல் துணைக்கொண்டு விளக்குவதாக நான்காம் இயல் அமைகிறது.

மனித வாழ்வில் இன்ப உணர்வை அனைவரும் விரும்புகின்றனர். தொடர்ந்து இன்ப உணர்வை அடைய முயல்கின்றனர். பற்பல நினைவுகளால் தாக்குண்ட மனிதன் துன்ப உணர்வால் அலைக்கழிப்படுகின்றான். நிலையான இன்பம் எப்பொழுது கிடைக்கும், எப்படி கிடைக்கும் என்றெல்லாம் அவன் ஏங்குகின்றான். இந்நிலையில் உலகியலை அறிவால் அறிந்து நல்வுணர்வால் தூண்டப்படுகின்ற நன்னிலையை அடைந்தால் பேரின்பம் அடையமுடியுமோ என்று எண்ணிய சான்றோர்களின் சிந்தையில் தோன்றிய, உறுதியானதும் இறுதியானதும் ஆகிய நல்லுணர்வே இறையுணர்வு என்பதை சித்தர்கள் தெளிவுபடுத்துகின்றனர்.

தமிழ் இலக்கியங்களில் இறையுணர்வு மிகுதியாக இடம் பெற்றுள்ளது. சித்தரிலக்கியம் பிற இலக்கியங்களினின்றும் வேறுபடும். பிற இலக்கியங்களில் கதைகள் மூலம் நீதிக்கருத்துகளும், இலக்கிய இன்பமும் வெளிப்படுத்தப்படுகின்றன. ஆனால் சித்தர் இலக்கியங்களோ கடவுள் பற்றிய கருத்துக்களையும், வாழ்வியல் நெறிகளையும் மிகுதியாக விளக்கிக் குறிப்பிடுகின்றன.

சிவவாக்கியரின் நோக்கில், யோகம் என்பது மனதை ஒருநிலைப்படுத்தி அகமுகமாக இறைவனைத் தம்முளே உணர்வது அல்லது இறைவன் என்ற நிலையுடன் இரண்டறக் கலந்துவிடுவிடுதாகும்.

இறைவனை அடைவதற்குரிய படிநிலைகள் நான்கையும் அவற்றின் பயன்களையும் தனித்தனியாக மற்றவர்கள் சொல்லியிருக்க, சிவவாக்கியர் இன்ன இன்ன படிநிலைக்கு, இன்ன இன்ன பயன் பெறுவார் என்பதைப்

பொருத்திக் காட்டியிருப்பது சிறப்பான மற்றும் முறையான விளக்கமாகத் திகழ்கிறது.

உயிர்ச்சக்தியானது நம் உடலில் சூக்கும நாடிகள் வழியே வாயுவாக ஓடிக் கொண்டிருக்கிறது என்றும், நம் உடலில் ஓடும் வாயுக்கள் மூச்சுப்பயிற்சியின் வழியாகவே கட்டுப்படுத்தப்படுகின்றன என்பதையும் விளக்கிக் கூறுகிறார். பிராணயாமம் என்பது பொதுவாக மூச்சுப்பயிற்சியைக் குறித்தாலும், அது நம் உடலில் ஓடிக் கொண்டிருக்கும் பிராணன் என்னும் உயிர்க்காற்றின் பயிற்சியையே சிறப்பாகக் குறிக்கிறது. நாசி, மூச்சுக்குழல், காற்றுப்பை வழியாக வாங்கிவிடும் மூச்சை ஒழுங்குப்படுத்தும் பயிற்சியின் மூலமே பிராணனின் ஓட்டத்தைக் கட்டுப்படுத்த முடியும். மூச்சுப் பயிற்சியின் மூலம் கட்டுப்படும் பிராணன் எனும் உயிர்ச்சக்தி தன் கொதிப்பும் கொந்தளிப்பும் அடங்கி அமைதி அடைகிறது. மூச்சோடு மிக நெருங்கிய தொடர்புடையது மனம். மன அதிர்வுகளே மாயா காரியங்கள் அனைத்திற்கும் காரணமாகின்றன. மூச்சுப்பயிற்சியின் மூலம் கட்டுப்படும் மனத்தில் அதிர்வலைகள் மறைகின்றன, அமைதி நிலவுகின்றது. எனவே, மூச்சுப்பயிற்சியானது பிராணனை ஒழுங்குப்படுத்தவும் மனத்தை ஒருமுகப்படுத்தவும் வழி செய்கிறது என்பதனை தெளிவுபடுத்துகிறார்.

பிராணயாமப்பயிற்சி மூன்று உறுப்புக்களை உடையது, மூச்சை **வெளியிடுதல், உள்ளிழுத்தல், நிறுத்துதல்** என்ற முறையில் இப்பிராணயாமப் பயிற்சியானது நடக்கிறது. காற்றுப்பை ஏறத்தாழ வெற்றிடமாகும் வரை முதலில் காற்றை வெளியேற்ற வேண்டும். இது இப்பயிற்சிக்குத் தயாராகும் நிலையாகும். தாமரைத் தண்டில் நீர் ஏறுவதைப் போல மூச்சை நேராக உள்ளிழுக்க வேண்டும். இதற்குப் பூரகம் என்றும் இவ்வாயுவை அபானன் என்றும் கூறுவர். உள்ளிழுத்த காற்றை உள்ளே நிறுத்துதல் கும்பகம் எனப்படும். கும்பகப்படும் வாயுவை வியானன் என்று கூறுவர். உள்ளே நிறுத்திய காற்றை சீராக வெளியிடுதல் ரேசகம் எனப்படும். இவ்வாயுவையே பிராணன் என்று கூறியுள்ளார்.

இப்பிராணாயாமப் பயிற்சியை மேற்கொண்டு மனிதன் உயிர் வாழ அடிப்படையாக விளங்கும் மூச்சினை ஒழுங்குப்படுத்தி தமது கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவந்து விட்டால். உடலின் உள் உறுப்புகளும் வலிமை பெறும். நீண்ட ஆயுட்காலத்தையும் மனிதனானவன் தனது வாழ்நாளில் எய்துவான், அவனது ஆரோக்கியமும் மேன்மையடையும். இதனை, ஔவையாரும் தமது பாடலின் வாயிலாக எடுத்துக்கூறுகிறார்.

பாடகர்கள் பாட்டினை பாடும்போது, இப்பிராணாயாமப் பயிற்சியானது நிகழ்வதால் தான் பாடகர்கள் அனைவரும் நீண்ட ஆயுளைப் பெற்று வாழ்வதை நாம் காண்கிறோம். மேற்கூறிய எடுத்துக்காட்டு ஔவையாரின் கூற்றினக்கு துணைபுரிகின்றன.

வாசி என்பது உயிர்மூச்சு, வாசியோகம் என்பது உயிர்மூச்சை உள்மார்க்கமாக நெறிபடுத்தி உயர்நிலையை அடைதலாகும என்று மூச்சுக்கலை பற்றி நுட்பமாக விளக்கியுள்ளார். உடம்பில் மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை ஆகிய ஆறு ஆதாரங்களைச் சிவவாக்கியர் ஆறுதாமரைகள் என்றும் ஆறு மாநிலங்கள் என்றும் குறிக்கின்றார். இரண்டிரண்டு ஆதாரங்களை ஒவ்வொரு மண்டலம் எனக்கொண்டு முறையே, ஆறு ஆதாரங்களை மூன்று மண்டலங்களாகாக் காட்டுகிறார். குண்டலினியைச் சிவவாக்கியர், வித்து என்று குறிப்பிடுகின்றார். குண்டலினி சக்தி என்பது விந்துவின் சிறப்பு ஆற்றலாகும். இது போகத்தின்போது கீழ்நோக்கிப் பாய்ந்து சிற்றின்பம் ஆகிறது. யோகத்தின்போது மேல்நோக்கி ஏறிப்போய் பேரின்பம் பயக்கிறது.

மூலவினாத்தண்டு என்பது முதுகுத் தண்டாகும். ஆறு ஆதாரங்களும் இம்மூல வினாத்தண்டுகளையே அமைவிடமாகக் கொண்டுள்ளன. மூலவினாத்தண்டின் நடுவில் கீழிருந்து மேலாக அமைந்துள்ள மெல்லிய நுண் குழல் சூக்குமநாடி எனப்படும். சுழிமுனை என்பது மூக்கின் மேல்நுனியும் புருவங்கள் இரண்டும் சந்திக்கும் இடமாகும். இதனை, சிவவாக்கியர், மூன்றாவது கண் என்றும் நெருப்பறை என்றும் குறிப்பிடுகின்றார்.

நெற்றிக்கண் நாட்டத்தில் மனதை வைத்துக் குண்டலினி சக்தியோடு கூடிய உணர்வால், கருத்துடன் கவனித்தால் சுழிமுனையில் சுவாசம்தானே அடங்கி மனோலயம் உண்டாகும். அப்போது சிரசினுள்ளே செஞ்சுடர் சோதி தோன்றித்திகழும். பலவிதமான நாத ஒலிகள் பரநாத ஒலிகள் எழுந்து இன்பம் தரும்.

மூச்சின் நீளம், உச்சிநோக்கி ஒடுங்க அட்டமாசித்திகள் எனப்படும் எண்பெரும் ஆற்றல்கள் சித்தியாகும். மூளைக்கு மேலேயும் மண்டை ஓட்டிற்குக் கீழேயும் உள்ள இடைவெளி உச்சியாகும். இதைச் சிவவாக்கியர், வெளி என்றும் வட்டவீடு என்றும் குறிப்பிடுகின்றார்.

வாசியால் ஏறிய குண்டலினி சக்தி இந்த உச்சி வெளியாகிய பிரம்மரந்திரத்தைத் தட்டி, வெப்பம் ஆக்குகிறது. தக்க வெப்பம் கிடைத்தவுடன் உருகி அமிர்தம் கரந்து உள்ளில் இறங்கும். இவ்வமிர்தம் மாங்காய்ப் பால் எனப்படும் என்றும், சமாதி என்பது மூச்சு உள்ளில் முழுமையாய் ஒடுங்கி இவ்வமிர்தபானத்தை உண்டு மரணத்தை வென்று பேரின்பத்தில் இலயித்திருப்பதாகும். இம்மேலான நிலையினை எய்திய சித்தர்கள், எத்தனை ஆண்டுகள் வேண்டுமானாலும் உயிரோடு கூடிய உடம்பு அழியாது இருப்பர். ஊழிக்காலம் வாழ்வார் என்பது சிவவாக்கியரின் கூற்றாகும்.

பெறற்கரிய இப்பேரின்பப் பெருநிலையை அளிப்பது, யோகநெறியாகிய வாசியோகமும், அதனாலாகும் குண்டலினி யோகமுமாகும்.

எனவே சிவவாக்கியர் உணர்த்தும் சித்தநெறி யோகநெறியே என்பது புலனாகின்றது.

பஞ்சபூதங்களின் குணங்களில் எல்லாம் இறைவனே நிறைந்து நிற்கிறான். மனித உடம்பு நமசிவய என்னும் ஐந்தெழுத்தின் அமைப்பாகப் படைக்கப்பட்டுள்ளது. 51அட்சரங்கள், ஆறாதாரங்களுடன் தொடர்புடையனவாய், மந்திரமாய், ஆகமமாய் நிறைவது 51 எழுத்து என்றும், எட்டும் இரண்டு என்பது அகரம், உகரம் என்பதுடன் எட்டு அடுக்குகள் கொண்ட தூல தேகமும், இரண்டு நிலைகொண்ட பிராமணகோசமும் ஆகும். மனத்தை ஒருமைப்படுத்தித் தன்னை அறிதலுக்கு முறைப்படுத்த வேண்டும். என்று விளக்குகிறார்.

அகத்துள்ளே இறைவன் உறைகிறான். உண்மை, அறிவு என்பது ஞானமாகிய சோதி – உள்ளத்திலே இருப்பதைக் கண்டுணர்வதேயாகும்.

ஆன்மாவை இறைமையில் கலக்கச் செய்யும் யோகப்பயிற்சிக்கு உறுதுணையாக உடல் இருப்பதால் அதன் நலனுக்காவும், வலிவோடும் வளமோடும் வைத்துக்கொள்ளவுமே சிலப் பயிற்சிகள் மேற்கொள்ளப்படுகின்றன. இதுவே யோகாசனம் என்று அழைக்கப்படுகிறது. இப்பயிற்சிகளின் மூலம் உடலின் அகபுற உறுப்புக்களையும் அவற்றின் இயக்கங்களையும் கட்டுப்படுத்தி நாம் விரும்பும் வண்ணம் உடலை இயக்கமுடியும்.

உடலுறுப்புகளின் கட்டுப்பாடும் ஒழுங்கும் இல்லாமல் மனப்பயிற்சி மேற்கொள்வது கடினம். அதேபோல், மனப்பயிற்சியும் பக்குவமும் கலவாத உடற் கட்டுப்பாட்டால் பயனேதும் இல்லை. எனவேதான், சித்தர்களின் யோகநெறி மனத்தை அடிப்படையாக உடையது. இத்தகைய சித்தர்களின் யோகநெறி, இராசயோகம், வாசியோகம், குண்டலினியோகம் என்று பல பெயர்களால் அழைக்கப்பட்டாலும், கருத்துக்களை வலியுறுத்தும் வகையால் பெயர்கள் வேறுபட்டாலும், இத்தகைய யோகங்கள் யாவும் உடலையும் ஆன்மீக உணர்வையும் ஒன்று கூட்டிச் செய்யப்படும் யோகங்களே ஆகும்

இறந்தபின் இழிவினை அடையும் உடம்பினை அதனுள் உயிர் இருக்கும் காலத்திலேயே உரிய முறையில் முயன்றோமானால், இறைவனைக் காணுதற்குரிய திருக்கோயிலாக மாற்றிட முடியும் என்பது சித்தர் சிவவாக்கியாரின் இறைநிலைக் கோட்பாடாகும். சித்தர் சிவவாக்கியாரின் பாடல்கள் , மனித வாழ்வை மேன்மையுறச் செய்வதாயும், நோய்களற்ற வாழ்வை வாழ்ந்து இறை நிலையை அடையும் பல வழிகளையும் சிறப்பாக விளக்கியுள்ளார்.

சித்தர் சிவவாக்கியாரின் யோகக் கலையைப் பற்றி எதிர்காலத்தில் ஆய்வு மேற்கொண்டால் மனித வாழ்விற்குத் தேவையான யோகக்கலையைப் பற்றிய செய்திகளை வெளிக்கொணரலாம்.

# தமிழ் இலக்கியத்தில் சித்தர்களின் பங்கு

## முன்னுரை

தமிழ் இலக்கியப் படைப்புகள் காலந்தோறும் வடிவத்தாலும், பொருளாலும் மாறுபட்டு வந்துள்ளன. இலக்கிய வடிவங்கள் சுருக்கமும் செறிவும் வாய்ந்த வடிவமாதலால் தமிழர்கள் எல்லாவற்றையும் பாட்டு என்ற வடிவத்திற்குள்ளேயே ஆக்க முற்பட்டனர். தமிழில் காலந்தோறும் ஏற்பட்ட பதிவுகளில் சித்தர்களின் சிந்தனைப் பதிவும் குறிப்பிடத்தக்கது. சித்தர் இனம் நீண்ட நெடுங்காலமாக இந்த நிலத்தில் வேரூன்றி விழுது பரப்பி வருகிறது.

**"எனக்கு முன்னே சித்தர்பலர் இருந்தார் அப்பா!"**

**யானும் வந்தேன் ஒருசித்தன், இந்த நாட்டில்!"**

**(பாரதி அறுபத்தாறு – 1)**

என பாரதி தன்னைச் சித்தர் பரம்பரையில் இணைத்துக்கொண்டு பெருமைப்படுத்துகிறார். பட்டினத்தாரும், தாயுமாணவரும், வள்ளலாரும் சித்தர் தத்துவங்களைக் கோட்பாடுகளாக்கிக் கொடுத்தவர்கள் .உள்ளொளி பெற்ற சித்தர்கள் உண்மையை உணர்ந்து ஊருக்கு உபதேசம் செய்தனர். மெய்ஞ்ஞானம் மேவியோர் மேதினியில் ஐம்புலன் நுகர்வுகளை, ஆசாபாசங்களை, நலந்தீங்குகளை, அவலங்களைத் தத்துவப் பாடல்களாக வகுத்தனர்.

## சித்தர் இலக்கியம்

சித்தர் இலக்கியம் தமிழில் தனிவகை இலக்கியம், குறியீட்டு இலக்கியம், காலந்தோறும் வளர்ந்த இலக்கியம்,தத்துவ இலக்கியம், சித்தர்களின் நுண்ணுணர்வு, ஆழ்நிலை எண்ணங்கள், வெடிப்புறு சிந்தனைகளில் வீசும் அலைகள் பொறி போலச் சுடர்விடுகின்றன. சித்தர் சிந்தனை வளமும் கருத்துக் கொடைகளும், எண்ண விரிவுகளும் தவஞானியர்களின் சிந்தனை எச்சங்களாக மொழியைச் செழுமைப்படுத்தி உள்ளன.

தமிழ் நாட்டு வரலாற்றிலும், இலக்கிய வரலாற்றிலும் சித்தர்கள் இன்றியமையாதொரு இடம் பெறத்தக்கவர்கள். அவர்கள் பெயரில்

கிடைக்கின்ற அச்சில் வெளிவந்துள்ள நூற்றுக்கணக்கான நூல்கள் மூலமாகவும், வெளிவராத ஏடுகள் மூலமாகவும் மக்களுக்கும், மொழிக்கும் ஆற்றியுள்ள தொண்டினை நன்கு அறியலாம். சித்தர் சிந்தனை என்று தோன்றி எவ்வாறு வளர்ந்து ஓங்குகிறது என்பதனை எவரும் அறிதியிட்டுக் கூற இயலாது.

அவர்களது எண்ணங்கள் எல்லைகளுக்கு உட்பட்டன அல்ல, வரம்பு கடந்தன, வானைத் தொடுவன, சித்தர் சிந்தனை வளத்தினை முற்றக் கண்டவர் யார்? சித்தர்கள் எழுப்பிய வினாக்கள் எத்தனை? சித்தர்களின் மெஞ்ஞான தத்துவமும், விஞ்ஞான உணர்வும், காலத்தை வென்ற கருத்தும் தமிழுக்கு அழகையும் வலிமையும் வனப்பையும் தந்துள்ளதை காணமுடிகிறது.

மருத்துவம், மந்திரம், ரசவாதம்,யோகம், ஞானம் முதலிய பல்வேறு துறைகளில் எளிய தமிழில் பல்வேறு யாப்பு, சந்தம் முதலியவற்றோடு பாடல்களை இயற்றித் தமிழ் இலக்கிய உலகிற்குப் பெருமை சேர்த்துள்ளனர். "திருமுறைகளைப்" போல சித்தர் இலக்கியத்தை எல்லாக் காலத்திலும் எல்லாரும் போற்றவில்லை என்றாலும், இவை சிந்தை கவரும் பாடல்களாகவே திகழ்கிறது. மொழியாலும் நடையாலும் பாடல் வடிவத்தாலும் நாட்டுப்புற இலக்கியத்தின் செல்வாக்கு சித்தர் இலக்கியத்திற்குச் செழுமை சேர்த்துள்ளது. பேசாப் பொருளை அவர்கள் பேசிய திறமும், உயிர் இயல்பை உணர்த்திய திறமும், யோகத்தின் ஒருமையினை பெருமையினைப் பேசிய திறமும் பெருந்திறமாகும். "கள்ளிக்கு என்ன வேலி" எனக் கேட்கும் கருத்து வெளிப்பாடும், கவிதை அழகும் நினைந்து நினைந்து இன்புறத்தக்கன.

சித்தர் பாடல்களால் செந்தமிழ் செழுமை பெற்றுள்ளது. கருத்துக்கெட்டாத சிந்தனைகளையும், அவர்கள் கவிதைகளில் சொல்ல முயன்றுள்ள திறம் களிப்புறத்தக்கது

## சித்தர் என்ற சொல்லின் பொருள் விளக்கம்

**"சித்" என்ற அடிச் சொல்லிருந்து சித்தன் என்ற சொல் பிறக்கும் "சித்" என்பதற்குப் பேரறிவு என்பது பொருள்"[1]. "பேரறிவு பெற்றவர்கள் சித்தர்கள். சாமி சிதம்பரனார், "சித்தர்கள்" என்றால் அறிவு படைத்தவர்கள்,**

**அறிஞர்கள்,மேதைகள், பேரறிவு படைத்தவர்கள், விஞ்ஞானிகள், மெய்ஞ்ஞானிகள் என்று பொருள் சொல்லுவதே பொருத்தமாகும் என்பர்''**[2]. **''சித்து'' என்னும் சொல்லைக் குறிக்க ''மிஸ்டிஸம்'' எனவும் சித்தர்களை குறிக்க ''மிஸ்டிக்ஸ்'' எனவும் ஆங்கிலத்தில் கூறுவர். ''முஸ்டஸ்'' என்னும் கிரேக்கச் சொல்லினின்று ''மிஸ்டிசிஸம்'' என்னும் சொல் தோன்றியது. இக்கிரேக்கச் சொல்லுக்கு வாழ்க்கையைப் பற்றிய (பிறப்பு மற்றும் இறப்பு) நுண்ணிய அறிவு என்பது பொருள்''**[3] **என பல விளக்கங்கள் இருந்தாலும் ''பேரறிவு'' படைத்தவர்கள் என்பது சாலப் பொருத்தமாகும்.**

## சித்தர்கள் உலகியலைத் துறந்தவர்கள்

சித்தர்கள் உலகியல் நடப்புக்கு மாறானவர்கள், சித்துக்கள் ஆடுவதில் வல்லவர்கள், அலைபாயும் சித்தத்தை அடக்கியவர்கள் . சித்தம் – சித்து – சித்தர் எனவும் விளக்குவர். சித்தம், மனம், புத்தி, அகங்காரம் ஆகிய நான்கினையும் அந்த கரணங்கள் என்பர். இவற்றுள் மனம் நினைக்கும், புத்தி விசாரிக்கும், அகங்காரம் எழுப்பி வைக்கும், சித்தம் முடிவு செய்யும், இவை அனைத்தும் சேர்ந்து தொகுப்பினைச் சித்தம் என்பர். இத்தகைய நிலையினைப் பெற்றவர்கள் சித்தர்கள் ஆவார்கள்.

**''நன்னெறியில் ஒழுகும் மேலோரைச் சான்றோர்கள் என்றும் பேரறிவாளர் என்றும் இரு பிரிவினராக்குவர். அறவோரும், அந்தணரும் முதல் பிரிவைச் சார்ந்தவர்கள். ரிஷி, முனி, சித்தர் ஆகிய மூவரும் இரண்டாம் பிரிவைச் சார்ந்தவர்கள்''**[4] "ரிஷி" , "முனி" , "சித்தர்" ஆகியோரை ஒரு பிரிவில் அடக்குவது சித்தர்களின் தன்மையை நன்கு புலப்படுத்துகிறது. சித்தத்தின் சலனம் அனைத்துத் தத்துவங்களின் தோற்றம். இத்தகைய சித்தத்தை வென்றவர்கள் இவர்களது தன்மையை

**''ஊதுகிற வூத்தறிந்தா லவனே சித்தன்''**

**(ஔவைக்குறள் மூலமும் உரையும், ப – 37)**

**''சாத்திரத்தைச் சுட்டெரித்தால் அவனே சித்தன்''**

**(சித்தர் ஞானக் கோவை, அகத்தியர் ஞானம் –5)**

**"சிந்தை தெளிந்திருப்பவனே சித்தன் ..............**

**செகமெல்லாம் சிவமென்ற யறிந்தோன்"** (வான்மிகி சூத்திரம் – 16)

**"ஆச்சப்பா தத்துவத்தை யுணர்ந்த்தோன் சித்தன்"**

**(அகத்தியர் தத்துவம்–108)**

என்று பலரும் விளக்கியுள்ளமையைக் காணலாம்.

சாத்திரத்தைச் சுட்டெரித்தவன், சிந்தை தெளிந்திருப்பவன், சிவத்தை அறிந்தவன். தத்துவத்தை உணர்ந்தவன் "சித்தன்" எனப் பெறுகிறான் என்றும் சித்தத்தை வென்றவன் சித்தன் என்றும் அவனது இறைப்பற்று, அனுபவ நிலை சித்து அல்லது சித்தி என்றெல்லாம் கூறப்படுகிறது. சித்தி என்ற சொல்லுக்கு அடைதல் என்பது பொருளாகும்.

**"சீரிலுயரட்ட சித்தியார்க்குஞ்**

**சித்திக்குமே சிவன் செயலினால்"**

**(சித்தர் ஞானக்கோவை கடுவெளி சித்தர் – 18)**

என்பதில் அட்ட சித்தி, சிவன் செயலினால் சித்திக்கும் என்பர். இதில் சித்திக்கும் என்பதற்குக் "கிடைக்கப் பெறுதல்" அல்லது "அடையப் பெறுதல்" எனப் பொருள்படுகிறது. இதனால் பெறத்தக்கப் பேறு எனக் கருதப்படுகின்ற எல்லாம் அறிந்த நிலை கைவரப் பெறுதல் சித்தி எனவும், அதனை அடைந்த்தவர் சித்தர் என்று கருதப்பட்டமையும் தெளிவாகிறது.

**"இறைவனைச் சத், சித், ஆனந்தம் எனக் குறிப்பர். சத் என்பது என்றும் உள்ளது, சித் என்பது பேரறிவு, ஆனந்தம் என்பது பேரின்பம். பேரறிவு பொருளான இறைவனை உணர்த்தும் "சித்" என்ற சொல்லை அடிச் சொல்லாகக் கொண்டு சித்து – சித்தன் எனக் கருதுவர்"**[5]

சிவனைச் சித்தனாகக் கொண்டு சமயச் சார்பற்ற நிலையில் பாடிய யோகியோர் "சித்தர்கள்" என்று சுட்டப்பட்டனர். "சித்தி" என்ற சொல்லுக்குப் பேறு என்ற பொருளும் உண்டு . "பேறு" என்பது இறை இணைவுக்குப் பின்பாகிய வாய்ப்பினைக் குறிக்கும். இப்பேற்றை அடைந்தவர் சித்தர் ஆவார்.

**"சாலோகம், சாமீபம், சாருபம், சாயுச்சியம் ஆகிய நான்கும் நான்கு வகை முத்தி என்பர்"**[6]. இறைவன் உலகில் இருக்கும் பேறு சாலோகம், இறைவன் அருகில் இருக்கும் பேறு சாமீபம், இறைவன் ரூபம் அடையும் பேறு

சாரூபம், இறைவனோடு ஒன்றும் பேறு சாயுச்சியம் . இவற்றில் முதல் மூன்றம் "பதமுத்தி" எனப்படும். இருதியாகிய சாயுச்சியம் "சித்தி" எனப்படும். இதனை அடைந்தவர்கள் சித்தர்கள் ஆவர். இவர்கள் இறைவனோடு ஒன்றும் பேற்றினைப் பெற்றவர்கள் என்பது இதன் மூலம் தெளிவாகிறது.

**"ஏகாமல் வாசனை யறிந்தோன் சித்தன்"**

**(சித்தர் ஞானக்கோவை – 156)**

எனச் சட்டை முனிச் சித்தர் கூறுவர். இங்கு வாசனை என்பது கர்ம வினையாகும். பிறவி தோறும் தொடர்ந்து இதன் இயல்பு. இதனை எழுப்பாமல் தடுப்பவன் "ஞானி" என்றும் ஏறாமலேயே தடுப்பவன் "சித்தன்" எனவும் கருதப்படுகின்றனர். கர்ம வினையை அடியோடு அழிப்பவன் சித்தன் என்பது இதன்பால் விளக்கம்.

தமிழ் இலக்கண,இலக்கிய நூல்களும் "சித்தர்" என்ற சொல்லுக்கான பொருள் விளக்கத்தையும், சித்தர்கள் பற்றிய குறிப்புகளையும் எடுத்தியம்புகின்றன. அவற்றில் தமிழில் கிடைக்கப்பெற்ற முதல் நூலான "தொல்காப்பியத்தில்" தொல்காப்பியர்

**"மறுவில் செய்தி மூவகைக் காலமும்**
**நெறியின் ஆற்றிய அறிவன்"**[7]

எனக் கூறுகிறார். இவற்றில் அறிவனைச் சித்தராகக் கொள்ள இடம் உண்டு. **"அறிவனை விளக்கும் இளம்பூரணர், வானியலோடு கலந்து வருங்காலம் உணர்த்துகின்ற "கணியன்" என்று கூறுகிறார்"**[8]. நச்சினார்க்கினியர், காமம், வெகுளி, மயக்கமில்லாத ஒழுகலாற்றினன் இறப்பும், நிகழ்வும், எதிர்வும் என்னும் மூவகைக் காலத்திலும் வழங்கும் நெறியான் அமைந்த முழுதுணர்வுடையோன், என்றும் விளக்குகிறார். இவிளக்கம் சித்தர் என்ற சொல்லுக்குரிய பொருளாக அமைகிறது.

**“நச்சினார்க்கினியர் அறிவருக்குச் சான்றாக கலசயோனியாகிய அகத்தியன் முதலியோரும் அறிவரென்று உணர்க”**[9]. என்று குறிப்பிடுகின்றார். அகத்தியர் ஓர் அறிவர் என்று நச்சினார்க்கினியர் குறிப்பிடுவது இங்கு ஆழ்ந்து நோக்கத்தக்கது.

**“நிலமிசை வாழ்நர் அலமரல் தீரத்**

**தெறுகதிர்க் கனலி வெம்மை தாங்கிக்**

**கால் உணவாகச் சுடரோடு கொட்டும்**

**அவிர்சடை முனிவர்”**[10]

என்று புறநானூற்றில் குறிப்பிடப்படுகிறது. இதில் உள்ள பொருள் விளக்கம் , இடைக்காடர் கதையை நினைவூட்டுவதாக அமைகிறது. பூமியில் உள்ள மாந்தர்களின் துயரங்கள் தணிவதற்காகச் சூரியன் முதலிய கோள்களின் வெப்பத்தை அமைதிப் படுத்திக் காற்றையே உணவாகக் கொண்டு அச்சுடருடனே சூழவரும் சித்தர். எனக் குறிக்கிறது.

**“நிலந்தொட்டுப் புகா அர் வான மேறார்**

**விலங்கிடு முந்நீர் காலிற் செல்லார்**

**நாட்டினாட்டி னூரி னூரிற்**

**குடிமுறை முடிமுறை தேரிற்**

**கெடுநாடு முலரோங் காதலரே”**[11]

எனச் சித்தர்களின் இயல்பினைக் குறுந்தொகை நூல் விளக்குகிறது. மணிமேகலை இவ்வியல்புடையவர்களைச் சாரணன் என்று குறிப்பிடுகிறது. இதனை

**“நிலத்திற் குளித்து நெடுவிசும் பேறிச்**

**சலத்திற் றரியுமோர் சாரணன்”** [12]

என்பர் சாத்தனர்.

**"இருநிலம் புகுதலும் ஒரு விசும்பி வர்தலும்**
**வருதிரை நெடுங்கடல் வாய்க் கொண்டு மிழ்தலும்**
**மந்தர மேந்தலும், என்றிவை பிறவும்**
**பாண்டியல் விச்சைப் பயிற்றி மாக்களைக் கண்டறிவதும்"**[13]

என்று பெருங்கதை குறிப்பிடுகிறது.

**"சித்தர்களின் சித்துக்களைச் சூடாமணி நிகண்டு,"நீரினிற் பூவினில் வானிலைந் துழியொதுங்குகின்ற சாரணரேன்மராவார் சமணரிலிருந்து பெற்றோர்"**[14]. என்று விளக்குகிறது. சிலப்பதிகாரம் நாடுகான் காதையில் வரும் "சித்தன்" என்ற சொல்லுக்கு கிருத கிருத்தியன் , செய்யவேண்டுவனவற்றைச் செய்து முடித்தவன் ,கன்மங்களைக் கழுவினவன் , எண்வகைச் சித்துக்களையும் உண்டாக்கினவன் என்று அடியார்க்கு நல்லார் பொருள் கொள்கின்றார். இவை சீவன் முத்தர்களைக் குறிக்கும் சொற்றொடர்கள். எனவே சித்தர்களைச் "சீவன் முத்தர்கள்" என்றும் "பிறப்பறுத்தவர்கள்" என்றும் அடியார்க்கு நல்லார் குறிக்கிறார்.

## சித்தர் புறத்தோற்றம்

நடை, உடை, பாவனைகளால் பிற மக்களிடமிருந்து சித்தர்கள் வேறுபட்டிருந்தனர் என்பது பொதுவானதொரு கருத்து. இந்திய நாட்டுச் சித்தர்கள் பலரும் தலையில் சடை முடியும் முகத்தில் நீண்ட தாடியும் கழுவாத உடலும் கந்தல் உடையும் தாங்கியவர்களாகவே காட்டப் படுகின்றனர். **" உடுத்தற்கு ஒரு கோவணம், உண்பதற்குக் காய்கனிகள், உறங்குவதற்குப் புறத் திண்ணை, வேர்த்தால் குளிப்பதற்கு வெள்ளிய ஆற்றுநீர்"**[15] என்று சித்தர்களின் எளிய வாழ்வினைப் படம்பிடித்துக் காட்டுகின்றார் பட்டினத்தார்.

சித்தர்களின் வாழ்க்கை பிற மக்களின் உலகியல் வாழ்க்கையிலிருந்து வேறுபட்டிருக்கும்.தெளிந்த ஞானம் உடைய இச்சித்தர்கள் உலகியல் பற்றுகளை விட்டவர்களாக இருப்பர் **"இடம் பொழுது பாராமல் எங்கும் பேய்போல் திரிவர், எதையும் பொருட்படுத்தாமல் பிணம் போல் கிடப்பர், நாய் போல் அருந்துவர், நரிபோல் உழல்வர், பெண்களைத் தாயாக**

**எண்ணுவர், பிறமக்கள் அனைவரையும் தம் உறவாக எண்ணிப் பரிவு காட்டுவர்''**[16]

மரபாகக் காட்டப்படும் சித்தர்களின் இத்தகைய புறத் தோற்றத்திற்கு மாறானதொரு புறத்தோற்றத்தை அருட்பிரகாச வள்ளலார் இராமலிங்க சுவாமிகளிடம் காண்கிறோம். தூய உடலும் அவ்வுடலை முழுமையாக மூடிய வெள்ளை ஆடையும் எல்லோருடனும் இயல்பாகப் பழகும் தன்மையும் உடையவராக வள்ளலார் வாழ்ந்தார் என்பது வரலாற்றுண்மை.

ஏட்டிலும் பேச்சிலும் காட்டப்படும் சித்தர்களின் புறத்தோற்றம், சித்தம் பிறழ்ந்த நிலையில் தெருக்களில் திரிந்தும் இயல்புக்கு மாறாக நடந்தும் வாழ்கின்ற பித்தர்களின் தோற்றத்தை ஒத்திருக்கிறது. மேலும், புறத்தோற்றம் என்பது கால, இடச் சூல்நிலைகட்கு ஏற்ப மாறும். சித்தர்கள் நம் நாட்டில் மட்டுமின்றி உலகெங்கும் இருந்தனர், இன்றும் பலர் இருக்கக் கூடும். இந்திய நாட்டுச் சித்தர்கட்கு வரையப்படும் புறத்தோற்றம் பிற நாட்டவகளிடமும் இருக்க வேண்டுமென எதிர்பார்ப்பது ஏற்புடையதாகாது. எனவே சித்தர்களை அடையாளம் காண அவர்களுடைய புறத்தோற்றம் பொதுவானதொரு அளவுகோலாக இருக்க முடியாது.

## சித்தர்களின் அகநிலை

உள்ளத்தில் நிகழும் மாற்றங்களாலும் உள்ளத்தே ஊறும் உணர்வுகளின் சிறப்பாலும் புறத்தோற்றங்கள் மாறி அமையலாம், ஆனால் புறத்தோற்ற மாற்றங்களைக் கொண்டு ஒருவரின் அகநிலையை அனுமானிப்பது தவறாகிவிடக் கூறும். புறத்தோற்றங்கள் உண்மையின் வெளிப்பாடாக அமையாமல் திரிபுக் காட்சியாகிவிடப் பெரிதும் வாய்ப்புண்டு. ஆகவே, சித்தர்களின் புறத்தோற்றத்தை ஆராய்வதை விடுத்து அவர்களின் அகநிலை எப்படி இருக்கும் என ஆராய்வதே அறிவின்பாற்பட்ட செயலாகும்.

சித்தர்கள் எங்கிருந்து எதை உண்டாலும் எப்படித் தோற்றமளித்து எதைச் செய்தாலும் உலகியல் கூட்டத்தோடு கூட்டமாகக் கலந்திருந்தாலும் அவர்களுடைய சித்தம் "சிவம்" எனும் பூரணத்தில் ஒன்றியிருக்கும் . **''சித்தர்கள் உடலால் இவ்வுலகில் இருந்தாலும் சிந்தனையால் சிவலோகத்தில் இருப்பார்கள். உலகியலில் இருந்தாலும் சித்தர்கள் புளியம் பழமும் ஓடும்**

**போல ஒட்டாமல் இருப்பார்கள், தண்ணீரில் படர்ந்திருந்தாலும் தாமரை இலையில் தண்ணீர் ஒட்டாது. அதுபோலச் சித்தர்கள் உலகியலில் இருந்தாலும் அவர்களைப் பற்றுக்கள் பாதிப்பதில்லை சித்தர்களின் மனம் பற்றுக்களின் தாக்கத்தால் அதிர்வதில்லை"**[17], "சித்தர் நிலை" எட்டியவர்கள், காட்டிலும் குகையிலும் வாழ வேண்டும் என்ற கட்டாயம் ஏதுமில்லை. உலகியலில் இருந்து கொண்டே அவ்வுலகியலில் ஒட்டாமல் வாழ்வதென்பது, உலகியலை விட்டு ஒதுங்கிக் கிடப்பதை விட மேலான நிலையே.

**"ஒருவன் வனத்தில் இருக்கின்றானா இளம் பெண்ணின் வனமுலைத் தடத்தில் இருக்கின்றானா என்பதைவிட அவன் மனம் அழுக்கில் இருக்கிறதா அழுக்கு அற்று இருக்கிறதா"**[18] என்று ஆய்வதே சித்தர்களை அடையாளம் காணச் சிறந்த வழி. சித்தத்தின் நிலையைக் கொண்டே சித்தர்களை அறிய வேண்டும் **"சித்தம் விகாரப்படாமலும் எத்தகைய அதிர்வுக்கும் ஆளாகாமலும் தெளிந்திருப்பவர்களே சித்தர்கள். அவர்கள் அண்டம் முழுவதையும் சிவமாக எண்ணி ஆனந்திப்பார்கள்"**[19]

## ஆன்மிகப் புரட்சி

உலகியலில் கடந்த வினாக்கள் நம்முள் ஒரு புதிய விழிப்புணர்வை ஏற்படுத்துகின்றன. மக்களிடையே எழுந்த விழிப்புணர்ச்சி புரட்சிகளை எப்படி உருவாக்கிற்று என்பதற்கு வரலாற்றுச் சான்றுகள் பல உண்டு. "தொழில் புரட்சி", "தொழிலாளர் புரட்சி", "அரசியல் புரட்சி" என்பனவெல்லாம் அறியாமையிலிருந்து விழித்துக் கொண்ட சாமுதாயத்தால் விளைந்தவை தாம். தன் வாழ்வும், தான் ஈட்டிய பொருளும் ஏறபடுத்திக் கொண்ட உறவும் நிலையானவை என்று மயங்கி அறியாமையில் கிடந்த மனிதன் விழித்துக் கொள்ளும்போது ஏற்படுகின்ற உணர்வால் ஆன்மப் புரட்சி அவனுள் எழுகிறது. "நிலைபேறு", "நிறை அறிவு", குறையா இன்பம் ஆகியவற்றைக் கொண்ட "பூரண நிலை" அடைய ஆன்மீகப் புரட்சி ஒவ்வொரு மனிதனிடமும் எழ வேண்டும். உலகியல் இன்பங்களை முதன்மையாகக் கொண்ட சிற்றின்ப வாழ்வை விடுத்துப் பேரின்பம் நல்கும் "பூரண நிலையை" அடைய ஒரு புது வழியைப் பற்றுவதை ஆன்மீகப் புரட்சி எனலாம்.

## பத்தி நெறி

அன்பின் வழி ஏற்படும் பற்று பத்தியாக மலர்கிறது. இறைவன்மேல் கொள்ளும் பற்று இறை பத்தியாக மலர்கிறது. எச்சூழலிலும் எப்போதும் மாறாத அன்புணர்வே பத்தியின் அடிப்படை. உணர்வு மேலீட்டால் தம்மை இழப்பர். சரியை, கிரியை என்பன உணர்வின் வெளிப்பாடுகள். இறைமையின் பேராற்றலை எண்ணி வியந்து அச்சம், அன்பு, பாசம், பற்று, காதல் என உணர்வுகளை இறைவன்பால் வளர்த்துச் சரியை, கிரியை வழியில் ஆன்மப் பயணம் மேற்கொண்டு இன்பம் காண்போரை பத்தர்கள் என்றும் அவர்கள் கடைப்பிடிக்கும் நெறியைப் பத்திநெறி என்றும் கூறலாம்.

## சைவத்தில் பத்திநெறி

ஞானம் உள்ளிட்ட பத்தியைச் சைவ ஆகம இலக்கியங்கள் வலியுறுத்துகின்றன. ஞானநெறியில் சிவத்துவம் அடியாலாம் என்றால், சிவஞானியார்பால் செலுத்தும் சிறு அளவு அன்பும் பத்தியும் அதே சிவத்துவத்தை அளிக்கவல்லன என்பர் சைவ நெறியாளர்கள். “தான்” என்ற அகங்காரத்தை ஞானத்தீயால் எரித்து அதன்பின் எழும் பத்தி உணர்வே முத்தி தரவல்லது. அத்தகு ஞானம் கலந்த பத்தியையும் அதன் சிறப்புகளையும் பெரியபுராணம் பெருமைப்படுத்துகிறது. அறிவால் பெற முடியாததை அன்பால் பெற முடியும் என்பது பெரியபுராணத்தின் மையக் கருத்து. சைவ நாயன்மார்களின் வாழ்க்கைக் குறிப்புகள் பத்தியின் சிறப்புக்குச் சான்றுகளாகின்றன. “அன்பே சிவம்”, “அன்பெனும் பிடியில் அகப்படும் மலையே” என்ற தொடர்கள் இக்கருத்தை உறுதிப்படுத்துகின்றன.

சைவத்தில் சிறப்பாகப் பேசப்படும் குருதீட்சை என்பது ஞானமா? கிரியையா? என்பதில் கருத்து வேறுபாடு நிலவுகிறது. குருதீட்சையைக் கிரியையாக கருதுவோர் பத்தியையும், ஞானமாகக் கருதுவோர் ஞான நெறியையும் சிறப்பிக்கின்றனர். ஆணவ மலத்தால் சூழப்பட்ட ஆன்மா தான் இயல்பை அறியமாட்டாமல் கிடக்கின்றது. இருளில் அறிய முடியாததை ஒளியில் அறியாலாம் என்பது போல் அறியாமையில் அறிய முடியாததை ஞானத்தில் அறியாலாம். குருதீட்சை என்பதைச் “செயல்” எனக் கருதி அதனைக் கிரியை என்று கூறுவது சரியில்லை. இறைவனின் அருள் குரு

தீட்சையாக வருகிறது. குருதீட்சை என்பது செயல் போல் தோன்றினும் அது செயல் அல்ல. ஞான ஆற்றல். தீட்சை தரும் குரு சீவன் முத்தர். சீவன் முத்தர்களின் ஆற்றல் வெளிப்படுவதைச் "செயல்" என்று கருதக் கூடாது. சீவன் முத்தர்களின் ஞானமே தீட்சையாகி ஆணவ மலத்தை ஒடுக்குகின்றது. எனவே, சைவம் சரியை, கிரியை பற்றிப் பேசினும் ஞானமே இறுதியில் வீடுபேறு தரவல்லது என்று வலியுறுத்துகிறது.

## வைணவத்தில் பத்திநெறி

சைவத்தைக் காட்டிலும் வைணவம் பத்தி நெறிக்குச் சிறப்பிடம் தருகிறது. செந்தமிழ் வேதம் எனச் சிறப்பிக்கப்படும் திருவாய் மொழி கூறும் ஆழ்வார்களின் இறையனுபவம் பத்தி நெறிக்குச் சிறந்த சான்றாகும். இறைவன்பால் அன்பு கொண்டு அவன் திருவடிகளில் சரண்புகுந்தால் முத்திநிலை தானே கிட்டும் என்கிறார் நம்மாழ்வார். **‘‘ஆன்மாவைப் பற்றி இருக்கும் இரு வினைகளையும் எரித்து, மாயை பால் கொண்டுள்ள பிணைப்புகளை அறுத்துத் தான் வந்து குடிபுக ஏற்ற வண்ணம் ஆன்மாவைத் திருத்தித் தூயதாக்கி வைப்பான் இறைவன்’’**[20] என்றும்,**‘‘ஆன்மா தன்னை வந்து சேரட்டும் எனக் காத்திராமல் பக்குவப்பட்ட ஆன்மாவில் தானே ஓடி வந்து கலந்து கொள்வான’’**[21] என்றும் நம்மாழ்வார் உறுதி கூறுகிறார்.

உடலை வருத்தித் தவமும் யோகமும் செய்ய வேண்டாம், பத்தி செய்து இறைவனிடம் சரண் புகுந்தால் போதும் என்கிறார் பேயாழ்வார். **‘‘மலைமீது நின்று குளிர் நீரில் மூழ்கியும் ஐவகை நெருப்புக்கு நடுநின்றும் தவம் செய்து உடலை வருத்தத் தேவையில்லை, இறைவன் திருவடியில் மலர்தூவிக் கைக்கூப்பித் தொழுதால் போதும். வினைகள் அறுந்து போகும், வீடுபேறு தானே கிட்டும், இறைவன் ஆன்மாவில் குடிபுகுந்து ஆட்கொள்வான’’**[22] இறையின்பம் காண எளிய வழி பத்தி நெறி எனக் காட்டுகிறார் பேயாழ்வார்.

## சித்தர் நெறி

மன அமைதியே மகிழ்ச்சி. தனிமனித வாழ்விலும் உலக அரங்கிலும் அமைதியற்ற சூழ்நிலையே மேலோங்கி நிற்கிறது. தனிமனித உணர்வுகளைச் செம்மைப்படுத்த சித்தர்கள் காட்டும் வாழ்க்கை நெறி துணை புரியும். உலகை வெறுப்பதும், உலகியல் வாழ்வை வெறுப்பதும், உலகியல் வாழ்வை மறுப்பதும் சித்தர் நெறி எனப் பலர் பிறழ உணர்கின்றனர். சூல்நிலைகட்கு மனிதன் அடிமையாகி விடாமல் மனிதனுக்குச் சூழ்நிலை அடங்க வேண்டும் என்பதே வாழ்வின் நோக்கம். உணர்வுகளைச் சமன் படுத்தியும் உடலை வளப்படுத்தியும் மனிதன் நலவாழ்வு பெற சித்தர் நெறி துணை செய்யும்.

முத்திநிலை அடைவதற்குச் சித்தர் பெருமக்கள் எடுத்துக் கூறிய வழியையே சித்தர் நெறி என்கின்றோம். சித்தர்கள் அனைவரும் ஒரே வழியைத்தான் கூறியிருக்கின்றனர் எனக் கொள்ள முடியாது. சித்தர்கள் கண்ட ஆன்மீக வழிகளுள்ளும் வேறுபாடுகள் உண்டு. இவ்வேறுபாடுகள் பெரியன அல்ல என்பதால் கருத்திற்கொள்ளத் தேவையில்லை. பெரும்பாலான சித்தர்கள் கூறுவதைத் தொகுத்துப் பார்த்தல் சித்தர் நெறியின் பொது நோக்கினை அறியலாம்.

## பத்தி நெறியும் சித்தர் நெறியும்

குறிக்கோள் ஒன்றே எனினும் சித்தர் நெறி, பத்தி நெறியிலிருந்து பெரிதும் வேறுபடுகிறது. பத்திநெரியைப் புறவழிபாடு என்றால் சித்தர் நெறியை அகவழிபாடு எனக் கூறலாம். பத்தி நெறியின் போலித்தனத்தைச் சாடுவதும் யோக, ஞான மார்க்கங்களைப் போற்றுவதும் சித்தர் நெறியின் பொதுத்தன்மை. ஆலயம், உருவவழிபாடு எனும் அச்சுகளைச் சுற்றிச் சுழல்வது பத்தி நெறி. அகவலிபாடான சித்தர் நெறியில் அவற்றுக்கு இடமில்லை. சமய எல்லைகளைக் கடந்து எல்லோருக்கும் பொதுவான கோட்பாடுகளைக் கொண்டது சித்தர் நெறி.

மனித வாழ்வின் அனுபவச் சுழல் மூன்று புள்ளிகளுக்கு இடையே சுழல்கிறது. பருப்பொருள்கள் நிறைந்த புறவுலகம், நுன்பொருள்களாலான அகவுலகம் ஆகிய இரண்டும் எதிர் முனைப் புள்ளிகள். அறிவுப் பொறிகளும்

செயற்பொறிகளும் இவற்றிக்கிடையே பாலமாகச் செயல்படும் மூன்றாவது புள்ளி. மனித அனுபவம் இம்மூன்று புள்ளிகளின் ஊடே நடைபெறுகிறது. இம்மூன்றுனுள், நுண் பொருள்களாலான அகவுலகம் அனைத்து வகை அனுபவத்திற்கும் ஆதாரமாக அமைகிறது.

மனம், புத்தி, சித்தம், அகங்காரம் எனும் நுண்பொருள்கள் அகவுலகின் கருவிகள். இந்நான்கு கருவிகளையும் “அந்தக்கரணங்கள்” என்பது மரபு. இந்நான்கினுள்ளும் “சித்தமே” அனைத்திற்கும் காரணமாக அமைகிறது. சித்தத்தின் அதிர்வுகளும் அலைகளும் ஆன்மாவை அறியாமைச் சுழலில் சிக்க வைக்கின்றன. சித்தம் கட்டுப்பட்டு அமைதியுறும்போது ஆன்மா அறியாமையினின்று விடுபட்டு முத்திநிலையை எட்டுகிறது. சித்தத்தின் அதிர்வலைகளில் சிறைப்பட்டுக்கிடக்கும் ஆன்மாவை விடுவிக்கச் சித்தத்தை ஒடுக்குவது, சித்தத்தை ஒருமுகப்படுத்துவது ஆகிய இருவழிகள் உண்டு. சித்தத்தை ஒடுக்கிச் செயலற்றுப் போகுமாறு செய்ய யோக, ஞான மார்க்கங்கள் துணை செய்கின்றன. இது சித்தர்கள் கையாளும் நெறி. கட்டுப்பாடற்றுச் சிதறும் சித்த அதிர்வுகளை ஒருமுகப்படுத்தி இறைவன் திருவடியில் சரண் புகுவது பத்திநெறியின் போக்காகும்.

## சித்தர்களும் புறவழிபாடும்

**“இறைவன் சோதி வடிவில் நம்முள் கலந்திருக்கின்றான். இவ்வுண்மையை அறியாத பத்தர்கள் புற உலகில் எழுப்பப் பட்ட ஆலயங்களில்தான் இறைவன் இருக்கின்றான் என எண்ணித் தலங்கள் தோறும் ஓடுகின்றனர். வாழ்நாளை வீனாளாக்குவதோடன்றி இறைவனை மலைகளிலும் குகைகளிலும் தேடியலைந்து தம் உடலையும் வருத்திக் கொண்டு பயன் ஏதும் காணாமல் மாண்டு போனோர் பல கோடி மக்கள்”**[23] சிவவாக்கியரும் தம் வாழ்வின் முற்பகுதியைப் புறவழிபாடுகளில் செலுத்திப் பயன் காணாமல் வாடி அகவழிபாடாம் ஞான மார்க்கத்திற்கு வந்து சித்தரானார் என்று தோன்றுகிறது.

**“புறவழிபாடும் பூசனைகளும் அறவே பயனற்றவை என்று கூறிவிட முடியாது. ஆன்மப் பக்குவம் இல்லாதோருக்கு அவை தொடக்க நிலைகள்.**

**புறப்பூசனைகள் பற்றிய குறிப்பு திருமந்திரத்தின் பல இடங்களில் காணப்பட்டாலும் அகவழிபாடே சிறப்பானதென்றும் உண்மையானதென்றும் அழுத்தமாகக் கூறப்படுகிறது. ஒவ்வோர் ஆன்மாவிலும் இறைவன் கலந்துள்ளான் என்பதைத் திருமந்திரம் வலியுறுத்துகிறது. நம் ஊனுடல், ஓர் ஆலயம், உள்ளம் ,இறைவன் உறையும் கருவறை, நம் வாய், கோபுர வாசல், உண்மையை உணரவல்ல ஞானியாருக்குச் சீவனே (ஆன்மாவே) சிவலிங்கம் (இறைவன்), ஐம்புலன்களும், இறைவனுக்கு ஏற்றப்பட்ட மணி விளக்குகள்”**[24]. “இறைவனை உன் உள்ளே தேடு” என்ற அகவழிபாட்டுத் ததுவத்திற்குத் திருமந்திரப் பாடல் சான்றாக அமைகிறது.

## சித்தர்களின் அகவழிபாடு

சித்தர்கள் பொய்மையான புறவழிபாடுகளைச் சாடுவதொடு நின்றாடாமல் மக்களை அகவழிபாட்டுக்கு அழைத்தனர். “ஆலயம் உனக்காப்பால் இல்லை, உன்னுள்ளே இருக்கிறது” என்றனர். “சிவலிங்கம் ஆலயத்தின் கருவறையில் இல்லை, உன் சீவனில் சிவன் கலந்திருக்கிறான்” என்று சித்தர்கள் உறுதி கூறுகின்றனர். யோக ஞான மார்க்கங்களை உள்ளடக்கிய நெறியைப் பொதுவாக “அகவழிபாடு” எனலாம். “ஞானமார்க்கம்” எல்லோர்க்கும் ஏற்புடைய எளிய வலி அன்று. ஆழ்ந்தாந்து சிந்திக்க வல்லார்க்கே ஞானமார்க்கம். உலகியல் அறிவு, ஆன்ம அறிவு, இறையறிவு என ஞானமார்க்கம் அமைகின்றது. உலகியல் அறிவால் நிலையாமையை அறிந்துணர்ந்து, ஆன்ம அறிவைப் பெற முற்பட வேண்டும். ஆன்ம அறிவால் பக்குவப்பட்ட பின்னர் இறையறிவை நாட வேண்டும். இறையறிவே ஆன்மப்பயணத்தின் இறுதிப்படி. அறிவின் முழுமையே இறைவன். அதற்கப்பால் அறிவோனும் இல்லை, அறியப்படும் பொருளும் இல்லை. அறிவோனும் அறியப்படும் பொருளும் ஒன்றாகி விட்டபின் அறிவதற்கு ஏதுமில்லை. இத்தகைய ஞான வழியை மேற்கொண்டு இறையின்பம் காண்பது, அறிவு முதிர்ச்சியும் தேர்ச்சியும் உடையோருக்கே இயலும்.

பயிற்சி செய்யும் மனஉறுதி உடைய அனைவருக்கும் “யோக மார்க்கம்” ஏற்புடைய வழியாகும். குருவின் ஆணைப்படி கேட்டுப் பயிலவல்ல அனைவருக்கும் யோகமார்க்கம் இடந்தரும். யோகப் பயிற்சிகட்கு குருவின்

துணை மிகமிக இன்றியமையாதது. நல்ல குரு ஒருவர் நெறிபடுத்தாமல் யோக நெறியில் வெற்றி பெற்று இறையின்பம் துய்ப்பது அரிது.

## இலக்கிய அணியில் சித்தர் பாடல்கள்

தமிழிலக்கியங்கள் பல திறம்படுவனவாகும். அவை சங்கப் பாடல்கள் என்னும் தன்னுணர்ச்சிப் பாடல்களாகவும் பொருளுனர்ச்சிப் பாடல்களாகவும், காப்பியங்களாகவும், சிற்றிலக்கிய வகைகளாகவும் காணப்படுகின்றன. அவற்றுள் சித்தர் பாடல்கள் தனித்திறம் பெற்றுச் "சித்தரிலக்கியம்" எனும் வகைமையைத் தோற்றி நிற்கின்றன.

## சங்க இலக்கியத்தில் சித்தர்கள்

"சித்தர்" என்ற சொல்வழக்கு பழந்தமிழ் இலக்கியங்களில் இல்லையென்றாலும், சித்தர் என்ற சொல்லுக்கான பொருளை உணர்த்தும் பிறசொற்கள் சங்ககால இலக்கியங்களில் காணப்படுகின்றன. **தொல்காப்பியத்திலும்,**[25] **திருக்குறளிலும்**[26] பயின்றுவரும் "நிறைமொழி மாந்தர்" என்ற தொடர், சித்தர்களைக் குறிப்பதாகக் கொள்ளலாம். தொல்காப்பியத்தொடருக்கு, உரை கூறுகையில்,"சொல்லிய சொல்லின் பொருண்மை யாண்டும், குறைவின்றிப் பயக்கச் சொல்லும் ஆற்றலுடையார்" என்கிறார் பேராசிரியர். திருக்குறள் தொடருக்கு உரைகூறும் பரிமேலழகர், "நிறைமொழி மாந்தர் என்பது, அருளிக் கூறினும், வெகுண்டு கூறினும், அவ்வப்பயன்களைப் பயந்தே விடும்" என்கிறார். உரையாசிரியர்கள் தரும் விளக்கத்தின் அடிப்படையில், "நிறைமொழி மாந்தர்" என்ற தொடர், சித்தர்களைக் குறிக்குமெனக் கருதலாம்.

புறநானூற்றுப் பாடலில் இடம்பெறும்,"திறவோர் காட்சி"[27] என்ற தொடர் சித்தர் அனுபவம் என்று குறிப்பதாகக் கொள்ளலாம். இத்தகைய திறவோர் எனப்படுவர்,முக்கால நிகழ்வுகளையும், தம் அகத்திலே காணும் ஆற்றல் உடையவர்கள். உலகியல் இன்பதுன்பங்கட்கான உண்மைக் காரணத்தை அறிய வல்லவர்கள். இன்னோர் தம் அகக்காட்சியில் உலகியல் அறிவும், உயிர் அறிவும் தெளிவும்படும். "சித்து" எனப்படும் இயற்கை மீறிய

அற்புதங்களைப் பற்றிய குறிப்பு, குறுந்தொகைப் பாடலில் காணப்படுகிறது. இப்பாடலுக்கு விளக்கம் நல்கும் உரையாசிரியர், இப்பாடலில் குறிக்கப்படும் ஆற்றல்களும், இயற்கை கடந்த மீவியல் செயல்களுமான, பூமியைத் தோண்டி உள்ளே புகுதல், ஆகாயத்தின் கண் ஏறுதல், கடல்மேல் காலால் நடத்தல் போன்றவற்றைச் "சித்து" என்ற சொல்லல் குறிக்கின்றார்.[28]

## காப்பியங்களில் சித்தர்கள்

சங்கம் மருவிய காலத்தில் எழுந்த இரட்டைக் காப்பியங்களான சிலப்பதிகாரத்தில் சில இடங்களிலும், மணிமேகலையில் பல இடங்களிலும், சித்து, சித்தம், சித்தன் ஆகிய சொற்கள் பயன்று வருகின்றன.

சிலப்பதிகாரத்தில், சித்தி என்ற சொல் விரும்பியதைப் பெறுதல் என்னும் பொருளில் இடம்பெறுகிறது.[29] சமணர் வணங்கி வழிபடும் அருகனின் புகழ்பாடுவதாக அமைந்துள்ள தொடரில் வரும் அறிவன், அறவோன், அறிவு, வரமிகுந்தோன், செறிவன், சித்தன், பகவன், பொருளன்,புனிதன், புராணன், தத்துவன், சாதுவன், சாரணன், காரணன்[30] என்ற சொற்கள் அருகக் கடவுளைக் குறிப்பதாக அமைந்துள்ளன. சித்தன் என்ற சொல்லுக்கு, செய்ய வேண்டுவனவற்றைச் செய்து முடித்தவன், கன்மங்களைக் கழுவியவன், எண்வகைச் சித்துகளையும் உண்டாக்கியவன் என்றவாறு பொருளுரைக்கின்றனர்.[31]

மணிமேகேலைக் காப்பியத்துள், சித்தம் என்ற சொல், பல பொருள்களில் கையாளப்படுகிறது. உறுதி, நிச்சயம் என்ற பொருளிலும்[32] மூலப்பொருளாகிய பிரகிருதி என்ற பொருளிலும்,[33] மனக்கொள்கை என்ற பொருளிலும்[34] இச்சொல் வழங்கப்படுகிறது. நிலத்தில் மூழ்கிக் குளிப்பதும், நீண்ட வானில் உயர்ந்து செல்வதும், கடலில் நடப்பதும், சாரணர்ச் செயல்கள் என்று கூறப்படுகின்றன.[35] இச்சாரணர்கள் நீரிலும், பூமியிலும்,வானிலும் எண்ணியபொழுது மறையும் ஆற்றல் உடையவர்கள் என்றும் கூறப்படுகிறது.[36] இதுபோன்ற அற்புதச் செயல்கள் பெருங்கதையிலும் குறிக்கப்படுகின்றன.[37]

## திருமந்திரத்தில் சித்தர்

சைவத்திருமுறைகளில், பத்தாம் திருமுறையாகத் திருமந்திரம் விளங்குகிறது. யோகம், யோகவகை, உறுப்புகள், எண்பெரும் சித்துகள், ஞானம் என்பன பற்றி விரிவாகக் கூறும் முதல் தமிழ்நூல் திருமந்திரம் ஆகும். இக்காரணம் பற்றியே, திருமூலரைத் தமிழகச் சித்தர் மரபின் தலைவராகவும், முதல்வராகவும் குறிக்கும் வழக்கு தமிழகத்தில் நிலவுகிறது. திருமூலர், சிவனை, சித்தன் என்றும், சிவநெறி பற்றிய சீவன் முக்தர்களை, சித்தர் என்றும் குறிக்கிறார். திருமந்திரத்தில் சித்தம் என்ற சொல் பல இடங்களில் **பேரறிவு,**[38] **தூய அறிவு,**[39] **தெளிந்த அறிவு,**[40] என்ற பொருள்களில் வழங்கப்படுகிறது.

எல்லாம் அறிந்த சித்தனாகச் சிவனைத் திருமூலர் குறிக்கின்றார், அறிவன் என்ற பழந்தமிழ்ச் சொல்லுக்கு ஈடாக சித்தன் என்ற சொல் திருமந்திரத்தில் வழங்கப்படுகிறது.

## பக்தி இலக்கியத்தில் சித்தர்

தேவார ஆசிரியர்கள், தம் வழிபடுகடவுளாகிய சிவனைக் குறிக்கவும், சிவனடியார்களுள் ஒருவகையினரைக் குறிக்கவும், சித்தர் என்ற சொல்லைப் பல இடங்களில் பயன்படுத்துகின்றனர்.

**“அன்னியூர் சித்தர் தாள்தொழ முத்தர் ஆவரே”**[41]

**“மதயானை உரித்தஎம் சித்தனை”**[42]

என்ற தேவாரத்தொடர்களும்,

**“பரகதி கொடுத்து அருள் செய்யும் சித்தனே”**[43] என்ற திருவாசகத் தொடரும் பரம்பொருளையே சித்தன் என்று சுட்டுகிறது. பரம்பொருள், சிவன், சித்தன் என்ற சொற்கள், ஒரே பொருளைக் குறிக்குமாறு திருமுறைகளில் பயின்று வருகின்றன.

இறைவன் வெவ்வேறு வடிவில் வந்து நிலவுலக மக்கள் வழிபடக் காட்சி தந்தான் என்று புராணக் கதைகள் கூறுகின்றன. இவற்றுள், சித்தர் வடிவில் வந்து சித்தர்கள் வழிபடக் காட்சி தந்தான் என்று தேவாரக் குறிப்புரையொன்று கூறுகிறது.

திருநறையூரில் உள்ள சிவாலயத்திற்கு, சித்தீச்சுரம் என்று பெயர். இங்கு சித்தர்கள் பூசிக்க இறைவரும் சித்தராய் எழுந்தருளினார் என்று குறிக்கப்படுகிறது.[44]

மேலும் இறைவன் அறிவு வடிவானவன் என்பதைக் குறிக்கும் வகையில், **“சித்தன் வடிவினன் போலும்”**[45] என்னும் தேவாரத்தொடர் அமைகிறது.

முத்தி நிலையுற்று, நிலவுலகை நீங்கி, வானுலகில் நுண்ணுடலோடு வாழும் தேவகணத்தாரோடு வாழும் ஓர் இனத்தவராகச் சித்தர்கள் கருதப்படுகிறார்கள் என்ற குறிப்பு திருஞானசம்பந்தர் பாடிய திருநள்ளாறு, திருமுதுகுன்றம், திருக்கக்குடி, திருப்பழுவூர், திருநின்றியூர், திருக்கானூர், திருப்பாவை, திருமணஞ்சேரி ஆகிய தேவாரப் பதிகங்களில் காணப்படுகிறது.

திருஞானசம்பந்தர், சித்தர் என்ற சொல்லைப் பல இடங்களில் கையாளுகின்றார். ஆன்மீக நெறியினருள் ஓர் இனத்தவராகச் சித்தர்களைக் குறிக்கும் அவர், சித்தர்கள் இயல்பு பற்றியோ, அல்லது அவர்களது ஆன்மீகநெறி பற்றியோ ஏதும் விளக்கவில்லை.

திருநாவுக்கரசர் தம்தேவாரத்தில் பல இடங்களில், குறிப்பாக, சித்தர்களின் மனநிலையை உணர்த்துகிறார். அவர், சிவனடியார்களை வகைப்படுத்தும் பட்டியல் ஒன்றின் இறுதியில்,

**“சித்தத் துருகிச் சிவன்எம் பிரானென்று சிந்தையுள்ளே**
**பித்துப் பெருகப் பிதற்றுகின்றவர்”**[46]

என்னும் வரிகள் சித்தர்களின் அகநிலையைக் குறிப்பது போன்று அமைகிறது. வெளிப்புலன் நோக்கியும், ஐம்பொறிகளையும் தடுத்து

உள்முகமாக நேரிப்படுத்துகின்றவரின் சித்தம் ஒடுங்கும், அவ்வாறு ஒடுங்கிய சித்தத்துள் அவர்கள் இறைவனைக் காண்பர் என்கிறார் திருநாவுக்கரசர்.

**“சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்க்கும் அடியேன்”**[47]

என்று சுந்தரர் பாடுகிறார்.

மாணிக்கவாசகரோ, இந்திரியங்களை ஆளுகையில் அலைந்து திரிந்து நரகில் வீழ்ந்திடாமல் சிந்தையைத் தெளிவித்து ,அதனையே சிவப்பரம்பொருளாக்கிடும் நிலையைக் குறிப்பிடுகிறார்.

பரஞ்சோதி முனிவர் இயற்றிய திருவிளையாடற்புராணத்தில் எல்லாம் வல்ல சித்தரான படலம், அட்டமா சித்தி உபதேசித்த படலம், கல்லானைக்குக் கரும்பருந்திய படலம் ஆகிய பகுதியில் பலவகைச் சித்துக்கள் குறிக்கப்படுகின்றன. சிவபிரான் எல்லாம் வல்ல சித்தராகச் சுட்டப்படுகிறார்.

இறைவனின் அற்புதச் செயல்களைக் கூறிப் புகழ்பாடுவதும், மக்களை இறைவழிபாட்டில் ஈடுபடுத்துவதும், புறச்சமயங்களை மக்கள் நாடாமல் தடுப்பதும், பக்தி இலக்கியங்களின் முதன்மையான குறிக்கோள்களாக இருந்தன. எனவே, இவ்விலக்கியங்களில், சித்தர்கள் பற்றிச் சிறுசிறு குறிப்புகள், சிற்சில இடங்களில் காணப்படுகின்றனவே தவிர,சித்தர்களின் வாழ்க்கைநிலை, இயல்பு, நெறிமுறைகள் பற்றிய விளக்கங்களும் விரிவுகளும் காணக்கிடைக்கவில்லை. எனினும் பின்னர் சித்தர்பாடல்கள் என்ற கருத்துருவாக்கம் அமைய இவையனைத்தும் கால்கோள் இடுகின்றன என்பது உண்மையாகும்.

## சித்தர் பாடல்களில் சித்தர்கள்

சித்தர் பாடல்களின் தொகுப்பாக வெளிவந்துள்ள, பதினெண் சித்தர்கள் பெரிய ஞானக் கோவை நூலிலும் சித்தர் மருத்துவ நூல்களிலும், பிற, பிற்கால இலக்கியங்களிளுள்ளும் ,சித்தம், சித்து, சித்தர் என்ற சொற்கள் மிகுதியாக வழங்கலாயின. தாயுமாணவர் பாடல்களுள், தேசோமயானந்தம் என்னும் பகுதியில், சிந்தையின் இயல்பும், சித்தர் கணம் எனும் பகுதியில்,

சித்தர்களின் செயலாற்றலும் தெளிவாகவும், விரிவாகவும் பேசப்படுகின்றன. சென்ற நூற்றாண்டில் வாழ்ந்த **"இராமாலிங்க சுவாமிகளின் திருவருட்பாவின் உபதேசப்பகுதி, சித்துக்ளைப் பற்றியும், அவற்றைப் பெறும் வழி வகை பற்றியும் விரிவாகப் பேசுகிறது. இராமலிங்கர், சித்தர்களை, அழியாச் சித்தர்"**[48] என்றே குறிக்கிறார். இத்தொடர் மூலம் சித்தர்கள், மரணமிலாப் பெருவாழ்வு பெற்று, என்றும் உள்ளவர்களாகத் தங்களை ஆக்கிக்கொள்பவர்கள் என்று இராமலிங்கர் உணர்த்துகிறார். சித்தத்தைச் சிவன்பால் வைத்த சித்தர்களின் புறத்தோற்றம் பற்றி, சித்தர் இலக்கியம் விரிவாகப் பேசுகிறது.

## சித்தர் இலக்கியம்

இலக்கிய நடைகள் பல இருந்தும், சித்தர்கள் தமக்கென்றே ஒரு தனித்த நடையை உருவாக்கிக் கொண்டனர். பல்வேறு பகுதிகளில் தோன்றியவர்களாகச் சித்தர்கள் திகழ்ந்தபோதிலும் அவர்களது இலக்கிய மொழிநடையில் ஒருமித்த பான்மையைக் காணமுடியும். இது தனித்துக் குறிப்பிடத்தக்க ஒன்றாகும். அறிவுபூர்வமான கேள்விகள் அழகிய விளிகள், குறியீட்டு மொழிகள், இனிய சந்தம், வழக்குச் சொற்கள், தங்குதடையற்ற சொல்லோட்டம் இவை சித்தர் நடையின் சிறப்புக் கூறுகள் ஆகும்.

**"சித்தர்பாடல்கள் ஈரம் குறைந்த ஞானப்படல்களாக இல்லாமல் உணர்ச்சியும் அழகும் மிக்க கவிதைகளாய் விளங்குவதாலேயே அவை மக்களிடத்து இத்துணைப் பெருஞ்செல்வாக்குப் பெற்றிருக்கின்றது"**[49]

## பேச்சுத்தமிழ்

**"கற்றவர்கள் மட்டுமே களிகூரத்தக்கனவாய் அமைந்த இலக்கியங்களுக்கிடையே பாமரர்களும் மகிந்து பாடும் வண்ணமும் ஆழ்ந்து பொருளை எளிமையாக உணர்ந்து போற்றும் வண்ணம், உண்மைதன்மைக்கு ஏற்பத் தங்களை மாற்றிக்கொண்டு வாழும் வண்ணமும் தாங்கள் பாடிய இலக்கியங்களை நன்கு சிந்தித்து அமைத்தவர்கள் சித்தர்கள்"**[50] என்பார் இளமதி சானகிராமன்.

இதற்கு அவர்கள் கைக்கொண்ட முறைமைகளுள் ஒன்று பேச்சுத்தமிழையும் செய்யுட்பாங்கில் அமைத்துக் கொண்டதாகும். நாள்தோறும் மக்கள் தமது வாழ்வியல் நிலையில் சொல்லும் சொற்களைக் கைக்கொண்டு அவர்களுக்குத் தெளிவாகும் வகையில் சிவவாக்கியர் தம் செய்யுட்களைப் பாடியிருக்கின்றார் எனலாம். அதைவிடவும் அவ்வாறே மக்களிடம் புகன்றிருக்கவும் கூடும் என்பது பொருத்தமுடையது. அதற்கு அவர் பயன்படுத்திய விளிகளைச் சான்றுகளாக்கலாம். அந்த வகையில், எழுத்து வழக்கில் சொல்லாது பேச்சுவழக்கில் பல சொற்களை, பல் இடங்களில் அமைத்திருக்கின்றார். எண்ணுப் பெயர்கள், முன்னிலை வினைமுற்றுக்கள் போன்றவை அவர் பாடல்களில் இடம்பெற்றிருக்கின்றன. அவற்றுள், சிவவாக்கியர் பாடல்களில் இடம்பெறும், எழுத்து வழக்கில் இருக்க வேண்டிய சொற்களுக்கு இணையான பேச்சுத்தமிழ்ச் சொற்களில் சில பின்வருமாறு.

| எழுத்துத் தமிழில் சொற்கள் | பேச்சுத்தமிழில் சொற்கள் |
|---|---|
| ஒன்றல்லவோ | ஒன்றல்லோ |
| இரண்டு | ரெண்டு |
| மூன்று | மூணு |
| நான்கு | நாலு |
| ஐந்து | அஞ்சு |
| மயங்குகிறீர | மயங்குறீர் |
| சாற்றுகிறீர | சாற்றுறீர் |
| ஓடுகிறீர | ஓடுறீர் |
| வேண்டுமே | வேணுமே |

பேச்சுவழக்கு மொழியை இலக்கியத்தில் புகுத்துவது தற்போதைய புதுமையாகக் கருதப்படுகிறது. புதுமையை அறிமுகம் செய்தவர்களே சித்தர்கள் ஆவார்கள். இதனையொட்டியே, குறவஞ்சி, பள்ளு போன்ற மக்கள் இலக்கியங்கள் எழுந்தன.[51] என்கிற இரா. மாணிக்கவாசகம் அவர்களின் கருத்திற்கு, சிவவாக்கியர்தம் பாடல்கள் மேலும் வலுச் சேர்க்கின்றன.

## சித்தர் மொழிநடை (பரிபாஷை)

அகத்தியர்,தேரையர், போகர், கருவூரார், திருமூலர், திருவள்ளுவர் போன்ற இன்னபிற மாபெரும் சித்தர்கள் மக்களுக்கு அறியாமை நீக்கி அறிவினையும் ஆற்றலையும் தம் பாடல்கள் வாயிலாக வாரிவழங்கினர். அறிவியல், தொழிநுட்பம், மருத்துவம்,சோதிடம், வர்மம்,யோகம், ஆன்மீகம் ஆகியவற்றோடு, கலை இலக்கியம், அரசியல், கைத்தொழி போன்ற எல்லாத் துறைகளிலும் பல அரும்பெரும் செயல்களை நிகழ்த்திக் காட்டியிருக்கின்றனர். மக்கள் நலன்கருதி பல்வேறு துறைகளிலும் பயன்பாட்டுக்குரிய கண்டுபிடிப்புகளையும் கருத்துருவாக்கங்களையும் தந்திருக்கின்றனர். மேலும் தொடர்ந்து இத்துறையில் இயங்குவோருக்கு வழிகாட்டும் வண்ணம் பாடல்களில் அவற்றை அழமாகப் பொதிந்தும் வைத்துள்ளனர். அதனைப் பெரும்பாலும் பரிபாஷையாகவே சொல்லிச் சென்றுள்ளனர்.

பரிபாஷை என்பது தங்களது அனுபவங்களை வெளிப்படுத்த சித்தர்கள் கையாளுகிற மொழியாகும். இது நாட்டுப்புற வழக்காற்று மொழியினைத் தழுவியதாகும். **“பரிபாஷையானது, சூன்யமொழி, கமுக்கமொழி, ஆன்மீக மறைபொருள் மொழி, குறியீட்டு மொழி, புதைநிலை மொழி முதலிய பலபெயர்களால் அழைக்கப்பெருகின்றன”**[52]

**‘‘பரி என்றால் குதிரை, பாஷை என்றால் மொழி என்று பொருள்படும். குதிரை என்பது ஓடும் குதிரையைக் குறிக்கும், ஓடும் குதிரை என்பது மெய்யியல் (தத்துவ) முறையில் பிராணவாயுவாகும்.”**[53] **“அதாவது பிராணவாயுவாகிய உயிர்மூச்சினைக் குறிக்கும். இவ்வுயிர்மூச்சுக்கு வாசி என்பது பெயர்”**[54] எனவே, பரி என்பது வாசியையும், பரிபாஷை என்பது வாசியோகப்பயிற்சி தொடர்பான நுட்பமான செய்திகளையும் குறிப்பிடும் மறைப்பொருட்சொற்கள் ஆகும்.

இரகசியப்பொருளான ஞானச்செய்திகளை, எல்லோருக்கும் வெளிப்படையாக எடுத்தியம்புதல் கூடாது என்பது சித்தர்களின் கொள்கையாகும். மெய்ஞ்ஞான அனுபவங்களுடன் ஆன்மீக முதிர்ச்சியடைந்த பின்னர், தக்கோரால் தரம் அறிந்து விளக்கப்பட வேண்டும் என்ற

நோக்கத்துடன் மறைவாகக் கூறப்படுதற்குப் பரிபாஷை பயன்படுத்தப்படுகிறது. எனவே இங்கு பரிபாஷை என்பதற்கு ஆன்மீக மறைமொழி எனப் பொருள் கொள்ளுதல் பொருந்துகிறது.

இவ்வாறான, ஆன்மீகச் செய்திகளைக் கமுக்கமாக வைத்துக்கொள்ள வேண்டும் என்று சித்தர்கள் எண்ணியது மற்றவர்களைப் பற்றி இழிவாகக் கருதியன்று. பொருட்செறிவான ஆன்மீகக் கருத்துக்களை உள்வாங்கிக்கொள்ளத் தெரியாதவர்களிடம் இவற்றை வெளிப்படுத்தக்கூடாது என்று கருதித்தான். அவ்வாறு வெளிப்படுத்தினால், அவர்கள் அதை வேறுவிதமாகப் புரிந்துகொண்டு தவறாகப் பயன்படுத்திவிடக் கூடும், அதனால் நோக்கமும் கெட்டு, ஆக்கமும் கெட்டுத் தீங்கு விளையும் என்பதால் இவையெல்லாம் கமுக்கமாகப் பரிபாஷையாகச் சொல்லப்பட்டது எனலாம்.

பரிபாஷையான, கமுக்கமொழியில் பயன்படுத்தப்படும் சொற்களானது பெரும்பாலும், அன்றாடவாழ்வில் பயன்படுத்தப்படும் இயல்பான சொற்களாகவே இருக்கும். ஆனால், அவை சித்தர்களின் வாக்காக வெளிப்படும்போது ஆன்மீகச் செறிவுடையனவாகவும், உட்பொருள் உடையனவாகவும் விளங்குகின்றன. அவற்றுள் ஆழ்ந்து அகன்ற பொருட்கள் தோன்றி அமைகின்றன.

**“சித்தர்களுக்கே உரிய பரிபாஷையை எல்லோராலும் எளிதில் புரிந்து கொள்ள முடியாது. மொழிப்புலமையை மட்டும் வைத்துக்கொண்டு அறிந்துக்கொள்ளலாம் என்று கருதுவது தவறாகும். அதற்கு, ஆன்மீகப்பயிற்சியோடு சித்தர்களின் தொடர்பும் பெற்றிருத்தல் வேண்டும். அவனருளாலே அவன்தான் வணங்குதல்போல”**[55] சித்தர்களின் அருளாலே தான் அவர்களது பாடல்களின் உட்பொருளை உணர்ந்து கொள்ள இயலும். காரணம் பரிபாஷைகள் பொதிந்த பாடல்களைப் பார்ப்பவர்களுக்கு மேலோட்டமாக ஒருபொருளும், ஆழ்ந்து ஆய்ந்து பார்ப்பவர்களுக்கு வேறு ஓர் பொருளும் தோன்றும். அதனால் இலக்கிய அறிவும், யோகப் பயிற்சியும் சித்தர் மரபில் தேவையான அனுபவமும் பெற்ற பெரியவர்களாலேயே இப்பரிபாஷைகளுக்கு விளக்கம் காண இயலும். எடுத்துக்காட்டுடன் இதனைப் பின்வருமாறு விளங்கிக்கொள்ளலாம்.

**“ஈராறு கால்கொண் டெழுந்த புரவியைப்**

**பேராமற் கட்டிப் பெரிதுண்ண வல்லீரேல்**

**நீரா யிரமும் நிலமாயி ரத்தாண்டும்**

**பேராது காயம் பிரான்நந்தி ஆணையே”**[56]

என்பது திருமந்திரப் பாடலாகும். இதில் இடம்பெறும் ஈராறு கால் கொண்டு எழும் புரவி என்ற தொடர் கவனத்திற்குரியது. புரவி என்பது குதிரையைக் குறிக்கும், கால் என்பது காற்றை குறிக்கும். ஈராறு என்பது (2x6=12) பனிரண்டு ஆகும். ஈராறு கால் கொண்டு எழும் புரவி என்றால், போதுவானநிலையில் பனிரண்டு கால்களைக் கொண்டு எழும் குதிரை என்ற பொருள் தரும். இயற்கையில் குதிரைக்குக் கால்கள் நான்கு தான் இருக்கும். ஆனால், பனிரண்டு கால் கொண்ட குதிரை என்று திருமூலர் குறிப்பிடுவது பரிபாஷையோடு தொடர்புடையது.

கால் என்பதற்கு காற்று என்னும் பொருள் கொண்டு மேற்சுட்டிய பாடலைக் கவனித்தால், இக்காற்றானது மூச்சுக்காற்றைக் குறிப்பதாகிறது. மூச்சுக்காற்று என்பது மூக்கின் வாயிலாக உயிர்வளியை (உயிர்க்காற்றை, அதாவது ஆக்ஸிஜனை) உள்வாங்கிக் கரி வளியை (அதாவது கார்பனை) வெளிவிடும் நிலையைக் குறிக்கும். அதாவது வெளிவிடும் மூச்சின் அளவு பனிரண்டு அங்குலம் ஆகும். பின்னர், மீண்டும் உள்வாங்கும் மூச்சு எட்டு அங்குலம் ஆகும். இவ்வகையில் ஒருமூச்சுகு நான்கு அங்குலம் மூச்சு இழப்பு ஏற்படுகிறது. இத்தகு இழப்பு ஏற்படாதவகையில் பனிரண்டு அங்குலம் மூச்சுக் காற்றையும் தலையின் உச்சியில் ஏற்றி ஒடுங்கச் செய்தல் வாசியோகமாகும்.

இவ்வாசியோகப் பயிற்சி முறையினைச் சித்தர்மரபறிந்த குருவின் வாயிலாகப் பெறுதல் வேண்டும். பின்னர், இப்பயிற்சியைத் தொடர்ந்து செய்தால், சீவசாமதி என்ற மரணமிலாப் பெருவாழ்வு நிலை தோன்றும். இந்நிலை எய்திய பின்னர், நீருக்குள்ளே மூழ்கடித்தாலும் நிலத்துள்ளே சமாதி வைத்தாலும் ஆயிரமாயிரம் ஆண்டுகள் ஆயினும் இவ்வுடலானது அழியாது என்று திருமூலர், இறைவன் மீது ஆணையிட்டு உரைக்கிறார். இக்கருத்தை.

**“மூலாதாரத்து மூண்டெழு கனலைக் காலால் எழுப்பும்**

**கருத்தறிவித்தே”**[57]

என்ற ஔவையாரின் விநாயகர் அகவற்பாடல் வரிகளையும் கொண்டு ஒப்புநோக்கலாம்.

எல்லாச் சித்தர்களையும் போலவே, சிவவாக்கியரும் தமது பாடல்களில் பரிபாஷை முறையை, நுட்பமாகக் கையாண்டுள்ளார். எளிமையான பேச்சு வழக்கிலுள்ள சொற்களை மிகுதியும் பயன்படுத்திப் பாடியுள்ளார்.

சிவவாக்கியர் தம் பாடல்களில் கையாண்டுள்ள பரிபாஷை முறைகள் சிலவற்றை இங்குக் காண்போம்.

**“துருத்தியுண்டு கொல்லருண்டு சொர்ணமான சோதியுண்டு**

**திருத்தமாய் மனதிலுன்னித் திகழவூத வல்லீரேல்**

**பொருத்ததூ ணிலங்கியே பிழம்பதாய் விரிந்திடும்**

**நிருத்தமான சோதியும் நீயுமல்ல தில்லையே”**[58]

என்பது சிவவாக்கியர் பாடல் இதற்கு, **“காற்றை செலுத்தும் ஊதுகருவி ஆகிய துருத்தி உண்டு, அதை இயக்கும் கொல்லனும் உண்டு. அதனால், நெருப்பிலிட்ட கலப்புத் தங்கம் தூய்மையாக ஒளிவிடும், கடவுளைத் திருத்தமாக மனத்தில் பாவித்து, பிராணாயாமத்தால் மூலாதாரத்தில் மூச்சைச் செலுத்தினால, தூண் போல் இருந்த சிவம் ஒளிப்பிழம்பாய் உருகி விரியும்”**[59] என்று பொருள் உரைப்பர்.

மேற்சுட்டிய விளக்கத்தில், முற்பகுதி, மேலோட்டமான பொருளையும் பிற்பகுதி நுட்பப் பொருளையும் விளக்குகின்றன. இதனுள் பொதிந்திருக்கும் உண்மைப்பொருளையும் சிவவாக்கியர் இவ்வாறு சொல்லவேண்டிய இலக்கியத்தேவையையும் விளங்கிக் கொள்ளவேண்டியது இங்கு இன்றியமையாததாகும். இதனைப் பின்வருமாறு விளங்கிக்கொள்ளலாம்.

கொல்லன் உலைக்களத்தில் காற்று ஊதும் கருவியைத் துருத்தி என்பர். அதனைக் கொண்டு ஊதும்போது நெருப்பில் கிடக்கும் மாசு நிறைந்த

தங்க உலோகமானது, பொன் போல் ஒளிரும், இக்காட்சியை, பாமரமக்கள் கொல்லன் உலைக்களத்திண் கண் காண இயலும், இதனை முன்னிறுத்தி, சிவவாக்கியர், துருத்தி, கொல்லர், சொர்ணமான சோதி ஆகிய பரிபாஷைச் சொற்களைக் காட்டிச் சித்தர்நெறியைச் சிறப்பாக உணர்த்துகிறார்.

இங்கு துருத்தி என்பது வாசியைக் குறிக்கும் கொல்லன் – சீவன் ஆவான். சொர்ணம் – தங்கம் இங்கு இது இறைவனைக் குறிக்கும் பரிபாஷைச் சொல், அத்தகு, சிவனாகிய இறைவனைச் சீவனாகிய உயிர் அறியவொட்டாமல், மலமாகிய அழுக்கு மறைத்துக்கிடக்கிறது. தங்கத்தின் மாசுநீக்க, அதனை நெருப்பில் இட்டுக் கொல்லன் உலைக்களத்தில் துருத்தி கொண்டு ஊதுவதுபோல, உடலாகிய உலைக்களத்தில், வாசியாகிய துருத்தி கொண்டு சீவனாகிய மானுடன் தொடர்ந்து ஊதத் தொடங்கினால், ஒளிவடிவமான இறைவனை உணர முடியும் என்பது இப்பரிபாஷைப்பாடல் தரும் நுட்பப்பொருள் ஆகும்.

இவ்வாறு தெரிந்தது கொண்டு தெளிய வேண்டிய உண்மையை மக்கட்கு உணர்த்த சித்தர்கள் யாவரும் தம் பாடல்கள் பலவற்றிலும் பாரிபாஷை முறையைக் கையாண்டுள்ளமையை இங்கு காணலாம்.

## சந்த வகையில் சித்தர் பாடல்கள்

எந்தப் பாடலாயினும் இசையோடு அது மக்கள் மனங்களைச் சென்றடையச் சந்தப்பாடளாக அமைதல் வேண்டும். காரணம், கேட்டவுடன் திரும்பவும் இசைத்துப் பார்க்கும் ஆவலை அப்பாடல் உருவாக்குவதோடு எளிமையாக அதன் சந்தஓட்டம் எண்ண ஓட்டத்தில் பாடலின் சொற்களைப் பதித்துநிலைத்திருப்பதையும் பார்க்கலாம். சித்தர் சிவவாக்கியர் பாடல்கள் அனைத்தும் சந்த வகைப்பாக்களாக உள்ளன.

தான தானதான தான தான தான தானனா என்ற சந்ததத்தில் அமைந்த எழுசீர் சந்த விருத்தங்கள் மிகுதியும் அவர் பாடல்களில் பயின்றுவரக் காணலாம். இவற்றுள், தான என்பதன் இடத்தில் தன்ன தன்ன முதலியனவும் வரலாம். தன்ன என்பதன் அமைப்பினவே தத்த, தந்த, தய்ய முதலியனவும், இறுதியில் தன்னனா, தந்தனா, தத்தனா, தய்யான முதலியன வரலாம்.

மிடுக்குடன் விரைந்து நடக்கும் இச்சந்தப்பா வகையினை இவர் தேர்ந்து கொண்டமை, மெய்ப்பொருளையும் பகுத்தறிவுக் கருத்துகளையும் உலகினர்க்கு உணர்த்துவதில் இவருக்குள்ள எழுச்சியினைப் பறைசாற்றுகின்றது. கம்பன், மிடுக்கான நடை வேண்டப்படும் இடங்களில் இவ்வகைப் பாக்களைக் கையாளுகின்றார். கம்பராமாயணத்தில் இவ்வகைச் சந்த விருத்தங்கள் 63 உள்ளன. தாளத்தில் 4.8 என்ற எண்ணிக்கைகள் சந்தப் பாடல்களின் பெரும்பரப்பை ஆட்சி செய்கின்றான். இசைநூலில், ஆதிதாளத்தில் முன்பாதி – 4 எண்ணிக்கையும் பின்பாதி 4 எண்ணிக்கையுமாக அமைந்துள்ளன. இந்த எழுசீர் சந்த விருத்தங்களில் ஒவ்வோர் அடியும் ஓர் ஆதித்தாளத்தின் முழுநீளத்தில் (ஆவர்த்தத்தில்) அடங்கியுள்ளமை புலனாகின்றது. இப்பாடலை ஆதி தாளமிட்டு பாடுகையில் அலகு தொடக்கத்திலும், துரிதத் தொடக்கத்திலும் மோனை வந்து விழுவது தெரிகிறது. நமது தமிழ்ச் சந்தப் பாக்களின் வடிவங்கள் தாளநூல் நுட்பங்களோடு அமைந்தவை என்பதை இதனால் நன்கு உணர முடிகிறது.

## சித்தர் பாடல்களில் அந்தாதி மரபு

இடைக்காலத்தில் எழுந்த புதுவகையான அமைப்புடைய இலக்கியங்களுக்குப் பிரபந்தங்கள் அல்லது சிற்றிலக்கியங்கள் எனப்பெயரிட்டனர். இவற்றைத் தொண்ணூற்றாறு வகையாகப் பிரிப்பர். இவற்றுள் ஒன்றே அந்தாதி என்பது. அந்தம்,ஆதி எனப் பிரிந்து ஒருபாடலின் அந்தம் தொடர்ந்து வரும் பாடலுக்கு ஆதியாய் அமையும் எனப் பொருள்தரும். ஒரு பாடலுக்கும் அடுத்த பாடலுக்கும் தொடர்புபடுத்துவது சீராகவோ, எழுத்தாகவோ இருக்கலாம். இலக்கிய அமைப்புகளில் அந்தாதி சிறப்புடைய ஒன்றாகும். காரணம் பாமாலை என்னும் சொல்லுக்கு உண்மைப் பொருளாக இலங்குவது இதுவேயாகும்.

அந்தாதியில் இரண்டு வகையுண்டு ஒன்று, பத்துப் பத்துப் பாக்களைக் கொண்ட பத்துப் பகுதிகளைக் கொண்டு வருவது, மற்றொன்று நூறு பாடல்களும் அடுத்தடுத்துத் தொடர்ந்து வருவது. இவை வெண்பா அல்லது கட்டளைக் கலித்துறை போன்ற ஏதேனும் ஒருவகையான பாவகையில் பாடப்பெறும், தொல்காப்பியத்தில் காணலாகும் விருந்து என்னும்

பிரிவினுள் இதனைச் சிலர் அடக்கிக் கூறுவர். சிவ்வாக்கியத்தில் சுமார் 37 பாடல்கள் அந்தாதிப் பாடல்களாக உள்ளன.

## சித்தர் பாடல்களில் விளிகள்

இலக்கிய உலகில் விளியமைப்பில் புதுப்புது முறைகளைப் பின்பற்றியவர்கள் சித்தர்களாவர். **“ஒரு சித்தர் கையாண்ட விளியை, மற்றொரு சித்தர் எடுத்துக்கொள்வதில்லை. யோசித்து யோசித்துப் புதிய விளிகளை அவர்கள் படைத்திருகிறார்கள்“**[60]

சித்தர்கள் தூய அறிவுவாதிகளாகையால் அவர்களது மொழிநடை கேள்விமயமாய் விளங்குகின்றது. கேள்விகளைப்போலவே அவர்கள் அமைக்கும் விழிகளும் அவர்களின் தனித்தன்மையைப் புலப்படுத்துவனவாக அமையக் காணலாம்.

அகப்பேய், தாண்டவக்கோனே, கண்ணம்மா, குதம்பாய், பாம்பே, வாலைப்பெண்ணே, ஞானப்பெண்ணே போன்ற விளிகள் தமிழ்மக்களை ஓயாது முணுமுணுக்க வைத்திருப்பதைக் காணமுடிகிறது.

பாவிகாள்,ஊமைகாள், மூடர்காள், பித்தர்காள், பேயர்காள் என்பன சிவவாக்கியர் ஆத்திரங்கொண்டு பாடல்களில் எழுப்பிய விளிகளாகும். கண்முன் காணும் பிழைகளையும் குற்றங்களையும் சுட்டிக்காட்டி நெறிப்படுத்தும் வண்ணம் மக்களை விளித்துச் சிவவாக்கியர் பாடும் பாடல்கள் பலராலும் பல இடங்களில் இன்றளவும் மேற்கோள் காட்டப்படுவதைக் காணமுடிகிறது.

**“மந்திரங்கள் கற்றுநீர் மயங்குகின்ற மாந்தரே**
**மந்திரங்கள் கற்ற நீர் மரித்த பொது சொல்விரோ**
**மந்திரங்கள் உம்முளே மரித்த நீரும் உம்முளே**
**மந்திரங்கள் ஆவது மனத்தினைந்தெழுத்துமே”** [61]

என்று மக்களை மாந்தரே என்று விளித்து, தம் கருதும் கருத்தை உரத்துக் கூறும் கவிக்குரலாகச் சிவவாக்கியர் குரல் அமைந்திருப்பதையும் இங்குக் காணலாம்.

## சித்தர் பாடல்களில் மறைபொருள்

சித்தர்களின் பாடல்கள் யாவும் நல்லவர்களை மட்டுமே சென்றடைய வேண்டும் என மீண்டும் மீண்டும் சித்தர்கள் எண்ணியதால் தங்கள் பாடல்களை மறைபொருள் கொண்டதாகப் பாடினார்கள். இப்பாடல்களில் உயரிய வாழ்வியல் தத்துவம், இறைக்கொள்கை, ஆற்றல் தரும் மூலிகைகள் தொடர்பான செய்திகள் மறைபொருளாகத் தரப்பெற்றுள்ளன. இவற்றைத் தவிர, சித்தர்கள் தங்களின் பாடல்களைப் புதிர் பொதிந்தவையாகவும் பாடினார்கள்.

வாலையின் அட்சரமான அ,இ,உ ஆகிய மூன்றெழுத்து மந்திரத்தை உச்சரிக்கும் முறையை அறிந்துகொண்டு இறை ஆனந்தம் அடையும் வழியை யோகி யோகி என்று சொல்லித் திரியும் பலர் அதையே உற்றுப் பயிற்சி செய்து கண்டிலர், இதனை,

**“ஆகிகூ வென்றுரைத்த அட்சரத்தின் ஆனந்தம்**

**யோகியோகி என்பர்கோடி உற்றறிந்து கண்டிலர்”**[62]

என்று குறிப்பிடும் சிவவாக்கியர்,

கூவும் கீயும் மோனமாகிய கொள்கையான கொள்கையை,

**“மூவிலேஉ தித்தெழுந்த முச்சுடர் விரிவிலே**

**பூவிலேந றைகள்போல் பொருந்திநின்ற பூரணன்**

**ஆவிஆவி ஆவிஆவி என்பருள்ளம் உற்றதே”**[63]

என்ற பாடலில், கூ, கீ என்ற எழுத்துக்களின் மறைபொருளை விளக்குகின்றார்.

கூ என்பது உகாரம், கீ என்பது இகரம், இது அகரத்தில் சேர்ந்து மௌனமாக நின்ற கொள்கையான அது என்ற கொள்கையை உணர்ந்திருங்கள். மூன்றெழுத்தாக உதித்தெழுந்த வாசி, சந்திரசூரிய அக்னி என்ற முச்சுடர் விரிவாக நின்றது. பூவிலே உள்ள மணம்போல நமக்குள் பொருந்தி நின்ற அதுவே பூரணம். அது ஆவியாக, ஆன்மாவாகி அன்பே சிவமாக அன்பர்களின் உள்ளத்தில் உற்றிருக்கின்றது. இவ்வுண்மையைத் திருமூலரும்,

**“பூவினில் கந்தம் பொருந்திய வாறுபோல்**

**சீவனுக்குள்ளே சிவமணம் பூத்தது”**[64]

என்ற பாடலின்வழி விளக்குகிறார.

## மக்கள் இலக்கியம்

சித்தர் பாடல்கள் பெரும்பாலும் நாட்டுப்புறப் பாடல்களின் சாயல்களாகவே உள்ளன. வெண்பா, விருத்தம் போன்ற செய்யுள்களும் சிறுபான்மை இடம் பெற்றுள்ளன. கும்மி, தென்பாங்கு, களிப்பு, இடையர் பாட்டு, வினாவிடைப்பாடல், புலம்பல் போன்ற நாட்டுப்புற இசைப்படல்களிலேயே, சித்தர்கள் மனித வாழ்வின் இயல்பினை உணர்த்தியுள்ளனர். இவ்வகை நாட்டு பாடல்களின் வழக்கு வன்மை கருதிய இவர்கள், இப்பாடல்களை, தங்களின் கொள்கை விளக்க வடிவங்களாகக் கொண்டு இசைப்பாடல்களாக ஆக்கியுள்ளனர்.

பயிலுதற்குரிய யோகமுறைகளைச் சித்தர்கள் மிக எளிய **“கும்மிப் பாடலில்”**[65] வெளிப்படையாகக் காட்டியுள்ளதை

**“வாசிப் பழக்க மறியவே ணுமற்று**

**மண்டல வீடுகள் கட்ட வேணும்**

**நாசி வழிக்கொண்டு யோகமும் வாசியும்**

**நாட்டத்தைப் பாரடி வாலைப் பெண்ணே”**

**(கொங்.-28)**

எனும் கொங்கணர் பாடல் உணர்த்துகிறது.

ஞானியர் உணர்த்திய கன்மேந்திரிய, ஞானேந்திரியங்களையும் **“தென்பாங்கு”**[66] எனும் பாடல் வடிவில் சித்தர்கள் பாமர மக்களுக்குப் புலனாக்கியுள்ளனர். அழுகணி சித்தர் பாடியுள்ள,

**“எண்சாண் உடம்படியோ ஏழிரண்டு வாயிலடி**

**பஞ்சாயக் காரர்ஐவர் பட்டணமுந் தானிரண்டு**

**அஞ்சாமற் பேசுகிறாய் ஆக்கினைக்குத் தான்பயந்து**

**நெஞ்சார நில்லாமல் என்கண்ணம்மா நிலைகுலைந்து வாடுறண்டி”**

**(அழுகணி– 2)**

எனும் இத்தென்பாங்குப் பாடலில் பஞ்சாயக்காரர், பட்டணம் எனும் சொற்கள், நாட்டுப்புற வழக்குச் சொற்களாலான உருவங்களாக ஞானேந்திரியங்களையும், வாசி நிலைகளையும் சுட்டவதாக அமைந்துபொருள் விளக்கஞ் செய்தலும் அறியத்தக்கதாகும்.

அரிதிலும் அரிதாய்ப் பெற்ற மானிடவுடல் மனிதனது அறியாமை வினைகளால் அழிகின்றது. இதனை உணர்த்த எழுகின்றது ஒரு பாடல். யாக்கையின் சிறப்பினை உணர்த்துகின்ற இப்பாடல் **“ஆனந்தக் களிப்பாக”**[67] அமைந்துள்ளது.

**“நந்த வனத்திலோ ராண்டி – அவன்**
**நாலாறு மாதமாய்க் குயவனை வேண்டி**
**கொண்டுவந் தானொரு தோண்டி – மெத்தக்**
**கூத்தாடிக் கூத்தாடிப் போட்டுடைத் தாண்டி”**

**(கடுவெளி – 4)**

இப்பாடலில், நந்த, நாலாறு, கொண்டு, கூத்தாடி எனும் சொற்களும்,ஆண்டி, வேண்டி,தோண்டி, தாண்டி எனும் சொற்களும், சிறப்பான எதுகை மோனைகளாக அமைந்து, கேட்போர் நினைவிற்கொள்ளுமாறு பாடற்கருத்தினைப் பகருகின்றன.

இடைக்காட்டுச் சித்தரின் பாடல்கள் அனைத்தும் முல்லை நில மக்களாகிய ஆயர் பாடல்களின் பல்வகை வடிவினைக் காட்டுவனவாகவுள்ளன.

**“மனமென்னும் மாட்டங்கில் தாண்டவக் கோனே முத்தி**
**வாய்த்ததென்று எண்ணேடா தாண்டவக்கோனே”**

**(இடை – 13)**

இத்தகைய நாட்டுப்புறப் பாடல்களைச் சித்தர்கள், கைக்கொண்டதன் நோக்கம், அவற்றின் இசைநயம் கருதியேயாகும். அருமையான சந்த நலம் வாய்ந்தனவாக, வழக்கு வன்மை உடையனவாக, எதுகை, மோனை இயல்பாக அமைவனவாக அவை விளங்கின. எனவே பாமர மக்களுக்கும், வாழ்வின் மெய்மைகளைப்புகட்டும் சித்தர்களுக்கும், இப்பாடல்களே பெருந்துணை புரிவனவாக அமைந்தன. பாடல்களின் கருத்துக்களைப் பாமர மக்கள், மருளாது மகிழ்ந்து உளங்கொள்ளுமாறு உணர்த்தியுள்ளனர். இதற்கமைந்த சான்றாகவே தமிழகத்தின் கிராமங்களிலுள்ள பெரும்பான்மை இல்லங்களில் சித்தர் பாடல்கள் அடங்கிய சுவடிகள் கிடைக்கின்றன.

## புலநெறி இலக்கியம்

சித்தர்களுள் பெரும்பான்மையினர் கல்வி கேள்விகளில் சிறந்திருந்தும், செல்வர்களாக வாழ்ந்திருந்தும், நிலையாமையினை அறிந்த அளவில் துறவுபூண்டு சித்தர்களாகியுள்ளனர். எனவே தான் அவர்கள் பாடிய பாடல்கள் வெண்பா, விருத்தம் போன்ற இலக்கண அமைதிபெற்ற செம்பொருள் நல்கும் செய்யுல்களாகவும் அமைந்துள்ளன. இதனைப் பட்டினத்தாரின்

**“மாதா உடல்சலித்தாள் வல்வினையேன் கால்சலித்தேன்**
**வேதாவும் கைசலித்து விட்டானே – நாதா**
**இருப்பையூர் வாழ்சிவனே இன்னம்ஓ ரன்னை**
**கருப்பையூர் வாராமற் கா”**

**(பட்டினத்தார் – 164)**

எனும் நேரிசை வெண்பாவினைக் கொண்டும் அறியலாம். இருவிகற்பங்களைக் கொண்டு , நாள் எனும் வாய்பாட்டால் நிறையும் இப் ‘பா‘ சிறுசிறு தொடர்களால் அரும் தத்துவப்பொருள்களை விளக்கிடும் வித்தகப் பாடலாக அமைந்துள்ளது.

உருவகக் காட்சிகளையும் மனக்கண்ணில் தெளிவாக உணர்த்தும் வன்மை சித்தர்களின் செய்யுளுக்கு உண்டு. பிறவிப் பெருங்கடலைக் கடப்பதற்குப் பாம்பாட்டிச் சித்தர் தம் செய்யுளில் ஒரு பாய்மரக் கப்பலைக் காட்டுகிறார். அச்செய்யுள் விருத்தப்பாவில் அமைந்துள்ளது.

**"களி மண்ணி னாலொரு கப்பல் செய்தே**
**கனமான பாய்மரங் காண நாட்டி**
**அளிபுலந் தன்னையே சுக்கா னாக்கி**
**அறிவென்னும் ஆதாரச் சீனி தூக்கி**
**வெளியென்னும் வட்டத்தே யுள்ள டக்கி**
**வேதாந்தக் கடலினை வெல்ல வோட்டித்**
**தெளிவுறு ஞானியார் ஓட்டுங் கப்பல்**
**சீர்பாதம் சேர்ந்ததென் றாடு பாம்பே"**

**(பாம்பாட்டி – 114)**

இச் செய்யுள் இலக்கண அமைதியோடு இசைத்தன்மையினையும் பெற்று உணர்த்த வந்த உருவகப் பொருளைக் கற்போர் மனங்கொள்ளுமாறு உணர்த்தி நிற்கிறது.

## நாட்டுப்புற இலக்கியம்.

நாட்டுப்புறத்தாரிடையும் சித்தர் பாடல்கள் பெரு விளக்கம் பெற்றமைக்குக் காரணமாய் அமைவது இப் பாடல்களின் மொழி நடையேயாகும். எளிய நாட்டுப்புற வழக்குச் சொற்களே சித்தரிலக்கியங்களில் மக்கள் எளிதில் உணர்ந்துகொள்ளும் குறிப்புடன் அமைக்கப்பட்டு விளங்குகின்றன.

முன்னிலைப்படுத்தும் பாரப்பா, கேளப்பா, பாரடி, கேளடி, கொட்டுங்கடி, பேதைகாள், மூடர்காள் போன்ற சொற்களும் படிப்போர், கேட்போரது உளத்தில் இடங்கொண்டன. சிறுசிறு தொடர்களால் பாடல்கள் எனும் முறை மக்கள் உள்ளத்தில் பதியத் தக்கதாய் அமைந்தது. மக்கள் மனம் உருகி நெகிழுமாறு சொற்கள் நயமுடையனவாகவும், பொருள் வளம் நிறைந்தனவாகவும் அமைந்துள்ளன. மக்களுக்கு உலகின் பொருளியல்பு கூறுகின்றார் பட்டினத்தார். பாடல் சிறுசிறு தொடர்களால் அருங்கருத்துக்களை விளக்குகின்றது.

**“பிறந்தன இறக்கும், இறந்தன பிறக்கும்**
**தோன்றின மறையும், மறைந்தன தோன்றும்**
**பெருத்தன சிறுக்கும், சிறுத்தன பெருக்கும்**
**உணர்ந்தன மறக்கும், மறந்தன உணரும்**
**புணர்ந்தன பிரியும், பிரிந்தன புணரும்”**

**(பாம்பாட்டி –2)**

## வாழ்வியல் இலக்கியம்

உடைந்த மன்கலத்தையும், வெண்கலத்தையும் நாளை பயன்படும் என்று பாதுகாத்து வைத்துப் பேணும் மனிதர்கள் தமது உடலாகிய கலம் உடைகின்றபோது பேணிக் கொள்கின்றனரோ? இல்லையே. நாறும் என்றன்றோ தூரப் போடுகின்றனர். உடைந்த மட்கலத்தினும் கீழ்மையதன்றோ மனிதவுடல். ஆதலின் பயனற்ற இவ்வுடலையே போற்றாமல் ஈசனைப் போற்றுதல் கடனாகும் என்னுங் கருத்தினைக் கூறவந்த சிவவாக்கியர்,

**“மண்கலம் கவிழ்ந்தபோது வைத்துவைத் தடுக்குவார்**
**வெங்கலம் கவிழ்ந்தபோது வேணுமென்று பேணுவார்**
**நங்கலம் கவிழ்ந்தபோது நாறுமென்று போடுவார்**
**எண்கலந்து நின்றமாயம் என்னமாயம் ஈசனே”**

**(சிவ –79)**

எனும் பாடல் வழி வினயமாகப் புலப்படுத்துவர்.

மண்கலம் உடைந்தால் அடுக்குவர், வெங்கலம் பழுதுற்றால் பேணுவர், ஆனால் நம் கலம் சாய்ந்தாலோ “நாறும்” என்று போடுவர் என்று நயமான சொற்களால உண்மையை உணர்த்திடுகின்றது இப்பாடல்.

## தெளிநிலை இலக்கியம்

கருத்துக்களை நல்ல எடுத்துக்காட்டுக்கள் காட்டி விளக்குகின்ற முறையும் சித்தர்களுக்குக் கைவந்த கலையாக உள்ளது. இவ்வெடுத்துக்காட்டுகளே உவமைகளாகும். சித்தர்கள் காட்டும் உவமைகள் அனைத்தும் மக்கள் வாழ்வில் நிகழும் நிகழ்ச்சிகளேயாகும். சித்தர் இலக்கியத்தின் தனிப்பெரும் பண்பும் இதுவேயாகும். பாமர மக்கள்

பயன்படுத்தும் பழமொழிகளையே உவமையாக்கிடும் பாடற்போக்கும் இவர்களிடத்து நிறைந்துள்ளன.

**“மின்னகத்துள் மின்னொடுங்கி மின்னதாய வாறுபோல்**
**என்னகத்துள் ஈசனும் யானுமல்ல தில்லையே”**

**(சிவ –90)**

**“பற்றற்று நீரில் படர்தா மரைஇலைபோல்**
**சுற்றத்தை நீக்கிமனம் தூரநிற்ப தெக்காலம்”**

**(பத்ர –54)**

போன்ற உவமைகளும்

**“ஏட்டுச் சுரைக்காய் கறிக்கிங் கெய்திடாது” (பாம்பாட்டி – 94)**

**“சூரியனைக் கண்ட பனிபோல” (தேவாரம் – 246)**

**“புளியம் பழமும் தோடும் போல” (திருபுகழ். சி– உ–சூ–2:49)**

**“இலவு காத்து ஓடும் கிளிபோல” (பாம்பாட்டி – 50)**

போன்ற பழமொழி உவமைகளும் சித்தரிலக்கியத்தின் தனிப் பண்புகளை விளக்கி நிற்கின்றன. இவ்வுவமைகள் வினை, பயன், மெய், உரு ஆகிய நிலைக்களங்களில் அமைந்துள்ளன.

## வழிநிலை இலக்கியம்

பேரிலக்கியக் கருத்துக்களையும் தமது வடிவில் படைத்துக்காட்டும் திறம் சித்தரிலக்கியத்திற்கு உண்டு.

**“ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்க லாற்றின்**
**எழுமையும் ஏமாப் புடைத்து”**

**(அடக்கம் – 6)**

என்ற குறட் கருத்தினைப் பத்ரகிரியார்,

**“ஆமைவரும் ஆள்கண்டு ஐந்தடக்கம் செய்தாற்போல்**
**ஊமைஉருக் கொண்டு ஒடுங்குவது மெக்காலம் ?” (பத் – 19)**

எனத்தம் கண்ணிகளால் தெளிவுறுத்துவர். இத்தகைய வடிவ வழிமாற்றத்தில் தேவார, திருவாசக, சைவசிந்தாந்தக் கருத்துக்கள் மிகுதியாகச் சித்திரிலக்கியத்தில் இடம் பெற்றுள்ளன.

## நினைவிலக்கியம்

எதுகை, மோனை இவற்றின் சிறப்பும் சித்தரிலக்கியத்தின் தனித்தன்மையினை உணர்த்துகின்றன.

**“எள்ளகத்தில் எண்ணெய்போல எங்குமாகி எம்பிரான்**

**உள்ளகத்தி லேயிருக்க ஊசாலாடும் மூடர்காள்**

**கொள்ளைநாயின் வாளினைக் குணக்கெடுக்க வல்லிரேல்**

**வள்ளலாகி நின்றசோதி காணலாகும் மெய்மையே”**

**(சிவ – 397)**

இப்பாடலில் எதுகையும் மோனையும் இயல்பாக அமைந்து பொருள் விளக்கம் செய்வதும், மனிதரின் நினைவிற் பதிப்பதும் சித்திரிலக்கியத்தின் யாப்புச் சிறப்பின் சான்றாக அமைகின்றன.

சொல்லடுக்குகள் பாடலில் இடம் பெற்றிருப்பதும் சித்தரிலக்கியத்தின் சிறப்பாகும்.

**“கோடிகோடி கோடிகோடி குவலயத்தோர் ஆதியை**
**நாடிநாடி நாடிநாடி நாளகன்று வீணதாய்**
**தேடிதேடி தேடிதேடி தேகமும் கசங்கியே**
**கூடிகூடி கூடிகூடி நிற்பர்கோடி கோடியே”**

**(சிவ– 333)**

எனக் கோடியும், நாடியும், தேடியும், கூடியும் அடுக்கி, பாடற்பொருளை வலியுறுத்துகின்ற பாங்கு சிவவாக்கியர் பாடல்களில் மிகுந்துள்ளன.

சொல்மாலைகள் அழகிய பொருள் மாலைகளாகவும் அணி நயம் பெற்றுக் கற்போரை மகிழ்விக்குமாறு சித்தர் பாடல்கள் அமைந்துள்ளன. அவற்றுள்

**“வானிலாத தொன்றுமில்லை வானுமில்லை வானிடில்**
**ஊனிலாத தொன்றுமில்லை ஊனுமில்லை ஊனிடில்**
**நானிலாத தொன்றுமில்லை நானுமில்லை நண்ணிடில்**
**தானிலாத தொன்றுமில்லை தாயங்கி ஆடுகின்றதே’’**

**(சிவ – 224)**

எனும் சிவவாக்கியர் பாடலும் ஒன்றாகும்

சித்தர்கள் தாமுணர்த்தக் கருதிய பொருளினை மாசறக் கூறும் மாண்புடன் வினா விடையாகக் கூறுமுறையில் பாடல்களை அமைத்துக் கூறுவதையும் மரபாகக் கொண்டிருந்தனர்.

**“ஆசைகொண் டுநம்மை ஆட்டுவா ராரடி சிங்கி ?’’**

**(கொங்கன – 21)**

என வினாப்பகுதியும்,

**“அது அக்கினி வாயுநீர் மண்ணின் மகிமையே சிங்கா ?’’**

**(கொங்கன – 21)**

என விடைப்பகுதியும் தத்துவப் பொருளை உரைக்கும் பாடல் வடிவம் பெற்றிருப்பதும் கண்கூடாகும்.

திருவாசகம் காட்டும் “திருக்கொத்தும்பியார” எனும் ‘பா‘ வினம் சித்தர் பாடல்களிலும் இடம் பெற்றுள்ளமையைக் காணமுடிகிறது. இடைக்காட்டுச் சித்தர் இவ்வகையிலேயே “சித்தத்தொடு கிளத்தல” எனும் பகுதியினைப் பாடிச் செல்கின்றார்.

## புரட்சி இலக்கியம்

கூறுகின்ற பொருளிலும் புதுமை படைத்து இச்சித்தரிலக்கியங்கள் இலங்குகின்றன. வாழ்வியல் உண்மை, புரட்சிக் கருத்துக்கள், தத்துவம் ஆகிய கருத்துக்களை வெளிப்படையாக உணர்த்துகின்ற நிலை சித்திரிலக்கியத்திற் காணலாகும் காட்சியாகும்.

**“ஊரிலுள்ள மனிதர்காள் ஒருமனதாய்க் கூடியே**
**தேரிலே வடத்தைவிட்டுச் செம்பை வைத்திழுக்குறீர்**
**ஆரினாலும் அறியொணாத ஆதிசித்த நாதரை**
**பேதையான மனிதர் பண்ணும் பிரளிபாரும் பாருமே”**

**(சிவ – 242)**

எனும் பாடல் கடவுளின் இயல்பினையும், திருவிழாக்களின் சிறப்பின்மையினையும் , உருவ வழிபாட்டின் உண்மையினையும், மனிதரின் பேதைமையினையும், ஒருங்கே வெளிப்படையாகக் காட்டிச் சித்தர் கொள்கைகளைச் செவ்வையாகப் புகட்டி நிற்கின்றதெனலாம்.

.

**முடிவுரை**

தமிழ் இலக்கியப் படைப்புகள் காலந்தோறும் வடிவத்தாலும், பொருளாலும் மாறுபட்டு வந்துள்ளன. இலக்கிய வடிவங்கள் சுருக்கமும் செறிவும் வாய்ந்த வடிவமாதலால் தமிழர்கள் எல்லாவற்றையும் பாட்டு என்ற வடிவத்திற்குள்ளேயே ஆக்க முற்பட்டனர். தமிழில் காலந்தோறும் ஏற்பட்ட பதிவுகளில் சித்தர்களின் சிந்தனைப் பதிவும் குறிப்பிடத்தக்கது.

சித்தர் இலக்கியம் தமிழில் தனிவகை இலக்கியம், குறியீட்டு இலக்கியம், காலந்தோறும் வளர்ந்த இலக்கியம்,தத்துவ இலக்கியம், சித்தர்களின் நுண்ணுணர்வு, ஆழ்நிலை எண்ணங்கள், வெடிப்புறு சிந்தனைகளில் வீசும் அலைகள் பொறி போலச் சுடர்விடுகின்றன. சித்தர் சிந்தனை வளமும் கருத்துக் கொடைகளும், எண்ண விரிவுகளும் தவஞானியர்களின் சிந்தனை எச்சங்களாக மொழியைச் செழுமைப்படுத்தி உள்ளன.

தமிழ் நாட்டு வரலாற்றிலும், இலக்கிய வரலாற்றிலும் சித்தர்கள் இன்றியமையாதொரு இடம் பெறத்தக்கவர்கள். அவர்கள் பெயரில் கிடைக்கின்ற அச்சில் வெளிவந்துள்ள நூற்றுக்கணக்கான நூல்கள் மூலமாகவும், வெளிவராத ஏடுகள் மூலமாகவும் மக்களுக்கும், மொழிக்கும் ஆற்றியுள்ள தொண்டினை நன்கு அறியலாம்.

சித்தர்களின் மெஞ்ஞான தத்துவமும், விஞ்ஞான உணர்வும், காலத்தை வென்ற கருத்தும் தமிழுக்கு அழகையும் வலிமையும் வனப்பையும் தந்துள்ளதை காணமுடிகிறது.

மருத்துவம், மந்திரம், ரசவாதம்,யோகம், ஞானம் முதலிய பல்வேறு துறைகளில் எளிய தமிழில் பல்வேறு யாப்பு, சந்தம் முதலியவற்றோடு பாடல்களை இயற்றித் தமிழ் இலக்கிய உலகிற்குப் பெருமை சேர்த்துள்ளனர். “திருமுறைகளைப்” போல சித்தர் இலக்கியத்தை எல்லாக் காலத்திலும் எல்லாரும் போற்றவில்லை என்றாலும், இவை சிந்தை கவரும் பாடல்களாகவே திகழ்கிறது

. மொழியாலும் நடையாலும் பாடல் வடிவத்தாலும் நாட்டுப்புற இலக்கியத்தின் செல்வாக்கு சித்தர் இலக்கியத்திற்குச் செழுமை

சேர்த்துள்ளது. பேசாப் பொருளை அவர்கள் பேசிய திறமும், உயிர் இயல்பை உணர்த்திய திறமும், யோகத்தின் ஒருமையினை பெருமையினைப் பேசிய திறமும் பெருந்திறமாகும். ‘ கள்ளிக்கு என்ன வேலி ‘ எனக் கேட்கும் கருத்து வெளிப்பாடும், கவிதை அழகும் நினைந்து நினைந்து இன்புறத்தக்கன.

சித்தர் பாடல்களால் செந்தமிழ் செழுமை பெற்றுள்ளது. கருத்துக்கெட்டாத சிந்தனைகளையும், அவர்கள் கவிதைகளில் சொல்ல முயன்றுள்ள திறம் களிப்புறத்தக்கது

சித்தர்களின் பாடல்கள் மேற்கூறியவாறு தன்னகத்தே இலக்கிய மரபினை ஏற்று நிற்பனவாய் அமைந்துள்ளன. பாமர மக்களுக்கு விளங்கும் மொழிநடையில் சின்னஞ்சிறிய சொற்களால் கருத்துக்களை அளவிட்டுரைக்கின்றன. தென்பாங்கு, கும்மி, களிப்பு, கன்னி, தும்பி போன்ற கிராமிய விளையாட்டுப் பாடல்கள் நடையில் தாம் கருதிய பொருளைப் பக்குவமாகப் பெற்றுள்ளன. உண்மையறியாது வாழ்க்கையில் உழலும் மக்களுக்கு உண்மைப் பொருளை உணர்த்தும் நோக்குடன் கருதிய பொருளை வினாவாக்கி அதற்கமைந்த விடையுடன் உணர்த்துவனவாகவும் சித்தர் இலக்கியங்கள் அமைவதைக் காணலாம்.

நினைவுக்கு வரும் வண்ணம் சொல்லும் பொருளும் அமைய முன்னிலைப்படுத்தலும், மூடரென்றும், பேதையென்றும் குறிப்பதுமாக சித்தர்களின் பாடல்கள் அமைகின்றன. கற்றோர் வியக்குமாறு யாப்பு நலத்தாலும், சொல்லடுக்குகளாலும், சொல் மாலைகளாலும் பொருள் நலம் பயப்பதாகவும் விளங்குகின்றன. உணர்த்தக் கருதிய குறிப்பினை மயக்கமின்றி உணர்த்துவதற்கு உவமைகள் அமைவதைக் காணமுடிகிறது. அவ்வகையில் சித்தர் பாடல்கள் சிறந்த எளிய அனுபவத்திற்குரிய உவமைகளில் பொருள் விளக்கந்தருவதாகவும் அமைந்துள்ளன. பிற இலக்கியக் கருத்துக்களை மாறுபட்ட எளிய நடையில் தருகின்ற வடிவமும் சித்தர் பாடல்களில் இடம் பெறுகின்றன.

சமயமும், வைதீகமும் வளர்த்த பொய்மைப் பூசனைகளை எடுத்துக்காட்டி அதன் பயனின்மையினை உணர்த்தியும், சாதி சமயங்களைச் சாடியும் சமரச சன்மார்க்க நெறியினைக் காட்டிடும் புரட்சி வழிபாட்டு இலக்கியமாகவும் அமைகின்றன. பாமர மக்களின் உடல் நோய்க்கு மருந்து

உரைக்கும் மருத்துவ இலக்கியமாகவும், உள்ள விழைவிற்கான இரசவாதம், அட்டமாசித்திகள், யோகம் முதலியனவற்றை உரைக்கும் சித்து இலக்கியமாகவும், உயிர்கள் மேன்மையடையும் முத்திக்குறிய ஞானமுரைக்கும் ஞான இலக்கியமாகவும் நின்று தமிழ் கூறும் நல்லுலகிற்கு பன்முக இலக்கியத் தன்மையின் வழிச் செல்லும் சித்தர் இலக்கியம் தமிழ் இலக்கிய வகிமையில் செழுமையினை நிறுவியதனை இங்கு காணமுடிகிறது.

## சான்றாதாரங்கள்

1. மாணிக்கவாசகம். இரா. நம் நாட்டுச் சித்தர்கள் , பா – 27

2. சிதம்பரனார். சாமி. சித்தர் கண்ட விஞ்ஞான தத்துவம், பா – 23

3. மாணிக்கவாசகம். இரா. நம் நாட்டுச் சித்தர்கள், பா – 32

4. மாணிக்கவாசகம். இரா. நம் நாட்டுச் சித்தர்கள், பா – 11

5. மாணிக்கவாசகம். இரா. நம் நாட்டுச் சித்தர்கள் , பக் – 27 – 28

6. மாணிக்கவாசகம். இரா. நம் நாட்டுச் சித்தர்கள் , பா – 29

7. தொல்காப்பியம், பொருள் – புறத்திணையியல் – நூ: 2 : 16

8. தொல்காப்பியம், இளம்பூரணர் (உ–ஆ) நூ – 2

9. தொல்காப்பியம், நச்சினார்க்கினியர் (உ–ஆ) நூ – 2

10. புறநானூறு. பா – 43 : 1 – 4

11. குறுந்தொகை, பா – 130 : 1 – 2

12. மணிமேகலை, பா – 24 : 46 – 47

13. பெருங்கதை, பா – 34 : 86 – 90

14. சூடாமணி நிகண்டு மூலமும் உரையும், பா – 36

15. பட்டினத்தார் பாடல், பொது : பா – 1

16. பட்டினத்தார் பாடல், பொது : பா – 35

17. சிவவாக்கியர் பாடல் – பா : 566

18. சிவவாக்கியர் பாடல் – பா : 182

19. வால்மீகர் சூத்திர ஞானம் : 2 : 2

20. திருவாய்மொழி – 2952

21. திருவாய்மொழி – 2971

22. திருவாய்மொழி, பேயாழ்வார் – 76

23. சிவவாக்கியர் பாடல் – பா : 3

24. திருமந்திரம் : 1823

25. தொல்காப்பியர், தொல்காப்பியம் பா. –1484-

26. திருவள்ளுவர் திருக்குறள் பா. –28

27. புறநானூறு 192 : 8 –1

28. உவே.சாமிநாத ஐயர் (ப.ஆ) குறுந்தொகை, வெள்ளி வீதியார், பா.130,ப.26

29. இளங்கோவடிகள் சிலப்பதிகாரம் 11,95,102,103

30. இளங்கோவடிகள் சிலப்பதிகாரம் 10,177–187

31. இளங்கோவடிகள் சிலப்பதிகாரம் 10,177 அடியார்க்கு நல்லார் உரை

32. சீத்தலைச்சாத்தனார்,மணிமேகலை 10:85

33. சீத்தலைச்சாத்தனார்,மணிமேகலை 26:206–207

34. சீத்தலைச்சாத்தனார்,மணிமேகலை 29:194–196

35. சீத்தலைச்சாத்தனார்,மணிமேகலை 24:48–47

36. மண்டல புருடர், சூடாமணி நிகண்டு 2:4

37. உ.வே சாமிநாத ஐயர் (ப.ஆ) பெருங்கதை, 34,86–88

38. திருமூலர் திருமந்திரம் பா. –54

39. திருமூலர் திருமந்திரம் பா. –81

40. திருமூலர் திருமந்திரம் பா. –2969

41. திருமூலர் திருமந்திரம் பா. –1582

42. மாணிக்கவாசகர் திருவாசகம் பி,10,8

43. கே.சுப்பிரமணிய பிள்ளை (ப.ஆ) திருநறையூர் திருப்திக குறிப்புரை, ப.—145

44. திருஞானசம்பந்தர் தேவாரம் 2ஆம் திருமுறை 65:03

45. திருநாவுக்கரசர் தேவாரம், பொது, பசுபதி விருத்தம், பா.110

46. சுந்தரர் தேவாரம், திரு தொண்டம் தொகை பா.10

47. ஊரன் அடிகள் (ப.ஆ.) திருவருட்பாத் திரட்டு ப.47

48. பட்டினத்தார் சித்தர் பாடல்கள் பொது பா.1

49. பட்டினத்தார் சித்தர் பாடல்கள் பொது பா.30

50. ராமநாதன் சகு (ப.ஆ) சித்தர் பாடல்கள் ப.7

51. இரா.மாணிக்கவசகம் சித்தர்கள் சிந்தனைகள் ப.38

52. டி.என் கணபதி சித்தர்களின் குறியீட்டு முறையும், திருமூலரின் சூனிய சம்பாஷனைகளும் ப.27—28

53. இரா.மாணிக்கவாசகர், சித்தர் பரிபாஷை அகராதி ப.30

54. இரா.மாணிக்கவாசகர், சித்தர் பரிபாஷை அகராதி ப.325

55. மாணிக்கவாசகர் தீருவாசகம் சிவ புராணம் ப.18

56. திருமூலர் திருமந்திரம் பா.—702

57. ஔளையார், விநாயகர் அகவல் ப.43

58. சிவவாக்கியர் சிவவாக்கியம் பா.195

59. முனைவர் அ.அறிவொளி (உ.ஆ) சித்தர் பாடல்கள் மூ.உ தொகு.1 ப.110

60. மாடசாமி பாம்பாட்டிச் சித்தர் பாடல்கள் பா.41

61. சிவவாக்கியர் சிவவாக்கியம் பா.93

62. சிவவாக்கியர் சிவவாக்கியம் பா.332.

63. சிவவாக்கியர் சிவவாக்கியம் பா.344

64. திருமூலர் திருமந்திரம் பா.1432

65. தெய்வநாயகம். சி. கோ. சித்தர் சிந்தனை : பக் – 66

66. தெய்வநாயகம். சி. கோ. சித்தர் சிந்தனை : பக் – 66

67. தெய்வநாயகம். சி. கோ. சித்தர் சிந்தனை : பக் – 67

# சித்தர் சிவவாக்கியரின் வாழ்வும் தொண்டும்

சித்தர்களுள் தலைச்சிறந்தவர் சிவவாக்கியர், திருமூலரின் திருவிளக்கமாகத் தோன்றியவர். தாயுமானவரால் குறிப்பிடப்படும் பெருமைப் பெற்றவர். யோக சித்துகளில் தலைச் சிறந்தவராகக் காணப்படுபவர் சிவவாக்கியர் ஆவார். வரன்முறை நாத்திகக் கொள்கைகளைத் தெளிவாகவும், நிறைவாகவும் வெளியிட்டு உருவ வழிபாட்டினையும், சமயச் சடங்குகளையும், சாதி பேதங்களையும், ஆசார வேடமாகும் பிறவற்றையும் கடிந்து "உண்மைப் பொருளை" உணரக் கூறி மக்களைக் கடைத்தேற்றும் குறிப்பில் விழைந்து நின்ற சித்தராகத் திகழ்பவர் இவர்.

## சிவவாக்கியர்

சிவவாக்கியர் வாழ்க்கை வரலாற்றைப் போகமுனிவர் சித்தகாண்டம், முருகதாச சுவாமிகளின் புலவர் புராணம், மா, வடிவேலு முதலியாரின் சிவவாக்கியார் பாடல் 500, கு. அருணாச்சலக் கவுண்டரின் சித்தர் பாடலும் அவர்தம் தத்துவமும் – ஒரு கண்ணோட்டம், அபிதான சிந்தாமணியிலும், தி. வி. சாம்பசிவம் பிள்ளை அவர்கள் எழுதிய தமிழ் – ஆங்கில மருத்தவ அகராதி ஆகிய நூல்களின் வாயிலாகவும் அறிய முடிகின்றது. இந்நூல்கள் புலப்படுத்தும் வாழ்க்கை வரலாற்றில் பல்வேறு மாறுபட்ட கருத்துக்கள் நிலவுகின்றன.

போக முனிவர், சிவவாக்கியர் தைமாதம் மக நட்சத்திரம் இரண்டாம் பாதத்தில் பிறந்தார் என்று குறிபிட்டுள்ளார். இவர் சங்கர் குலத்தைச் சார்ந்தவர் என்றும், ஐம்பத்தொரு வயதுவரை தவ வாழ்க்கையில் இருந்து, பின் பெற்றோரிடம் கேட்டுத் திருமணம் செய்து கொண்டார் என்றும், இவருக்குச் சிவானந்தர் என்ற மகள் பிறந்ததாகவும் இவர் எண்பத்தொரு வயது வரை வாழ்ந்தார் எனவும், இவர் குறுந்த மரத்தடியில் தம் சீடர்களுக்கு உபதேசம் செய்தார் எனவும் சிவவாக்கியரின் வரலாற்றை இங்ஙனம் குறிப்பிடுகிறார்.

புலவர் புராணம் – சிவவாக்கியர் வாழ்க்கையைப் பின்வருமாறு கூறுவதாக நம் நாட்டுச் சித்தர்கள் எனும் நூல் குறிக்கிறது[1]. ஞானி ஒருவரைப் பிராமணர் ஒருவர் சந்திக்கிறார். அவர் பிராமாணரிடம் இருநாழி

மணலும், படுசுரைக்காயும் கொடுத்து, இவற்றைச் சுவையான உணவாக ஆக்கித் தருபவளைத் திருமணம் செய்துகொள் எனக் கூறிச் சென்றார். அவற்றைப் பெற்றுக்கொண்ட பிராமணர், குலத்தில் உயர்வு, தாழ்வு இல்லை. இறை ஒன்றே என்ற உண்மையை உணர்ந்தார். அப்பிராமணரைச் சைவர் "சிவவாக்கியர்" என்றும்[2], வைணவர் "திருமழிசையாழ்வார்" என்றும் அழைத்தனர்[3]. என்றும், சிவவாக்கியர் ஒருமுறை கச்சிக்குச் சென்றார், மன்னர் இவரை மதிக்கவில்லை. அதனால் கோபம் கொண்டு கோயிலில் குடிகொண்டிருந்த திருமாலையும், அவர் தம் மனைவியையும் பைநாகப் பாம்பைச் சுருட்டிக் கொண்டு வருமாறு ஆணையிட்டார். இறைவனும் அவ்வாறே செய்தான். உண்மையை உணர்ந்து அரசனும் வேதியரும் பணிந்து வேண்டினர். சிவவாக்கியரும் பிழை பொறுத்துத் திருமாலைக் கோயில் கொள்ளுமாறு செய்தார். பின் அங்கிருந்து பல பதிகள் சென்றார்[4]. இவ்வாறு சிவவாக்கியர் வரலாறு இநூலில் கூறப்படுகின்றது.

**சிவவாக்கியரின் வாழ்க்கை வரலாறு**

சிவவாக்கியர் கருவிலே இருந்த பொழுது, இவரது தாயார், சதா சர்வகாலமும் சிவ நாமத்தைக் கூறியபடி இருந்தார். அதனால் தான் என்னவோ, இவர் பிறக்கும் பொழுது, "குவா,குவா" என்று அழாமல். "சிவா,சிவா" என்று அழுதார். இதனாலேயே இவருக்கு "சிவவாக்கியர்" என்ற பெயர் சூட்டப்பட்டது. காசிக்கு சென்ற இவர், செருப்புத் தைக்கும் சித்த யோகி ஒருவரிடம், உடலை "அன்ன கோசத்தால்" ஆக்காமல்,"பிராண கோசத்தால்" ஆக்கும் வித்தையைத் தெரிந்து கொண்டார். அன்னம் மூலம் தான் கிரகங்கள் நம்மை ஆட்டிப் படைக்கின்றது என்ற உண்மையையும் அந்தச் செருப்புத் தைக்கும் சித்தர் மூலமாகத் தெரிந்து கொண்டார். அன்னத்தை நாடி மனிதர்கள் தினம் செல்வதையே "அன்ன கோசம்" என்று அந்தச் சித்தர் குறிப்பிட்டார். ஆனால் அன்னத்திற்குப் பதில், பிராணனை உண்டு வாழ்வது,"பிராண கோசம்" என்னும் நிலையாகும். இதில் கிரகங்களுக்கு நமது விதி கட்டுபட இடம் இல்லை, என்னும் உண்மையை சிவவாக்கியருக்கு புரியும் படி உரைத்தார். காற்றை, சுவாசித்து வாழும், இந்த வித்தையைத் தனக்கும் சொல்லித் தருமாறு சிவவாக்கியர் அந்தச் செருப்புத் தைக்கும் சித்தரிடம் கேட்டுக் கொண்டார்.

சிவவாக்கியருக்கு அந்தச் செருப்புத் தைக்கும் சித்தர் அதற்காக ஒரு பரீட்சையை வைத்தார். சிவவாக்கியரிடம் ஒரு பொற்காசைக் கொடுத்து, அதனைக் கொண்டு போய் கங்கையில் (கங்காதேவிக்கு) காணிக்கையாக கொடுத்து விட்டு, அந்த நதி நீரில், நீராடி விட்டு வருமாறு கூறினார். சிவவாக்கியரும், கங்கைக்குள் இறங்கி, கங்கையிடம் "தாயே, எனது குருநாதரின் கட்டளைப்படி, இந்தப் பொற்காசை தங்களுக்கு காணிக்கை ஆக்க கொண்டு வந்துள்ளேன்"[5] என்று கூறினார். இதனை அவர் கூறிய நொடி பொழுதிலே நதி நீரில் இருந்து ஒரு வளையல் கரம் வந்து, அந்த பொற்காசை வாங்கிக் கொண்டது. உடனே, சிவவாக்கியர், கரைக்குத் திரும்பி வந்து நடந்த செய்தியைத் தனது குருவிடம் கூறினார். இதனைக் கேட்ட, அந்த செருப்புத் தைக்கும் சித்தர், புன்னைகைத்துக் கொண்டார். அந்த புன்னகையின் அர்த்தம் சிவவாக்கியருக்குப் புரியவில்லை. இந்த புன்னைகையின் அர்த்தத்தை குருவிடமே அவர் கேட்டும் விட்டார்.

அதற்கு அந்த குரு கேட்டார் "பொற்காசை, கங்கையில் போடா சொன்னவுடன், உனக்கு தயக்கமாக இல்லையா?[6] என்று. அதற்கு சிவவாக்கியர் சொன்னார், குருவின் கட்டளைக்கு ,முன் பொற்காசு ஒன்றும் பெரிதாகத் தோன்றவில்லை என்று. குரு கங்கைக்கு எதற்குப் பொற்காசு, என்று மற்றொரு கேள்வியையும் கேட்டார். அதற்கு, சிவவாக்கியர்,"இந்த மாய உலகில் தருவதையே நாம் எப்பொழுதும் பெறுகிறோம். கங்கையிடம் மட்டும் அதில் ஓர் தலை கீழ் மாற்றம் நிகழும். கங்கை நமது பாவத்தைப் பெற்றுக் கொண்டு, அவள் புண்ணியத்தைத்ப் பதிலுக்குத் தருபவள். ஆனால் இப்போது நடந்ததோ, பொன் என்னும் பற்றினைப் பெற்றுக் கொண்டு, பதிலுக்கு பற்றற்ற பொன்னான உள்ளத்தை எனக்கு அளித்துள்ளாள்"[7] என்று பதில் கூறினார்.

சிவவாக்கியரின் பதிலில் நிறைவு கண்ட அந்த குரு, உடனுக்குடன் அவரைத் தந்து சீடராக ஏற்றுக் கொண்டு, தனக்குத் தெரிந்தவற்றை எல்லாம் அவருக்கு சொல்லித் தந்தார். இறுதியில் சிவவாக்கியருக்கு குருவைப் பிரியும் நேரம் வந்தது. அந்த குரு, யாருமே சமைக்க முடியாத கசப்பு மிக்க ஒரு பேய்ச்சுரைக்காயையும், கங்கை நதி மணலையும் அள்ளி சிவவாக்கியர் வசம் தந்து, இதனைக் கொண்டு உணவு சமைக்க முடியும் என்று நம்பி, உணவும் சமைத்து எவள் ஒருத்தி உனக்கு அன்னமிடுகிறாளோ அவளே உன் மனைவி

என்று கூறினார். மேலும், அந்த குரு, சிவவாக்கியரிடம் "உனது விதிப் படி, குடும்ப வாழ்க்கையை நீ அனுபவித்த பிறகு தான் சித்த நிலையை அடைய முடியும்"[8] என்றும் கூறி அனுப்பினார்.

சிவவாக்கியரின் அழகில் மயங்கிய பல பெண்கள் அவரைத் திருமணம் செய்ய ஆசைப்பட்டனர். ஆனால் குருவின் கட்டளையைச் சொன்னவுடன் சிலர் மறுத்தனர். சிலர் அந்தப் பேய்ச்சுரைக்காயை பார்த்தவுடனே சிவவாக்கியரை பைத்தியம் என்று கூறி சென்றனர். இப்படி இருக்கும் பொழுது தான், சிவவாக்கியர், குறமகள் ஒருத்தியைக் கண்டார், அவளிடம் குரு தந்த பேய்ச்சுரைக்காயையும் மணலையும் கொடுத்து சமைக்க இயலுமா என்று கேட்க அதன், தாத்பரியத்தை உணர்ந்து கொண்ட குறமகள், அதனை அறுசுவை பட சமைத்தும் (சிவவாக்கியருக்குக்) கொடுத்தார். அவரும், அவளை அன்புடன் மனது கொண்டு இல்லற வாழ்வில் ஈடுபட்டார். அவர், இல்லற வாழ்க்கையில் ஈடுபட்ட பொழுதிலும், தனது யோக மார்கத்தை மறக்கவில்லை. வந்தவர்களுக்கு எல்லாம் விருந்தோம்பினார். அவர்களில் சித்த புருஷர்களும் இருந்தனர்.

அந்த வரிசையில் கொங்கணர் அவர் வீட்டுக்கு அடிக்கடி வந்து, அங்குக் கிடைத்த இரும்புத் துண்டுகளைத் தங்கமாக்கி, அவருக்கும், அவர் மனைவிக்கும் பற்று உள்ளதா என்று சோதிக்க முற்பட்டார். ஆனால், சிவவாக்கியரோ அசரவில்லை, அந்த தங்கத் துண்டுகளை அவர் தொடக் கூட இல்லை. அவர் தங்கத்தை ஆட்கொல்லி பூதம் என்றே குறிப்பிட்டார். இதனையும் நிரூபிக்கும் படி ஒரு கதையும் அவர் காலத்தில் நடந்தது. பொதுவாக சிம்ம இராசியில் பிறந்தவர்கள் தங்கள் இருப்பிடத்தை மாற்றிக் கொண்டே இருப்பார்கள், என்று ஜோதிடத்தில் ஒரு கூற்று உண்டு. சிவவாக்கியரும், சிம்ம இராசியில் பிறந்தவர் தான் அதனால் தானோ, என்னமோ இந்தக் கூற்று அவருக்கும் பொருந்தியது. அந்த வகையில், ஒரு முறை தான் போன இடத்தில் , ஏற்றப்படி தனது பிழைப்பையும் மாற்றிக்கொள்வார். பெரிய ஆசைகள் இல்லாதவர். சித்தராகவே இருந்தாலும், தன் தேவையை சாதாரண மக்கள் போலத் தான் தீர்த்துக் கொண்டார்.

ஒரு நாள், காட்டில் தனியாக மூங்கில் வெட்டிக் கொண்டிருந்த சிவவாக்கியர், வெட்டப்பட்ட மூங்கில் கணுவில் இருந்து, தங்கத்துகள்கள்

கொட்டுவதைக் கண்டு அதிர்ந்தார். “சிவனாரே!” என்ன இது விளையாட்டு? முக்தி கேட்டவனின் புத்தியை திசைத் திருப்பும் உத்தியா இது? இந்தப் பொன்னுக்கும் பொருளுக்கும் என் சித்தம் என்றும் மயங்காதைய்யா!”[9] என்று சொல்லியவாரே அங்கிருந்து தூரமாக ஓடிப்போய் மூச்சு வாங்க நின்றார். மறுபுறம், அங்கு மூங்கில் வெட்டிக் கொண்டிருந்த இளைஞர் நால்வர் “எதைப் பார்த்து இப்படிப் பதட்டத்துடன் ஓடி வருகின்றீர்கள் ஐய்யா?”[10] என்று கேட்டனர். அதற்கு சிவவாக்கியர் “அய்யோ! வெட்டிய மூங்கில் மரத்தில் ஆட்கொல்லி பூதம் தோன்றியது, இதோ பாருங்கள்!”[11] என்று அவர்களிடம் அச்சத்துடன் (சிவவாக்கியர்) தங்கத் துகல்களை காண்பித்தார். அதைக் கண்ட இளைஞர்கள், அவரை “தங்கத்தின் மதிப்புத் தெரியாத மூடன்”[12] என்று எண்ணியவாறு ஆமாம்! இந்த ஆட்கொல்லி பூதம் உம்மைக் கொன்றுவிடும் ஐயா. இங்கிருந்து ஓடிவிடுங்கள் எனச் சொல்லியதும் சிவவாக்கியர் அங்கிருந்து ஓடினார்.

அந்த நான்கு இளைஞர்களும் சிவவாக்கியர் குறிப்பிட்ட மூங்கில் மரத்தடிக்குச் செல்ல, அங்கு தங்கத்துகள், உமித்தூள் போல கொட்டிக் கொண்டு இருந்ததது. மூட்டையாகக் கட்ட கட்ட – தங்கத்துகள் கொட்டிக் கொண்டே இருந்தது. பொழுது இருட்டி விட நால்வருக்கும் தாங்க முடியாத பசி. இரண்டு பேர் தங்க மூட்டைகளுக்குக் காவல் இருப்பது என்றும், இரண்டு பேர் பக்கத்து ஊருக்குச் சென்று பசிக்கு ஏதாவது உணவு வாங்கி வருவது என்றும் முடிவு செய்யப்பட்டது. உணவு வாங்கச் சென்ற இருவருக்கும், தங்கத்தைத் தாங்கள் மட்டுமே பங்கிட்டு பிரித்துக் கொள்ள வேண்டும் என்ற பேராசை எழுந்தது. வாங்கிச் செல்லும் உணவில் விஷம், கலந்து கொடுத்து காவல் காத்த அந்த இருவரையும் கொள்ளத் தீர்மானித்தனர். பின்னர் அவர்கள் திட்டப்படி அந்த உணவில் விஷம் கலந்து இருவரும் மீண்டும் திரும்பினார்கள். தங்கத்தைக் காவல் காத்த மற்ற இருவரும்,“உணவு இருக்கிறது. தண்ணீர் வேண்டுமே. அந்தக் கிணற்றில் உள்ளதா என எட்டிப் பாருங்கள்”[13] எனச் சொல்ல, உணவு வாங்கிக் கொண்டு வந்த, அந்த இருவரும் கிணற்றை எட்டிப் பார்க்க, பின்புறமாகச் சென்று அவர்களை கிணற்றுக்குள் தள்ளிக் கொன்றனர் (காவல் காத்த அந்த இருவரும்) அதன் பிறகு, தங்கத்தைக் காவல் காத்த இருவரும், சாவகாசமாக விஷம் கலந்த அந்த உணவை உண்டதால் அவர்களும் கண நேரத்தில் மாண்டு போயினர்.

ஆக மொத்தத்தில், சிவவாக்கியர் சொன்னபடியே, அந்தத் தங்கத் துகள்கள், அந்த நாலு இளைஞர்களையும், ஆட்கொல்லி பூதமாக மாறி ஒரேடியாக கொன்றது என்று தான் சொல்ல வேண்டும்.

மறுநாள் காலை மூங்கில் வெட்ட அங்கு மீண்டும் வந்த சிவவாக்கியார், தாம் எண்ணியபடியே ஆட்கொல்லி பூதம், தன்மேல் ஆசை வைத்த நால்வரையும் இரவுக்குள் கொன்று விட்டதே என் எண்ணியபடி "ஆசையை அருத்தாலே ஞானம் கிடைக்கும்"[14] என்பதை இந்த அற்பர்கள் அறிவது எக்காலம் என்று மேலும் புலம்பியபடியே அங்கிருந்து புறப்பட்டார்.

இவ்வாறு சிவவாக்கியரின் வாழ்க்கையின் ஒவ்வொரு கணமும், அனுபவம் நிறைந்ததாகவே இருந்தது. பின்னாளில் சிவவாக்கியர் தனது தவ வலிமையை உயர்த்திக் கொண்டார். சில, மூலிகைகள் மூலமாக "அன்னமய கோசமாக" இருந்த தனது உடலை "பிராணமய கோசமாக" மாற்றி, அதன் பின் "மனோமயத்துக்கும்" அதன் பின் "ஆனந்தமய கோசத்துக்கும்" மாற்றி ஆன்மீகத்தின் உச்ச நிலையை அடைந்தார். அதாவது, சில மூலிகையைக் கொண்டு தனது சிறுநீரையே ரசவாதம் புரியத் தகுந்த நீராக மாற்றிக் கொள்ளக்கூடிய அளவிற்கு சென்று விட்டார். ஒரு கல் மீது அவர் சிறுநீரு பெய்தால், அந்த நீரின் கிரியையால் அந்தக் கல் அப்படியே தங்கமாகவே மாறியது. இவ்வாறு சிறப்புடன் வாழ்ந்து இறுதியில் அவர் காலத்துடன் கரைந்தார்.

சிவவாக்கியர்தம் பாடல்களுக்கு உரை நல்கிய மா. வடிவேலு ,முதலியார் என்பவர் தந்துள்ள சிவவாக்கியர் வாழ்க்கைக் குறிப்பு பின்வருமாறு அமைகிறது.

"திருமழிசையிலே, பிருகு மகரிஷி, பார்வதி பரமேசுவரனை நினைத்து தவம் செய்துகொண்டிருந்தார். இவரது தவத்தைக் கெடுப்பதற்காக, தேவேந்திரன் ஓர் அழகிய தேவகன்னியை, அவர்முன் அனுப்பி வைத்தான். அவள் பல விதத்திலும் முயன்று அவர் தவத்தைக் கலைத்தாள். அவரைத் தன்வயப்படுத்தி, அவருடன் கலந்து, ஓர் ஆன்மகவைப் பெற்றாள். அம்மகவை,அப்பகுதியிலேயே விடுத்து, பின்னர் தேவருலகம் திரும்பினாள். பிருகு மகரிஷியும் அக்குழந்தையை விடுத்து தவத்தில் மூழ்கினார். இவ்வாறு

பெற்றோரால் தனித்துவிடப்பட்ட அக்குழந்தை, பசித்துதழுதது அப்போது இறைவன் உமையோடு தோன்றி அருள்பாலித்தார்.

அதுபோது “திருவாளன்” என்னும் வேடன் அவ்வழியே வந்து கொண்டிருந்தான். மகப்பேறு வாய்க்காத அவ்வேடன், அக்குழந்தையைக் கண்டான், மகிழ்வு கொண்டான். அக்குழந்தையை எடுத்துச் சென்று தம் மனைவியிடம் தந்தான். தாய்மை அன்புமீதுர, அக்குலந்தையைத் தம் மார்போடு அழுத்திய வேடனின் மனைவிமாட்டுத் தாய்ப்பால் சுரந்தது. இறையருள் என்று எண்ணி, அக்குழந்தைக்குப் பாலருத்தினால். ஆனால் இறைவனின் பேரனாந்தப் பாலை பருகிய அக்குழந்தை, வேடன் மனைவி ஊட்டிய பாலை அருந்தாமலேயே வளர்ந்தது. பின்னர் அவ்வேடன் சோதிடர்களை அழைத்தான். அவர்களைக் கொண்டு திருமிழிசையில் கண்டெடுத்த குழந்தை என்பதால் அக்குழந்தைக்கு “திருமிழிசையான்” எனப்பெயர் சூட்டினான். அவ்வேடன் வழி வைணவத் தொடர்புடையாளனாக இருந்த திருமிழிசையான், வைணவனாக வளர்ந்தான்: திருமாலைப் பணிந்தான். பின்னர், சைவசமயத்தில் புகுந்து சிவவாக்கியர் எனும் பெயர் பெற்றார். சிவதத்துவங்களைப் பாடி, சிவப்பேறு எய்தினார்.”

சித்தர் பாடலும் அவர்தம் தத்துவமும் ஒரு கண்ணோட்டம் என்னும் தலைப்பில் கு. அருணாசலக் கவுண்டர் கூறுவதாவது :

சிவவாக்கியர் என்னும் பெயருடைய இச்சித்தர், பலசமயங்களில் புகுந்தும், உணர்ந்தும், ஆய்ந்தும் பெற்ற அனுபவத்தில், சைவமே நிலையெனச் சார்ந்தார்: பல பாடல்களை இயற்றினார். சிவனருளாலே பல நாடுகளுக்குச் சென்று பிற மதங்களை வென்று, திருமயிலை வழியாக வந்தார். அப்போது அவரைப் பேயாழ்வார் கண்டார், இவரை வைனவராக்க மனங்கொண்டார். நந்தவனங்களில் பூச்செடிகளைப் பிடுங்கித் தலைகீழாக நட்டார். ஓட்டை உடைசலான குடத்திலே, நீர் எடுத்து, அச்செடிகளுக்கு வார்த்தார். இதனைக் கண்ணுற்ற சிவவாக்கியர், தம்மொடுவந்த சீடர்களுக்கு, அந்த வைணவரின் பேய்த்தனமான செயலைச் சுட்டிக்காட்டிச் சிரித்தார், பேயாழ்வரோ, புன்முறுவல் பூத்தபடி, சிவவாக்கியரைப் பார்த்து “சமயங்கல்தோறும் நுழைந்து, எதிலும் நிலைகொள்ளாமல், விருதுகட்டிக் குதர்க்கம் செய்வதிலேயே பொழுதுபோக்கி வருகிறாய். இப்படி வாணாளை

வீணாளாய்க் கழிக்கும் உமது பேய்த்தனத்தை உணர்த்தவே இப்படிச் செய்தேன் என்றார். சிவவாக்கியரும் இது கேட்டுச் சிரித்தார். இதுவரை செய்து வந்த வாத, பிரதிவாதங்களை எண்ணிப்பார்த்தார். "அட்டமாசித்திகள் கைவரப்பெற்றுப் பிறரை மயக்கி, தம்மையும் மயக்கி, திரிவதைக் கட்டிலும் சிறந்த குறிக்கோள் வேறு ஏதும் இல்லையா? என்று தமக்குள் சிந்தித்தார். பேயாழ்வாரிடம் கலந்து உரையாடி, தெளிவுபெற்றார். "'பக்திசார்" எனும் பெயர் பெற்று, வைணவரானார். வைணவவுலகம் இவரை "திருமிழிசையாழ்வார்" என்று அழைத்தது."[15]

அருணாச்சலக் கவுண்டர், சிவவாக்கியராக இருந்து பேயாழ்வார் மூலமாக திருமிழிசையாழ்வார் ஆனார் என்று கூறும். இக்கதைக்குச் சான்றெனக் கொண்ட நூல், "குருபரம்பராப் பிரபாவம்" என்பாதாகும். 1919 ல் வெளிவந்த இந்நூலின் பதிப்பில், மேற்சுட்டிய கதை இல்லை. 1943 ஆம் ஆண்டு வெளிவந்த பதிப்பிலும் இவ்வாறு இல்லை மேலும் சிவவாக்கியரும், திருமிழிசையாழ்வாரும் ஒருவரே என்பதற்கான எந்தக் குறிப்பும் இந்நூலில் கிடையாது. வைணவ சமயத்தாருக்குள்ளேயே, இக்கதையைப் பொறுத்தமட்டில், கருத்துவேறுபாடுகள் இருந்தன. கதை அமைப்பிலும் பல மாறுபாடுகள் உள்ளன. ஆகவே, திருமிழிசையாழ்வாரும், சிவவாக்கியரும் ஒருவரே என்று வைணவ உலகம் கருதவில்லை என்பது தெளிவாகிறது.

முருகதாச சுவாமிகள் எழுதிய, புலவர்புராணத்தில், சிவவாக்கியரின் காலம் கி.பி.1877 என்று காணப்படுகிறது. இப்புராணத்தில், குருபரம்பராப் பிரபாவக் கதையை அடிப்படையாகக் கொண்டு, சிவவாக்கியர் கதை சொல்லப்படுவதாகச் சுட்டப்படுகிறது. ஆனாலும் அக்கதையை முற்றிலுமாக ஏற்றுக்கொள்ளாமல், தமக்கு வேண்டியவாறு மாற்றியமைத்துக்கொல்கிறார். அம்மாற்றங்கள் பின்வருமாறு.

1.குருபரம்பரா பிராவத்தில் கணிகண்ணன், திருமிழிசையாழ்வாரின் அருளாற் பிறந்த சீடனாகக் காட்டப்படுகிறான். ஆனால் புலவர் புராணமோ, அவனை அரசன் என்று காட்டுகிறது.

2.கடைக்குலஞானி ஒருவர், சிவவாக்கியருக்குச் சில பொருள் கொடுத்து ஞானம்பெறச் செய்தார் என்பது குருபரம்பரா பிராவத்தில் இல்லை.

3.சிவவாக்கியரும் திருமிழிசையால்வாரும் ஒருவரே என்று புலவர் புராணம் சொல்லி இருந்தாலும் குருபரம்பரா பிராவம் பிந்திய பதிப்புகளில் இச்செய்தி இல்லை. எனவே இக்கதையை மெய்யான வரலாறு என்று ஒருதலையாகத் துணிய முடியாது.

## முரண்பாடுகள்

கு.அருணாசலக்கவுண்டர் பார்வையில், சிவவாக்கியர், சைவராக இருந்து வைணவராக மாறினார். வடிவேல் முதலியார் எழுத்தாக்கத்தில், சிவவாக்கியர் வைணவராக இருந்து சைவராக மாறியிருக்கிறார். தத்தம் சமயக் கருத்தாக்கங்களை முன்னிறுத்திச் சொல்லப்படும் இவ்வரலாற்றின் மெய்த்தன்மையை அறிய, சித்தர்கள் பாடல்களைக் காணலாம்.

போகர், தமது சத்தகாண்டத்தில், “சிவவாக்கியர்” திருமூலர் மரபினர் என்று குறிக்கிறார்.

சித்தர் மரபில், தனக்கு முன் வாழ்ந்தவர்களில் சிறந்தவர்களை, அருள் உபதேச அடிப்படையில், தனது முன்னோர் எனக்குறிப்பது வழக்கம். இம்மரபின் அடிப்படையில், திருமூலர் தன்னை “நந்தி மரபினர்” என்று காட்டுவார். இதன்படி, சிவ்வாக்கியரையும் “திருமூலர் மரபினர்” என்று குறிபிடுவது கொள்ளத்தக்கதாகும். மேலும், திருமூலரின் கருத்துகள், யாப்பமைதி மற்றும் சொல்லும் முறைகள், இவரது பாக்களிலும் ஒத்திருப்பதைக் கருத்தில் கொள்ளலாம்.

புலவர்புராண ஆசிரியர் குறிப்பிடும், “ஆன்மிக உயர்வுக்கு, மேல்கீழ் வேறுபாடுகள், வருணபேதங்கள் ஏற்புடையன அல்ல” என்பதற்கும், குறமகளோடு இச்சித்தர் இணைந்து வாழ்ந்ததற்கும் உரிய சுவடுகளை, சிவவாக்கியர் பாடல்களின் வழியே காணமுடிகிறது.

**“பறைச்சி போகம் வேறதோ, பனத்திபோகம் வேறதோ”**

என்ற தொடரும்,

**“மூங்கில் வெட்டி நாருரித்து”**

என்ற தொடரும் இவவற்றிற்குத் தக்க அச்சான்றுகளாக அமைகின்றன.

## சிவவாக்கியர் காலம் – சில அறிஞர்களின் கருத்துக்களும் முடிவும்

சித்தர்கள் காலம் குறித்துத் திட்டவட்டமாக முடிவு எடுக்க வழியில்லாதபோதும், அறிஞர்கள், ஊக அடிப்படையில் பல்வேறு கருத்துக்களைத் தெரிவித்துள்ளனர்.

"திருமூலர் காலம் கி.பி. 5 ஆம் நூற்றாண்டாக இருப்பதாலும், சித்தர்கள் எனப்படுவோர் இன்றளவும் வாழ்வதாலும், சித்தர் காலம் கி.பி. 5 ஆம் நூற்றாண்டு தொடங்கி, இதுவரை தொடர்வதாக"[16] முனைவர். இரா. மாணிக்கவாசகம் குறிப்பிடுகிறார். மேலும் இவர், மிக நீண்ட காலப்பகுதியை சித்தர் காலமாகச் சொல்கிறார்.

கி.பி. 7 ஆம் நூற்றாண்டில் இருந்து. 11 ஆம் நூற்றாண்டுக்குள், ஒரு குறிப்பிட்ட காலப்பகுதியில், இந்தியாவில் சமய மறுமலர்ச்சி ஏற்பட்டதாகவும், அம்மறுமலர்ச்சியின் விளைவாக, சைவ, வச்சிராயான, தாந்திரிகம், மந்திரவித்தை, ரசவாதம், ஹடயோகம் ஆகியவை சிறப்புற்றதாகவும் கூறும் அறிஞர் கமில்சுவலபில், இறந்த மறுமலர்ச்சி காலத்திலேயே (கி.பி.7–11) தமிழ்நாட்டில், சித்தர் மரபு தோன்றியிருக்கலாம் என்பர்.[17]

சங்ககாலம் முதல் கி.பி. 16 ஆம் நூற்றாண்டு வரையிலும் கூட, தமிழ் இலக்கியங்கட்குத் துல்லியமான காலவரையறை வகுக்கப்படவில்லை. தமிழ்ப்புலவர்கள் பலரின் காலம் உறுதி செய்யபடாத, வேறுபட்ட கருத்துக்களாகவே உள்ளன. தம்மை வெளிப்படுத்தி, விளம்பரம் செய்து கொள்ளாமலும், மேக்குடிமக்களோடு நெருங்கித் தொடர்பு கொள்ளாமலும் வாழ்ந்த சித்தர்களின் காலம், வரலாற்றுக் குறிப்புகளில் இடம்பெறவில்லை. இவ்வகையில் சித்தர் காலமும் கருதுகோள் நிலையிலேயே உள்ளது.

சிவவாக்கியர் காலத்தை ந.சி. கந்தையாபிள்ளை, தம் "தமிழ்ப்புலவர் அகராதி" நூலில் "எட்டாம் நூற்றாண்டு?" என வினாக்குறியிட்டு விட்டு விடுகிறார். இவ்வாறே தேவநேயப்பாவணரும், தமது "தமிழ் இலக்கிய வரலாறு" நூலில் 7/8 ஆம் நூற்றாண்டு? என்று வினாக்குறியிட்டே எழுதுகிறார். இவ்விருவருமே காரணங்களையோ, சான்றுகளையோ காட்டாமல், சிவவாக்கியர் காலத்தை 8 ஆம் நூற்றாண்டெனக் கருதுகின்றனர்.

‘ “பாவலர் சரித்திர தீபகம்” என்னும் நூல், பட்டினத்தடிகள், தத்துவராயர், சிவஞானவள்ளல், சீகாழி மறைஞான சம்பந்தர், தாயுமாணவர் ஆகியோர் சுட்டும் சிவவாக்கியரும், சிவவாக்கியம் எழுதிய சிவவாக்கியரும் ஒருவரேயாகும், ஒரே நூலாகவும் இருப்பின், சிவவாக்கியர் காலம் பதினோராம் திருமுறையில் இடம்பெற்றுள்ள பட்டினத்தடிகளுக்கு முற்பட்டதாக இருக்க வேண்டும்[18] என்கிறது.

இங்கு பட்டினத்தடிகளின் காலத்தை அளவுகோலாகக் கொண்டு, சிவவாக்கியர் காலத்தைப் 14 ஆம் நூற்றாண்டு என்று இந்நூல் குறிப்பிடுகிறது.

“தமிழ்நாட்டில், நாயக்கர் ஆட்சி நிலைபெற்ற 14 ஆம் நூற்றாண்டுக் காலத்தில்தான், சிற்றிலக்கியங்களும் தலபுராணங்களும் தோன்றியதாகவும், அந்த 14 ஆம் நூற்றாண்டில் தான் சித்தர் பாடல்களும் தோன்றியிருக்கவேண்டும்” என்று கூறுவர் நீதிபதி வி. பாலராமய்யா.[19]

“சிவவாக்கியர், பட்டினத்தார், பத்திரகிரியார், இடைக்கார், அழுகணிச்சித்தர், பாம்பாட்டிச் சித்தர், அகப்பேய்ச் சித்தர் ஆகியோரைச் சிறப்புடைய சித்தர்கள் எனச் சுட்டி, அவர்கள் கி.பி. 14 – 15 ஆம் நூற்றாண்டுக் காலத்தில் வாழ்ந்தனர்“ என முடிவு கட்டுகிறார்.

“சிந்துப்பாக்கள் இயற்றிய சித்தர்கள் காலம், சிந்துப்பாக்கள் தோன்றிய 15 ஆம் நூற்றாண்டு” எனக் கருதுவார் பேராசிரியர் எ.கி.பரந்தாமனார்.[20]

அறிஞர் ஏ.வி. சுப்பிரமணிய அய்யர்,“சித்தர்களுள் திருமூலர், சிவவாக்கியர், பட்டினத்தார், பத்திரகிரியார் ஆகியோரை முதற்சித்தர்களாகக் கொண்டு, அவர்கள் கி.பி. 10 ஆம் நூற்றாண்டுக்குள் வாழ்ந்தவர்கள” என்று உரைப்பர்.[21] இவர், தமது ஆங்கில நூலில், சிவவாக்கியர் காலம், கி.பி. 10 ஆம் நூற்றாண்டு எனக் கூறிப் பின்வரும் பட்டினத்தார் பாடலைக் காட்டுகிறார்.

**“அத்தகு செல்வத் தவமதித் தருளிய**

**சித்தமார் சிவவாக்கிய தேவரும்”[22]**

என்பது அப்பாடல், சிவவாக்கியர் பாடளிகளில் அவர் செல்வத்தை அவமதித்ததற்கான நேரடி குறிப்புகள் இல்லை,அதனால் இப்பாடலில் கூறப்பட்ட கருத்து ஏற்புடையதன்று.

வரலாற்றுப் பேராசிரியர் கே.கே.பிள்ளை,"சித்தர்களின் காலம் கி.பி. 13 ஆம் நூற்றாண்டு என்கிறார்."[23]

"சித்தர்களில் பலர், கி.பி. 14 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தனர்" என்று மு.வ. அறுதியிட்டுக் கூறுகிறார்.[24] ஆனால், இவரும் சிவவாக்கியரின் காலத்தை அருதியிடவில்லை.

"இலக்கிய வரலாறு" எழுதிய மு.அருணாசலம்,"சிவவாக்கியர் கி.பி. 14 ஆம் நூற்றாண்டினர்" என முடிவு செய்து பின்வரும் காரணங்களைச் சுட்டுகிறார்.

1. சிவவாக்கியர், விநாயகர் அகவல் பாடிய ஔவையாருக்கும் பிற்பட்டு, 14 ஆம் நூற்றாண்டின் இறுதி, 15ஆம் நூற்றாண்டின் தொடக்கம் ஆகிய காலத்தில் வாழ்ந்தவர்.
2. தத்துவராயர் காலமாகிய 15 ஆம் நூற்றாண்டிற்கு முன்னர் சிவவாக்கியம் பலரும் அறிந்த நூலாக இருந்தது.
3. 15 ஆம் நூற்றாண்டின் இறுதிப்பகுதியில் வாழ்ந்த சிவஞான வள்ளல் சிவவாக்கியரைக் குறிப்பிடுவதால், அவருக்கு முந்தியவர் சிவவாக்கியர் என்பது உறுதியாகிறது.
4. 15 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த மறைஞான சம்பந்தர், சிவஞானசித்தியார் சுபகத்தின் உரையில். சிவவாக்கியம் 90 ஆவது பாடலை எடுத்துக்காட்டுவதால். அவருக்கு முற்பட்டவர் என்பது தெளிவு.
5. சிவவாக்கியர் மவுனஅஞ்செழுத்தைப் பற்றிக் குறிக்கிறார். இது "கொடிக்கவி" கூறும் பேசாவெழுத்தாகும் என்பர். அதனால், கொடிக்கவி தோன்றிய காலம் 14 ஆம் நூற்றாண்டு எனில், அக்காலத்தை ஒட்டியோ, பின்போ சிவவாக்கியம் தோன்றியிருத்தல் கூடும்.
6. சிவஞானிகளுக்கு அன்னதானம் செய்வது பற்றிச் சிவவாக்கியர் கூறுவார். இக்கருத்தும் பிறகாலத்தேயாகும்.

7. சிவவாக்கியர், ஞானபாதங்கள் நான்கையும் குறிக்கிறார். மற்றும் ஞானியர் எய்தும் சாலோகம், சாரூபம், சாமீபம், சாயுச்சியம் ஆகிய நிலைகளையும் குறிக்கிறார்.

8. யோகநெறியில் வற்புறுத்தப்படும் வாசியைப் பற்றி சிவவாக்கியர் பல இடங்களில் கூறுகிறார். இவையெல்லாம் கி.பி. 10 ஆம் நூற்றாண்டில் மிகுதியும் வற்புறுத்திக் கூறப்படாத செய்திகளாகும்.

9. சிவவாக்கியர் பாட்டில் "குலமார்" என்ற சொல் இடம்பெறுகிறது. "கோயிலும் குளங்களும் கும்பிடும் குலமாரே" என்ற பாடலில் இடம்பெறும் இச்சொல்லுக்கு,"அடிமை" என்று பொருள். இது முகமதியர் ஆட்சிக்காலத்தில் வந்தேறிய சொல். முகமதியர் தென்னகத்திற்கு வந்தது, கி.பி. 14 ஆம் நூற்றாண்டாகும்.[25]

மேற்சுட்டிய கருத்துக்களை, உள்வாங்கிக் கொண்டு மேலாய்வு செய்யும்போது, பின்வரும் செய்திகளும் அறியக் கிடைக்கின்றன.

1. சைவசமயக் குரவர் நால்வரின் காலத்திற்குப் பின், திருத்தலங்களைக் காண்பதும், தீர்த்தங்களில் நீராடுவதும் வற்புறுத்தப்பட்டன, நாயன்மார்களும், ஆழ்வார்களும் புண்ணியத் தலங்களைப் பற்றிப் பாடல்கள் இயற்றியுள்ளனர். இந்த அடிப்படையில், தலயாத்திரை, தீர்த்த யாத்திரைகள் மேற்கொள்வது இன்றியமையாத ஒழுக்கங்களாகச் சமயச்சாரியர்களால் வலியுறுத்தப்பட்டன. ஆனால், சிவவாக்கியர், இவ்விரண்டையும் கண்டிக்கிறார்.

சாத்திர நூல்கள், கி.பி. 12 முதல் 14 ஆம் நூற்றாண்டுகளுக்குள் தோன்றின. இவற்றில் கண்ட செய்திகளைச் சிவவாக்கியர் மறுப்பதால், இவரது காலம் கி.பி. 14 ஆம் நூற்றாண்டை ஒட்டி இருக்க வேண்டும்.

2. திருமுறை பாடியோர், இறைவனைக் குருவாகக் குறிப்பிட்டுள்ளனர். குருவின் மூலமே உபதேசம் பெறவேண்டும் என்பது, மெய்கண்ட சாத்திர நூல்களில் சொல்லப்பட்ட மரபாகும். இச்சொற்களை சிவவாக்கியர்,

**"குருவிருந்து சொன்னவார்த்தை குறித்துநோக்க வல்லீரேல்"**[26]

**"குருக்கொடுத்த மந்திரம் கொண்டுநீந்த வல்லீரேல்"**[27]

**"கூடிநின் றுலாவுமே குருவிருந்த கோலமே"**[28]

தம் பாடல்களில் எடுத்தாண்டுள்ளார்.

3. **ஒன்றல்லோ,[29] சாவல்[30], முக்கிலே[31], கூதரை,[32] ஏதடா[33], வாசி[34], பிரக்ஞை[35]** என்ற வழக்குச்சொற்கள் இவர் பாடல்களில் இடம்பெறுகின்றன. இவை மிகவும் பிற்கால வழக்கில் பயின்று வருவனவாகும்.

ஆகவே, மேற்சுட்டிய அகச்சான்றுகளை அடிப்படையாகக் கொண்டு பார்க்கிறபோது, சிவவாக்கியரின் காலம் கி.பி. 10 ஆம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டது என்பது உறுதியாகிறது.

மேலும் மு.அருணாசலம் குறிப்பிட்டுள்ள காரணங்களையும் ஒப்பிட்டுப் பார்க்கும்போது சிவவாக்கியர் காலம் கி.பி. 14 ஆம் நூற்றாண்டு என்பது நிறுவப்படுகிறது.[36]

## சிவவாக்கியர் வாழ்ந்த மலையும் சமாதித்தலமும்

சித்தர் சிவவாக்கியர் வாழ்ந்த இடம் குறித்தும், அவருடைய சமாதி தலம் குறித்தும் உறுதியான பதிவுகள் இல்லை. ஆயினும் ஆய்வாளர் மேற்கொண்ட களஆய்வின்மூலம் கீழ்க்காணும் உண்மைகள் கண்டறியப் பெற்றுள்ளன.

கொங்கு மண்டலத்தைச் சார்ந்த ஈரோடு மாவட்டத்தில் உள்ள பகுதி சிவன்மலையாகும், இது காங்கேயத்திலிருந்து திருப்பூர் செல்லும் வழியில், ஐந்து கி.மீ, தொலைவில் உள்ளது. இங்குள்ள மலைமேல் சிவவாக்கியர் பலகாலம் வாழ்ந்து தவம்புரிந்ததால் இம்மலை “சிவவாக்கியர் மலை” என்று பெயர் பெற்றுது “சிவவாக்கியர் மலை” என்பது நாளடைவில் மருவி, “சிவமலை” என்று ஆனது பின்னர், “சிவன்மலை” என்று தற்போது அழைக்கப்பட்டு வருகிறது.

இவ்வாறு “சிவன்மலை” என்று அழைக்கப்பட்டாலும், இங்கு சிவன் கோயில் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது. இம்மலையில் சிவவாக்கியர் வாழ்ந்த குகையும், அவர்நினைவாக அமைக்கப்பட்ட சிலையும், இருள்சூழ்ந்த பகுதிக்குள் இன்றும் இருக்கின்றன. மேலும், இலக்குமண பாரதியாரால் இயற்றப்பட்ட, “சிவமலைக் குறவஞ்சி” என்னும் நூல் இத்தலத்தினைப் பற்றியதாகும். ஆகவே, இம்மலை சிவவாக்கியர் வாழ்ந்த தலம் என்று கருதுவது பொருத்தப்பாடுடையதாக அமைகிறது.[37]

சித்தர் சிவவாக்கியர் இறைவாகச் சீவசமாதி அடைந்த இடம், பெருங்களூர் என்னும் ஊராகும். இவ்வூர், புதுக்கோட்டையிலிருந்து தஞ்சாவூர் செல்லும் நெடுஞ்சாலையில் உள்ளது. இவ்வூருக்கு புறத்தே ஓர் காட்டுக் கோயில் இருக்கிறது. இதனுள் சிவவாக்கியர் சமாதி மண்டபம் அமைந்திருக்கிறது. அன்றிலிருந்து இன்றுவரை அப்பகுதி மக்கள் ஆண்டுதோறும் தை மாதம் மக நட்சத்திரத்தன்று சிவவாக்கியர் விழாவைச் சிறப்பாகக் கொண்டாடி வருகின்றனர்.[38]

## சிவவாக்கியரும் புறவழிபாடும்

“சிவவாக்கியரும் தம் வாழ்வின் முற்பகுதியைப் புறவழிபாட்டுக்களில் செலுத்திப் பயன் காணாமல் வாடி அகவழிபாடாம் ஞானமார்க்கத்துக்கு வந்து சித்தரானார் என்றே தோன்றுகிறது”[39]

**“பண்டு நான் பறித்தெறிந்த பன்மலர்கள் எத்தனை ?**
**பாழிலே செபித்துவிட்ட மந்திரங்கள் எத்தனை ?**
**மிண்டனாய்த்திரிந்தபோது இறைத்தநீர்கள் எத்தனை ?**
**மீளவும் சிவாலாயங்கள் சூழவந்தது எத்தனை ?”**

**(சிவ–26)**

“ஆலயங்களில் வடித்து வைக்கப்பட்ட உருவச் சிலைகளை இறைவன் என எண்ணினார். அவற்றுக்கு நீர் சொரிந்து மலர் தூவி மந்திரங்கள் செபித்தார். ஆலயங்களை மீண்டும், மீண்டும் வலம் வந்து வணங்கினார். எங்கும் நிறைந்த இறைவன் தன்னுள்ளும் இருக்கிறான் என்ற ஞானமின்றிப் பல்லாண்டுக்கால வாழ்வைப் புறவழிபாட்டில் கழித்து விட்டார். தம்முள்ளே இறைவனைக் கண்ட பிறகு கோயில்களையும் கோயிலில் குடிகொண்டுள்ள தெய்வங்களையும் கண்டு கைத் தொழுவதில்லை”[40]. இவ்வாறாகச் சிவவாக்கியரின் வாழ்க்கை அனுபவம் புற வழிபாட்டின் பயனின்மையைச் சுட்டுவதாக அமைகிறது.

## சிவவாக்கியரின் வாழ்வியல் நெறிகள்

உலகியலில் உழன்று, தேர்ந்து, தெளிந்து, துறந்து சித்தராயனரின் தத்துவங்கள் அனைத்தும் சிவவாக்கியர் பாடல்களில் இடம் பெற்றுள்ளன. எளிதில் நினைவில் நிற்கக்கூடிய சொற்களால் அமைந்த இவரது பாடல்கள் நாட்டுப் பாடல்களின் நயத்தினையும் பெற்றுள்ளமையால் இவற்றை "பாமர இலக்கியம்"[41] என்று கூறலாகும். இச்சித்தர் உணர்த்தியுள்ள கருத்துக்களில், சித்தநெறிக் கொள்கைகள் சிறப்பாக விளக்கப்பட்டுள்ளதுடன், சமரச சன்மார்க்க நெறியும், ஒருமைப்பாட்டின் உயர்வும் தெளிவாக அமைந்துள்ளன.

இவர், தம்முள்ளே சதாசிவம் கண்ட சித்தராதலின், சாத்திரங்களும் வேதங்களும் காட்டும் தெய்வ விளக்கங்களைப் புறக்கணிக்கின்றார். எங்குமாகி நிற்கும் சோதி தன்னுளே இருப்பதால் தாமே உலகம் எனும் தத்துவத்தில் நின்றவர். பூசனை, வாசனை, கோயில்கள், குளங்கள் இவற்றால் இறைமையை உள்ளவாறு உணரலாகாது என்பதுடன், சாதியையும், வேதாகம விதிகளையும் பொய்யென்று ஆக்கும் பொற்புடையவராகவும் விளங்குகின்றார்.

## சிவவாக்கியரின் தவவாக்கு

இளநீரை எடுத்துக்காட்டி, ஓட்டினுள் இனிய நீர் அடங்கி இருப்பது போல, மானுட உடம்பினுள்ளே இறைவன் இருக்கும் மாண்பினைச் சுட்டிக்காட்டுவதுடன், சும்மா இருக்கும் சுகமாகும் சமாதி நிலையின் வல்லமையால் எல்லாம் வல்ல சித்தராகும் ஏற்றத்தினையும் எடுத்துக் காட்டும் மேன்மையினையும், இவர் வெளிப்படுத்தும் இடங்கள் பலவாகும்.

ஆருயிர்கட்கெல்லாம் அன்பு செயல் வேண்டும் என்னும் அன்பு நெறி கூறும் இவர்.

**"பறைச்சியாவ தேதட பணத்தியாவ தேதடா**
**இறைச்சி தோல் என்பினும் இலக்கமிட்டி ருக்குமோ"**

**(சிவ– 39)**

என்று வினாவும் பாங்கில் தீண்டாமையினைத் திட்டமாக வெறுக்கும் மகாத்மவாகவும் திகழ்கின்றார். செம்பிலும், தராசிலும், செங்கல்

கருங்கற்களிலும் சிவனிருப்பானோ? என வினவும் தன்மையால் உருவ வழிபாட்டினை ஒப்புக்கொள்ளாத நிலையில் சமயங்கள் கொண்ட தனித்தனிக் கடவுளரை ஒன்றே என்றுணர்த்தும் உண்மைத் தன்மையினையும் உணர்த்துகின்றார்.

அரிவேறு அரன்வேறு என்று கூறி ஒன்றற்கொன்று எற்றத்தாழ்வென்று பேசி வழக்கிடும் சைவ, வைணவ சமய வெறியாளர்கட்கு, எல்லாம்வல்ல இறைமையின் உண்மை வடிவினை உணர்த்துமுகத்தான், நீரோடு கலந்த உப்பின் நிலையை, உவமையாக்கி,

**“ நாழியப்பு நாழியுப்பு நாழியான வாறுபோல்,**
**ஆழியோனும் ஈசனும் அமர்ந்து வாழ்ந்திருந்திடம்”**

**(சிவ– 54)**

என்னும் விளக்காத்தால் அரியும், சிவனும் ஒன்றென்றும் ஆழ்ந்த தத்துவத்தினை அளவிட்டுக் கூறித் தெளிய வைக்கிறார்.

**“எங்கள் தேவர் உங்கள்தேவர் என்றிரண்டு தேவரோ**
**இங்குமங்கு மாய்இரண்டு தேவரே இருப்பாரோ**
**அங்கும்இங்கும் ஆகிநின்ற ஆதிமூர்த்தி ஒன்றலோ**
**வங்கவாரம் சொன்னபேர்கள் வாய்புழுத்து மாள்வரே”**

**(சிவ– 131)**

எங்கள் தேவர், உங்கள் தேவர் என்று பல தெய்வங்கள் உள்ளனவோ? என்ற வினா தொடுத்து, அதற்குப் பதிலாக ஒருவனே தேவன் என்று உணர்வீர் அறிவிலிகளே! என்று விடையும் அளிக்கின்றார்.

இம் முறையிலேயே சத்தியும், சிவனும் ஒன்றி, ஒன்றாய் நின்றியங்கும் நிலையையும் “சத்தியாவது உன் உடல் தயங்குசீவன் உட்சிவம், சத்திசிவமும் ஆகிநின்று தன்மையாவதுண்மையே”[42] எனவும் விளக்குகின்றார்.

## சிவவாக்கியரின் யோக வாக்கு

சிவவாக்கியர் தம் பாடல்களில் உயிர் காக்கும் கலையாம் "பிராணாயாம" முறைகளை விரிவாக விளக்கியுள்ளார். அவர் நாக்கை மூக்கிற்கு நேராக உட்புறமாக மடித்து வீணாதண்டில் கும்பகம் செய்ய வேண்டும் இந்நிலையில் இரேசகத்திற்குரிய பதினாறு மாத்திரைகளும் வெளிவிடாதிருக்க வேண்டும் அதனால் யாக்கை மூப்பெய்தாது உலகம் பரப்பிரமமாகத் தோன்றும் எனக் கூறுகிறார்.[43]. அதனை

**"உருத்தரித்த நாடியில் ஒடுங்குகின்ற வாயுவைக்**
**கருத்தினால் இருத்தியே கபாலம் எற்றவல்லீரேல்**
**விருத்தரரும் பாலராவீர் மேனியும் சிவந்திடும்**
**அருள்தரித்த நாதர்பாதம் அம்மைபாதம் உண்மையே."**

**(சிவ– 4)**

மூலநாடியில் தோன்றி அதனில் ஒடுங்கும் பிராணனை நிறுத்திக் கபாலத்தில் முட்டச் செய்தால் முதியோரும் இளமை பெறுவர். நரை திரையற்றுச் சிவந்த மேனியுடன் திகழ்வர் என்பது இவ்யோகத்தின் பயனாகும்.[44]

ஒரு மாத்திரை நேரமாயினும் வெளிச் சென்று அழியும் வாயுவை அடக்க வேண்டும். அவ்வாறு செய்தால் நோய்களின்றிச் சத்தியும், சித்தியும், முத்தியும் எய்த இயலும்.[45] யோகத்தின் மூலம் ஞானநிலை அடைந்து முத்தி பெறுதலுடன் இறப்பைத் தடுத்துச் சிவனுடன் சேர்ந்து வாழ முடியும்.[46] பிராணனை முதலில் அடக்கிப் பின் ஐம்பூதங்களை அடக்க வேண்டும். அதனால் சிவனருளைப் பெற்று அவன் தன்மையில் ஆறில் ஒரு பங்கைப் பெற இயலும். மற்ற ஐந்துப் பகுதித் தன்மைகளைப் பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி, துரியம் ஆகியனவற்றால் பெற இயலும்.

இப்பயிற்சியால் தவம் கைகூடும், சிவனும் தன் காட்சியை நல்குவான், தடைப்படுத்தப்பட்டுள்ள குண்டலினியினியினை நீக்கிக் கபாலத்தில் ஊறச் செய்தால் முத்தி கிடைக்கும்.

## சிவவாக்கியரின் நாத்திக வாக்கு

எடுத்த மானுட உடல் இடைக்காலத்தே அழியாது காக்கும் உயிரோம்பும் பயிற்சியாகும் யோகத்தினைப் பற்றியும் சிவவாக்கியர் தெரிவிக்கும் இடங்கள் பலவாம். தானென்றநிலை அழிந்து, எல்லாம் அவன் செயல் என்னும் மேன்மையில் நின்ற இவர். அவனென்று சுட்டும் ஆண்டவனை உள்ளவாறு அறிந்து வழிபடாது, பொய்யினை மெய்யெனக் கண்டு பேதமை கொண்டு நிற்கும் மக்களை நோக்கி,

**“நட்டகல்லைத் தெய்வம் என்று நாலுபுட்பம் சாத்தியே**
**சுற்றிவந்து முணமுணத்துச் சொல்லும் மந்திரம் ஏதடா**
**நட்டகல்லும் பேசுமோ நாதன்உள் இருக்கையில்!**
**சுட்டசட்டி சட்டவும் கறிச்சுவை அறியுமோ?”**

**(சிவ– 494)**

நட்டு வைத்த (நடுகல்) ஒரு கல்லைத் தெய்வமாக நினைத்து நான்கு பூக்கள் சொரிந்து சுற்றி வந்து மொண மொண என்று ஒலிக்கும் மந்திரம் கூறுகீறிர். மந்திரம் என்பது எது? நட்ட கல்லும் பேசுமோ? அதனுள் நாதன் இல்லை. உனக்குள்தான் இருக்கிறான். ஆனால் நீ அதை உணரவில்லை.

கறியைச் சுடவைக்கும் சட்டியும், சத்துவமும் அந்தக் கறியின் சுவையை அறியாதது போல உனக்குள் உள்ள நாதனையும் நீயும் அறியவில்லை. மந்திரமும் தெய்வமும் உமக்குள் தான் உள்ளன என எடுத்துக்காட்டுடன் கேட்கும் இவரின் எழுச்சி உரை சித்த நாத்திகத்தின் திறனைக் காட்டுவதாகும்.

## சிவவாக்கியரின் சன்மார்க்க நெறி

அன்பின் வழிப்பட்ட அறநிலையாக விளங்கும் இவர், பசிப்பிணி போக்கும் அன்னதானச் சிறப்பினை,

**“அன்னம்இட்ட பேரெலாம் அனேககோடி வாழவே**
**சொன்னமிட்ட பேரெலாம் துரைத்தனங்கள் பண்ணாலம்**
**விண்ணம்இட்ட பேரெலாம் வீழ்வர்வெந் நரகிலே**
**கன்னம்இட்ட பேரெலாம் கடந்துநின்றல் திண்ணமே!”**

**(சிவ– 190)**

பிறருக்கு உணவு அளித்த புண்ணியம் செய்தோர் பலகோடி காலம் வாழ்வார்கள். தங்கத்தைத் (சொர்ணம் – சொன்னம்) தானமாக இட்டவர்கள் அரசாட்சி செய்வார்கள். இவை போல் உதவி செய்யாதவர்கள் (பின்னம்– வின்னம்) நரகத்தில் வீழ்வார்கள். கன்னம் வைத்துத் திருடியவர்களுக்கு கடவுள் அருள் காக்காமல் விலகிச் செல்லும். இது உறுதியாகும். என்று வாழ்த்துகின்றார்.[47] இதனால் இவரின் சன்மார்க்க நெறி புலனாவதுடன் தன்னுயிர் போல் மன்னுயிரையும் காக்க வேண்டும் என்ற மாண்பினையும் எடுத்துக் காட்டுகிறது

## சிவவாக்கியரின் சைவ நெறி

சைவம் என்று மக்கள் அமைத்துக்காட்டும் அமைப்பில் ஊன் உண்ணாமையே சிவமாகும் எனும் குறிப்பு நிற்பதனைக் கண்டு மயங்கிய சிவவாக்கியர் அதனை,

**"மீனிறைச்சி தின்றதில்லை அன்றுமின்றும் வேதியர்**
**மீனிருக்கும் நீரலோ மூழ்குவதுங் குடிப்பதும்**
**மானிறைச்சி தின்றதில்லை அன்றுமின்றும் வேதியர்**
**மானுரித்த தோலலோ மார்புநூல் அணிவதும்."**

**(சிவ– 157)**

அன்று முதல் இன்றுவரை வேதியர்கள் மீன் இறைச்சியைச் சாப்பிடுவது இல்லை. ஆனால் மீன் வாழும் நீரில் தான் குளிக்கிறார்கள், அதைத்தான் குடிக்கிறார்கள். அது போல் அன்று முதல் இன்றுவரை வேதியர்கள் மான் இறைச்சியை உண்பது இல்லை, ஆனால் மான்தோலில் தான் பூணூலில் ஒரு முடிச்சுக் கட்டுகிறார்கள்[48]. "பசுவின்பாலும், ஆசனத்தோலும், மார்புநூலில் அணிவதும் பிராணிகளின் இரத்தமும் இறைச்சியுமாக இருப்பதை எடுத்துக்காட்டி, ஆருயிர்க்கெல்லாம் மனிதன் அன்பு செயும் நெறியே சைவ நெறி எனும் உண்மையினை உணர்த்துகின்றார்"[49]

## சிவவாக்கியரின் வைதீக நெறி

சிவவாக்கியர் சிவபக்தி நிறைந்த சித்தராகவே காணப்படினும், சமரச சன்மார்க்க ஞானியாகவே விளங்குகின்றார். அதற்குக் காரணம் அவர் வாழ்ந்த காலத்தில் சைவ வைணவ சமயப் போர்களும், புத்த சமண மதங்களின் போராட்டங்களும் வைதீக நெறியின் வளர்ச்சிக்காக நாடெங்கும் வளர்க்கப்பட்ட முறைகளுமேயாகும். இவற்றுள் பெரியதாக இருந்தது வைதீக நெறியினை வளர்த்தவர்கட்கும் அவர்கள் காட்டிய வேத ஆகம கொள்கைகளை மறுத்தவர்க்கும் நிகழ்ந்த போராட்டங்களேயாகும். சிவவாக்கியர் சமயப் போர்வையில் வளர்க்கப்பட்ட பொய்மைகளையும் மூட நம்பிக்கைகளையும் விளக்கமாக மறுப்பவராகத் திகழ்கின்றார்.

**"சாவதான தத்துவச் சடங்குசெய்யும் ஊமைகாள்,**
**தேவர்கல்லும் ஆவரோ? சிரிப்பதன்றி என்செய்வேன் ?**
**மூவராலும் அறியொணாத முக்கணன்முதற் கொழுந்து**
**காவலாக உம்முளே கலந்திருப்பன் காணும்."**

**(சிவ– 129)**

தத்துவமாகக் கூறப்பட்டவைகளைச் சடங்காக்கி அவற்றை மெல்ல மெல்லச் செய்யும் ஊமைகளே! கல் தெய்வமாகுமோ? இது கண்டு சிரிப்பது தவிர என்ன செய்வேன் நான்? மூவராலும் (சைவர், வைணவர், சமணர்) அறிய இயலாத முக்கண்ணன் (சிவன்), முதலில் துளிர்த்து வரும் கொழுந்துபோல் உம்மைக் காத்தப்படி உமக்குள் கலந்திருப்பதைக் காணுங்கள்.[50] என்று வைதீக நெறிப்பட்ட வழிபாட்டினை மறுத்துரைக்கும் சித்த நாத்திகம் பேசுவதோடு நில்லாமல், தெய்வ நிலையினை உணர்ந்தறிந்த உண்மைத் திறனையும் உணர்த்து நோக்குடன்,

**"பூவும்நீரும் என்மனம் பொருந்துகோயில் என் உளம்**
**ஆவியோடி லிங்கமாய் அகண்டம்எங்கும் ஆகிலும்**
**மேவுகின்ற ஐவரும் விளங்குதூப தீபமாய்**
**ஆடுகின்ற கூத்தனுக்கோர் அந்திசந்தி இல்லையே"**

**(சிவ– 199)**

என் உள்ளமாகிய கோயிலில் கற்பனையால் பூவும் நீரும் பக்தி மனத்தோடு பொருந்துமாறு செய்கிறேன். என் ஆன்மாவே லிங்கமாய்

உள்ளது. அதனால் பரந்து விரிந்த பிரபஞ்சம் முழுதும் எனக்குள் ஒடுங்கி விடுகிறது.

என்னுடலில் உள்ள ஐம்புலனும், ஐம்பொறியுமே ஐமுகக் குத்துவிளக்காகி எரிகிறது. என் மனக் கோயிலில் ஆடும் கூத்தப் பெருமானுக்கு இரவு பகல் என்ற வேறுபாடுகள் இல்லை. அதனால் அந்தி முதலிய மூன்று சந்திகள் இல்லை.

ஐம்புலங்களும், ஐம்பூதங்களின் தொடர்புடையன. இது பிண்டமாகிய உடலை அண்டமாகிய பிரபஞ்சம் வரையில் விரித்துச் செய்யும் தியானமாகும். ஆத்மா பிரபஞ்சம் முழுதும் விரிந்தது அறிந்து கொள்க.[51] என வழிபாட்டுச் சடங்கினை மானுட உடலினுள்ளேயே கண்டு யாவருக்கும் தெளிவாக எடுத்துரைக்கின்றார்.[52]

## சிவவாக்கியரும் சமயத்தொண்டும்

சமயம் என்பது இறைவன் – உலகம் – மனிதன் ஆகிய மூன்று பொருட்களுக்கிடையே உள்ள உறவினை வெளிப்படுத்துவதாகும். உலகவாழ்வில் மறை பொருளை விளக்குவது சமயமே. அழியாத பேரின்ப வீடு பேற்றிற்கு வழிகாட்டுவதும் சமயமே. சமைத்தல் என்றால் பக்குவம் செய்தல் என்பது பொருள், இந்த உலகில் வாழும் உயிர்கள், உலகின் மூலமாக அறியும் வாழ்வியல் நெறிமுறைகளின் மூலம் சீவனானது சிவமாக மாற முடியும் என்பதை அறிவுறுத்துவது சமயமாகும்.

மனித சமுதாயத்தின் தேவைகளை நிறைவு செய்யச் சான்றோர்களால் அருளப்பட்ட சமயங்கள் வரலாற்றுப் பின்னணியிலும், சில தேவைகளினாலும், சில மனப்பக்குவங்களினாலும், சில பொருள் மாறுபாட்டாலும் தோற்றுவிக்கப்பட்டது, சிலவாய் இருந்து பின் பலவாய் பெருகின. காலத்தின் கட்டாயத்தால் வளர்ந்த சமயங்கள், இலக்கை மறந்து தங்கள் சுய உயர்விற்காக மட்டுமே செயல்பட்டு வந்தன.

இத்தகைய கால கட்டத்தில் சமயம் கடந்த மோன சமரசமாகிய சைவசித்தாந்தம் மட்டுமே எல்லாச் சமயங்களையும் உள்ளடக்கியதாய் அவ்வச் சமயங்களின் மூலம் சிவத்தை உணர்வித்தது என்றால்

மிகையில்லை. சிவவாக்கியர் எல்லாச் சமயங்களைப் பற்றியும் குறிப்பிடுகின்றார். எல்லாச் சமயத்தைப் பற்றிக் கூறினாலும், அவர் ஊனிலே உருகி உள்ளத்தில் கலந்து உண்மையறிவாய் நிற்பது சைவம் என்பது மட்டுமே என்று தெளிவுபடுத்துகிறார்.

**“ஆதியானது ஒன்றுமே அநேகஅநேக ரூபமாய்**
**சாதிபேத மாய்எழுந்து சர்வசீவன் ஆனபின்**
**ஆதியோடு இருந்துமீண்டு எழுந்துசென்மம் ஆனபின்**
**சோதியான ஞாநியாகியச் சுத்தமாய் இருப்பனே.”**

**(சிவ– 111)**

உலக உற்பத்திக்கு முன்பு பரம்பொருள் ஒன்றாகவே இருந்தது. அதுவே பின் பல்வேறு சாதி, வேறுபாடுகளாக விரிந்து எல்லா உயிர்களுமாய் விளங்கியது. உயிரோடு திரியும் அவை மாண்டு மாண்டு மறு சென்மம் எடுத்து வரும். ஒளி வடிவமாக ஆகிய ஞானியர் இதை நேரிடையாக முழுவதும் உணர்வர்.[53]

## சிவவாக்கியர் காட்டும் அன்புநிலை

அன்பு என்பது அகத்தே உணர்வுநிலை. அன்பிற்கு புறவடிவு இல்லையென்றாலும் வாழ்வதற்கும், உயர்விற்கும், ஆன்மீக உயர்விற்கும் எவ்வாறு வழிவகுக்கும் என்பதை மக்கட் சமுதாயத்திற்கு அன்போடு பல சீரியக் கருத்துக்களை எடுத்துரைக்கின்றார். சிவவாக்கியர் சமுதாயத்தின் மீது மிக்க அன்பு கொண்டதால்தான் தவறான பாதையில் சென்றுகொண்டிருக்கிற உலகத்தை தேவையற்ற சாதி, சமய வேற்றுமை, சடங்குகள் இவற்றுக்கு மாறாகச் சாதி சமயப் பூசலற்ற, எல்லாச் சமயத்தையும் ஏற்றுக்கொள்கின்ற சமயக்காழ்பற்ற, ஆன்மாக்களின் உள் இருக்கின்ற இறைவனை மெய்யறிவுப் பாதையில் உணர வழிகாட்டினார். இறைவனையும், இறையின்பத்தையும் உணர்ந்து அனுபவித்த சித்தர் சிவவாக்கியர் தாம் உணர்ந்த இன்பத்தை எந்தச் சுயநலமுமில்லாமல் உணர்த்தியது அவர் சமுதாயத்தின் மீது கொண்ட அன்பினால் மட்டுமே. அதனை அவர்,

**“சாதியாவது ஏதடா சலம்திரண்ட நீரலோ**
**பூதவாசல் ஒன்றலோ பூதமைந்தும் ஒன்றலோ**
**காதில்வாளி காரைகம்பி பாடகம்பொன் ஒன்றலோ**
**சாதிபேதம் ஓதுகின்ற தன்மைஎன்ன தன்மையே”**

**(சிவ– 47)**

உடலில் உள்ள திரவங்கள் திரண்டு சுக்கிலமானதிலிருந்து தோன்றிய மனிதர்கள் யாவரிலும் சாதி என்பது எதுவும் இல்லை. நிலம், நீர் முதலிய பூதங்கள் நுழையும் வாசலும் ஒன்றே. ஐந்து பூதங்களும் ஒருமைப்பட்டே நிற்கிறது, அது எப்படி என்றால் காதில் அணியும் அம்புபோன்ற காதணியும், காரையும், கம்பியும், காலில் அணியும் பாதகமும் என்ற பலவிதமாக நகைகள் இருந்தாலும் அவையெல்லாம் உள்ளன.

அதுபோல் சாதி என்ற பேதம் இல்லை. எல்லாம் ஒரு தன்மையானவே ஆகும் என்று விளக்குகிறார்.

## சிவவாக்கியர் காட்டும் கல்வி

மக்கள் சமுதாயத்தில் நிலைத்திருக்கும் அனைத்து மூடத்தனத்திற்கும் காரணமாக அமைவது கல்வியின்மையே. அதாவது சாதி வேற்றுமை, மதவேற்றுமை, தேவையற்ற மூடத்தனமான சடங்குகள், பெண்களின் பெருமை அறியாது இல்லறத்தை இகழ்ந்து பேசல் போன்ற இவையனைத்திற்கும் காரணமாய் அமைவது கல்வியின்மை மட்டுமே. கல்வியின்மை என்பதையும் பொதுவாகக் கூறாமல் காணுமிடமெங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் இறையை உணரத் தேவையாகும் ஞானக்கல்வி அல்லது ஆன்மீக் கல்வி இல்லாமை மட்டும்தான். எனவே தான் சிவவாக்கியர் இறைஞானத்தை உணர்த்திச் சமுதாயத்தின் அஞ்ஞானத்தைக் களைவதற்காகத் தம் பாடல்களில் ஞானக்கருத்துக்களைப் புகட்டுகிறார்.

உடல் நிலையானது அல்ல என்ற நிலையாமைக் கருத்தை உணர்த்தி வேறுபாடுகளைக் களைய முடியும் என்பதையும் திட்பமாக உணர்த்துகிறார். உடல் தோற்றத்தின் காரணங்களை உணர்ந்தால் சமுதாயத்தில் காணலாகும் குற்றங்களைக் களைய வழிபிறக்கும் என்பது அவரின் திட்பமான கருத்தாகக் கொள்ளலாம். உயிர்கள் தத்தம்

வினைக்கேற்ப பிறப்பெடுக்கின்றன. அவை பிறவிதோறும் செய்த நல்வினையால் மானிடப் பிறப்பு அமைகிறது என்பதைக்

**"உயிரும்நன்மை யாலுடல் எடுத்துவந் திருந்திடும்**
**உயிர்உடம்பு ஒளிந்தபோது ரூபரூப மாயிடும்"**

**(சிவ– 121)**

என்ற பாடல் மூலம் விளக்குவார். அத்தகைய நல்வினையில் பிறப்பெடுக்கும் ரூபரூபமான உடல்களுக்குக் காரணமாக அமைவது பாலுணர்வால் தோன்றும் "சுக்கில சுரோணிதக் கலப்பு" மட்டுமே என்பதை

**"சுக்கிலத் திசையுளே சுரோணிதத்தின் வாசலுள்**
**முச்சதுரம் எட்டுளே மூலாதார அறையிலே"**

**(சிவ– 198)**

மேற்கண்ட பாடல் மூலம் அறிவுறுத்துகிறார். மேலும் பிறப்பிற்குக் காரணமான "சுக்கில சுரோணிதம்" இவற்றின் வாசலான மூலாதாரமே யோகத்திற்கும் தோற்றுவாயாக இருக்கிறது என்பதையும் இப்பாடலில் உணர்த்துகிறார்.[54]

பெண்களின் உடலில் இயற்கையாய் அமையும் மாதவிடாயானது நின்ற காலத்தில் உடல் பிறப்பு நிகழும் என்பதையும் அது இயற்கையாய் நிகழும் நிகழ்வு என்பதையும் இதில் உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்ற பேதம் இல்லை என்பதை

**"மாதமாதம் தூமைதான் மறந்துபோன தூமைதான்**
**மாதம்அற்று நின்றலோ வளர்ந்துரூப மானது**
**நாதமேது வேதமேது நற்குலங்கள் ஏதடா**
**வேதமோதும் வேதியர் விளைந்தவாறும் பேசடா."**

**(சிவ– 134)**

என்ற பாடல் வழியாகவும் மேலும்,

**"தூமைகண்டு நின்றபெண்ணின் தூமைதானும் ஊறியே**
**சீமையெங்கும் ஆணும்பெண்ணும் சேர்ந்துலகங் கண்டதே**
**தூமைதானும் ஆசையாய்த் துறந்திருந்த சீவனை**
**தூமையற்று கொண்டிருந்த தேசமேது தேசமே."**

**(சிவ– 137)**

மாதவிலக்கு கண்டு நின்ற பெண்ணின் தூமையில் ஊறியே உலகமெங்கும் ஆணும் பெண்ணும் சேர்ந்து உண்டாகினர். தூமையை வெறுத்து நீக்குவதில் ஆசைகொண்டு அந்த தூமையே இல்லாது ஓர் உயிரைப் பெற்றிருக்கும் நாடு எங்காவது உள்ளதா?[55]

என்ற வினா எழுப்பி விளக்குகிறார். இவ்வாறு உடலெடுக்கும் உயிர்கள், உடலெடுப்பதற்கு முன் இவை எங்கே இருந்தன என்பதை குருவின் மூலம் அறிய வேண்டிய செயல் என்பதையும் விளக்குகிறார். பஞ்சபூதச் சேர்க்கையால் தான் உயிர்கள் பிறப்பெடுக்கும் என்பதை

**"அஞ்செழுத்தி லேபிறந்து அவ்வஞ்செழுத்தி லேவளர்ந்து**
**அஞ்செழுத்தை ஓதுகின்ற பஞ்சபூத பாவிகாள்,**
**அஞ்செழுத்தில் ஓர்எழுத்து அறிந்துகூற வல்லீரேல்**
**அஞ்சல்அஞ்சல் என்றுநாதன் அம்பலத்தில் ஆடுமே!"**

**(சிவ– 20)**

உலகின் எல்லாப் பொருள்களும் ஐந்து பூதங்களால் தான் தோன்றியுள்ளன. நிலம், நீர், நெருப்பு, காற்று, வானம் என்ற அந்தப் பூதங்களால் மனித உடலும் தோன்றியது.[56] என்று இந்த பாடல் மூலம் விளக்கும் அவர் உடலெடுப்பதற்கு முன்பாக அப்பஞ்சபூதங்கள் எங்கே இருக்கின்றன என்பதையும்

**"கருத்தரிக்கு முன்னெலாம் காயம்நின்றது எவ்விடம்?**
**உருத்தரிக்கு முன்னெலாம் உயிர்ப்புநின்றது எவ்விடம்?**
**அருள்தரிக்கு முன்னெலாம் ஆசைநின்றது எவ்விடம்?**
**திருக்கறுத்துக் கொண்டதே சிவாயம்என்று கூறுவீர்."**

**(சிவ– 167)**

என்ற பாடலில் மூலம் வினவி

**"கருத்தரிக்கு முன்னெலாம் காயம்நின்றது தேயுவில்,**
**உருதரிக்கு முன்னெலாம் காயம்நின்ற தேயுவில்**
**அருள்தரிக்கு முன்னெலாம் ஆசைநின்றது வாயுவில்**
**திருக்கறுத்துக் கொண்டதே சிவாயமே என்று கூறுவீர்."**

**(சிவ– 168)**

கருவிலே உடல் உண்டாகும் முன்பு அது எங்கே இருந்தது என்றால் அது சோதியில் என உணர்க. உரு உண்டாவதற்கு முன் உயிர்ப்பு எங்கே இருந்தது என்றால் அது நீரிலேயாகும். அருள் கிடைப்பதற்கு முன் ஆசை நின்ற இடம் வாயு ஆகும். இந்தச் சிக்கல்களைச் சிவாயநம செபம் தீர்க்கும்.[57] என்று கூறி முன்பு வினவிய கேள்விக்கு விடையாக விளக்கமளிக்கிறார்.

உடல் எடுப்பதற்கு முன் உயிரானது நாதத்துவத்தில் கலந்திருக்கும். சரீரமுண்டாவதற்குக் சுரோணிதமாக இது அமையும் என்பதனை,

**"உருத்தரிப்ப தற்குமுன் உயிர்புகுந்த நாதமும்**
**கருத்தரிப்ப தற்குமுன் காயம்என்ன சோணிதம்**
**அருள்தரிப்ப தற்குமுன் அறிவுமூலா தாரமாம்**
**குறித்தறிந்து கொள்வீர் குணங்கெடும் குருக்களே."**

**(சிவ– 221)**

மனித உயிரின் நினைவு அதாவது கருத்தானது நாதத்திற்குள் நுழைவதால் தான் சொல் என்ற வடிவம் பெறுகிறது. (சொல்லின் வடிவத்திற்கு உயிரின் கருத்தே ஆதாரமாகிறது) ஒரு கரு உண்டாவதற்கு முன் பெண்ணின் கரு முட்டையாகிய சுரோணிதத்தில் விந்து நுழைகிறது.

இந்த இறையருளை பெறுவதற்கு மூல ஆதாரம் அறிவேயாகும்.[58] என்று இந்த பாடல் மூலம் விளக்குகிறார். திருவருளை அடைவதற்கு முன் உயிர்கள் கீழாலவத்தையில் செயல்படுகின்ற திருவருள் கிடைத்தப்பிறகே மேலாவத்தை நிகழ்கின்றது. இதைப்பற்றி அறியும் அறிவே அறிவு என்பார். உயிரையும் உடம்பையும் இணைப்பது சிவமே என்பதையும் ஐயமின்றி எடுத்துரைக்கிறார்.

மாறிமாறித் தோற்றம் எடுக்கும் எல்லாப்பிறப்பும் நாம் செய்கின்ற வினைப்பயனாலேயே நிகழ்கிறது. அது காலம் நியதி இவற்றின் அடிப்படையில் வினை நுகர்வுக்கேற்ப உடலாக அமைகின்றன என்பதைக் கூற,

**"கருவினில் கருவதாய் எடுத்தஏழு தோற்றமும்**
**இருவினைப் பயத்தினால் பிறந்திறந்து உழன்றிடும்**
**மருவினைப் பிறவிமூன்று காலமும் வகுத்தபின்**
**உறுவினைப்பயன் இதென்று உணர்ந்தஞானி சொல்லுமே."**

**(சிவ– 458)**

கருவில் கருவாய் ஓர் உயிராற்றல் புகும். அது ஏழு வகை யோனிகளின் உடம்பையும் அவ்வவற்றின் முன் வினைப் பயனால் எடுக்கும். அவை பிறந்தும், இறந்தும் துன்புறுகின்றன. மறுபடியும் வினை செய்யவே பிறக்கின்றன. இப்படி (கடந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம்) மூன்று காலங்களிலும் வகுத்தப்படியே நடக்கின்றன.

கருவில் இருக்கும் உயிராற்றல் தனக்குரிய முன் வினையால் அதற்குரிய உடலை வெட்ட வெளியிலிருந்து எடுக்கிறது.[59] என்ற பாடலின் வாயிலாக உணர்த்துகிறார். உடம்பு பிறப்பெடுக்கும் தன்மை என்பது இயற்கையாக எல்லோர்க்கும் பொதுவாய் அமைவது. இதை உணர்ந்துகொண்டால் சாதிபேதமற்ற சமுதாயத்தை அமைக்கமுடியும் என்று சமுதாயம் உய்ய சிறந்தக் கல்வி ஞானத்தை தம் பாடல்கள் மூலம் எடுத்துரைக்கிறார்.

## ஆணென்ன பெண்ணென்ன?

ஆனாதிக்கமும், பெண்ணடிமைத் தனமும் ஓங்கியிருந்த அந்தக் காலக் கட்டத்தில் பெண்ணடிமைத்தனம் அல்லது ஆண்,பெண் பாகுபாட்டினை எதிர்த்து கலகக் குரல் கொடுத்திருக்கிறார் சிவவாக்கியர்.

**"அண்ண லேஅ னாதியே அநாதி முன்அ னாதியே**
**பெண்ணும் ஆணும் ஒன்றல்லோ பிறப்பதற்கு முன்னெலாம்**
**கண்ணிலானின் சுக்கிலம் கருவில் ஓங்கும் நாளிலே**
**மண்ணுளோரும் விண்ணுளோரும் வந்த வாறு எங்கனே?"**

**(சிவ– 25)**

கருவில் உயிர் நிலையில் ஆண் என்றோ பெண் என்றோ வேற்றுமை இல்லை. உயர்வான அந்த நிலையில் வேற்றுமை காணாதவர்கள், மனிதனாய் பிறந்த பின்னர் வேற்றுமை பாராட்டுவது ஏன்?

தன் சமகால சமூகத்திற்கெதிரான சிவவாக்கியரின் இந்த கருத்து மிக முக்கியத்துவம் வாய்ந்த ஒன்றாக காணப்படுகிறது. பாலின பாகுபாடு அல்லது பெண்ணடிமைத் தனத்தினை அவர் முற்றாக நிராகரித்தார் என்பதற்கு இந்த பாடல் ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகும்.

ஆக உலகிலுள்ளவர்கள் சிந்தனையை சித்தர்கள் அறியாமல் இருக்கவில்லை என்பதையே இது வலியுறுத்துகிறது.[60]

## யோகம் பயில உகந்த காலம் எது?

உடல் ஆரோக்கியத்தின் அடி நாதமாக இருப்பது யோகம் என்பது சித்தர்களின் கொள்கையாகும். இவ்யோகத்தினைப் பயில்வதற்கான காலம் நேரம் எது என்பதனை சிவவாக்கியர் தன்னுடையப் பாடலில் பின் வருமாறு குறிப்பிடுகிறார்.

**“நாலுவேதம் ஓதுகின்ற ஞானம்ஒன்று அறிவீரோ?**
**நாலுசாமம் ஆகியே நவின்றஞான போதமாய்**
**ஆலம்உண்ட கண்டனும் அயனும்அந்த மாலுமாய்ச்**
**சாலஉன்னி நெஞ்சுளே தரித்ததே சிவாயமே.”**

**(சிவ– 409)**

இரவின் நாலாம் சாமத்தில் துவங்குவதான் பிரம்ம முகூர்த்தம் அல்லது அதிகாலை எனப்படும் பொழுது.

பிரம்ம முகூர்த்தத்தில் சிவமும், பிரம்மமும் கூடிக்கலந்த உயர்ந்த பிரம்ம சக்தி முழுமையாக நிறைந்திருக்கிறது. இது மனதையும், நினைவையும் ஒருமுகப் படுத்தி ஒருவர் மேன்மை அடைய அடித்தளமிடும் காலமாகும்.[61]

எனவே, மனதையும், நினைவையும் ஒருமுகப்படுத்தி மேன்மை அடைய விரும்புவோர் யோகப் பயிற்சிகள் செய்ய இதுவே சிறந்த நேரம் என்பதனை தெளிவாக எடுத்துக் கூறுகிறார்.

## உயிரில் மறைந்து, உணர்வில் நிறைந்திட்ட இறைவன்!

கண்களுக்கு புலப்படவில்லை என்பதற்காக காற்று இல்லை என்றாகி விடுமா? உணர்கிறோம், சுவாசிக்கிறோம் அதனால், உயிர் வாழ்கிறோம்.

இதைப் போலவே எள்ளினுள் எண்ணை மறைந்திருப்பதைப் போல, கரும்பினில் சுவை உறைந்திருப்பதைப் போல, மலரில் மணம் நிறைந்திருப்பதைப் போல நம்மில் ஆன்மசக்தியாய் இறைவன் மிளிர்ந்திருக்கிறான்.

எள் என்பது புறப்பொருள் எண்ணெய் என்பது அகப்பொருள் கண்ணுக்குத் தெரியும் எள்ளில் நிறைந்திருக்கும் எண்ணெய் கண்ணுக்குத் தெரிவதில்லை. இப்படியே கரும்பிலும், மலரிலும் ஏன் மனிதனிலும் அகப் பொருளாய் இறைவனே மறைந்திருப்பதைப் புரிந்து கொள்ள வேண்டும்.

அகப்பொருள் என்ற ஒன்றுக்காகத்தான் புறப்பொருள் அமைகிறது. நாம் எள்ளில் இருந்து எண்ணெய் எடுக்கும் போதும், பூவின் வாசத்தை நுகரும் போதும், கரும்பை உண்ணும் போதும் அவற்றில் உள்ளவற்றை உணரமுடிகிறது. அவற்றை ஒப்புக்கொள்ளவும் முடியும். ஒரு முறை உணர்ந்த பின் கரும்பு இனிப்புச் சுவை உள்ளது என்றும், மலர் வாசம் வீசும் என்றும் யாரும் சொன்னால் மறுப்பதில்லை.

ஆனால் மனித உடலில் ஆன்மாவாய் இறைவன் உறைந்துள்ளான் என்றால் நம்பத்தான் யாருமில்லை. இந்த உண்மையை உணர்ந்து நாங்கள் கடவுளை அறிவது எப்போது என்று “பத்திரகிரியார்” கேட்கிறார்.

**“எள்ளும் கரும்பும் ஏழு மலரும் காயமும் போல**
**உள்ளும் புறமும் நின்றது உற்றறிவதெக்காலம்”**

**(பத்திரகிரியார் – 203)**

இதனையே சிவவாக்கியரும் பின்வருமாறு கூறுகிறார்,

**“பூவிலாய ஐந்துமாய் புனல்நின்ற நான்குமாய்**
**தீயிலாய மூன்றுமாய் சிறந்த காலிரண்டுமாய்**
**வேயிலாயது ஒன்றுமாய் வேறுவேறு தன்மையாய்**
**நீயலாமல் நின்ற நேர்மையாவர் காணவல்லரே”**

**(சிவ– 309)**

பஞ்சப் பூதங்களாகவும் பல சாஸ்த்திரங்களைக் கூறும் நான்கு வேதங்களாகவும் இறைவன் இருக்கின்றாராம். மேலும் மும்மூர்த்திகளாகவும், சிவசக்தியாகவும், ஒன்றி ஒருவனாகவும், இவ்வுலகில் உள்ள வெவ்வேறு பொருள்களின் தன்மையாகவும் இறைவன் இருக்கிறான். இறைவனின் இந்த நிலைகளை உணர்ந்தவனே இறைவனை கானவல்லவர்.

**"அந்தரத்தில் ஒன்றுமாய் அசைவு காலிரண்டுமாய்**

**செந்திழலில் மூன்றுமாய் சிறந்தவப்பு நான்குமாய்**

**ஐந்துபாரில் அலைந்துமாய் அமர்ந்திருந்த நாதனை**

**சிந்தையில் தெளிந்தமாயை யாவர் காணவல்லரே"**

**(சிவ– 310)**

எங்கும் எதுவுமாய் பரந்திட்ட இறைவன் ஒருவனாய், சிவசக்தியாகிய இரண்டுமாய், மும்மூர்த்திகளாகிய மூன்றுமாய், சாஸ்த்திரங்களை உரைத்த நான்கு வேதங்களாய் மற்றும் பஞ்சபூதங்களாகத் திகழும் இறைவனை, எங்கெங்கும் அலைந்து ஓடி தேடினாலும் காணமுடியாது. அவன் உன் உள்ளே இருப்பதை அறிந்து தெளிந்தாய் என்றால் நீயும் இறைவனை காண தகுதியுடையவனே.[62]

## சிவவாக்கியர் கூறும் இறைவனின் நிலைகள்

சிவவாக்கியர் சீவனே சிவனான சித்தரானததகினால், தான் கண்டு தெளிந்திட்ட இறைவனையும் இறை நிலையையும் மக்களுக்கு தெளிவுப்படுத்தும் விதமாக பின்வரும் நிலையில் பட்டியலிட்டு விளக்குகிறார்.

**"வண்டுகள் போலநீர் மனத்து மாசறுக்கிலீர்**
**குண்டலங்கள் போலநீர் குளத்தில் முழுகுகிறீர்**
**பண்டுமுங்கள் நான்முகன் பறந்துதேடி காண்கிலேன்**
**கண்டிருக்கும் உம்முளே கலந்திருப்பர் காணுமே"**

**(சிவ– 283)**

வண்டுகள் மலருக்கு மலர் தாவிடுவது போல நீ மனதில் ஆசைகளை அகற்றிடாமல் பற்பல ஆசைகளால் அவதியுற்று மாயையான குளந்தனில் குண்டலங்கள் போல மூழ்குகிறீர்கள். நான்முகனாகிய பிரம்மன் இறைவனின் அடிமுடி தேடியும் காணமுடியாது கலங்கினான்.

உம்முளே கலந்திருக்கும் இறைவனைக் காணும் முறையை அறிந்து காணலாமே என்றும்,

**“நின்றதுஅன்று, இருந்ததுஅன்று நேர்இதன்று கூறிதன்று**
**பந்தம்அன்று வீடும்அன்று பாவங்கள் அற்றது**
**கெந்தமன்று கேள்வியன்று கேடிலாத வானிலே**
**அந்தமின்றி நின்றதொன்ற எங்ஙனே உரைப்பதே”**

**(சிவ– 284)**

இறைவன் என்பவன் நின்ற பொருளும் இல்லை, இருந்த பொருளும் இல்லை, அவன் இப்படிதான் என்று கூறவும் முடியாது. சொந்தமும் பந்தமும் இல்லாதவன் அவனுக்கு வீடும் கிடையாது. பாவங்கள் இல்லாத புனிதமானவன். கெந்தமும் இல்லாதவன், எந்த கேள்வியும் இல்லாதவன். எந்த கேடும் இல்லாமல் இந்த வான் முழுவதும் ஆதியும் அந்தமும் இன்றி பரந்து விரிந்து இருக்கும் இறைவனை நான் எவ்வாறு உரைத்திடுவேன் என்றவாறு, ஒரு வினாவை எழுப்பி,

**“பொருந்து நீரும்உம்முளே புகுந்துநின்ற காரணம்**
**எருதிரண்டு கன்றை ஈன்ற வேகம் ஒன்றை ஓர்கிலீர்**
**அருகிருந்து சாவகின்ற யாவையும் அறிதிலீர்**
**குருவிருந்து உலாவுகின்ற கோலமென்ன கோலமே”**

**(சிவ– 285)**

உம்முளே இறைவன் கலந்திருக்கும் காரணத்தையும் நீ அறிந்திருக்கவில்லை, இடகலை, பிங்கலை இரண்டும் சுழுமுனையில் சேர்ந்து பிராணனால் உறங்கிடும் குண்டலினியை எழுப்பிய விதத்தையும் அறிந்திடவில்லை. பிராணனால் எழுப்பப்பட்ட குண்டலினியான சக்தி ஆறு ஆதாரங்களைக் கடந்து புருவமைய வாசலில் மனதினை ஒருமுகப்படுத்திப் பார்த்திட சகஸ்ரகாரத்தில் இருக்கும் இறைவனுடன் ஐக்கியமாவதையும் அறிந்திடவில்லை. இவற்றையெல்லாம் உணர்த்துகின்ற குருவாக இறைவன்

உம்முளே உலவுகின்ற கோலம் தன்னை அறிந்துணர் என்றும் கூறுகிறார். அதுமட்டுமன்றி

> **"நாலிரண்டு மண்டலுத்துள் நாதன்நின்றது எவ்விடம்**
> **காலிரண்டு மூலநாடி கண்டதங்கு ருத்திரன்**
> **சேரிண்டு கண்கலந்த திசைகள் எட்டுமூடியே**
> **மேலிரண்டு தான்கலந்து வீசியாடி நின்றதே"**
>
> **(சிவ– 140)**

எட்டு மண்டலமாகிய இந்த உடலில் நாதனாகிய இறைவன் இருப்பது எவ்விடம். மூலாதாரத்தில் உறக்க நிலையிலுள்ள சக்தியை வாசியோகப் பயிற்சி மூலம் மேலெழுப்பி கண்கள் இரண்டும் சேர்ந்திடும் புருவ மத்தி வாசலைத் திறந்து மனதினை ஒருமுகப்படுத்திப் பார்த்திட பரம்பொருளாய் இருக்கும் இறைவன் உன் சீவனோடு இரண்டறக் கலந்து நிற்கும் நிலையை நீ அறிவாய் என மிகத் தெளிவாக விளக்கமளிக்கிறார்.[63]

## உயிர்ப் பலியை மறுத்தல்

இறைவனின் பெயரில் நடக்கும் உயிர்ப்பலியைக் கூடாது என கண்டித்திடும் சிவவாக்கியர் அதனை பின்வரும் நிலையில் தம் பாடலில் எடுத்துரைக்கின்றார்.

> **"தங்கள் தேகம் நோய்பெரின் தனைப்பி டாரி கோவிலில்**
> **பொங்கல் வைத்து ஆடுகோழி பூசைப் பலியை இட்டிட**
> **நாங்கச் சொல்லும் நலிமிகுந்து நாளும் தேய்ந்து மூஞ்சூறாய்**
> **உங்கள் குலதெய்வம் உங்கள் உருக்கு லைப்ப துண்மையே!"**
>
> **(சிவ– 509)**

தங்களின் உடம்பில் நோய்நொடி, துன்பம் ஏற்பட்டதும், நேர்த்திக்கடன் என்ற பெயரில் ஆடு, கோழிகளைப் பிடாரி கோவிலில் பலி கொடுப்பதைக் கண்ட சிவவாக்கியர், நீங்கள் எந்தத் தெய்வம் அருள் செய்யும் என்று எண்ணி பலி கொடுக்கின்றீர்களோ அந்தத் தெய்வமே உங்கள் வாழ்வை உருக்குலையச் செய்து, உங்களைத் தேய்வடையச் செய்து, உங்களை மூஞ்சூறு போல ஆக்கிவிடும் என்று கூறுகிறார்.[64]

இறைவனின் பெயரில் நடக்கும் உயிர்ப் பலியினை வன்மையாகக் கண்டிப்பதுடன், அவ்வாறு பலியிடுவதனால் உங்கள் தெய்வமே உங்களைப் வஞ்சிக்கும் என்றும் கடும் சினம் கொண்டு வலியுறுத்துகின்றார்.

**முடிவுரை**

தம் வாழ்நாளின் முற்பகுதியைப் புறவழிப்பாட்டில் செலுத்திப் பயனில்லாமல், வாடி அகவழிபாடம் ஞானமார்க்கத்திற்கு வந்ததடைந்ததை சிவவாக்கியரின் வாழ்க்கைக் குறிப்புக் காட்டிடுவதை அறியமுடிகிறது.

உலகியலில் உழன்று, தேர்ந்து, தெளிந்து, துறந்து சித்தரானவர்களின் தத்துவங்கள் அனைத்தும் சிவவாக்கியர் பாடல்களில் இடம் பெற்றுள்ளன. எளிதில் நினைவில் நிற்கக்கூடிய சொற்களால் அமைந்த இவரது பாடல்கள் நாட்டுப்பாடல்களின் நயத்தினையும் பெற்றுள்ளமையால் இவற்றை பாமர மக்கள் இலக்கியம் என்று கூறலாம். இவர் உணர்த்தியுள்ள கருத்துக்களில், சித்தநெறிக் கொள்கைகள் சிறப்பாக விளக்கப்பட்டுள்ளதுடன், சமரச சன்மார்க்க நெறியும், ஒருமைப்பாட்டின் உயர்வும் தெளிவாக அமைந்துள்ளதைக் காணலாம்.

ஆருயிர்கட்கெல்லாம் அன்புசெயல் வேண்டும் என்னும் அன்புநெறிக் கூறும் இவர் தம் பாடல்கள் மூலம் தீண்டாமையினைத் திட்டமாக வெறுக்கும் மகாத்தமாவாகவும் திகழ்கின்றார்.

இவர் உருவ வழிப்பாட்டினை ஒப்புக்கொள்ளாத நிலையிலும் சமயங்கள் கொண்ட தனித்தனிக் கடவுளரை ஒன்றே என்றுணர்த்தும் உண்மைத் தன்மையினையும் உணர்த்துகின்றார்.

சிவவாக்கியர் தம் பாடல்களில் உயிர் காக்கும் கலையாம் “பிராணாயாம” முறைகளை விரிவாக விளக்குவதுடன், யோகத்தின் மூலம் ஞானநிலை அடைந்து முத்திப் பெறுதலுடன் இறப்பைத் தடுத்துச் சிவனுடன் சேர்ந்து வாழமுடியும் என்பதனையும் தெளிவுப்படுத்துகிறார்.

ஆண்டவனை உள்ளவாறு அறிந்து வழிபடாது, பொய்யினை மெய்யெனக் கண்டு பேதமை கொண்டு நிற்கும் மக்களை நோக்கி நட்டுவைத்த ஒரு கல்லை தெய்வமாக நினைத்து பூக்கள் சொரிந்து சுற்றி

வந்து வழிபாடு செய்கிறாயே, அந்தக்கல்லுனுள் நாதன் இல்லை உனக்குள் இருக்கும் நாதனை நீ அறிந்திடாமல் இருக்கிறாயே என மூடர்களாய ஆத்திகர்களைப் பார்த்து நாத்திக வாக்குக் கூறுகிறார்.

அன்பின் வழிப்பட்ட அறநிலையாக விளங்கும் இவர், பசிப்பிணிப் போக்கும் அன்னதானச் சிறப்பினை, பிறருக்கு உணவு அளித்து புண்ணியம் செய்தோர் பலகோடி காலம் வாழ்வார்கள். இவ்வாறு எந்த ஒரு உதவியும் செய்யாதாவர்களுக்கு கடவுள் அருள் காக்காமல் விலகிச் செல்லும் இது, உறுதியாகும் என்று கூறுவதால், இவரின் சன்மார்க்க நெறி புலனாவதுடன், தன்னுயிர்போல் மன்னுயிரையும் காக்க வேண்டும் என்ற மாண்பினையும் எடுத்துக் காட்டுகிறது.

சைவம் என்று மக்கள் அமைத்துக்காட்டும் அமைப்பில் ஊன் உண்ணாமையே சிவமாகும் எனும் குறிப்பு நிற்பதனைக் கண்டு மயங்கிய இவர், அதனை மறுத்துக் கூறி, ஆருயிர்க்கெல்லாம் மனிதன் அன்பு செய்யும் நெறியே சைவநெறி எனும் உண்மையினை உணர்த்துகின்றார்.

சிவவாக்கியர் சிவபக்தி நிறைந்த சித்தராகவே காணப்படினும், சமரச சன்மார்க்க ஞானியாகவே விளங்குகின்றார். இவர் சமயப் போர்வையில் வளர்க்கப்பட்ட பொய்மைகளையும், மூடநம்பிக்கைகளையும் விளக்கமாக மறுப்பவராகத் திகழ்கின்றார். தான் உணர்ந்தறிந்திட்ட தெய்வநிலையின் உண்மைத் திறனினை உணர்த்திடும் நோக்குடன், என் உள்ளமாகிய கோயிலில் கற்பனையால் பூவும், நீரும், பக்தி மனத்தோடு பொருந்துமாறு செய்கிறேன். என் ஆன்மாவே லிங்கமாய் உள்ளது அதனால் பறந்து விரிந்த பிரபஞ்சம் முழுதும் எனக்குள் ஒடுங்கி விடுகிறது.

ஐம்புலங்களும், ஐம்பூதங்களின் தொடர்புடையன, இது பிண்டமாகிய உடலை அண்டமாகிய பிரபஞ்சம் வரையில் விரிந்துச் செய்யும் தியானமாகும். என வழிபாட்டுச் சடங்கினை மானுட உடலினுள்ளேயே கண்டு யாவரும் உணரும் படி தெளிவுப்படுத்துகிறார்.

உலகின் மூலமாக அறியும் வாழ்வியல் நெறிமுறைகளின் மூலம் சீவானானது சிவமாக மாற முடியும் என்பதை அறிவுறுத்துவது சமயமாகும். சிவவாக்கியர் எல்லாச் சமயங்களைப் பற்றியும் குறிப்பிடுகின்றார். எல்லாச் சமயத்தைப் பற்றிக் கூறினாலும், ஊனிலே உருகி, உள்ளத்தில் கலந்து

உண்மையறிவாய் நிற்பது சைவம் மட்டுமே என்பதனையும் இவர் தெளிவுப்படுத்துகிறார்.

அன்பு என்பது அகத்தே உணர்வுநிலை, அன்பிற்கு புறவடிவு இல்லையென்றாலும், வாழ்வதற்கும், உயர்விற்கும், ஆன்மீக உயர்விற்கும் வழிவகுக்கும் என்பதனை மக்கட் சமுதாயத்திற்கு எந்தச் சுயநலமுமில்லாமல் உணர்த்துவது அவர் சமூகத்தின் மீது கொண்டுள்ள அன்பினால் மட்டுமே என்பது தெளிவு.

மக்கள் சமூகத்தில் நிலைத்திற்கும் அனைத்து மூடத்தனத்திற்கும் காரணமாக அமைவது கல்வியின்மையே, அதாவது சாதிமத வேற்றுமைகள், மூடத்தனமான சடங்குகள், பெண்களை இகழ்ந்துப் பேசுதல் போன்றவற்றிற்குக் காரணம் கல்வியின்மை மட்டுமே. கல்வியின்மை என்பதனையும் பொதுவாகக் கூறிடாமல் காணுமிடமெங்கும், நீக்கமற நிறைந்திருக்கும் இறையை உணரத் தேவையான ஞானக்கல்வி அல்லது ஆன்மீகக் கல்வி இல்லாமையே என்பதனை எடுத்துக்காட்டுகிறார்.

கருவில் உயிர் நிலையில், ஆண் என்றோ! பெண் என்றோ! வேற்றுமை இல்லை. உயர்வான அந்த நிலையில் வேற்றுமை காணதவர்கள், மனிதனாய் பிறந்த பின்னர் வேற்றுமை பாராட்டுவது ஏன்? என ஆணாதிக்கமும், பெண்ணடிமைத் தனமும் ஓங்கியிருந்த அந்தக் காலத்திலேயே பெண்ணடிமைத்தனம் அல்லது ஆண், பெண் பாகுபாட்டினை எதிர்த்த புரட்சியாளராய்த் திகழ்கிறார்.

பிரம்ம முகூர்த்தத்திலே சிவமும், பிரம்மமும் கூடிக்கலந்த உயர்ந்த பிரம்ம சக்தியாய் முழுமையாக நிறைந்திருக்கும், யோகம் பயில்வதற்கான காலம் நேரம் இப்பிரம்ம முகூர்த்தமே (அதிகாலை) சிறந்தது என்பதனைத் தெளிவுப்படுத்துகிறார்.

இவ்வுலகில் உள்ள ஒவ்வொரு பொருள்களின் தன்மையாகவும் இறைவன் இருக்கிறான். இறைவனின் இந்த நிலைகளை உணர்ந்தவனே இறைவனை காணவல்லவராவார்.

பிராணனால் எழுப்பட்ட குண்டலினியான சக்தி ஆறு ஆதாரங்களைக் கடந்து புருவமைய வாசலில் ஒருமுகப்படுத்திப் பார்த்திட சகஸ்ரகாரத்தில் இருக்கும் இறைவனுடன் ஐக்கியமாவதையும் அறிவாகவும், இவற்றையெல்லாம் உணர்த்துகின்ற குருவாகவும், இறைவன் உம்முளே உலவுகின்ற கோலம் தன்னை அறிந்துணர் என இறைவனின் நிலையினை விளக்குகிறார்.

மனிதர்கள் தங்களின் உடம்பில் நோய்நொடி, துன்பம் ஏற்பட்டதும், நேர்த்திக்கடன் என்ற பெயரில் ஆடு, கோழிகளைப் பிடாரி கோவிலில் பலிக் கொடுப்பதைக் கண்ட சிவவாக்கியர், இறைவனின் பெயரில் நடக்கும் உயிர்ப்பலியைக் கூடாது எனக் கண்டித்திடும் பாங்கினையும் இங்கே காணமுடிகிறது.

சிவவாக்கியர் தம் வாழ்வையும், சிந்தனை, செயல்கள் யாவையும் மக்கள் சமூகத்தினை நல்வழியில் கொணர்வதற்கென தொண்டாகச் செய்தார் என்பது மேற்கண்ட தகவல்கள் நமக்குத் தெளிவுப்படுத்துகிறது. சிவவாக்கியர் சமயத்தொண்டின் வழி சமூக தொண்டாற்றிட தம் வாழ்வை அர்பணித்து வாழ்ந்தார் என்பது திண்ணம்.

## சான்றாதாரங்கள்


1. மாணிக்கவாசகம், இரா. நம் நாட்டுச் சித்தர்கள். ப : 151 – 152
2. மாணிக்கவாசகம், இரா. நம் நாட்டுச் சித்தர்கள். ப : 157
3. மாணிக்கவாசகம், இரா. நம் நாட்டுச் சித்தர்கள். ப : 157
4. மாணிக்கவாசகம், இரா. நம் நாட்டுச் சித்தர்கள். ப : 156 – 157
5. ராகவேந்திரன் சரவணன். சித்தர்கள் வரலாறு. ப : 2
6. ராகவேந்திரன் சரவணன். சித்தர்கள் வரலாறு. ப : 3
7. ராகவேந்திரன் சரவணன். சித்தர்கள் வரலாறு. ப : 3
8. ராகவேந்திரன் சரவணன். சித்தர்கள் வரலாறு. ப : 4
9. ராகவேந்திரன் சரவணன். சித்தர்கள் வரலாறு. ப : 6

10. ராகவேந்திரன் சரவணன். சித்தர்கள் வரலாறு. ப : 6

11. ராகவேந்திரன் சரவணன். சித்தர்கள் வரலாறு. ப : 6

12. ராகவேந்திரன் சரவணன். சித்தர்கள் வரலாறு. ப : 6

13. ராகவேந்திரன் சரவணன். சித்தர்கள் வரலாறு. ப : 7

14. அருணாசலக்கவுண்டர், கு. சித்தர் பாடலும் அவர்தம் தத்துவமும் ஒரு கண்ணோட்டம்

15. மாணிக்கவாசகம், இரா. நம் நாட்டுச் சித்தர்கள். ப : 218

16. Kamil zvelebil. V. The Poets of the Power. Pages No : 72 – 73

17. சதாசிவம்பிள்ளை, அ. பாவலர் சரித்திர தீபகம். ப : 223

18. பலராமையா, வி. சித்தர் மெய்ப்பொருள்

19. Jeya .P. Works of cittars and their Place in Hindu Religious Thought and Tamil Literature. Page No : 386

20. பரந்தாமனார், அ.கி. கவிஞூராக

21. Subaramania Ayyar. A.V.The Poetry and the Philosophy of the Tamil Siddhars. Page No : 39

22. Subaramania Ayyar. A.V.The Poetry and the Philosophy of the Tamil Siddhars. Page No : 39

23. பிள்ளை. கே. கே. தமிழக வரலாறு மக்களும் பண்பாடும். ப:409 – 410

24. வரதராசனார், மு. தமிழ் இலக்கிய வரலாறு. ப : 178 – 179

25. அருணாசலம், மு. தமிழ் இலக்கிய வரலாறு. ப : 349 – 359

26. சிவவாக்கியர், சிவவாக்கியர் பாடல். பா - 64

27. சிவவாக்கியர், சிவவாக்கியர் பாடல். பா - 245

28. சிவவாக்கியர், சிவவாக்கியர் பாடல். பா - 389

29. சிவவாக்கியர், சிவவாக்கியர் பாடல். பா - 225

30. சிவவாக்கியர், சிவவாக்கியர் பாடல். பா - 154

31. சிவவாக்கியர், சிவவாக்கியர் பாடல். பா - 414

32. சிவவாக்கியர், சிவவாக்கியர் பாடல். பா - 171

33. சிவவாக்கியர், சிவவாக்கியர் பாடல். பா - 35

34. சிவவாக்கியர், சிவவாக்கியர் பாடல். பா - 441

35. சிவவாக்கியர், சிவவாக்கியர் பாடல். பா - 158

36. பாண்டியன், அ. சித்தர் சிவவாக்கியர்.

37. பாண்டியன், அ. சித்தர் சிவவாக்கியர்.

38. முனைவர்.க. நாராயணன், சித்தர் தத்துவம். ப : 129

39. முனைவர்.க. நாராயணன், சித்தர் தத்துவம். ப : 129

40. தெய்வநாயகம், சி.கோ. சித்தர் சிந்தனைகள். ப : 75

41. தெய்வநாயகம், சி.கோ. சித்தர் சிந்தனைகள். ப : 76

42. சரவணமுத்துப்பிள்ளை, வா. பெரிய ஞானக்கோவை (ப—ஆ ) பா - 218

43. சரவணமுத்துப்பிள்ளை, வா. பெரிய ஞானக்கோவை (ப—ஆ) பா - 5

44. சரவணமுத்துப்பிள்ளை, வா. பெரிய ஞானக்கோவை (ப—ஆ ) பா - 14

45. சரவணமுத்துப்பிள்ளை, வா. பெரிய ஞானக்கோவை (ப—ஆ ) பா - 20

46. முனைவர்.அ. அறிவொளி, சித்தர் பாடல்கள் (மூ—உ) ப : 108

47. முனைவர்.அ. அறிவொளி, சித்தர் பாடல்கள் (மூ—உ) ப : 91

48. தெய்வநாயகம். சி.கோ. சித்தர் சிந்தனைகள். பக் : 77

49. முனைவர்.அ. அறிவொளி. சித்தர் பாடல்கள் (மூ—உ) ப : 77

50. முனைவர்.அ. அறிவொளி. சித்தர் பாடல்கள் (மூ—உ) ப : 113

51. தெய்வநாயகம், சி.கோ. சித்தர் சிந்தனைகள். பக் : 78

52. முனைவர்.அ. அறிவொளி. சித்தர் பாடல்கள் (மூ—உ) ப : 112

53. முனைவர்.அ. அறிவொளி. சித்தர் பாடல்கள் (மூ—உ) ப : 68

54. முனைவர்.அ. அறிவொளி. சித்தர் பாடல்கள் (மூ—உ) ப : 81

55. முனைவர்.அ. அறிவொளி. சித்தர் பாடல்கள் (மூ—உ) ப : 22 - 23

56. முனைவர்.அ. அறிவொளி. சித்தர் பாடல்கள் (மூ—உ) ப : 96

57. முனைவர்.அ. அறிவொளி. சித்தர் பாடல்கள் (மூ— உ) ப : 126 - 127

58. முனைவர்.அ. அறிவொளி. சித்தர் பாடல்கள் (மூ—உ) ப : 248

59. முனைவர்.அ. அறிவொளி. சித்தர் பாடல்கள் (மூ—உ) ப : 248

60. சித்தர்கள் இராச்சியம். வளைதளப்பதிவுகள்

61. சித்தர்கள் ஓர் அதிசயம். தமிழ் இணையதளம்.

62. சித்தர்கள் இராச்சியம். வளைதளப்பதிவுகள்

63. சித்தர்கள் இராச்சியம். வளைதளப்பதிவுகள்

64. சித்தர்கள் இராச்சியம். வளைதளப்பதிவுகள்

# சித்தர் சிவவாக்கியர் கூறும் அறக் கருத்துக்கள்

## முன்னுரை

சித்தர்கள் யாவரும் மனித நேயம் மிகுந்தவர்கள். சாதி சமய வேறுபாடு அற்றவர்கள். சமரச சன்மார்க்கத்தைப் போற்றுபவர்கள். போலிச் சடங்குகளையும், பொருளற்ற செயல்களையும், மூடநம்பிக்கைகளையும் கண்டிப்பவர்கள். அவர்கள், மனித வாழ்வு மிக உயர்ந்தது என்று கருதுகின்றனர். உடம்பைப் பேணிக் காக்கவேண்டும் என்று வற்புறுத்துகின்றனர். மனிதன் சிற்றின்பத்தில் மூழ்கிச் சீரழியக் கூடாது என்று எச்சரிக்கை செய்கின்றனர்.

யாக்கை நிலையற்றது, செல்வம் நிலையில்லாதது, இளமை நிலை பெறாதது என்று இடித்துரைக்கின்றனர். மனம் தூய்மை இன்றிச் செய்யும் தெய்வ வழிபடு பயன் தராது. பொய், களவு, கொலை, கோபம், கள், காமம் ஆகியவை மனித இனத்தை நாசமாக்கி வீழ்த்திவிடும். ‘ கண்டதே காட்சி கொண்டதே கோலம் ‘ என்று வாழும் வாழ்க்கை பயனற்றது, எல்லாம் வல்ல – எங்கும் நிறைந்த இறைவனை மனமொழி மெய்களால் போற்ற வேண்டும். அன்பு, இறக்கம், தொண்டு ஆகியவற்றைக் கொண்டவர்கள் வாழ்வே சிறந்தது – இவையே சித்தர்கள் பின்பற்றி உலகிற்கு உணர்த்திய நெறிகள் ஆகும்.

சித்த நெறி, பெரும்பான்மையும் தம்மையுணர்ந்து தம் தலைவனை அறிந்து, பிறவா நிலையாகிய முத்தி நெறிக்கு முன்னிய நெறியாயினும், சித்தர்கள் மானுடராய்ப் பிறந்து மண்ணுலகில் நிலவியதால், மன்னுயிர்கட்கெல்லாம் நிலைத்த பொருளை உணர்த்தி வந்தனர். இல்லறத்தார்க்கும், நல்லறத்தார்க்கும், அறநெறியாளர்க்கும், தவநெறியாளர்க்கும் முறையே அறநெறி, ஒழுக்கநெறி, உயிரோம்பும் தவநெறி ஆகியவற்றை உணர்த்தும் ஆசனாகி நின்றனர்.

மண்ணுலகில் வாழ்த்தும், தவ வல்லமையால் தமக்கென ஒருலகை வகுத்துக்கொண்ட சித்தர்கள், இல்லாதவர்க்கும், எமாளிகட்கும், பொல்லாதவர்க்கும் சொல்லிக்காட்டிய நல்லுரைகளே சித்த நெறி என

அழைக்கப்பட்டன. சித்தர்கள், எல்லாம்வல்ல ஆசிரியனொருவன் பாலர்க்கு எழுத்தறிவிப்பதுபோல் – உலகியலில் மயங்கி நிற்கும் மாந்தர் வழுவாது ஒழுக்கநெறியிலும், உண்மை நெறியிலும் ஒழுக, அவரவர் தகுதிகுத்தக்க எளிய நடையாலும், பொருளாலும் உள்ளவாறு மெய்ப்பொருளை உணர்த்தியுள்ளனர்.

## சிவவாக்கியர்

இல்லை என்பது சித்தருக்கில்லை. ஒன்றென்பதும் உலகம் அன்றென்பதும் சித்தர்கள் கொள்கை. எனவே தான் சிவவாக்கியர் உருவ வழிவாடுகள், நாள், கோள் – பார்க்கும் சோதிடம், விரதங்கள் ஆகியவற்றால் வேடமிட்டு மக்களை ஏய்க்கும் சமயவாதிகளின் போலிச் செயல்களைப் புலப்படுத்தி, அவ்வழி உண்மைத் தத்துவங்களை உணர்த்துகின்றார். இதனை ஆழ்ந்து நோக்குங்கால் நிறைவான பகுத்தறிவு வாதங்களாகவே இவை அமைகின்றன. இத்தகைய சித்த நாத்திக உண்மை நெறிகளை, மக்களின் வாழ்க்கைக்குத் தேவையான அரணாக்கி பல அறங்களை எளிய முறையில் தம் பாடல்களில் வெளிப்படுத்துகிறார். அவற்றை அவரின் பாடல் கொண்டு பின்வருமாறு காண்போம்.

## சிவவாக்கியரின் சமய அறம்

அறியாமையில் உழன்ற மக்களை அறிவியல் வழியில் ஆளாக்க முயன்ற சான்றோர்கள், ஒழுக்க நெறிகளை உருவாக்கி வைத்தனர். ஒழுக்க நெறியைப் பரப்பும் தொண்டுநெறி காலப்போக்கில் சமய நெறிகளாயின. சமயத் தலைவர்களும் உருவாக்கப்பட்டனர். சமுதாயத்தில் சமயமானது மலர, சாதி சமய சடங்காசாரங்கள் மிகுந்தன. அதன் காரணமாக சமயச் சழக்குகள் தோன்றின. ஒருவரோடு ஒருவர் முரணியும், ஏற்றத் தாழ்வு கண்டும், சாடியும், ஏசியும் வந்தனர். இதனால் சமயப் பூசல்கள் ஏற்ப்பட்டன.

இவற்றிற்கிடையே தத்துவக் கோளரிகளாய் நின்று, சமுதாயம் உய்ய, பொய் வழக்கைப் புலப்படுத்தி மெய்யுணர்வைப் புகட்டியவர்கள் சித்தர்களேயாவர். சித்தர்களின் மரபுவழித் தொடர்ந்த வழக்கும் சொல்லும் மக்கள் வாழ்வாங்கு வாழ வழி காட்டின. அவ்வகையில் சித்தர்

சிவவாக்கியரின் அறிவியல் அறிவுரைகள் சமயக் குப்பைகளைச் சாடி நின்று, பொய் மதங்களைப் புறக்கணித்து போலிகளைத் தோலுரித்துக் காட்டின.

**"ஆசைகொண்டு அனுதினமும் அன்னியிர் பொருளினை**
**மோசம் செய்து அபகரிக்க முற்றிலும் அலைபவர்**
**பூசையோடு நேமநிட்டை பூரிக்கச்செய் பாதகர்**
**காசியினில் ஏழுநரகு காத்திருப்பது உண்மையே"**

ஆசையால் தினமும் பிறர் பொருளை மோசம் செய்து அபகரிக்க சிலர் பூசை, நேமம் (வழிப்பாட்டு முறைகள்), நிட்டை (தியானம்) போன்றவற்றை சிறப்பாகச் செய்துக் காட்டுவர். அவ்வாறு இருக்கும் போலிகள் இவ்வுலகில் அவர்களுக்காக காத்திருக்கும் நரகிற்கே போக நேரிடும் என்கிறார்.[1]

**"நேசமுற்றுப் பூசைசெய்து நீறுபூசிச் சந்தனம்**
**வாசமோடு அணிந்துநெற்றி மைதிலகம் இட்டுமே**
**மோசம்போய் புனைசுருட்டு முற்றிலும்செய் மூடர்காள் !**
**வேசரிக ளம்புரண்ட வெண்ணீறாகும் மேனியே."**

நேசம் கொண்டு பூசை செய்து நீறு, சந்தனம் வாசமோடு பூசி, நெற்றியில் திலகமும் வைத்து, மோசம் செய்தல், பொய், கற்பனையாகப் புனைந்து பேசுதல் ஆகியன செய்வார்கள் போலி மூடர்கள். அவர்கள் சிவலோகம் போகார், அவர்களின் உடல் சுடுகாட்டில் வெந்து சாம்பலாவது உண்மையே எனக் கூறுகிறார்.[2]

**"வாதம்செய்வேன் வெள்ளியும்பொன் மாற்றுயர்ந்த தங்கமும்**
**போதவே குருமுடிக்கப் பொன்பணங்கள் தாவெனச்**
**சாதனைசெய்து எத்திச்சொத்து தந்ததைக் கவர்ந்துமே**
**காததூரம் ஓடிச்செல்வர் அருமையே."**

பொய்யர் சிலர், வெள்ளியைப் பொன்னாக்கிட ரசவாதம் செய்வேன் என்று பொய் கூறி அதற்கு முதலில் தேவைப்படும் குரு என்னும் ரசம்

செய்யப் பொன்னும் பொருளும் தாருங்கள் என்று கூறி வாங்கிக் கொண்டு ஓடி மறைவர். பிறகு அவர்களைக் காணவும் இயலாது. என போலிகளை அடையாளம் காட்டுகிறார்.[3]

**“யோகசாடை காட்டுவார் உயரவும் எழும்புவார்**
**வேகமாக அட்டசித்து வித்தைகற்று நெட்டுவார்**
**மோகம்கொண்டு மாதரின் மூத்திரப்பை சிக்கிப்பின்**
**பேயது பிடித்தவர்போல் பேருலகில் சாவரே.”**

போலி வேடதாரிகள் சிலர் யோக சாடைகள் செய்வார், உயர எழும்புவார், வேகமாக அட்டமாசித்தி கற்று நிறையப் பேசுவார், ஆனால் மோகத்தால் மாதரின் மறைவிடத்திற்கு ஆசை வைப்பார். இதனால் பிற்காலத்தில் பேய் பிடித்தவர் போல் ஆகி எண்ணற்றவர் சாவார் இவ்வுலகிலே என இவ்வுலக மக்களுக்கு எடுத்து கூறுகிறார்.[4]

**“காயகல்பம் உண்பதாகக் கண்டவர் மதித்திட**
**மாயவித்தை செய்வதுளங்கு மடிப்புமோசம் செய்பவர்**
**நேயமாக் கஞ்சாஅடித்து நேர்அபினைத் தின்பதால்**
**நாயதாக நக்கிமுக்கி நாட்டினில் அலைவரே.”**

இன்னும் சில போலி வேடதாரிகளோ காயகல்பம் தின்று உடலைக் காப்பதாக உலகில் உள்ளவர் மதித்திடப் பேசுவர். மாய வித்தைகள் செய்வர். பலபடியாக மோசம் செய்வார். விருப்புடன் கஞ்சா அடிப்பார். அபினை நேரிலேயே தின்பர். இவர்கள் நாயாக இந்நாட்டில் பிறந்து நக்கி முக்கி அலைவார்கள்.[5]

**“நீரினில் குமிழ்ஒத்த நிலையிலாத காயம்என்று**
**ஊரினில் பறைஅடித்து உதாரியாய்த் திரிபவர்**
**சீரினில் உனக்குஞான சித்திசெய்வேன் பாரென**
**நேரினில் பிறர்பொருளை நீலவும்கைப் பற்றுவர்”**

வேறு சில போலித் துறவியர்களோ நீர்க்குமிழ் போன்று நிலையில்லாதது இந்த உடல் என்று ஊரில் பேசிக்கொண்டு ஊதாரியாகத்

திரிவர். உமக்குச் சீராக ஞானசித்தி உண்டாக்குகிறேன் பார் என்றும் சொல்லிப் பிறர் பொருளை நீண்ட நாள் கைப்பற்றுவர்.[6]

**“காவியும் சடைமுடி கமண்டலங்கள் ஆசனம்**
**தாவுருத்தி ராட்சம்யோகத் தண்டுகொண்ட மாடுகள்**
**தேவியை அலையவிட்டுத் தேசம்எங்கும் சுற்றியே**
**பாவியென்ன வீடெலாம் பருக்கைகேட்டு அலைவரே.”**

காவி உடை அணிந்து , சடைமுடி தரித்து, கமண்டலம் கொண்டு, இருக்க ஆசனம் பெற்று, உருத்திராட்ச மாலைகள் அணிந்து, யோகத் தண்டு முதலியன வைத்திருப்பர் போலித் துறவி மாடுகள். இவர்கள் தம் மனைவியரை அலையவிட்டுப் பல நாடுகள் சுற்றிப் பாவி என்று மக்கள் நினைக்க வீடு தோறும் பிச்சை கேட்டு அலைந்து வாழ்வார்கள்.[7]

**“முத்திசேர் சித்திஇங்கு முன்னளிப்பேன் பாரெனச்**
**சத்தியங்கள் சொல்லிஎங்கும் சாமிவேடம் பூண்டவர்**
**நித்தியம் வயிறுவளர்க்க நீதிஞானம் பேசியே**
**பத்தியாய் பணம்பறித்துப் பாழ்நரகில் வீல்வரே.”**

முத்திக்குப் போக இங்கேயே சித்தி தருவேன் பார் என்று சத்தியம் சொல்லி எங்கும் சாமிவேடம் கொண்டு, தினமும் வயிறு வளர்ப்பதற்காக நீதி ஞானம் பேசும் இத்தகைய போலித் துறவிகள் பக்தியைச் சொல்லிச் சொல்லிப் பணம் பறிப்பார். இறுதியில் பாழ்நரகில் வீழ்வார்கள்.[8]

எல்லாத் திசைகளிலும் சென்று, எங்கும் உள்ள புண்ணிய நதிகளைத் தேடி ஓடி, அவைகளைச் சுற்றியும் தலைமுழுகியும் வருபவர்கள் எல்லாம் சுத்த ஞானிகள் ஆக முடியுமோ?[9]

பக்தியோடு சிவன் திருவடிகளைப் பணியாத பாவிகளே! உமக்கு முத்தி இல்லாது நீங்கள் பாழ்நரகத்தில் மூழ்கி நொந்து அலைவீர்கள். மன உறுதி இல்லாத மடத்தனம் கொண்ட பிணம் போலும் மாடுகள் இவர்கள் பிறர் சினக்கும்படி அவர்களின் பொருள்களைச் சேகரித்து வைத்துக்கொள்வார். தினமும் இப்படியே ஊர் சுற்றித் திரிவார்கள். தீனி

தின்பதே இவர்களின் நோக்கம். இவர்கள் இனத்தவரே பலரும் இவர்களைத் திட்டுவார்கள்.[10]

இவ்வாறாக மேற்கண்ட பல பாடல்கள் மூலமாக போலி வேடதாரிகளின் புரட்டினை சாடியும், சாதி சமய வேடப் போலிகளைத் தட்டிக் கேட்டும், உண்மை நெறிகளை உணர்த்தியும்,சாதி சமய சடங்குகளின் மூடநம்பிக்கைகளையும் அதன் வாயிலாக எழுகின்ற பொய்மைகளையும் புலப்படுத்தி மக்களின் சித்தத்தைத் தெளிய வைக்கிறார்.

## இல்வாழ்க்கையே சிறந்த அறம்

வாழ்வியல் உண்மைகளை ஞானத்தால் பகுத்தறிந்து மெய்ஞ்ஞானம் பெற்ற சித்தர்களே விஞ்ஞான கலரென்று குறிக்கப்பெற்றனர். அவ்வகையில் சித்தர் சிவவாக்கியர், அஞ்ஞானமாகிய அறியாமை நீங்க அவர் தந்த அறிவியல் தத்துவங்கள் யாவும் சித்த விஞ்ஞானமாகும். அறங்களிலே சிறந்தது இல்லறம் போற்றும் நல்லறமேயாகும் என்பதனை தம் பாடல் வழியாக கீழ்க்கண்டவாறு தெளிவுப்படுத்துகிறார்.

**“வயங்கு மோனச் செஞ்சுடர் வடிந்தசோதி நாதமும்**
**கயங்கள் போலக் கதறியே கருவுரற்ற வெளியிலே**
**பங்கொடுஇன்று இன்றியே படர்ந்துநின்று பான்மையை**
**நயங்கள் கோவென்றே நங்கையான தீபமே”**

விளங்கும் மோனத்தில் விளைந்த செஞ் சுடரிலிருந்து பிரியும் நாதமும் யானைகள் பிளிருவதுபோல முழங்கி (கயம்—கஜம்—யானை) கருவில் தோன்றிய உடம்பிற்கு மேல் அப்படித் தோன்றாத அந்தரத்தில் வெளியில் பிளவு படாமல் (பங்கோடின்றி) படர்ந்துள்ளதாகும். அந்தத் தன்மையே பராசக்தி தன் நாயகனை அழைத்துத் தீப வடிவாகப் போவதாம். நாதம் கணவனாகிய சிவம் எனவும், தீபம் மனைவியாகிய பராசக்தி எனவும் உணர்க.[11] என்று இல்வாழ்வின் தூண்களாம் கணவன் மனைவி ஆகியோரின் முக்கியத்துவத்தை உணர்த்துகிறார்.

**“மாதர்தோள் சேராததேவர் மாநிலத்தில் இல்லையே !**
**மாதர்தோள் புணர்ந்தபோது மனிதர்வாழ்வு சிறக்குமே**
**மாதராகுஞ் சத்தியொன்று மாட்டிக்கொண்ட தாதலால்**
**மாதராகும் நீலிகங்கை மகிழ்ந்து கொண்டான் ஈசனே”**

பெண்ணைச் சேராத தேவர் (தெய்வம்) இவ்வுலகில் எங்கே உள்ளனர்? மாதர்தோள் சேரும் மனிதருக்கு வாழ்வு சிறக்கும். மாதராவது ஒரு சக்தியே ஆகும். அதனால் தான் கங்கையை ஈசனுமே மகிழ்ந்து ஏற்றுக் கொண்டான்.[12] என மாதரான மனைவியரின் முக்கியத்துவத்தை எடுத்துக்கூறுகிறார்.

**“சருகுஅருந்தி நீர்குடித்துச் சாரல்வாழ் தவசிகாள் !**
**சருகுஅருந்தில் தேகங்குன்றிச் சஞ்சலம் உண்டாகுமே**
**வருவிருந்தோடு உண்டுஉடுத்தி வளர்மனை சுகிப்பிரேல்**
**வருவிருந்தோன் ஈசனாகி வாழ்வளிக்கும் சிவாயமே”**

சருகுகளைத் தின்று நீர் குடித்துச் சாரலில் (மலையில்) வாழும் தவசிகளே! சருகு மட்டும் அருந்தினால் தேகம் அழியும் துன்பம் உண்டாகும். ஆகவே வளமான மனையில் இருந்து இல்லறம் செய்து வருவிருந்தினரைப் பேணி வாழுங்கள். வரும் விருந்தே தெய்வமாகி உங்களுக்குச் சிவாயம் வாழ்வும் அளிக்கும்.[13] என சிறப்பாக இல்லறம் போற்றுவதே சிறந்த நல்லறமாகும் என இல்லறத்தின் மேன்மையை விளக்குகிறார்.

## சிவவாக்கியரின் சமூக அறம்

சிவவாக்கியரின் படைப்பினை முழுமையாக நோக்குமிடத்து அவை அனைத்தும் “சமூகச்சீர்மை” எனும் மையப்புள்ளியை நோக்கிச் செல்வதை உணர முடிகிறது. ஒன்றேயாகிய பரம்பொருள் எங்கும் எதிலும் எவருக்கும் பொதுவாய் நிறைந்திருக்கிறது எனும் இயற்கைக் கோட்பாடும், இறையின்பம் துய்க்க இடைத்தரகரும், பொருட்செலவு மிக்க

புறவழிபாடுகளும் தேவையில்லை எனும் புறவழிபாட்டு மறுப்பும், இறையின்பம் ஆகிய அகக்காட்சி அனுபவம் சாதி, சமய, சமூக மதிப்பு எனும் வேறுபாடுகளின்றி மக்கள் அனைவருக்கும் பொதுவானது என்ற எடுத்துரைப்பும், “ஆன்மீகப் பொதுவுடைமை” கூறும் சிவவாக்கியரின் கருத்துக்கள் யாவும் சமூகச் சீர்மையை நோக்கிச் சிறப்புற அமைந்த்துள்ளதைக் காணமுடிகிறது.

சிவவாக்கியர் தனிமனித உள்ளத்தில் மாற்றத்தையும், மலர்ச்சியையும் உருவாக்குவதன் மூலம் சமூக அமைப்பிலும் போக்கிலும் மாபெரும் மாற்றத்தையும் வளர்ச்சியையும் காண விரும்புகிறார். சமூகத்தில் வரன்முறை நாத்திகக் கொள்கைகளைத் தெளிவாகவும் நிறைவாகவும் வெளியிட்டு, உருவ வழிபாட்டினையும், சமயச் சடங்குகளையும், சாதிபேதங்களையும் ஆசாரவேடமிடும் அனைத்தையும் கடிந்து உண்மைப் பொருளை உணரக் கூறி[14] மக்களைக் கடைத்தேற்றும் கருணையில் விழைந்து நிற்கிறார் என்பதைச் சிவவாக்கியர் பாடல்கள் வழி அறிந்துகொள்ள முடிகிறது.

ஆன்மா ஒன்றை மட்டும் எண்ணிக் கவலைப்படுகின்றவர் பலராவர். அவர்கள் முக்தி அடைவதற்கு முயல்கின்ற நிலையிலேயே இயங்குவார்கள். ஆனால், சிவவாக்கியர் ஆன்மா என்பது உடலைக் கொண்டுதான் இயங்க வேண்டியுள்ளது. ஆனால் உடலும் இந்த உலகியல் வாழ்வும் ஆன்ம ஞானத்தை அடையத்தேவை என்ற தெளிவுடன், ஆன்மிக சமயவாழ்வையும் சமூக உணர்வுடன்[15] காட்டியுள்ளார்.

அந்தவகையில் சமுதாயத்தில் மலிந்து நின்ற பொய்மைகளை எதிர்த்துப் புரட்சிக்குரல் கொடுத்தவர்களுள் குறிப்பிடத்தக்கவர் சிவவாக்கியர் ஆகிறார். தாம் வாழும் சமுதாயத்தைப் பற்றி அதிகம் அக்கறை கொண்டும் அவர் சமூக ஏற்றத்தாழ்வுகள், ஏமாற்றுகள் ஆகிய சமூகக் கேடுகளைக் களைந்து மக்கள் அனைவரும் இணைந்து அன்புடன் வாழ்ந்திட நெறிப்படுத்துகிறார். சாதி சமய ஒருமைப்பாடு, தனிமனித வாழ்க்கை அறம் ஆகியன பற்றி அழுத்தம் திருத்தமாக அறிவுறுத்துகிறார். சாதி மத பேதங்கள் மலிந்த மண்ணில் அறியாமையால் பெருகிக் கிடந்த மூடப்பழக்க

வழக்கங்கள் மக்களை இருளில் ஆழ்த்திய நிலையில், தங்கள் சொல்லாற்றல் கொண்டு, பாடல்கள் இயற்றியுள்ளார்.

**“ஒரு படைப்பாளன் அந்தச் சமுதாயத்தின் அங்கம்”**[16] என்பார் ஸ்காட் அவர்கள். சிவவாக்கியர் இயற்றிய சிவவாக்கியம், அவர் வாழ்ந்த காலத்தைக் காட்டும் காலக் கண்ணாடியாக விளங்குகிறது.

## தீண்டாமை

**“இறைவன் படைப்பில் எல்லோரும் சமம். இதில் உயர்ந்தவர் தாழ்ந்தவர் என்ற பேதம் இல்லை. மனிதருக்குள் வேறுபாடு காண்பது அவனுடைய அடிப்படை உரிமையையே (Constitutional Rights) பறிப்பதாகும். ஒரு மனிதன் மற்றொரு மனிதனைப் பார்த்து ஒதுங்கிக்கொள் என்று கூறுவதும் உரிமையைத் தடை செய்வதேயாம். இத்தீண்டாமை உணர்வு சித்தர்களின் கண்டனத்திற்கு உள்ளானது”**[17]

**“சாதியாவது ஏதடா சலந்திரண்ட நீரெலோ**
**பூதவாசல் ஒன்றலோ பூதமைந்தும் ஒன்றலோ**
**காதில்வாளி காரைகம்பி பாடகம்பொன் ஒன்றலோ**
**சாதிபேதம் ஓதுகின்ற தன்மை என்ன தன்மையே”**[18]

என்று தீண்டாமைக்கு எதிராக குரல் எழுப்புகிறார் சிவவாக்கியர். மேலும், இதைத் தொடாதே, இது எச்சில் , இது தீட்டு என்றெல்லாம் பாகுபாடு உண்டாக்கித் தீண்டாமையைக் கடைப்பிடிக்கும் அறியாமைக்கு எதிராக, நடப்பியலை முன்வைத்துப் புதியொரு சமுதாயச் சிந்தனையை எழுப்புகிறார் சிவவாக்கியர்.

**“வாயிலே குடித்தநீரை எச்சிலென்று சொல்லுறீர்**
**வாயிலே குதுப்புவேத மெனப்படக் கடவதோ**
**வாயில்எச்சில் போகவென்று நீர்தனைக் குடிப்பீர்காள்**
**வாயில்எச்சில் போனவண்ணம் வந்திருந்து சொல்லுமே”**[19]

அவ்வாறு சொல்லுபவர்கள் பெரும்பாலும் வேதியர் என்பது பலரும் அறிந்ததே. ஆதலின் அவர்களை நோக்கியே,

**"ஓதுகின்ற வேதம்எச்சில் உள்ளமந் திரங்கள்எச்சில்**
**மோதகங்க ளானதுஎச்சில் பூதலங்கள் எழும்எச்சில்**
**மாதிருந்த விந்தும்எச்சில் மதியும்எச்சில் ஒளியும்எச்சில்**
**ஏதில்எச்சில் இல்லதில்லை யில்லையில்லை யில்லையே"**[20]

என்று அழுத்தமாக, இல்லை இல்லை இல்லை என நான்குமுறை அடுக்கிக் காட்டி உரத்தக் குரலில் உரைக்கிறார். "வருணாசிரம தர்மத்தின் மூலமாகத்தான் நமது நாட்டில் தீண்டாமைக் கொள்கை அமுலில் இருந்து வருகிறதே ஒழிய, வருணாசிரமம் இல்லாவிட்டால் தீண்டாமைக் கொள்கை பரவ மார்க்கமே கிடையாது.

வருணாசிரம தர்மம் என்கிற ஓர் உடல் இல்லாவிட்டால் தீண்டாமை என்கிற உயிருக்கு ஆட்டம் இல்லை" என்று **உண்மை** இதழ் கூறுகின்றது.[21] இதற்கு வித்திட்டவர்கள் வேதியரே ஆவர். எனவே, வேதியரைச் சாடுதல் சித்தர்களால் தவிர்க்க இயலாது போய்விடுகிறது. அவ்வழி சாதி, மந்திர, சடங்கு, வழிபாடு உள்ளிட்ட அனைத்திற்குள்ளும் ஊடுருவி நிற்கும் போலித்தனங்களைச் சாட வேண்டிய கடப்பாடு அவர்களுக்கு நேர்ந்து விடுகிறது. அப்பணியில் சித்தர் சிவவாக்கியர் தலைநிற்பதையும் இங்கு விரிவுறக் காணலாம்.

## சாதிப்பெயரில் தீண்டாமை

**"சாதி என்ற அடிப்படையில் சமுதாயத்தில் நடத்தப்பட்ட கொடுமைகள் பலப்பல, தீண்டாமை என்ற செயலும் பரவலாக இருந்துள்ளதைச் சிவவாக்கியர் மூன்று பாடல்களில் தீண்டாமையினை ஒழிக்க முனைகிறார்"**[22] என்கிறார் முனைவர் க. இளமதிசானகிராமன். அந்த வகையில், சிவவாக்கியர் எழுப்பிய குரல் கவனத்திற்குரியது.

**“தாதரான தாதரும் தளத்தில்உள்ள சைவரும்**
**கூதரைப் பறைச்சிமக்கள் கூடிசெய்த காரியம்**
**வீதிபோகும் ஞானியை விரைந்துகல் எறிந்தும்**
**பாதங்கள் ஆகவே பலித்ததே சிவாயமே”**[23]

என்கிறது சிவவாக்கியம். சாதிமறுப்பைக் காலந்தோறும் சிந்தனையாளர்கள் வெளிப்படுத்திய வண்ணம் இருந்திருக்கின்றனர். அவர்களுள் பொதுவாக சித்தர்களும் ஆவர். அவற்றிலும் குறிப்பாக, சிவவாக்கியர் புலப்படுத்திய சிந்தனைகளைப் பின்வருமாறு விளங்கக் காணலாம்.

## சிவவாக்கியரின் சாதிமறுப்புச் சிந்தனைகள்

பொதுவாகவே, சாதிசமய மூடப்பழக்கவழக்கங்களுக்குச் சித்தர்களும், ஞானிகளும் இடம் அளித்ததே இல்லை. காரணம், “ஒன்றே குலம் ஒருவனே தேவன்” என்ற நன்னெறியில் நின்றவர்கள் அவர்கள். அதனை உணர்ந்து உணர்த்துகிற சித்தராகச் சிவவாக்கியரை அவர்தம் பாடல்கள் காட்டுகின்றன. அதனால் தான் “பழந்தமிழ் நூல்களில் சாதிமறுப்புக் கருத்துக்கள் ஆங்காங்கே தென்பட்டப்போதிலும் சிவவாக்கியரைப் போல, பெருங் குரலிட்டு சாதிபிரிவுகளை மறுத்தவர்கள் யாருமிலர். சிவவாக்கியரிடம் இருபதாம் நூற்றாண்டிற்குரிய விழிப்புணர்ச்சியைக் காணும் அறிஞர் கைலாசபதி சித்தர்களை கிளர்ச்சியாளர்கள்”[24] என்றழைக்கிறார். சாதிபிரிவினைகளுக்கு எதிராகக் கிளர்ந்தெழுந்து சிவவாக்கியர் கொடுத்த புரட்சிக்குரலை அவர்தம் பாடல்கள் பலபட எதிரொலிக்கின்றன.

**“சாதி ஆவதேடா”**[25] என்று வினவும் அவர், **“சாதிவகை இல்லாமல் சஞ்சரிப்பதெக்காலம்”**[26] என்று ஆவல் உறுகிறார்.

**“சாதிப்பிரிவினில் தீயினை மூட்டுவோம்”**[27] என்று பாம்பாட்டிச் சித்தர் ஆர்பரிக்கிறார்.

**"தொல்லுலகில் நார்சாதியனேசாதி தொடுத்தார்கள் அவர்களெல்லாம் பிழைக்கத் தானே"** என்றும்

**"காணப்பா சாதிகுலம் எங்கட்கில்லை**

**கருத்துடனே என்குலம் சுக்கிலந்தான் மைந்தா"**[28]

என்றும் தெளிவுபடுத்துகின்றன சித்தர் தம் பாடல்கள்.

உண்மையில் ஞானிகள் சாதி பேதத்தை ஏன் ஏற்பதில்லை என்பதற்கு விளக்கம் அளித்தவர் சிவவாக்கியர் மட்டுமே ஆவார்.

**"ஆதியானது அண்டரண்டம் அப்புறத்தும் அப்புறம்**
**சோதியாகி நின்றிலங்கு சுருதிநாத சோமனை**
**பேதியாமல் தம்முளே பெற்றுணர்ந்த ஞானிகாள்**
**சாதிபேதம் என்பதொன்று சற்றுமில்லை இல்லையே"**[29]

என்னும் பாடலில் சாதிபேதத்திற்கு எதிரான ஞானிகளின் உளப்பாங்கு சுட்டிக் காட்டப்படுகிறது. மேலும்

**"ஆதியானது ஒன்றுமே அனேகஅனேக ரூபமாய்**
**சாதிபேத மாய்எழுந்து சரவசீவ னானபின்**
**ஆவியோடு ஆடுகின்ற மீண்டுமந்த சென்மமாம்**
**சோதியான ஞானியர்க்குச் சுத்தமாய் இருப்பரே"**[30]

என்கிறார் சிவவாக்கியர். இப்பாடலில், சாதிபேதங்களால் திளைந்து எழுந்த சர்வசீவன் ஆனபின். இறையோடு கலந்து பல் பிறப்புகள் எய்தியபின் ஞானியாகி நிற்கும் பேறு கிட்டும் என்பது விளக்கம் பெறுகிறது.

**"சாதிசமய பேதமற்ற சமனிலைச் சமுதாயம் காண முற்பட்டோருள் சிவவாக்கியருக்குச் சிறப்பிடம் உண்டு. ஆன்மாவிற்குச் சாதி இல்லை. ஆன்மா எடுக்கின்ற உடல், அவ்வுடல் வாழுகின்ற இடம், மேற்கொள்ளும் செயல் போன்றவற்றைக் கொண்டே சாதிகள் கற்பிக்கப்படுகின்றன. உடல் வேறுபாடுகள் யாவும் புறத்தோற்றம், எல்லா உடல்களும் அடிப்படையில் ஐம்பூதங்களின் சேர்க்கையே, அடிப்படைப்பண்புகளில் உடல்கள்**

**வேறுபடுவதில்லை. அவற்றின் செயற்பாடுகளும் குணங்களும் வேறுபடுகின்றன. அணிந்துகொள்ளும் உறுப்பிற்கேற்ப அணிகலன்களின் வடிவமைப்புகளும், கவர்ச்சியும், செய்முறைகளும் வேறுபடுகின்றன. மனித இனம் அடிப்படிப்படையில் ஒன்றே, சாதி வேறுபாடுகள் யாவும் புறத்தளவே கற்பிக்கப்பட்டவைகளாகும். அடிப்படையாக உடலமைப்பும், எலும்பு, தசை, நரம்பு மண்டலங்களின் சிறப்பமைப்பும், இயக்கமும், குருதியோட்டமும், மூச்சோட்டமாகவும், சாதி வேறுபாட்டிற்கேற்ப இவற்றின் எண்ணிக்கையும் இயக்கமும் வேறுபடுவதில்லை. போக இன்பம் எல்லாச்சாதி உடல்களிலும் வேறுபாடின்றியே வெளிப்படுகிறது''[31]** எனவேதான், சிவவாக்கியர்,

**“பறைச்சியாவ தேதடா பனத்தியாவ தேதடா**
**இறைச்சிதோல் எலும்பிலே இலக்கமிட்டிருக்குதோ**
**பறைச்சி போகம் வேறதோ, பணத்தி போகம் வேறதோ**
**பறைச்சியும் பணத்தியும் பகுத்துப் பாரு மும்முளே''[32]**

மேலும், விளக்கமாக, “எருமையும் பசுவும் கூடிக் கலப்பதில்லை, ஏனெனில், வேறு வேறு இனமானவை இவை. ஒரு வேளை அவை கூடிக்கலந்தாலும் அவற்றின் கரு வேறுபாடான ஓர் உருவை ஆக்கும்” ஆனால் வேதியன் புலைச்சியோடு கூடிக் கலந்தால் வேறுபாடாகக் குழந்தை பிறப்பதில்லை. இதையுணர்ந்தேனும் சாதி சாதி என்று பேதப்படுத்தி அழிவோர் திருந்தக் கூடாதோ என்ற அறச்சினம் அவருள் முகிழ்வதைக் காணமுடிகிறது.

**‘‘மேதியோடு ஆவுமே விரும்பியே உணர்ந்திடில்**
**சாதிபேத மாய்உருத் தரிக்குமாறு போலவே**
**வேதமோது வானுடன் புலைச்சிசென்று மேவிடில்**
**பேதமாய்ப் பிறக்கிலாத வாறதென்ன பேசுமே''[33]**

என்று சிவவாக்கியர் பாடுகிறார்.

## பிறப்பால் யாவரும் ஒருதன்மைத்தவரே

"பிறப்பொக்கும் எல்லாவுயிர்க்கும்" என்பது வள்ளுவம் கூறும் வாக்கு. சித்தர்களின் பார்வையும் அத்தகையதே. சிவவாக்கியரும், "பிறப்பால் அனைவரும் ஒருவரே" என்ற கருத்தை அடியாகக் கொண்டு, "எல்லா மனிதரும் சலம் திரண்ட நீராலே உருவானவர்கள் என்றிருக்கையில் சாதி எங்கே என்கிறார். உடம்பில் பத்தாம் வாசலாகவும் பஞ்சபூதமாகவும், பஞ்சாட்சரமாகவும் உள்ள பொருள் ஒன்றே. அது நகைகளில், காதில் அணியும் தோடாகவும் மூக்குத்தியாகவும் வளையல் போன்று பலவகையாகவும் இருப்பது தங்கம் ஒன்றேயாகும். இதையறியாமல், எல்லா உயிர்களும் ஒரே இறைவனிடமிருந்து வந்ததை உணராமல் சாதிபேதம் பேசுகின்ற மனிதர்களின் தன்மைகளை என்னவென்று சொல்லுவேன்" என்று வருந்துகின்றார்.

**"தங்கம்ஒன்று ரூபம் வேறு தன்மையான் வாறுபோல்**
**செங்கண் மாலும் ஈசனும் சிறந்திருந்தது எம்முளே**
**விங்களங்கள் பேசுவார் விளங்குகின்ற மாந்தரே**
**எங்குமாகி நின்றநாமம் நாமம்இந்த நாமமே"** [34]

மேற்கூறிய கருத்தைக் கொண்டிலங்கும் அவர் தம் பாடல்.

நான்கு வேதங்கள் கூறும் உண்மையும், அனைத்து சாத்திரங்களில் உரைக்கப்பட்டுள்ள உண்மையும் ஐந்துபூதத் தத்துவங்களில் காணும் உண்மையும் ஒன்றான மெய்ப்பொருளை அறிவதற்கே அமையப்பெற்றது. அதுவே, சாதிபேதம் இல்லாத உண்மையாக இருப்பது. அதைப் பற்றியே அனைத்து நூல்களும் பலவிதமான வேதமாகக் கூறிவருகின்றன. அந்த மெய்ப்பொருளே உலகெங்கிலும் பலவிதமாகப் பிறந்து உழன்று கொண்டிருக்கிறது என்பதைச் சிவவாக்கியர் சாதி பேதந்தனைக் குறித்துத் தயங்கி மயங்கித் தளராதே என்கிறார்.

சிவானந்தபோத ஆசிரியரும், "சாதியாவ தெவரறிவார் சருவ உடலுமொன்றாச்சே"[35] என்று குறிப்பிடுகிறார்.

மனிதகுலத்தைச் சாதி என்ற பேரால் வகைப்படுத்தி மக்கள் அறியாமையால் வாதிடுகின்றனர். எல்லாச் சாதிகளையும் மானுடப் பிறப்புகளையும் தொகுத்துப்பார்த்தால் அனைவரின் பிறப்புக்கும் ஒரே காரணமாக இருப்பதே சுக்கிலம் என்ற உண்மையை உணரலாம்.

யாவும் நீரிலே பிறந்த நேர்மையை உணருங்கள். இதுவரையில் அதை அறியாமல் இரைத்த சுக்கிலத்தால் வரும் இன்பத்தை அன்றி வேறு ஒன்றையும் நீங்கள் கண்டதில்லை என்ற கருத்தை முன்னிறுத்தி,

**“வகைகுலங்குள் பேசியே வழக்குரைக்கும் மாந்தர்காள்**
**தொகைக்கு லங்களான நேர்மைநாடியே உணர்ந்தபின்**
**மிகைத்த சுக்கிலம் அன்றியே வேருமொன்று கண்டிலீர்**
**நகைத்த நாடன் மன்றுள் நின்ற நந்தினியாரு பேசுமே”**[36]

என்ற பாடலின் வழியாக சிவவாக்கியர் கண்டிப்பதைக் காணமுடிகிறது.

பிறக்கும்போது, பூணூல், குடுமி, கோவணம் ஆகியவற்றோடு எவரும் பிறப்பதில்லை. வேத சாத்திரங்கள் நிறைந்த மனத்தோடு எவரும் பிறப்பிதில்லை. எனவே, பிறப்பால் உயர்வும் இல்லை, தாழ்வும் இல்லை என்பது சிவவாக்கியர் உரைத்திடும் தெளிவுரையாகும்.

## போலி ஒழுக்கங்களைச் சாடுதல்

தோற்றத்தால் சிவவேடம் புனைந்து அவத்தொழிகள் புரிவோரைக் கடுமையாகச் சாடுகிறார் சிவவாக்கியர். நெற்றி நிறைய நீறு பூசி ஏமாற்றும் வேடதாரிகளை காணும் சிவவாக்கியர்,

**“வெந்தநீறு மெய்க்கணிந்து வேடமுந் தரிக்கிறீர்”**[37] என்று குறிப்பிடுகிறார். அவ்வாறு பூசுவதும் போலியாக ஒழுக்கத்தைக் கடைபிடிப்பதுபோல் நடிப்பதும் அவர்க்கு எரிச்சல் ஊட்டும் செயல்களாக ஆகின்றன. புலால் மறுப்பு என்ற பெயரில் அவற்றை உண்போரைத் தீண்டாமைக் கொடுமைக்கு உட்படுத்தியவர்கள் வேதியர்கள். அவர்களின் போலி ஒழுக்கங்களை எளிய மக்களின் மொழிவாயிலாகவே எள்ளல் செய்கிறார். புலால் என்பதே உடல் தான். அங்கு உறைபவன் இறைவன்

எனவே, புலாளில் முளைத்தெழுந்த ஞானவித்தை அறிதலை விடுத்துப் போலி ஒழுக்கம் பேசி ஒலித்தல் வேண்டாம் என்பது அவர் உணர்த்தும் நன்னெறியாகும்.

**“புலால்புலால் புலாலதென்று பேதமைகள் பேசுநீர்**
**புலாலைவிட்டு எம்பிரான் பிரிந்திருந்தது எங்ஙனே**
**புலாலுமாய் பிதற்றுமாய் பேருலாவுந் தானுமாய்**
**புலாலிலே முளைத்தெழுந்த பித்தன்காணும் அத்தனே”[38]**

என்பது சிவவாக்கியரின் ஞானக்குரலாகும்.

சைவம் என்ற பெயரில் புலால் மறுப்பினை ஒழுக்கமாகக் காட்டி ஆடியவர்களைக் கண்டு, அவர்கள் உண்ணும் பால், பசுவின் உதிரம் தானே என்ற உண்மையை உணர்த்துகிறார்.

**“உதிராமான பால்குடித் தொக்கநீர் வளர்ந்ததும்**
**இரதமாய் இருந்ததொன் றிரண்டுபட்ட தென்னலாம்**
**மதிரமாக விட்டதேது மாமிசப் புலாலதென்று**
**சதிரமாய் வளர்ந்தேது சைவரான மூடரே”[39]**

என்று மிகக் கடுமையாக கேள்விக் கனைகளைத் தொடுக்கிறார்.

இவற்றுக்கெல்லாம் துணைபோகும் சாத்திரங்களையும் அவர் வார்த்தை சாட்டைக் கொண்டு சாடுகிறார்.

## சாத்திரங்களைச் சாடுதல்

சாத்திரங்களை மேற்சாதியினராகிய ஒரு சிலர் மட்டுமே கற்கும் வாய்ப்பினைப் பெற்றிருந்தனர். அவ்வாறு கற்றவர்கள் அவற்றை அறியாத பிறரை இழிவாக மதித்தனர். இவ்வாறு இழிவுபடுத்தச் சாத்திரங்களைத் துணைக்காக்கும் சாத்திரிகளையும், வேதம் ஓதும் அந்தணர்களையும் சிவவாக்கியர் கடுமையாக சாடுகிறார்.

**“சாத்திரங்கள் ஓதுகின்ற சட்டநாத பட்டரே**
**வேர்த்திரைப்பு வந்தபோது வேதம் வந்து உதவுமோ?”[40]**

என்று கேட்கிறார் சிவவாக்கியர்.

**“சாத்திரத்தைச் சுட்டுச் சதுர்மறையைப் பொய்யாக்கி**
**சூத்திரத்தைக் கண்டு துயரறுப்ப தெக்காலம் ?”[41]**

என்று பத்திரகிரியாரும் வினவுகிறார்.

**“சதர்வேதம் அறுவகைச் சாத்திரம் பல**
**தந்திரம் புராணக் கலை சாற்றும் ஆகமம்**
**விதம் விதம் ஆன பல்வேறு நூல்களும்**
**வீணான நூல்கள் என்றாடு பாம்பே”[42]**

என பாம்பாட்டிச் சித்தரும் அழுத்தந்திருத்தமாக உணர்த்துகிறார்.

**“சாத்திரங்கள் இல்லையடி அகப்பேய்**
**சலனங்கள் கடந்ததடி”[43]**

என்று அகப்பேய் சித்தரும் சிந்தை தனை தெளிவிக்கிறார். மதுரை வாலைசாமி, அகத்தியர் முதலான பல சித்தர்களின் கருத்தாக்கங்களும் இவ்வண்ணமே அமைவதைக் காணமுடிகிறது.

இவ்வாறு சமுதாய மேம்பாட்டிற்குத் தடைசெய்யும் சாத்திரக் குப்பைகளைச் சுட்டெரித்தும் பொய் சதுர்மறைகளைச்சாடியும், மானுடத்தை மேம்படுத்திகொள்ளவும் சித்தர்கள் தம் பாடல்களில் வழிமுறைகளை தந்துள்ளதைக் காணலாம்.

## சடங்குகளைச் சாடுதல்

சாத்திரங்களுக்கு அடுத்தநிலையில், பூசைகள், வழிபாட்டு முறைகள் போன்றவற்றில் சடங்குகளைப் பின்பற்றி மக்களை திசைமாற்றிவிடுகின்ற அவலமும் சமுதாயத்தில் நிலவுவதைக் கண்ட சித்தர்கள் அவற்றையும் கடுமையாகச் சாடியிருக்கின்றனர். “காரணத்தை

அறிந்தும், அறியாமலும் செய்யப்படும் நிகழ்ச்சிகள் "சடங்குகள்" எனப்படும், இவற்றைச் செய்வதால் மனநிறைவு கிட்டுவமென முழுமையாக நம்பினர். எனவே தான், சமுதாயத்தில் சடங்குகள் இன்றியமையாத இடத்தைப் பெற்றன என்பர்."[44] வேதியர், குருக்கள், பட்டர் என்றெல்லாம் பேர் பண்ணிக் கொண்டு சாத்திரங்களை வைத்து வயிறுபிழைக்கும் ஒரு கூட்டம், இத்தகு சடங்குகளால் மக்களைக் கூறுபடுத்தும் போக்கைக் கண்டு சித்தர்கள் சினந்திருக்கின்றனர்.

**"நீரிலே பிறந்திருந்து நீர் சடங்கு செய்கிறீர்**
**ஆரையுன்னி நீரெலா மவத்திலே யிறைக்கிறீர்"**[45]

என்றும்

**"சாவதான தத்துவ சடங்குசெய்யும் மூடர்காள்**
**தேவர்கல்லு மாவரோ ? சிரிப்பதன்றி என்செய்வேன்?"**[46]

எனவும் கடுமையாகக் கேட்கிறார் சிவவாக்கியர் அவர்கள்.

## கோவிலும் குளங்களும்

கோவிலும் குளங்களும் வழிபாட்டுக்குரிய சிறப்புச் சாதனங்கள்தாம் என்றாலும், அவற்றின் உட்பொருள் அறியவொட்டாமல் புறச் சடங்குகளாக அவை போய்விட்ட நிலை கண்டு வெகுண்டு பாடும் சிவவாக்கியர் அவற்றின் உட்பொருளை பின்வரும் பாடல் வாயிலாகப் புலப்படுத்துகிறார்.

**"கோயிலாவதேதடா குளங்களாவதேதடா**
**கோயிலும் குளங்களும்கும்பிடும் குலாமரே**
**கோயிலும் மனத்துளே குளங்களும் மனத்துளே"**[47]

என்று சிவவாக்கியம் கூறுகிறது.

**"உள்ளம் பெருங்கோயில்"**[48] என்று தொடங்குகிற திருமந்திரப் பாடலையும் இங்கு ஒப்புக் கொண்டு நோக்கல் தெளிவாம்.

## வழிபாடும் பூசையும்

சிவவாக்கியர் தம் இளமைக்காலத்தில் தளங்கள்தோறும் சென்று பூவும் புனலும் சொரிந்து வழிபட்டவர் தான் என்பது

**“பண்டு நான் பறித்தெறிந்த பன்மலர்க ளெத்தனை**
**பாழிலே செபித்தவிட்ட மந்திரங்க ளெத்தனை**
**மிண்டனாய்த் திரிந்தபோ திறைத்தநீர்க் ளெத்தனை**
**மீளவுஞ் சிவாலயங்கள் சூழவந்த தெத்தனை”[49]**

மேற்கண்ட சிவவாக்கியர் பாடல்களின் வாயிலாக அறியலாம். ஆனால் சித்தர் மரபு நின்று சிந்தித்து அவற்றின் உணர்வுகளைக் கருதிப் பார்க்கும்போது, அதனால் ஏற்பட்ட, பொருள் மற்றும் பொருள் இழப்புகளையெல்லாம் எண்ணித் தம்மை நொந்துகொள்கிறார். பூவும் புனலும் சொரிந்து வழிபட்டு எழுப்பிய இறையுணர்வை, முற்றிலும் பொய்யாக்கி எழுந்த அபிடேகமும், அருச்சனையும் அவருக்கு எரிச்சல் ஊட்டும் தன்மையாவயின. அதன் வேகத்தில் தான்,

**“மாறுபட்ட மணிதுலக்கி வண்டின்எச்சில் கொண்டு போய்**
**ஊறுபட்ட கல்லின்மீதே ஊற்றுகின்ற மூடரே**
**மாறுபட்ட தேவரும் அறிந்து நோக்கம் என்னையும்**
**கூறுபட்ட தீர்க்கவோ குருக்கள் பாதம் வைத்ததே”[50]**

என்று அவரைப் பாட வைக்கிறது. இன்னுமொரு பாடலிலோ,

**“நெருப்பை மூட்டி நெய்யைவிட்டு நித்தம்நித்தம் நீரிலே**
**விருப்பமொடு நீர்குளிக்கும் வேதவாக்கியம் கேளுமின்**
**நெருப்பும்நீரும் உம்முளே நினைத்துகூற வல்லிரேல்**
**சுருக்கம்அற்ற சோதியைத் தொடர்ந்துகூடல் ஆகுமே”[51]**

என்று கூறி, நெருப்பையும் நீரையும் உள்ளுள் உணர்த்திச் சுருக்கம் அற்ற சோதியைத் தியானிக்கப் பணிக்கிறார்.

பூசை செய்வதற்கென்றே உரிய ஆடை, பூணூல் ஆகியவற்றை அணிந்துகொண்டு தீபதூபம் காட்டிச் செய்துவைத்த செப்புத்

திருமேனிகளுக்கெல்லாம் மலர்தூவி வழிபாடு செய்வது சமய வழக்கம் ஆகும். இதனால் ஆகும் பயன் யாது என்பது சிவவாக்கியர் தம் வினாவாகும்.

நெஞ்சம் கோயிலாக, இறைவனை உள்ளிருத்திச் செய்யும் பூசையே சிறந்த பூசை. அதைவிடுத்து, தீபத்திலும் தூபத்திலும் சிற்ப சிலைகளிலும் சித்திர ஓவியங்களிலும் இறைவனைத் தேடுவதும் பூசை செய்வதும் தேவையற்றது என்கிறார் சிவவாக்கியர், அதனால் தான்,

**"அண்டர்கோன் இருப்பிடம் அறிந்தஉணர்ந்த ஞானிகாள்**
**பண்டறிந்த பான்மைதன்னை யாரறிய வல்லரே**
**விண்டவேத பொருளையன்றி வேறுகூற வைகயிலா**
**கண்டகோயில் தெய்வமென்று கையெடுப்பதில்லையே"**[52]

என்கிறத் தெளிவு அவருள் நிலவுவதினை இங்கு தெளிவுபடுத்துகிறார்.

## மந்திரங்கள் ஓதுதல்

கல்லொன்றை நட்டுக் கடவுள் என்று பேரிட்டுச் சுற்றிவந்து, என்னவென்று விளங்கிக் கொள்ள முடியாத வார்த்தைகளையும் தெளிவற்ற ஒலிச்சத்தத்தையும் மந்திரங்களென்று முணுமுணுக்கிறவர்களை நோக்கி,

**"சுற்றி வந்து முணுமுணு என்று சொல்லும் மந்திரம் ஏதடா"**[53]

என்றும்,

**"மந்திரங்கள் உண்டு நீர் மயங்குகின்ற மானிடரே**
**மந்திரங்கள் ஆவதும் மரத்தின் ஊறல் அன்று காண்"**[54]

எனவும் கடுமையாகச் சாடுகிறார். அத்தோடு எது மந்திரம் என்பதைச் சித்தர்நெறிநின்று விளக்குகிறார்.

**"மந்திரங் கள்ஆவது மதித்தெழுந்த வாயுவை**
**மந்திரத்தை உண்டவர்க்கு மரணமேதும் இல்லையே"**[55]

என்பது சிவவாக்கியர் கண்டு தரும் விளக்கமாகும்.

இவையெல்லாம் வேதியர்பால் கொண்ட வெறுப்பில் மட்டும் சிவவாக்கியர் பேசிடவில்லை, அவற்றுள் உள்ள ஆழ்ந்த பொருள் உணர்ந்த ஆற்றலால் தான் கூறினார் என்பது அவர் பாடலில் காணப்பெறும் தெளிந்த நிலையாகும் என்பதை,

**“சிட்டர்ஓது வேதமும் சிறந்தஆக மங்களும்**
**நட்டகார ணங்களும் நவின்ற மெய்ம்மை நூல்களும்**
**கட்டிவைத்த போதகம் கதைக்குகந்த பித்தெலாம்**
**பெட்டதாய் முடிந்ததே பிரானையான் அறிந்தபின்”**[56]

என்ற பாடல் தெள்ளிதின் உணர்த்தி நிற்கிறது.

## உருவவழிபாடும் - உண்மைநிலையும் போலியும்

உருவநிலையிலும் அருவநிலையிலும் அருவுருவ நிலையிலும் வைத்து இறைவனைப்போற்றும் மரபு சமய உலகில் உண்டு. அதைபோல் உருவவழிபாட்டின் மூலமாக மக்களை ஏமாற்றிப் பணம் பண்ணுவதும் ஆன்மீகத்திற்குப் புறம்பான தீங்குகள் புரிவதும் ஆகிய நிலை கண்டு வெதும்புவது சித்தர் தம் இயல்பாக இருப்பதைப் பார்க்கலாம். உலகில் பல இடங்களில் நிகழும் உருவவழிபாட்டினால் ஏற்படும் பூசல்கள் பலவாகும். கற்களில் வடிக்கப்படும் தெய்வங்களின் மேல் கற்பிதங்கள் சுமத்தப்படுகின்றன. இக்கற்பிதங்களைச் சொல்லுவோரிடத்தும் நம்புவோரிடத்தும் பிணக்குகள் எழுகின்றன. பகைமை முற்றிப் பேதங்கள் எழுந்து சமுதாயம் சமன் குலைகிறது. எனவே, இதற்கு எதிரான புரட்சிக் குரலைச் சித்தர்கள் எழுப்பியவண்ணம் இருந்திருக்கிறார்கள்.

வழிபாட்டிற்குரிய சிலை செய்த கல்லுக்கும், அதன் வாயிற்படிக் கல்லுக்கும் என்ன வேறுபாடு? என்ற சிந்தனையை முன்வைத்து, “இவ்விரு கற்களில் எந்த கல் ஈசனுக்கு உகந்த கல்?” என்றும் கேட்கிறார்.

**“ஓசையுள்ள கல்லைநீர் உடைத்திரண்டாய் செய்துமே**
**வாசலில் பதித்தகல்லை மழுங்கவே மிதிக்கிறீர்**
**பூசனைக்கு வைத்தகல்லில் பூவும்நீரும் சாத்துறீர்**
**ஈசனுக்கு உகந்தகல் எந்தக்கல்லு சொல்லுமே”**[57]

கல்லில் மட்டுமின்றி கட்டையிலும் மட்டையிலும், சட்டையிலும் சாணியிலும் செய்யப்படுகின்ற உருவங்கள் உண்மையிற் கடவுளாவது எப்படி என்பது இச்சித்தர் எழுப்பும் அறிவுபூர்வமான வினாவாக அமைகிறது.

**“உளியிட்ட கற்சிலையில் உண்டோ உணர்ச்சி?**
**உலகத்தின் மூடர்களுக்கு உண்டோ வளர்ச்சி?**
**புளியிட்ட செம்பில் குற்றபோமோ? அஞ்ஞானம்**
**போகாது மூடர்க்கென்று ஆடு பாம்பே”[58]**

என்ற பாம்பாட்டிச் சித்தரின் பாடலையும், சிவவாக்கியர் சிந்தனையோடு ஒப்பிட்டுக் கண்டு உணரலாம்.

இத்தனைக்கும் சிவவாக்கியர் இறைமறுப்பாளர் அல்லர். ஆனால், உருவவழிபாட்டில் உள்ள போலித்தன்மைகளை தான் சாடுகிறார். அகத்தே இருக்கும் இறைவனை விடுத்துப் புறத்தே செய்யும் போலிவழிபாட்டைக் கடுமையாகச் சாடும் சித்தர் சிவவாக்கியரின் பாடல் பின்வருமாறு அமைவதைக் காணலாம்.

**“நட்டகல்லை தெய்வமென்று நாலுபுட்பஞ் சாத்தியே**
**சுற்றிவந்து முணுமுணு என்று சொல்லும் மந்திரமேதடா**
**நட்டகல்லும் பேசுமோ நாதனுள் இருக்கையில்**
**சுட்டசட்டி சட்டுவங் கறிச்சுவை அறியுமோ”[59]**

## தேர்த்திருவிழாவும் சழக்குகளும்

இறையை முன்வைத்து மக்களை ஒருங்கிணைக்க நடத்தப்பெற்ற தேரோட்டமும் திருவிழாக்களும் பிற்காலத்தே பகையை வளர்க்கும் சூழல்களை உருவாக்கி விட்டன. இன்றைக்கும் பல இடங்களில் இத்தகு சூழல்களில் போரும் பூசல்களும் எழுவதைக் காணமுடிகிறது. பேதம் வளர்க்கும் இப்போக்குகளால் பேதையான மனிதர்களை முன்னிறுத்திச் சிவவாக்கியர்

**“ஊரிலுள்ள மனிதர்களால் ஒருமனதாய்க் கூடியே**
**தேரிலே வடத்தையிட்டு செம்பைவைத் திழுக்கிறீர்**
**ஆரினாலும் அறியொணாத ஆதிசித்த நாதரை**
**பேதையான மனிதர்பண்ணும் புரளிபாரும் பாருமே”[60]**

என்று அறிவுறுத்துகிறார். புறச்சடங்காய் நிகழும் இத்தேர்த்திருவிழாவிற்கு வேறோர் உட்பொருள் உண்டு. அதாவது, யாராலும் அறியொணாத ஆதிசித்தநாதனைத் தன் உடலே தேராகக் கொண்டு வைத்து வாசிமூச்சே கயிறாகக் கொண்டு, உள்ளே இழுக்கும் முறையை உணர்த்துவதான் இத்தேர்த்திருவிழாவின் நோக்கமாகும், அதைவிடுத்து, ஊரார் அனைவரும் ஒருமனதால் கூடித் தேரில் வடம் கட்டி மையத்தில் செப்புச்சிலையை வைத்து இழுப்பதால் யாருக்கு என்ன பயன்?[61] என்பது தான் சிவவாக்கியர் தம் வினாவாகும்.

## நீர்ச்சடங்கும் அதன் போலித்தன்மையும்

நீராடல் என்னும் சடங்கும் போலிச்சடங்காகச் சமுதாயத்தில் நடைமுறையில் உள்ளது. புற அழுக்கைப் போக்கும் புனித நீரால் அக அழுக்கைப் போக்க இயலாது. அதற்குச் சோதிவடிவான இறையை உள்ளிருத்தித் துதிப்பதுதான் பொருத்தம். அதைவிடுத்து வெறுமனே புண்ணிய நீராடல் என்பதால் நிகழப்போவது ஒன்றும் இல்லை என்பது சித்தர் தம் துணிபு. அழுக்குபோகவேண்டும் என்று அன்றாடம் குளித்துக் குளித்து அழுக்கைப் போக்கினாலும், அழுக்கு அறாது இருக்க வாழும் மாந்தரே, அழுக்கு இல்லாதது எவ்விடம்? அவ்விடத்தை அறிந்து அங்கு வாழுகிற அழுக்கு இல்லாத சோதியாகிய இறைவனோடு இணைந்து இருத்தலே அழுக்கிலா வாழ்வு. அதுவே மரணமிலாப் பெருவாழ்வு என்பதை.

**“அழுக்கறத் தினங்குளித்து அழுக்கறாத மாந்தரே**
**அழுக்கிருந்த தவ்விடம் அழுக்கிலாதது எவ்விடம்**
**அழுக்கிருந்த அவ்விடத்து அழுக்கறுக்க வல்லிரேல்**
**அழுக்கிலாத சோதியோடு அனுகிவாழ லாகுமே”[62]**

என்ற பாடல் உணர்த்துவதைக் காணலாம்.

இத்தகு நீரினைக் கையில் அள்ளி நீர்ச்சடங்கு செய்வதையும் பகடி செய்கிறார்கள் சித்தர்கள். முக்தி தருவது நீர் என்று குளிக்கும் மூடரை நோக்கி, அக்குளத்திலேயே வதியும் தவளையும் மீனும் முக்தி அடையாதிருப்பது ஏன்? என்றும் வினவுகிறது சிவவாக்கியரின் கவிதை உள்ளம்.

**"காலைமாலை நீரிலே முழுகுமந்த மூடர்காள்**
**காலைமாலை நீரிலே கிடந்ததேரை என்பெறும்**
**காலமே எழுந்திருந்து கண்கள்மூன்றில் ஒன்றினால்**
**மூலமே நினைப்பிராகில் முத்திசித்தி யாகுமே"**[63]

மேலும், பிராமணர்கள், கைநிறைய நீரை, நினைத்தது நிறைவேற வேண்டி இறைப்பதனால் ஆகும் பயன் ஒன்றும் இல்லை. மாறாக, உள்ளே வேராக இருக்கும் இறைவனை அறிந்து அதிலே முளைத்தெழுந்த சிகரத்தை உணர்ந்து தியானம் செய்தால், சிவத்தின் திருவடி சேரலாம் என்று கூறி நெறிப்படுத்துகிறார் சிவவாக்கியர். அக்கருத்துடையப் பாடலானது கீழ்க்கண்டவாறு,

**"நீரையள்ளி நீரில்விட்டு நீ நினைத்த காரியம்**
**ஆரையுன்னி நீரெலாம் அவத்திலே இறைக்கிறீர்**
**வேரையுன்னி வித்தையுன்னி விதத்திலே முளைத்தெழுந்த**
**சீரையுன்ன வல்லீரேல் சிவபதங்கள் சேரலாம்"**[64]

இதுபோல் நடத்தும் தலையாத்திரைச் சடங்குகளையும் சிவவாக்கியர் இகழ்கிறார். இறைவனைக் காணவேண்டும் என்று கடல் கடந்தும், மலைகள் பல ஏறியிறங்கியும், காடுமேடுகள் யாவும் தேடிச் சுற்றியும் வருந்துவதால் அவனை அறியவோ அடையவோ இயலாது என்பதில் உறுதியுடைய இச்சித்தர், தம்முள்ளேயே இறையைத் தேடவேண்டும் என்கிறார்.

**"காணவேண்டு மென்று நீர் கடல்மலைகள் ஏறுவீர்**
**ஆணவம் அதல்லவோ அறிவில்லாத மாந்தரே**
**வேணுமென்றவ் வீசர்பாதம் மெய்யுளே தரிப்பிரேல்**
**தாணுவாக நின்றசீவன் தான்சிவம தாகுமே"**[65]

என்கிற பாடல் அவ்வாறு அலைவதை ஆணவம் என்கிறது. இவ்வாறு ஊர்கள் தோறும் தேடி அலைவதால் பயன் இல்லை என்பதை உணர்த்தி,

**“இந்தவூரில் இல்லையென்று எங்குநாடி ஓடுறீர்**
**அந்தவூரில் ஈசனும் அமர்ந்துவாழ்வது எங்ஙனே**
**அந்தமான பொந்திலாரில் மேவிநின்ற நாதனை**
**அந்தமான சீயிலவ்வில் அறிந்துணர்ந்து கொள்ளுமே”**[66]

என்று பாடுகிறார் சிவவாக்கியர். இப்பாடலில், ஒவ்வொரு மனிதருக்குள்ளும் உறைந்துநிற்கும் இறையை உணர்ந்துகொள்ள வழிவகை சொல்லப்படுகிறது. அதாவது, அண்ணாக்கில் உள்ள பொந்தில் உயிரை மேவி நின்ற நாதனை அறிந்து இரகசிய ஓரெழுத்தாகிய சிகரத்தை உணர்ந்து அது அவ்வென்னும் அகாரத்தில் இருப்பதால் அதிலேயே தியானித்து அறிந்து உணர்ந்து கொள்ளச் சொல்கிறது.

இவ்வாறு தீர்த்தம், லிங்கம், மூர்த்தி என்று புறத்தே தேடுவதில் விளையப்போகும் பயன் ஒன்றும் இல்லை, உள்ளுக்குள் தேடி அடைவதே உரிய வழி என்பதனை,

**“தீர்த்தலிங்க மூர்த்தியென்று தேடியோடுந் தீதரே**
**தீர்த்தலிங்கம் உள்ளினின்ற சீவனைத் தெளியுமே**
**தீர்த்தலிங்கம் உம்முளே தெளிந்துகாண வல்லிரேல்**
**தீர்த்தலிங்கம் தானதாய்ச் சிறந்ததே சிவாயமே”**[67]

எனும் பாடலானது தெளிவாக உணர்த்தி நிற்கிறது.

## தீட்டு எனும் தீண்டாமை

சமய வழிபாட்டில் ஒதுக்கத்தக்கதாய் இன்றைக்கும் அமைந்து மானுடருள் பேதம் பெரிதும் விளைக்கும் ஒரு நம்பிக்கை தீட்டாகும். இது பெரிதும் பெண்களைப் புறக்கணிக்கும் ஒரு போக்காகும். மாதந்தோறும் வெளிப்படும் குருதிப்போக்கின்போது ஒவ்வொரு பெண்ணும் தீட்டுக்குள்ளாகிறாள் என்று கருதிக்கொண்டு, இதனை முன்னிறுத்தி அவள்

சமய, சமுதாய, நிகழ்வுகள் அனைத்திலும் புறக்கணிக்கப்படுகிறாள். இப்போக்கினால் பெண்களுக்கு சமூகத்தில் ஏற்படும் விளைவுகள் பலவாகும்.

ஒரு பெண்ணானவள் பிறக்கும் போதே 40,000 மில்லியன் உயிர் அணுக்களுடன் பிறக்கிறாள். அவள் பருவமடையும் வயது வரும்போது, அவ்வணுக்கள் ஒவ்வொன்றும் உயிர்பெற்றுச் செயல்பட ஆரம்பிக்கின்றன[68]

இதுசமயம் மாதந்தோறும் பெண்களுக்கு உண்டாகும் உதிரத்திரட்சி வெளிப்பாடு இயல்பாக நிகழ்கிறது. இது நிகழாவிடில் மகப்பேறு இல்லை. மலடி என்ற சொல்லுக்குப் பெண்கள் உள்ளாக நேரும்.உயிர்கள் உடம்பெடுத்தலுக்கு இது இன்றியமையாதது. இதனை அறிந்திருந்தும், அவ்வகைச் சூழ்நிலையில் பெண்களைத் தீட்டு என்றுப் புறந்தள்ளுவதைச் சிவவாக்கியர் பெரிதும் சாடுகின்றார். தூமைநீர் என்று சொல்லப்படும் அக்குருதிப்போக்கின் விளைவே மானுடத்தின் தோற்றங்களாகும். அதனைத் தீட்டு என்று பழிப்போரை நோக்கி,

**“மாதமாதம் தூமைதான் மறந்துபோன தூமைதான்**
**மாதமற்று நின்றலோ வளர்ந்துரூப மானது**
**நாதமேது வேதமேது நற்குலங்கள் ஏதடா**
**வேதமோதும் வேதியர் விளைந்தவாறும் பேசடா”[69]**

என்று வினவும் சிவவாக்கியர்,

தொட்ட இடந்தோறும் தீட்டு தீட்டு என்று குறைகூறுகின்றவர்களை நோக்கி,

**“தறையினில் கிடந்தபோ தன்றுதூமை என்றிலீர்**
**துறையறிந்து நீர்குளித்த தன்றுதூமை என்றிலீர்**
**பறையறிந்து நீர்பிறந்த தன்றுதூமை என்றிலீர்**
**புரையிலாத ஈசரோடு போருந்துமாறது எங்ஙனே”[70]**

தூமையினால் உண்டான இவ்வுடலில் ஈசன் பொருந்தியிருக்கும்போது அவனையும் தீட்டு என்று புறந்தள்ளி விட முடியுமா? என்று நுட்பமாக வினா எழுப்புகிறார் தம் பாடலின் வாயிலாக சிவவாக்கியர்.

தூமை தூமை என்று துவண்டு அலைவோரை நோக்கி, தூமையான வாலைப்பெண் ஒவ்வொருவருக்குள்ளும் உறையும்போது அத்தூமை எவ்வாறு விட்டு விலகும்? அது விலகின் உயிர் விலகும். அஃதறியாமல் நீரில் மூழ்கிப் பின்னர் ஓதும் வேதம் சொல்லித்தந்த சொற்குருக்களும் இந்தத் தூமையினால் தான் உருவாகினர் என்பதைச் சொல்லிக் காட்டும் நிலையை பின்வரும் பாடலில் காணலாம்.

**“தூமைதூமை என்றுளே துவண்டலையும் ஏழைகாள்**
**தூமையான பெண்ணிருக்க தூமைபோனது எவ்விடம்**
**ஆமைபோல மூழ்கிவந் தனேகவேதம் ஓதுநீர்**
**தூமையுந் திரண்டுருண்டு சொற்குருக்கள் ஆனதே”[71]**

இந்த வகையில், தூமையின் தூமையை, அதன்வழி அமையும் பிறப்பின் சிறப்பை, உயிர்ப்பின் இரகசியங்களை,

**“ஐயிரண்டு திங்களாய் அடங்கிநின்ற தூமைதான்**
**கையிரண்டு காலிரண்டு கண்ணிரண்டும் ஆகியே**
**மெய்திரண்டு சத்தமாய் விளங்கிரச கந்தமும்**
**துய்யகாயம் ஆனதும் சொல்லுகின்ற தூமையே”[72]**

என்ற பாடலின் மூலம் சிவவாக்கியர் அவர்கள் தெளிவுபடுத்துகிறார்.

இவ்வாறெல்லாம் தீட்டின் எதிர்ப்பைத் தீவிரமாக எதிர்க்கும் சிவவாக்கியரிடம், வழக்கமாக பிற சித்தர்களிடம் எழும் மாதரை மிகவும் பழிக்கும் நிலைப்பாடு என்பது காணப்படவில்லை.

## தனிமனிதன் ஒழுக்கமே சமுதாய மாற்றம்

ஒவ்வொரு தனிமனிதரும் ஒழுக்கம் நிறைந்தவராக மாறிவிடின் ஒட்டுமொத்த சமுதாயமும் திருந்த வாய்ப்புண்டு. அந்தவகையில் சித்தர்கள் சமுதாய ஒழுக்கத்தை மேம்படுத்தத் தனிமனித ஒழுக்கத்தை நன்கு வலியுறுத்துகின்றனர்.

கடுவெளிச்சித்தர், “பாவம் செய்யாதிரு மனமே” என்று தொடங்கி, பிறர் மனம் நோகக்கூடாது : பொய் பேசக்கூடாது : பிறர் மனம் நோகத்

திட்டக்கூடாது : பிறருக்குக் கொடுமை செய்யக்கூடாது : எந்த உயிரந்த்தையும் துன்புறத்தக்கூடாது : சண்டையைத் தூண்டக்கூடாது : அறநெறியை மீறக்கூடாது : கஞ்சா, கள், புகையிலை முதலிய போதைப் பொருள்களைப் பயன்படுத்தக்கூடாது : மனைவியை இகழக்கூடாது : பிறரைத்தாழ்த்திப் பேசக்கூடாது[73] என்றெல்லாம் பலவகை ஒழுக்கங்களைப் பட்டியலிடுகிறார்.

இங்ஙனம் தீயசெயல்கள் யாவற்றிலிருந்தும் ஒவ்வொரு மனிதனும் தன்னை விலக்கிக் கொண்டால், சமுதாயத்தில் கேடுகள் தோன்ற வழியில்லை என்பதைக் கடுவெளிச்சித்தரின் அறிவுரைகள் நன்கு வழியுறுத்துகின்றன.

களவு செய்யாமலும், பொய் சொல்லாமலும், பொய் சொல் கேளாமலும், இது போன்ற நன்னெறியினின்று நெகிழாமலும் வாழ்கின்ற மனிதனால் அறம் தழைக்கும் : சமுதாயம் நல்வாழ்வு பெறும்[74] என்று கொங்கணச்சித்தர் கூறுகின்றார்.

**“நல்லது செய்தல் ஆற்றீராயினும்**
**அல்லவை செய்தல் ஓம்புமின்”[75]**

என்ற புறநானுற்றுப் பாடல் குறிக்கிறது.

மனத்தூய்மை உடைய மக்கள் நிறைந்த சமுதாயத்தில் பொதுமை உணர்வும் பூரண அமைதியும் சூழ்ந்திருக்கும், மனத்தில் அன்பும் வாய்மையும் இன்றிப் புறவாழ்வில் பயிலும் ஒழுக்கங்களினால் பயனில்லை. உண்ணும் உணவில், உடுத்தும் உடையில், புனையும் வேடங்களில் மட்டுமே அன்புமயமான ஆன்மவாழ்வைக் நீரில்லா பாலைநிலத்தில் பட்ட மரம் துளிர்ப்பது அரிது. அதுபோல அகத்திலே அன்பில்லா உயிர்வாழ்க்கை சிறக்காது என்கிறார் திருவள்ளுவர். இக்கருத்தை,

**“அன்பகத்தில்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்**
**வற்றல் மரம் துளிர்த்தற்று” [76]**

என்ற குறட்பா உறுதிப்படுத்துகிறது.

மனத்திலே அழுக்கினை நீக்காத மௌனஞான யோகிகள் வனத்தகத்து இருந்து தவம் புரிந்தாலும் மன அழுக்குடையோராய் இருப்பர். மனத்தகத்து மாசு அறுத்த மௌனஞான யோகிகள் மாதரொடு முயங்கியிருந்தாலும் மனத்தால், தூய்மை உடையோராய்த் திகழ்வர். என்று சிவவாக்கியர் கீழ்க்கண்ட பாடலில் சுட்டிக்காட்டுகிறார்,

**“மனத்தகத்து அழுக்கறாத மௌனஞான யோகிகள்**
**வனத்தகத்து இருக்கினும் மனத்தகத்து அழுக்கறார்**
**மனத்தகத்து அழுக்கறுத்த மௌனஞான யோகிகள்**
**முலைத்தடத்து இருக்கினும் பிறப்பறுத்து இருப்பரே”** [77]

என்னும் பாடல் வழியாக அறியமுடிகிறது.

செம்மையான மனமே சிறந்த அறங்களுக்கு அடிப்படை என்று பலபடக் காட்டுகிறார் சித்தர் சிவவாக்கியர் அவர்கள்.

**“மனத்துக்கண் மாசிலான் ஆதல் அனைத்தறன்**
**ஆகுல நீர பிற”**[78]

என்ற திருவள்ளுவர் கருத்தையும் இங்கு ஒப்பிட்டு நோக்கி உணரலாம்.

**“மனமது செம்மையானால் மந்திரம் செபிக்க வேண்டா”**[79]

என்ற அகத்தியர் ஞானமும் இக்கருத்தோடு ஒத்தமைவதையும் காணலாம்.

## சமய ஒருமைப்பாட்டுச் சிந்தனைகள்

**“சமயப் பிரிவுகள் மக்களிடையே ஏற்படுத்திவிட்ட பூசல்களையும் பகைமை உணர்வையும் கண்டு சித்தர்கள் மனம் வருந்தினர். அன்பைப் பெருக்க வேண்டிய சமயம், அறிவுக்குப் பொருந்தாத செயற்கைப் பிரிவுகளால், மக்களிடையே வெறுப்பையும், வன்முறையும் வளர்த்தது. சமயப் பூசல்கட்குக் காரணங்களைக் கண்டு அவற்றைக் களைவதில் முற்பட்ட சிவவாக்கியர் முதன்மையாகிறார்.”**[80]

அவரது நோக்கில், "அரியும் சிவனும் ஒருவரே". சைவமும் வைணவமும் ஒன்றேயாம். ஒரு பரம்பொருளின் இருகூறுகளாகச் சிவனையும் மாலையும் அவர் சுட்டிக்காட்டுகிறார்.

**"இடதுகண்கள் சந்திரன் வலதுகண்கள் சூரியன்**
**இடக்கைசங்கு சக்கரம் வலக்கை வல மான்மழு**
**எடுத்தபாதம் நீண்முடி எண்திசைக்கும் அப்பறம்**
**உடல்கடந்து நின்றமாயம் யாவர்காண வல்லரோ"**[81]

என்று இருபெருந்தேவரையும் இணைத்துக் காட்டும் இடத்தில் சைவமும் வைணமும் இணைந்து சமய ஒருமையை உணர்த்தி நிற்கிறது. நாழியளவு உப்பும், அதே அளவும் நீரும் கலந்தால் வேறு வேறின்றி இரண்டும் ஒன்றாவதுபோல் இவ்விருவரும் ஒன்றாக நிற்பதை உணரக் காட்டும் சிவவாக்கியர், இதனை மறுதலிப்பவர்களும், மாற்றிப் பேசிப் பகை வளர்ப்பவர்களும் வாய் புழுத்து மாய்வர், நரகத்தில் வீழ்வர் என்றெல்லாம் சாபங்கள் இடுகிறார்.

**"நாழியப்பும் நாழியுப்பும் நாழியான வாறுபோல்**
**ஆழியோனும் ஈசனும் அமர்ந்துவாழ்ந் திருத்திடும்**
**ஏறில்ஏறும் ஈசனும் இயங்குசக்ர தரனையும்**
**வேறுகூறு பேசுவார் வீழ்வர்வீண் நரகிலே"**[82]

என்று இப்பாடலிலும்,

**"தில்லைநா யகன்னவன் திருவரங் கனும்அவன்**
**எல்லையான புவனமும் ஏகமுத்தி யானவன்**
**பல்லுநாவும் உள்ளபேர் பகுந்துகூறி மகிழுவார்**
**வல்லபங்கள் பேசுவார் வாய்புழுத்து மாய்வரே"**[83]

மேற்கூறிய கருத்துக்களை இப்பாடல்கள் வலியுறுத்தி நிற்பதைக் காண முடிகிறது.

எங்கள் தேவர் உயர்ந்தவர், உங்கள் தேவர் தாழ்ந்தவர் என்று மானுடர் தம்மோடு தெய்வத்தையும் இணைத்து உயர்வு தாழ்வு பேசுதற்கு எதிராக, அத்தகு மதவாதம் மறுத்து,

**“எங்கள்தேவர் உங்கள்தேவர் என்றிரண்டு தேவரோ**
**இங்குமங்கு மாய் இரண்டு தேவரே இருப்பரோ**
**அங்குமங்கு மாகிநின்ற ஆதிமூர்த்தி ஒன்றலோ**
**வங்கவாரஞ் சொன்னபேர்கள் வாய்புழுத்து மாள்வரே”** [84]

என்று கடுமையாக சபிக்கிறார்.

அவரது நோக்கில், திருவைந்தெழுத்தாகிய சிவாயநாமமும், இராம நாமமும் ஒன்றுதான்.

**“தங்கம்ஒன்று ரூபம் வேறு தன்மையான வாறுபோல்**
**செங்கண் மாலும் ஈசனும் சிறந்திருந்தது எம்முளே**
**விளக்களங்கள் பேசுவர் விளங்குகின்ற மாந்தரே**
**எங்குமாகி நின்றநாமம் நாமம்இந்த நாமமே”**[85]

என்பது அவர் கண்டு காட்டும் தெளிவாகும். பிறிதோரிடத்தில், அரியும், அயனும் ஒன்றாகி நின்ற பெற்றியை உணர்த்தி, அதனை வேறுவேறாக்கி, வேடமிட்டுப் பகைப்போரை மூடரென்று திட்டுகிறார்.

**“அரியுமாகி அயனுமாகி அண்டமெங்கும் மொன்றதாய்**
**பெரியதாகி உலகுதன்னில் நின்றபாத மொன்றலோ**
**விரிவதென்று வேறுசெய்து வேடமிட்ட மூடரே**
**அறிவினோடு பாருமிங்கு மங்குமெங்கு மொன்றதே”**[86]

என அமையும் இக்கருத்துடைய பாடல் இவற்றிற்கெல்லாம் அப்பால் அரி, அயன் ஆகிய அனைத்தும் கடந்த ஒன்றே என காட்டும் இடத்தில் அவர்தம் சமய ஒருமைப்பாட்டுச் சிந்தனைச் சுடர் விட்டு எரிவதைத் தெள்ளிதின் உணரலாம்.

**“அரியுமல்ல அயனுமல்ல அப்புறத்தில் அப்புறம்**
**கருமைசெம்மை வெண்மையைக் கடந்துநின்ற காரணம்**
**பெரியதல்ல சிறியதல்ல பற்றுமின்கள் பற்றுமின்கள்**
**துரியமும் கடந்துநின்ற தூரதூர தூரமே”[87]**

எல்லையைக் கடந்து நிற்கும் தன்மையை தெளிவுபடுத்தி சமய ஒருமைப்பாட்டின் உண்மை நிலையை எடுத்துக்கூறுகிறார்.

## சிவவாக்கியரின் சமுதாயச் சிந்தனைகள்

நிலவுடைமைச் சமுதாயத்தில் மேட்டிமை எதிர்ப்பில் ஓர் அங்கமாய் பல பண்பாட்டு அடையாளப் போராட்டங்கள் சில நிகழ்ந்துள்ளன. அவைகள்,

1. இழிவான பண்பாட்டு அடையாளங்களைத் துறப்பது.
2. மேட்டிமையோரின் பண்பாட்டு அடையாளங்களைத் தாமும் பின்பற்றுவது.
3. மேட்டிமையோரின் பண்பாட்டு அடையாளங்களைக் கேலிக்குரியதாக்குவது அல்லது கேள்விக்குறியாக்குவது.

என மூன்று வகைப்படும். இவற்றுள் முதல் இரண்டும் குழுமமாக இணைந்து போராடுவதை அடிப்படையாகக் கொண்டவை. மூன்றாவது எதிர்க்குரலாக மட்டும் ஒலித்து மேட்டிமை எதிர்ப்புணர்வை உருவாக்கும் தன்மையதுவாகும்.

சிவவாக்கியர் மூன்றாவது வழிமுறையைச் சார்ந்தவர். மேட்டிமையோரின் தனித்துவமான அடையாளங்கள் சிலவற்றைக் கேலிக்கும், கேள்விக்கும் உள்ளாக்கியவர். கோவில் வழிபாடு, குடுமிவைத்தல், பூணூல் அணிதல், நீராடல், எச்சில் குறித்த கட்டுபாடுகள், புலால் உண்ணாமை, வேதம் ஓதுதல்,தீட்டுக் கருத்தியல் ஆகியன தமிழக மேட்டிமையோரின் பண்பாட்டு அடையாளங்களாகக் காட்சி அளிக்கின்றன, அப்பண்பாட்டு அடையாளங்கள் குறித்து பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே சிவவாக்கியர் எதிர்க்குரல் எழுப்பியுள்ளார் என்பது வரலாற்று ஆய்வாளர் ஆ.சிவசுப்பிரமணியர் தம் கணிப்பாகும்.[88]

இத்தகு சிறப்புக்குரிய சித்தர் சிவவாக்கியர் தீமைகளை, சமூக அநீதிகளை மட்டும் எதிர்த்தார் அல்லர். அவற்றுக்கு எதிராக நன்மைகளையும் சமூக நீதிகளையும் நிலைநிறுத்தினார். பொய்ம்மையை எதிர்க்க அவருக்குள் வலுவாக நின்றது உண்மைத் தெளிவேயாம். அவர் மறுதலித்த அத்தனை சமுதாயத் தீமைகளுக்கும் எதிராக நற்பயன் நல்கும் மாற்றுச் சிந்தனைகளையும் அவர் முன்வைத்திருக்கிறார் எனபதே இங்கு இவரின் செயலில் காணக்கிடைக்கும் சிறப்பாகும்.[89]

## முடிவுரை

அறியாமையில் உழன்ற மக்களை அறிவியல் வழியில் ஆளாக்க முயன்ற சான்றோர்கள், ஒழுக்க நெறிகளை உருவாக்கி வைத்தனர். அவ்வொழுக்க நெறியைப் பரப்பும் தொண்டுநெறி காலப்போக்கில் சமய நெறிகளாயின. சமூதாயத்தில் சமயமானது மலர, சாதி சமய சடங்காசாரங்கள் மிகுந்தன. அதன் காரணமாக சமயச் சழக்குகள் தோன்றின. இதனால் மனிதர்களிடையே ஏற்றத்தாழ்வு ஏற்பட்டது. இதன் காரணமாக சமயப் பூசல்கள் தோன்றின.

சமுதாயம் உய்ய பொய் வழக்குகளைப் புலப்படுத்தி மெய்யுணர்வைப் புகட்டியவர்கள் சித்தர்களேயாவர். சித்தர்களின் மரபுவழித் தொடர்ந்த வழக்கும் சொல்லும் மக்கள் வாழ்வாங்கு வாழ வழி காட்டின. அவ்வகையில் சித்தர் சிவவாக்கியரின் அறிவியல் அறிவுரைகள் சமயக் குப்பைகளைச் சாடி நின்று, பொய் மதங்களைப் புறக்கணித்து, சமயப் போர்வையில் இருந்த போலிகளைத் தோலுரித்துக் காட்டின.

பிறரின் பொருளை மோசம் செய்து அபகரிக்க சிலர் பூசைகள், தியானம் போன்றவற்றை செய்வார்கள் போலிகள், இவர்கள் நேசம் கொண்டு பூசை செய்து, நீறு, சந்தன வாசமோடு பூசி நெற்றியில் திலகம் வைத்து மோசமும் செய்வார்கள். வெள்ளியைப் பொன்னாக்கிட ரசவாதம் செய்வேன் என்று பொய் கூறி அதற்கு முதலில் தேவைப்படும் பொன்னும் பொருளும் பெற்றுக்கொண்டு ஓடி மறைவார்கள். இன்னும் சில போலிகளோ யோக சாடிகள் செய்வார்கள், உயர எழும்புவார். வேகமாக அட்டமாசித்து கற்று நிறையப்பேசுவர். ஆனால் மாதரின் பால் மோகம் கொண்டு ஆசை வைப்பர்.

இன்னும் சிலரோ மாயவித்தைகள் செய்வர், காயகல்பம் தின்று உடலைக் காப்பதாக கூறி பலபடியாக மோசம் செய்வார்கள். கஞ்சா அடிப்பர், அபினை நேரிலேயே தின்பர். இந்த உலகில் உதாரியாகத் திரிவர். சீராக ஞானசித்தி உண்டாக்குகிறேன் என்று சொல்லிப் பிறர் பொருட்களை நீண்ட நாள் கைப்பற்றுவர். வேறு சிலரோ, காவி உடை அணிந்து, சடைமுடி தரித்து, கமண்டலம் கொண்டு இருக்க ஆசனம் பெற்று உருத்திராட்ச மாலைகள் அணிந்து யோகத்தண்டு முதலியன வைத்துக்கொண்டு தம் மனைவியரை அலையவிட்டுப் பல நாடுகள் சுற்றி வீடு தோறும் பிச்சைக் கேட்டு அலைவார்கள்.

இன்னும் சிலப் போலிமார்களோ, முத்திக்குப் போக இங்கயே சித்தி தருவேன் பார் என்று சொல்லிக்கொண்டு எங்கும் சாமிவேடம் கொண்டு தினமும் வயிறு வளப்பர். பக்தியைச் சொல்லிச் சொல்லிப் பணம் பறிப்பார்கள் என்று பலவாறாக இந்த சமூகத்தில் இருக்கும் சமய போலிகளை தோலுரித்துக் காட்டுகிறார்.

வாழ்வியல் உண்மைகளை ஞானத்தால் பகுத்தறிந்து மெய்ஞ்ஞானம் பெற்ற சித்தர்களே விஞ்ஞான கலரென்று குறிக்கப்பட்டனர். அவ்வழியில் சித்தர் சிவவாக்கியர் அஞ்ஞானமாகிய அறியாமையை நீக்க தந்த அறிவியல் தத்துவங்கள் யாவும் சித்தவிஞ்ஞானமாகும். அறங்களிலேயே சிறந்தது இல்லறம் போற்றும் நல்லறமேயாகும் என்பதனை விளக்கி நாதம் கணவனாகிய சிவம் எனவும், தீபம் மனைவியாகிய பராசக்தி என்பதனையும் தெளிவுப்படுத்துகிறார்.

அவைமட்டுமன்றி, பெண்ணைச் சேராத தேவர் (தெய்வம்) இவ்வுலகில் எங்ஙனும் உள்ளரோ, மாதர் தோள் சேரும் மனிதருக்கு வாழ்வு சிறக்கும். மாதராவது ஒரு சக்தியே. அதனால் தான் கங்கையை ஈசனுமே மகிழ்ந்து ஏற்றுக்கொண்டான் என்று மனைவியின் முக்கியத்துவத்தை எடுத்துக் கூறுகிறார். ஆகவே தான் வளமான மனையில் இருந்து இல்லறம் செய்து வருவிருந்தினரைப் பேணி வாழுங்கள். வரும் விருந்தே தெய்வமாகி உங்களுக்குச் சிவாயம் வாழ்வு அளிக்கும் என்று கூறி இல்லறம் போற்றுவதே சிறந்த நல்லறமாகும் என்று நிலைநிறுத்துகிறார்.

சிவவாக்கியரின் படைப்புகள் ,முழுமையாக சமூகச்சீர்மை எனும் மையப்புள்ளியை நோக்கியே செல்கிறது. ஒன்றாகிய பரம்பொருளானது எங்கும் நிறைந்திருக்கிறது என்ற கோட்பாடும், இறையின்பம் துய்க்க இடைத்தரகரும், பொருட்செலவு மிக்க புறவழிபாட்டு முறை மறுப்பும், இறையின்பம் எனும் அகக்காட்சி அனுபவம் சாதி, சமய சமூக மதிப்பு எனும் வேறுபாடுகளின்றி மக்கள் அனைவருக்கும் பொது என்று எடுத்துரைப்பதும், ஆன்மிகப் பொதுவுடமை இவையாவும் சமூகச்சீர்மையை நோக்கியே அமைந்துள்ளது.

சிவவாக்கியர் தனிமனித உள்ளத்தில் மாற்றத்தையும், மலர்ச்சியையும் உருவாக்குவதன் மூலம் சமூக அமைப்பிலும், போக்கிலும் மாபெரும் மாற்றத்தையும் வளர்ச்சியையும் காண விரும்புகிறார். சமூகத்தில் வரன்முறை நாத்திகக் கொள்கைகளைத் தெளிவாகவும் நிறைவாகவும் வெளியிட்டு, உருவ வழிபாட்டினையும், சமயச் சடங்குகளையும், சாதிபேதங்களையும் ஆசாரவேடமிடும் அனைத்தையும் கடிந்து உண்மைப் பொருளை உணரக் கூறி மக்களைக் கடைந்தேற்றும் கருணையில் விழைந்து நிற்பதாக அமைகிறது சிவவாக்கியரின் பாடல்கள்.

சமுதாயத்தில் மலிந்து நிற்கும் பொய்களை எதிர்த்துப் புரட்சிக்குரல் கொடுத்தவர்களுள் குறிப்பிடத்தக்கவர் சிவவாக்கியர் ஆவார். தாம் வாழும் சமூதாயத்தைப் பற்றி அதிகம் அக்கறை கொண்டு சமூக ஏற்றத்தாழ்வுகள் ஏமாற்றுகள் போன்ற சமூகக் கேடுகளைக் களைந்து மக்கள் அனைவரும் இணைந்து அன்புடன் வாழ்ந்திட நெறிப்படுத்துகிறார். சாதி சமய ஒருமைப்பாடு தனிமனித வாழ்க்கை அறம், ஆகியனவையை அறிவுறுத்துகிறார். சாதி மத பேதங்கள் மலிந்த மண்ணில் அறியாமையால் பெருகிக்கிடக்கும் மூடப்பழக்கவழக்கங்கள் மக்களை இருளில் ஆழ்த்திய நிலையில் அவரின் சொல்லாற்றாலால் சாடுகிறார்.

இறைவன் படைப்பில் எல்லோரும் சமம். இதில் உயர்ந்தவர் தாழ்ந்தவர் என்ற பேதம் இல்லை. மனிதருக்குள் வேறுபாடு காண்பது அவனுடைய அடிப்படை உரிமையே (Constitutional Rights) பறிப்பதாகும். ஒரு மனிதன் மற்றொரு மனிதனைப் பார்த்து ஒதுங்கிக்கொள் என்று கூறுவது

ஒருவரின் உரிமையைத் தடை செய்வதேயாம், எனத் தீண்டாமையைக் கண்டிக்கிறார்.

இதைத் தொடதே, இது எச்சில் என்று சொல்கின்றவர்களே, வாயில் குடிக்கும் நீரானது எச்சில் என்றால் வாயால் முணுமுணுக்கும் வேதம் எச்சில் இல்லையோ! என்றும், வேதம் எச்சில் வேதம் எச்சில், பூதலங்கள் எச்சில், விந்து எச்சில், மதமும் எச்சில், ஒளியும் எச்சில் எதில் எச்சில் இல்லை எடுத்துரைப்பீர்! என்று கூறுகிறார். சாதிப்பெயரில் தீண்டாமை கொடுமை நிகழ்ந்தமையை எடுத்துரைக்கிறார்.

சாதிசமய பேதமற்ற சமநிலைச் சமுதாயம் காண முற்பட்டோருள் சிவவாக்கியர் சிறந்து விளங்குகிறார். ஆன்மாவிற்கு சாதி இல்லை, ஆன்மா எடுக்கின்ற உடல், அவ்வுடல் வாழுகின்ற இடம், மேற்கொள்ளும் செயல் போன்றவற்றை கொண்டே சாதிகள் கற்பிக்கப்படுகின்றன. மனித இனம் அடிப்படையில் ஒன்றே, சாதி வேறுபாடுகள் யாவும் புறத்தளவே கற்பிக்கப்பட்டவைகளாகும். போக இன்பம் எல்லாச் சாதி உடல்களில் வேறுபாடின்றியே வெளிப்படுகிறதே என்றும் எடுத்துரைக்கின்றார்.

நான்கு வேதங்கள் கூறும் உண்மையும், அனைத்து சாத்திரங்களில் உரைக்கப்பட்டுள்ள உண்மையும், ஐந்துபூதத் தத்துவங்களில் காணும் உண்மையும் ஒன்றான மெய்ப்பொருளை அறிவதற்கே அமையப்பெற்றது. அதுதான் சாதி பேதம் இல்லை என்கிற உண்மை பேதமாக இருக்கிறது. பிறக்கும்போது, பூணூல், குடுமி, கோவணம் ஆகியவற்றோடு எவரும் பிறப்பதில்லை, வேத சாத்திரங்கள் நிறைந்த மனத்தோடு எவரும் பிறப்பதில்லை எனவே பிறப்பால் உயர்வும் இல்லை, தாழ்வும் இல்லை என்று சிவவாக்கியர் கசடறத் தெளிவுறுத்துகிறார்.

எல்லா மனிதரும் சலம்திரண்ட நீராலே உருவானவர்களே என்றிருக்கையில், சாதி எங்கே, மதம் எங்கே என வினவுகிறார். மனித குலத்தைச் சாதி என்ற பேரால் வகைப்படுத்தி வைத்துக்கொண்டு, மக்கள் அறியாமையில் வாழ்கின்றனர். அனைவரின் பிறப்புக்கும் ஒரே காரணமாக இருப்பதே “சுக்கிலம்” என்ற உண்மையை உணர்வீர்களாக. இதுமட்டுமன்றி, போலி ஒழுக்கங்களை சாடுதலும், சாத்திரங்களை சாடுதலும், சடங்குகளை சாடுதலும், கோவில் குலங்களின் போலித் தன்மைகளைச் சாடுதலும், போலி வழிபாடு பூசையையும் சாடுதல், மந்திரங்களை சாடுதல்,

உருவவழிப்பாட்டினை சாடுதல், தேர்த்திருவிழாவால் எழுந்த சழக்குகளை எடுத்துரைத்தல், நீர்ச்சடங்கின் போலித்தன்மையைப் புலப்படுத்துதல், தீட்டு என்ற தீண்டாமை நிலையின் தெள்ளுதின் உரைத்தல், தனிமனித ஒழுக்கத்தின் இன்றியாமையாததின் தன்மையினை அறிவுறுத்தல், சமய ஒருமைப்பாட்டினை வழியுறுத்தல் போன்றவற்றைப் பற்றி எல்லாம் அறிவியல் பூர்வமாக அணுகி, அணுகிய அவ்வனுபவங்களை அறங்களாக்கி மக்களுக்கு தம் பாடல்களில் வார்த்திருக்கிறார் சித்தர் சிவவாக்கியர் அவர்கள்.

## சான்றாதாரங்கள்


1. முனைவர். அ. அறிவொளி. சித்தர் பாடல்கள் (மூ—உ)—ப -275 – 276.
2. முனைவர். அ. அறிவொளி. சித்தர் பாடல்கள் (மூ—உ) – ப – 276.
3. முனைவர். அ. அறிவொளி. சித்தர் பாடல்கள் (மூ—உ) – ப – 276.
4. முனைவர். அ. அறிவொளி. சித்தர் பாடல்கள் (மூ—உ) – ப— 276
5. முனைவர். அ. அறிவொளி. சித்தர் பாடல்கள் (மூ—உ) – ப – 276
6. முனைவர். அ. அறிவொளி. சித்தர் பாடல்கள் (மூ—உ) – ப – 277
7. முனைவர். அ. அறிவொளி. சித்தர் பாடல்கள் (மூ—உ) – ப – 277
8. முனைவர். அ. அறிவொளி. சித்தர் பாடல்கள் (மூ—உ) – ப – 278
9. முனைவர். அ. அறிவொளி. சித்தர் பாடல்கள் (மூ—உ) – ப – 278
10. முனைவர். அ. அறிவொளி. சித்தர் பாடல்கள் (மூ—உ) – ப – 278
11. முனைவர். அ. அறிவொளி. சித்தர் பாடல்கள் (மூ—உ) – ப – 195
12. முனைவர். அ. அறிவொளி. சித்தர் பாடல்கள் (மூ—உ) – ப – 272
13. முனைவர். அ. அறிவொளி. சித்தர் பாடல்கள் (மூ—உ) – ப – 274
14. சித்தர் சிந்தனைகள் – ப – 107
15. தத்துவக்குவியல்கள் – ப – 107

16. Wibur s. Cott, Five Approches of Literary Criticism – Pag ( ப ) -123

17. முனைவர். இரா. கலாவதி. சித்தர் பாடல்களில் நடப்பியல் – ப – 112

18. சிவவாக்கியர் பாடல்கள் – 47

19. சிவவாக்கியர் பாடல்கள் – 41

20. சிவவாக்கியர் பாடல்கள் – 42

21. முனைவர். இரா. கலாவதி. சித்தர் பாடல்களில் நடப்பியல் – ப – 113

22. முனைவர். க. இளமதிசானகிராமன், சித்தர்களின் சிந்தனைகள்–ப-103

23. சிவவாக்கியர் பாடல்கள் – 171

24. ந. கைலாசபதி

25. சிவவாக்கியர் பாடல்கள் – 47

26. சிவவாக்கியர் பாடல்கள் – 126

27. பாம்பாட்டிச்சித்தர் – பா – 123

28. காகபுசுண்டர் – பா – 85

29. சிவவாக்கியர் பாடல்கள் – 217

30. சிவவாக்கியர் பாடல்கள் – 112

31. முனைவர். ந. சண்முகவடிவு. சித்தர்கள் காட்டும் சமுதாயம்–பா– 105

32. சிவவாக்கியர் பாடல்கள் – 40

33. சிவவாக்கியர் பாடல்கள் – 473

34. சிவவாக்கியர் பாடல்கள் – 22

35. சிவானந்தபோதம் – பா – 27

36. சிவவாக்கியர் பாடல்கள் – 474

37. போகர் சுத்தகாண்டம் – பா – 713

38. போகர் சுத்தகாண்டம் – பா – 699

39. போகர் சுத்தகாண்டம் – பா – 670

40. சிவவாக்கியர் பாடல்கள் – 14

41. பத்திரகிரியர், ஞானப்புலம்பல் - பா – 156

42. பாம்பாட்டிச்சித்தர் – பா – 98

43. அகப்பேய்ச் சித்தர் – பா – 76

44. முனைவர். ந. சண்முகவடிவு. சித்தர்கள் காட்டும் சமுதாயம் – ப– 90

45. சிவவாக்கியர் பாடல்கள் – 285

46. சிவவாக்கியர் பாடல்கள் – 131

47. சிவவாக்கியர் பாடல்கள் – 35

48. திருமந்திரம், பா – 1792

49. சிவவாக்கியர் பாடல்கள் – 29

50. சிவவாக்கியர் பாடல்கள் – 34

51. சிவவாக்கியர் பாடல்கள் – 31

52. சிவவாக்கியர் பாடல்கள் – 30

53. சிவவாக்கியர் பாடல்கள் – 520

54. சிவவாக்கியர் பாடல்கள் – 93

55. அ. பாண்டியன், சித்தர் சிவவாக்கியர், ப– 236

56. சிவவாக்கியர் பாடல்கள் – 141

57. சிவவாக்கியர் பாடல்கள் – 142

58. பாம்பாட்டிச்சித்தர் – பா – 92

59. சிவவாக்கியர் பாடல்கள் – 494

60. சிவவாக்கியர் பாடல்கள் – 242

61. அ. பாண்டியன், சித்தர் சிவவாக்கியர், ப – 239

62. சிவவாக்கியர் பாடல்கள் – 213

63. சிவவாக்கியர் பாடல்கள் – 132

64. சிவவாக்கியர் பாடல்கள் – 167

65. சிவவாக்கியர் பாடல்கள் – 496

66. சிவவாக்கியர் பாடல்கள் – 436

67. சிவவாக்கியர் பாடல்கள் – 499

68. முனைவர். சா. குளோரி. சிவவாக்கியர் பாடல்.

69. சிவவாக்கியர் பாடல்கள் – 136

70. சிவவாக்கியர் பாடல்கள் – 49

71. சிவவாக்கியர் பாடல்கள் – 50

72. சிவவாக்கியர் பாடல்கள் – 207

73. கடுவெளிச்சித்தர் – ப – 25 – 29

74. கொங்கணச்சித்தர், வாலைக்கும்மி, ப – 66 – 87

75. புறநானூறு. பா – 101

76. திருக்குறள் – 34

77. சிவவாக்கியர் பாடல்கள் – 186

78. திருக்குறள் – 78

79. அகத்தியர்ஞானம். காப்பு விருத்தம்.

80. க. நாராயாணன். சித்தர் சிவவாக்கியர். ப – 175 – 176

81. சிவவாக்கியர் பாடல்கள் – 54

82. சிவவாக்கியர் பாடல்கள் – 55

83. சிவவாக்கியர் பாடல்கள் – 56

84. சிவவாக்கியர் பாடல்கள் – 133

85. சிவவாக்கியர் பாடல்கள் – 22

86. சிவவாக்கியர் பாடல்கள் – 225

87. சிவவாக்கியர் பாடல்கள் – 10

88. முனைவர். ஆ. கருணாநிதி (தொ.ஆ). சித்தர் இலக்கியங்களில் சமூகப்பார்வை. ப – 149 – 150

89. அ. பாண்டியன், சித்தர் சிவவாக்கியர், ப - 250

# சித்தர் சிவவாக்கியர் பாடல்களில் காணப்படும் வாழ்வியல் கூறுகள்

## முன்னுரை

உலகம் நிலையாக இயங்குகின்றது. இயங்கும் உலகத்தில் நிலையில்லாமல் மானுட உலகம் தொடர்கின்றது. இத்தொடர்ச்சியில், நிலையற்ற வாழ்வின் மானுடராய்ப் பிறந்தும், மெய்வருத்தி, வாழ்வின் நிலைப்பினைக் கண்டறிந்து, புத்துலகம் கண்டவர்கள் சித்தர்களாவார். அவர்கள் கண்ட வாழ்வியல் உண்மைகள் பாமர மக்களையும் நல்வாழ்வு பெறச் செய்யும் அறிவுரையாக வழிவழித்தொடர்ந்து நின்று சித்தாந்தங்கள் எனும் பொருட்பேறு பெற்றன. வாழ்வின் நல்லன, அல்லன இவை என மக்கள் பகுத்தறிந்து நல்வழிப்பட்டு உறுதி பெறும் வகைக்குச் சித்தர் சித்தாந்தங்கள் வாயில்களாக அமைந்தன.

கல்வி கற்றுத் தேர்வது சித்தநிலை என்பதாகாமல், உலகின் உண்மை நிலையை உணர்ந்து, தேர்ந்து தெளிதலே சித்த நிலையாகியுள்ளது. அறியாமையிலும், ஆசைக்கிலக்கானமையாலும, உழன்றும் சுழன்றும், பிணிமூப்பினால் நலிந்தும் இறந்தும், மறைந்தும் போகும் மக்களினம், தத்தமக்கு ஏற்புடைய நிலையில் செம்மையான வாழ்க்கையைப் பின்பற்றும் சித்தாந்தங்களை வெளிப்படையாகவும், குறிப்பாகவும் உணர்த்தியவுடன், தம்மையே சான்றாகவும் அமைத்துயர்ந்தோர் சித்தர்களேயாவர்கள்.

சித்தர் காட்டிய சித்தாந்தங்கள் வற்புறுத்தும் முதன்மைக் கருத்து, வாழ்வியற் செம்மையேயாகும். இதனையே வள்ளுவரும்

**“வைத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்**
**தெய்வத்துள் வைக்கப் படும்”**

எனக் கூறி செல்கிறார்.

நிலையாமையினை உணர்ந்து, நிலைத்த முத்திப் பேற்றினைக் காணும் சித்தநெறி ஒன்றேயாயினும், ஆழ்கடலில் சென்று கூடும் ஆறுகளைப் போல, அதன் வழிமுறைகள் பலவாயின. மானுடவுடம்பினை இயக்கும் உயிர்க்கு உறுதியாகிய ஊதியம் பெருக்கி, பொறிவாயில் ஐந்தவித்து, பொய்தீர் ஒழுக்க

நெறி நின்றாராகிய சித்தர்கள் அற்புதமாக அறிந்துணர்ந்து காட்டிய ஒழுக்கநெறியே சித்தக் கோட்டையின் அற்புதத் தோரணவாயிலாகும்.

**“ஆறிவுதான் ஆண்டவன்”** என்பதனை உணர்ந்து, அக்கோட்பாட்டின் கண் வழிப்பட்டுத் தன்னையறிந்து, தன் தலைவனை உணர்ந்து, வாழ்வின் உண்மையில் ஒன்றுப்பட்டு நின்ற சித்தர் சிவவாக்கியர் தம் பாடல்களில் கூறிப்போந்துள்ள வாழ்வியல் கூறுகளை அவர் தம் பாடல்கள் வாயிலாகக் காண்போம்.

## பிறப்பு பற்றி சித்தர் சிவவாக்கியரின் ஞானக் கருத்து

ஒன்றே பலவாக பரிணமித்திருக்கிறது என்பது இந்தியத் தத்துவங்களில் பரவலாகக் காணப்படும் கொள்கை. சித்தர்கள் பலரும் இக்கொள்கை உடையவர்களே.

**“ஒன்றான பிரம்மமே வெவ்வேறாக உலகத்தில்**
**ஆனந்தமாட கூத்துமாச்சு”**[1]

நால்வகைத் தோற்றம், எழுவகைப் பிறப்பு, எண்பத்து நான்கு லட்சம் உருவ வேற்றுமைகளோடு விளங்கும் உயிரினங்களுள் மனிதப் பிறவியே சிறந்தது . அரியது. “அரிதரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது” என்பது அவ்வையாரின் கூற்றுமாகும்.

உயிரும் உடலும் சேர்ந்து உலகியல் வாழ்வுக்கு வருவதைப் பிறப்பு என்கிறோம். இவ்விரண்டில் உயிர், உடலெடுக்கிறதா அல்லது உடல், உயிரெடுக்கிறதா என்பது ஒரு சிக்கலான வினா?. சடமான உடல் தானாக ஓர் உயிரெடுக்க இயலாது. உயிர் தனக்குத் தானே ஓர் உடலை எடுத்துக் கொள்ள முடியுமானால் அங்கக் குறைவு ஏதுமில்லா அழகுடலை அனைத்து உயிர்களும் எடுத்துக் கொள்ளலாமே! ஆனால், குறைப்பட்ட உடம்பையும் உயிர் எடுப்பதால் அவ்வாறு துணிதற்கும் முடியவில்லை. வினைப்பயன்கட்கு ஏற்றவாறு இன்ப துன்பங்களைத் துய்த்து மலம் நீங்கி உயிர் விடுதலை பெறும் பொருட்டு உயிரையும் உடலையும் இறைவன் கூட்டுவிக்கின்றான், உலகியலில் ஆட்டுவிக்கின்றான் என்பது சித்தர்களின் கருத்தாகத் திகழ்கிறது. எனினும்

சிவவாக்கியர் பிறப்புப் பற்றி கீழ்க்கண்டவாறு தம் பாடல்களின் வாயிலாக தெளிவுப்படுத்துகிறார்.

**கருத்தரிக்கு முன்னெலாங் காயம்நின்றது எவ்விடம்**
**உருத்தரிக்கு முன்னெலாம் உயிர்ப்புநின்றது எவ்விடம்?**[2]

கருவில் நாம் உருவாகும் முன் நமக்குரிய உடம்பு எங்கே காத்திருந்தது? உருவம் உடம்பிற்கு உண்டாவதற்கு முன்பு உயிர்ப்பு எவ்விடம் இருந்ததது?

**கருத்தரிக்கு முன்னெலாம் காயம்நின்ற தேயுவில்**
**உருத்தரிக்கு முன்னெலாம் உயிர்ப்புநின்றது அப்புவில்**[3]

கருவில் உடல் உண்டாகும் முன்பு அது எங்கே இருந்தது என்றால் அது சோதியில் என உணர்க. உரு உண்டாவதற்கு முன் உயிர்ப்பு எங்கே இருந்தது என்றால் அது நீரிலேயாகும்.

**கருத்தரிப்ப தற்குமுன் காயம்நின்றது எவ்விடம்**
**உருத்தரிப்ப தற்குமுன் உயிர்ப்புநின்றது எவ்விடம்**
**அருட்பொதிந்த சிந்தையில் மயக்கம்நின்றது எவ்விடம்**
**விருப்புனர்ந்த ஞானிகள் விரித்துரைக்க வேணுமே.**[4]

கருவில் நாம் பெற்ற உடம்பு அதற்கு முன்பு எங்கே இருந்தது? கருவே உருவமாகியபின் உண்டாகும் உணர்வு அதற்கு முன்பு எங்கே இருந்தது? அருள் சிறந்திடும் சிந்தையில் குழப்பம் வருகிறதே, அது அதற்கு முன் எங்கே இருந்தது? விருப்பதற்குரிய ஞானிகளே, இதை விரிவாகச் சொல்லுங்கள்.

விதையில் வளரும் ஆலமரம் அதற்கு முன்பு எங்கிருந்தது? அது சூரிய ஒளி சூழ்ந்த பரவெளியில் இருந்தது. அதன் துணையுடன்தான் மரம் வளர்ந்தது. உணர்வு கூட இந்த வெளியில்தான் உள்ளது. எல்லாமே வெட்ட வெளியில்தான் உள்ளன.

விதையில் உண்டாகும் உயிராற்றல் அதற்குரிய ஆல மரத்தை வெளியில் இருந்து பெறுகிறது. தாயின் கருவில் நுழைந்த உயிராற்றல் அதற்குரிய உடலை வெட்ட வெளியிலிருந்தே பெறுகிறது.[5]

சிவவாக்கியர் மட்டுமன்றி கடுவெளிச்சித்தர், பாம்பாட்டிச்சித்தர், பட்டினத்தார் போன்ற ஏனையச் சித்தர்களும் மேற்கூறிய சிவவாக்கியரின் கருத்தினையே ஒத்து நிற்பதனைக் காண முடிகிறது.

## அண்டத்தில் உள்ளது பிண்டத்திலும் உள்ளது

**“மலர்ந்ததாது மூலமாய் வையகம் மலர்ந்ததும்**
**மலர்ந்தபூ மயக்கம்வந்து அடுத்ததும் விடுத்ததும்**
**புலன்கள் ஐந்தும் பொறிகலங்கி பூமிமேல் விழுந்ததும்**
**இலங்கலந்து நின்றமாயம் என்ன மாயம் ஈசனே”[6]**

தானேயாய் மலர்ந்த தாதுவாகிய மூலப்பிரகிதியிலிருந்து பூமியானது தோன்றியதும், அந்தப் பூமியில் பல பொருள்களும் கலந்து நிரம்பியதும், பிறகு அவை பிரிந்ததும், ஐந்து புலன்களும், பொறிகளும் தமக்குள் கலங்கியே பூமியில் விழுந்து உடல்களாக வந்தன எனவும் இந்த உலகின் தோற்றத்திற்கு காரணமாக இருக்கும் நிலையைக்கண்டு தெளிவுப்படுத்துகிறார்.[7]

**“வட்டமென்று உம்முளே மயங்கிவிட்டது இவ்வெளி**
**அட்ட அக்கரத்துளே அடக்கமும் ஒடுக்கமும்**
**எட்டும்எட்டும் எட்டுமாய் இயங்குசக் கரத்துளே**
**எட்டலாம் உதித்ததுஎம் பிராணனைநா னறிந்தபின்” [8]**

பிரபஞ்சமாகிய வெளி உமக்குள் ஒரு வட்டம் போல் ஐக்கியமாகிவிட்டது பிண்டமாகிய உடலில் அண்டமாகிய பிரபஞ்சம் அடக்கம் அட்ட அக்கரம் கொண்டே அதை அறியலாம்.[9]

**“ஆதியந்த மூலவிந்து நாதம் ஐந்து பூதமாய்**
**ஆதியந்த மூலவிந்து நாதம் ஐந்து எழுத்துமாய்**
**ஆதியந்த மூலவிந்து நாதம்மேவி நின்றதும்**
**ஆதியந்தம் மூலவிந்து நாதமே சிவாயமே” [10]**

ஆதியும் அந்தமுமாகிய மூலப்பிரகிதியிலிருந்து விந்துவும் நாதமும் (ஒளியும், ஒலியும்) தோன்றி ஐந்து பூதங்களாய் விரிந்தன. இதேபோல்

உடம்பிலும் மூலாதாரத்திலிருந்து ஒளியும், ஒலியும் தோன்றி ஐம்பூத ஆதாரங்களாக விரிந்தன. இவ்வாறாக அண்டத்திலும் உடலாகிய பிண்டத்திலும் மூலப்பொருள் விந்து நாதங்களாகத் தோன்றுவது அவைகளாகவே அடங்குவதும் சிவாயத்தாலே என்கிறார்.[11]

**சூரிய மண்டலம் (ஒன்மீன்படலம் பழங்கோள்)**

புவி உட்பட மொத்த சூரியமண்டலமும் விண்மீனிடை சுழலும் தூசி மற்றும் வாயுக்களால் உருவானதாகும். அது சூரிய ஒன்மீன்படலம் எனப்படுகிறது. $10^9$ ஆண்டுகளுக்கு முன் நடந்த **மீயொளிர் விண்மீன் பெருவெடிப்புக்குப்பின்** “நீரியம்” மற்றும் “ஈலியம்” புவியில் உருவானது. அருகே நடக்கும் **மீயொளிர் விண்மீன் பெருவெடிப்பு** அதிர்வுகளால் $4.5^9$ ஆண்டுகளுக்கு முன் இந்த சூரியன் ஒன்மீன் படலம் சுருங்கத்தொடங்கியது. இத்தகைய அதிர்வுகளால் ஒன்மீன் படலம் சுழன்று “வளைவுந்தம்” எனப்படும் உந்துசக்தியைப் பெற்றது. சுழற்சி, புவியீர்ப்புவிசை மற்றும் “நிலைமத்தால்” முடக்கப்பட்டு இத்தகைய ஒன்மீன் படலம், ஒன்மீன்படல பழங்கோள் வட்டுக்கு செங்குத்து சுழற்சி அச்சில் சுழலத்தொடங்கியது. பெரும்பாலான நிறை படலத்தின் மையத்திலிருந்தாலும், வளைவுந்தம் மற்றும் மோதலால் உருவான ஒழுங்கின்மையால் சில கிலோமீட்டர் நீளம்கொண்ட பழங்கோள்கள் மையத்தை நோக்கி சுழலவும் செய்தன.[12]

சுழல் வேக அதிகரிப்பும், பெருப்பொருட்கள் விழுதலும் மற்றும் பொருளீர்ப்பின் அழுத்தமும் படலத்தின் மையப்பகுதியில் “இயக்க ஆற்றலை” அதிகரிக்கத் தொடங்கியது. ஆற்றலை கடத்தும் வழியின்றி வட்டின் மையம் வெப்பமாகி, “நீரியம், ஈலியம்” அணுவாகமாறி “அணுக்கரு இணைவு” நடைபெற்று இறுதியில் டி டவுரி ( T. Tauri ) நட்சத்திரம் தீப்பற்றி “சூரியன்” உருவாகியது. இதற்கிடையில் சூரியனைச் சுற்றிக்கொண்டிருந்த பொருட்கள் குளிர்ந்து மேலும் அந்த பொருளீர்ப்பு விசைக்கு அப்பாற்பட்ட தூசிகளும் கூளங்களும் ஒன்றிணைந்து கோள்களாக உருமாறின[11]. இப்படித்தான் புவியும் $4.5^4$ பில்லியன் ஆண்டுகளுக்கு முன் தோன்றி 10-20 மில்லியன் ஆண்டுகளுக்கு முன் அதிகளவு முழுமைப் பெற்றது. கோள்களாக

ஒன்றிணையாத தூசிகளும் பொருட்களும் புதிய டி டவுரி நட்சத்திரமான சூரியனின் சூரியக் காற்றால் அடித்து வெளியேற்றப்பட்டன. சூரியமண்டலத்திலுள்ள “பாறைக் கோள்கள்” பழங்கோள்கள் வட்டுமூலம் தோன்றியாதாக கணினி பாவனைகள் காட்டுகின்றன.

சூரியமண்டலத்தின் தோற்றம், கோள்கள், அமைவு பற்றி அனுமானிக்கப்பட்ட ஒன்மீன் படல கருதுகோளே ஏனைய அண்டம் மற்றும் “புறக்கோள்களுக்கும்” கருதுகோளாகிறது. நவீன கணினி மாதிரி ஆய்வுகளின் படி “உயிர்” தோற்றத்திற்கு முதன்மையான “கரிமச் சேர்வை” புவி உருவாதற்கு முன்பே பழங்கோள் வட்டிலிலுள்ள அண்டத்தூசியில் இருந்திருக்கலாம் எனக் கருதப்படுகிறது[13] அதேபோல வேறு “விண்மீன்” கூட்டத்திலுள்ள கோள்களுக்கும் நடந்திருக்கலாம்.[14]

## புவியின் தோற்றம்

புவியானது 4.5[4] பில்லியன் ஆண்டுகளுக்கு முன் சூரிய ஒன்மீன் படலத்திலிருந்து பிரிந்து அடர்வளர்ச்சியின் பயனாக உருவானது. தொடக்கத்தில் எரிமலை வாயுவால் காற்றுமண்டலம் உருவானது. ஆனால் அதில் உயிர்வாழத் தேவையான “பிராணவாயு” இல்லாமல் நச்சு வாயுக்களைக் கொண்டதாகயிருந்தது. பெரும் எரிமலைச் சிதறலாலும், பிற அண்டவெளிப் பொருளில் மோதிக்கொண்டேயிருந்ததாலும் புவியின் பெரும்பகுதி உருகிய நிலையில் மாறியதாகவும் கருதப்படுகிறது. பல காலங்கள் புவி குளிர்ச்சியடைந்து திட நிலையானது. புவியில் மோதிய “வால்வெள்ளிகள்” மற்றும் “சிறுகோள்கள்” மூலமாக மேகங்கள் உருவாகி பெருங்கடல்கள் உருவாகின. அதன் பின்னரே உயிர்கள் வாழ தகுந்த சூழல் உருவானது அடுத்து “பிராணவாயுவும்” அதிகரிக்கத் தொடங்கியது.

வெறும் நுண்ணுயிர்கள் மற்றும் மிகச்சிறிய உயிர்கள் மட்டும் ஒரு பில்லியன் ஆண்டுகள் வரை புவியில் இருந்துள்ளன. 580 பில்லியன் ஆண்டுகளுக்கு முன் பலசெல் உயிரினங்கள் தோன்றி ‘”கேம்பிரியக் காலத்தில்” முக்கிய “பெருந்தொகுதிகள்” பரிணமித்தன. 6 மில்லியன் ஆண்டுகளுக்கு முன் தான் மனிதயினத்தின் நெருங்கிய சிம்பன்சிகள் தோன்றின. அதிலிருந்து “மனிதக்கூர்ப்புகள்” பிரிந்து தற்கால நவீன மனிதர்கள் உருவானார்கள்.

புவி தோன்றிய காலம் தொட்டே நமது கோளில் உயிரியல் மற்றும் நிலவியல் மாற்றங்கள் நடந்தவண்ணமே உள்ளது. உயிரினங்கள் “படிவளர்ச்சிக் கொள்கைப்படி” புதிதுபுதிதாக உருவாகிக்கொண்டே மாற்றத்தை நிகழ்த்துகின்றன. புவியின் தற்போதைய கண்டங்கள் மற்றும் பெருங்கடல்களின் வடிவத்திற்கு முக்கியக்காரணம் “தட்டுப் புவிபொறைக் கட்டமைப்பு” ஆகும். “கமழிப் படலத்” தோற்றமும், பிராணவாயு பெருக்கமும், “மண்” உருவாக்கமும் செய்து உயிரற்ற நிலைமையும் காற்றுவெளியின் கணிசமான மாற்றத்தையும் கொண்டுவந்தது இந்த “உயிர்க்கோளம்” ஆகும்.

பழைய புவிக்கோளின் வெப்பம் தன்னுளிருந்த “உலோகங்களை” உருக்கப் போதுமானதாகயிருந்தது, அதனால் தான் உயர் அடர்த்தி கொண்ட உலோகங்கள், இரும்பை ஒத்த உலோகங்கள் (Siderophile Elements) எல்லாம் புவியின் மையத்தை நோக்கியும், அடர்த்தி குறைவான “சிலிக்கான” புவியின் மேற்புறத்திற்கும் வந்தன. இத்தகையத் தொடர் பிரிவினையின் காரணமாக புவி தோன்றி 10 மில்லியன் ஆண்டுகள் கழித்து மேற்ப்பரப்பில் பல அடுக்குகள் உருவாகின மற்றும் “புவியின் காந்தப்புலம்” உருவாகவும் வழிகோலியது. குளிர்ச்சியின் பயனாக சிலிக்கான் வாயுக்கள் பாறைகளாக புவியின் மீது உருவாகியது. அப்போது வளிமண்டலத்தில் “நீரியம்” மற்றும் “ஈலியம்” போன்ற அடர்த்தி குறைவான வாயுக்கள் அதிகமாகியிருந்தன. பின்னர் சூரியப்புயலாலும் புவியின் ஈர்ப்பாலும் இந்த நச்சுவாயுக்கள் விரட்டப்பட்டு, வெப்பத்தால் நீராவியும், எரிமலைகளால் “நைட்ரஜன்” வாயுவும் படிப்படியாக உருவாகி புவியின் மேற்புறத் தோற்றமாகிய முதல் வளிமண்டலம் தோன்றின.[15]

## வேதித்தனிமம்

வேதித்தனிமம் (Chemical Element) என்பது “அணுக்கருவில்” ஒரே எண்ணிக்கையில் புரோட்டான்களைப் பெற்றிருக்கும் ஒரே வகையான அணுக்களைக் குறிக்கும்[16] . இதுவரை 118 தனிமங்கள் அடையாளம் காணப்பட்டுள்ளன. இவற்றில் 94 தனிமங்கள் இயற்கையில் தோன்றுவனவாகும் எஞ்சியிருக்கும் 24 தனிமங்களும் செயற்கை முறையில் தயாரிக்கப்படுவனவாகவும் இருக்கின்றன. குறைந்த பட்சமாக 80 தனிமங்கள்

ஒரு ஐசோடோப்பையாவது பெற்றுள்ளன. மீதமுள்ள 38 தனிமங்களின் உட்கருக்கள் கதிரியக்க உட்கருக்களாக உள்ளன. ஹைட்ரஜன், ஆக்சிஜன், நைட்ரஜன், இரும்பு, கந்தகம், பாசுபரசு, தங்கம், பாதரசம், யுரோனியம் போன்றவை தனிமங்களுக்கு சில எடுத்துக்காட்டுகளாகும். புவியில் “ஆக்சிஜன” என்ற தனிமம் எங்கும் நிறைந்திருக்கும் தனிமமாகவும்இ “இரும்பு” என்ற தனிமம் நிறை அடிப்படையில் அதிகமாகக் காணப்படும் தனிமமாகவும் கருதப்படுகிறது.

அண்டமும் அதில் அடங்கியுள்ள அனைத்துமே, பருப்பொருட்களால் ஆனவையாகும். இப்பருப்பொருட்கள் யாவும் வேதிதனிமங்களால் உருவாக்கப்பட்டவையாகும். நாம் கண்களால் காணக்கூடிய சாதாரணமான பருப்பொருட்கள் பிரபஞ்சத்தில் உள்ள பருப்பொருட்களில் வெறும் 15% மட்டுமே உருவாக்குகின்றன என்று வானியல் ஆய்வுமுடிவுகள் தெரிவிக்கின்றன. எஞ்சியுள்ளவை “கரும்பொருள்” எனப்படுகிறது. இதன் பகுதிக்கூறுகள் இதுவரை அறியப்படவில்லை. ஆனால் நிச்சயமாக அது வேதித்தனிமங்களால் ஆக்கப்படவில்லை என்று உறுதியாகக் கூறப்படுகிறது.

ஹைட்ரஜன், ஈலியம் என்ற இரண்டு இலேசானத் தனிமங்களும் பெருவெடிப்பில் பிரபஞ்சம் உருவானபோது தோன்றியவைகளாகும். இவை பிரபஞ்சத்தில் காணப்படும் மிகப்பொதுவான தனிமங்களாகும். அடுத்த தனிமங்களான லித்தியம், பெரிலியம், போரான் ஆகிய மூன்றும் பெரும்பாலும் அண்டக்கதிர்வீச்சின் அணுக்கரு தொகுப்பு வினையால் உருவானவையாகும். எனவே இவை கன உலோகங்களைக் காட்டிலும் அரிதாகக் கிடைக்கின்றன. விண்மீன்களுக்குள் நிகழும் அணுக்கரு இணைவு மூலம் 6 முதல் 26 வரை புரோட்டான்களைக் கொண்ட தனிமங்கள் உருவாகின்றன. “சிலிக்கான்” “இரும்பு” போன்ற தனிமங்கள் அதிக அளவில் காணப்படுவது இதன் பிரதிபலிப்பாகும். 26 புரோட்டான்களை விட அதிகமாகக் கொண்ட தனிமங்கள் “மீயொளீர் விண்மீன் வெடிப்பு” மூலம் மீயொளீர் விண்மீன்களில் தோன்றியவையாகும். இவ்விண்மீன் வெடித்துச் சிதறும் பொது இத்தனிமங்கள் விண்ணில் சிதறி கோள்கள் உருவாகும்போது அவற்றுக்குள் சென்றிருக்கலாம் எனக் கூறப்படுகிறது.[17]

## மனித உடலிலுள்ள தனிமங்கள்

சராசரியாக 70 கிலோகிராம் எடை உள்ள ஒரு மனிதனின் உடல் எவ்வெவ் தனிமங்களால் எவ்விகிதத்தில் ஆக்கப்பட்டுள்ளது என்று காட்டும் பட்டியல் கீழ்வருமாறு. மனிதனின் உடலில் எடையளவில் (நிறை அல்லது திணிவு என்றும் கொள்வதுண்டு) 65-90% நீர் தான்($H_2O$). மீதம் உள்ளதில் மிகப் பெரும்பாலானவை கரிமம் உள்ள கரிமவேதிப் பொருட்களால் ஆனவை. மனித உடலில் 99% ஆறே ஆறு தனிமங்களால் ஆனவையே. அவை ஆக்சிஜன், கரிமம் ,ஹைட்ரஜன், நைட்ரஜன் ,கால்சியம் ,பாசுபரசு ஆகும்.[18]

| தனிமம் | விழுக்காடு [%] | Mass [Kg] |
|---|---|---|
| ஆக்ஸிஜன் | 65 | 43 |
| கரிமம் | 18 | 16 |
| ஹைட்ரஜன் | 10 | 7 |
| நைட்ரஜன் | 3 | 1.8 |
| கால்சியம் | 1.5 | 1.0 |
| பாஸ்பரஸ் | 1 | 0.780 |
| பொட்டாசியம் | 0.25 | 0.140 |
| கந்தகம் | 0.25 | 0.140 |
| குளோரின | 0.15 | 0.095 |
| சோடியம் | 0.15 | 0.100 |
| மக்னீசியம் | 0.05 | 0.019 |
| இரும்பு | 0.006 | 0.0042 |
| ∴வுளூரின் | 0.0037 | 0.0026 |
| துத்தநாகம் | 0.0032 | 0.0023 |
| சிலிக்கான் | 0.002 | 0.0010 |
| சிர்க்கோனியம் | 0.0006 | 0.000001 |
| ருபீடியம் | 0.00046 | 0.00068 |
| ஸ்ட்ரோன்ஷியம் | 0.00046 | 0.00032 |

| | | |
|---|---|---|
| புரோமின் | 0.00029 | 0.00026 |
| ஈயம் | 0.00017 | 0.00012 |
| நையோபியம் | 0.00016 | 0.0000015 |
| செப்பு | 0.0001 | 0.000072 |
| அலுமினியம் | 0.000087 | 0.000060 |
| காட்மியம் | 0.000072 | 0.000050 |
| போரான் | 0.000069 | 0.000018 |
| சீரியம் | 0.000040 | |
| பேரியம் | 0.000031 | 0.000022 |
| ஆர்செனிக் | 0.000026 | 0.000007 |
| வனேடியம் | 0.000026 | 0.00000011 |
| வெள்ளீயம் | 0.000024 | 0.000020 |
| பாதரசம் | 0.000019 | 0.000006 |
| செலீனியம் | 0.000019 | 0.000015 |
| மாங்கனீசு | 0.000017 | 0.000012 |
| அயோடின் | 0.000016 | 0.000020 |
| தங்கம் | 0.000014 | 0.0000002 |
| நிக்கல் | 0.000014 | 0.000015 |
| மாலிப்டினம் | 0.000013 | 0.000005 |
| ஜெர்மானியம் | 0.000005 | |
| டைட்டேனியம் | 0.000013 | 0.000020 |
| டெலூரியம் | 0.000012 | 0.0000007 |
| ஆண்ட்டிமனி | 0.000011 | 0.000002 |
| லித்தியம் | 0.0000031 | 0.000007 |
| குரோமியம் | 0.0000024 | 0.000014 |
| சீசியம் | 0.0000021 | 0.000006 |
| கோபால்ட் | 0.0000021 | 0.000003 |

| | | |
|---|---|---|
| வெள்ளி | 0.000001 | 0.000002 |
| லாந்த்தனம் | 0.0000008 | |
| காலியம் | 0.0000007 | |
| யுரேனியம் | 0.000000013 | 0.0000001 |
| பெரிலியம் | 0.000000005 | 0.000000036 |
| ரேடியம் | | 0.0000000000000001 |
| இற்றியம் | | 0.0000006 |
| பிஸ்மத் | | 0.0000005 |
| தாலியம் | | 0.0000005 |
| இண்டியம | | 0.0000004 |
| ஸ்காண்டியம் | | 0.0000002 |
| டாண்ட்டலம் | | 0.0000002 |
| தோரியம | | 0.0000001 |
| சமாரியம் | | 0.000000050 |
| டங்க்ஸ்டன் | | 0.000000020 |

இதுவரை அறிவியலால் கண்டறியப்பட்டுள்ள 94 வேதித்தனிமங்களில் 60 தனிமங்கள் மேலே பட்டியிலிடப்பட்டுள்ளது. மீதமுள்ள வேதித்தனிமங்கள் மனிதனின் உடலில் எந்த அளவுகளில் இருக்கின்றன அல்லது, இருகின்றனவா இல்லையா என்பது அறிவியல் புலப்படுத்தாத நிலையிலேயே உள்ளது.

நமது உடலானது தோலால் மூடப்பட்டுள்ளது, இந்த தோல்கள், உயிரணுக்களால் (CELL) உருவானது. இந்தத் தோல்களுக்கு அடுத்ததாக தசைகள் இருக்கின்றன, இந்தத் தசைகளும், தசையணுக்களால் உண்டானவையாகும். தசைகளுக்கு அடுத்தப்படியாக இருப்பது எலும்புகளும், நரம்புகளுமே, இந்த எலும்பு, எலும்பணுக்களாலும், நரம்பானது நரம்பணுக்களாலும் உண்டானவையே. ஆகமொத்தத்தில் உடலானது உயிரணுக்களால் தோற்றம் பெற்றது என்பது இதன் மூலம் தெளிவு. ஆனால் இந்த உயிரணுக்கள் எதனால் ஆனது என்றால்? புரோதம் என்கிற வேதித்தனிமத்தால் (Chemical Element) ஆனவையாகும். புரோதம் என்கிற

இந்த தனிமம் பல அணுத்திரண்மத்தின் (Molecules) கலவையாகும். சராசரியாக ஒரு மனிதனின் உடலில் அடுத்தப்படியாக 65-90% வரை காணப்படும் வேதித்தனிமம் நீர். நீரானது மற்றுமொரு பல அணுத்திரண்மத்தின் கலவையாகும். இந்த உயிரணுக்களின் (CELL) உள்ளிருப்பதே (DNA,RNA) என்கிற உள்ளணுக்களாகும்.

உயிரணுக்களினால் (CELL) ஆன இந்த உடலானது பல அணுத்திரண்மத்தின் கலவையின் கூடாரமாகும். இந்த அணுத்திரண்மங்கள், முன்கூறுகளினால் (ATOMS) ஆனவையாகும். தண்ணீர் என்கிற வேதித்தனிமம் (Chemical Element) ஆக்சிஜன் மற்றும் ஹைட்ரஜனின் அணுத்திரண்மத்தின் (Molecules) கலவையாகும். புரோதம் என்கிற வேதித்தனிமம் (Chemical Element) கார்பன், ஹைட்ரஜன், ஆக்சிஜன் போன்றவைகளின் முன்கூறுகளின் (ATOMS) கூறுகளாகும்.

முன்கூறுகள் (ATOMS) சேர்ந்து உயிரணுக்கள் (CELL) தோன்றுகின்றன, இந்த உயிரணுக்கள் பல முன்கூறுகளால் (ATOMS) ஆனவையாகும்.[20]

பரந்த இந்த அண்டம் பருப்பொருட்களினால் ஆனது, இந்தப் பருப்பொருள், பல தனிமங்களால் உண்டானது. இப்பலத் தனிமங்களே வாயுக்களாக பரிணமித்தது, இந்த வாயுக்களே பஞ்சப் பூதங்கள் (தனிமங்கள்) என வழங்கப்பட்டு உலக உருவாக்கத்திற்கு அடிப்படைக் காரணம் எனக் கொள்ளப்படுகிறது. இந்தப் பஞ்சப் பூதங்களே புவியில் உயிர்களின் தோற்றத்திற்கு தோன்றுவாயாக அமைந்திருக்கிறது என்றும்இ இந்த அண்டத்தில் உள்ளதே பிண்டத்திலும் உள்ளது என்பதனை சித்தர் சிவவாக்கியரின் பாடல்கள் கொண்டும்இ நவீன அறிவியலின் சான்றாதரங்கள் வாயிலாகவும் மேற்கூறிய எடுத்துக்காட்டுகளாலும் நிறுவியுள்ளோம்.

## உயிர்க்கோட்பாடு

உயிர் என்ற ஒன்று தனியே உண்டா? ஐம்பூதச் சேர்க்கையாலான உடலினைச் சேர்ந்ததா உயிர்? உயிருக்கும் உடலுக்கும் என்ன தொடர்பு?

பிறப்பின் பொது உயிர் எங்கிருந்து வந்தது? இறப்பின் பொது உயிர் எங்கே செல்கிறது? தத்துவ உலகில் நிறைவான தீர்வுகானதச் சிக்கல்களாகவே இவை இருக்கின்றன. பிறக்கின்றோம் இருக்கின்றோம் இறக்கின்றோம் என்ற உண்மைகளைக் காட்சி அளவையால் அறிகின்றோம். பிறப்புக்கு முன்? இறப்புக்கு பின்? என்ற நிலைகளை அனுமானிக்கின்றோம். அனுமானம், அவரவர் அனுபவத்திற்கும் முன்னறிவிற்கும் ஏற்ப வேறுபடுகிறது. அனுமானித்த கருத்துரைகளைச் சரிபார்க்க வாய்ப்பின்மையால் எதையும் முழுமையாக ஏற்கவும் முடியவில்லை தள்ளவும் முடியவில்லை. இந்தியத் தத்துவ அடிச்சுவட்டை ஒட்டியே சித்தர்களும் உயிர் உண்டென்றும் அதன் விடுதலைக்கு மானுடப் பிறவி முயலவேண்டும் என்றும் கூறுகின்றனர்.

## உயிர் (ஆன்மா)

உலகத் தத்துவ அமைப்பு ஒவ்வொன்றிலும் உயிர் மூச்சாசகவும், மையக்கருத்தாகவும் விளங்குகின்றன. உயிர் என்று ஒன்று உண்டா? அது தானே தோன்றியதா? அல்லது தோற்றுவிக்கப்பட்டதா? அதன் இயல்பென்ன? எங்கிருந்து எப்படி உடலுக்குள் வந்தது? இறந்தப் பிறகு அது உடலை விட்டு எங்கே செல்கிறது? பிறப்பு இறப்பு என்பதன் பொருள் என்ன? என்பன போன்ற வினாக்களுக்கு விளக்கம் தேட முற்படும் போது பிற தத்துவக் கருத்துக்கள் தலையெடுக்கின்றன. எனவே தத்துவப் பிரச்சினைகள் யாவும் சுற்றிச்சுழல்வதற்கான அச்சாக “உயிர்” அமைகிறது.

“உன்னையே நீயறிவாய்” என்றான் கிரேக்க ஞானி சாக்ரடீஸ். உன்னை நீயறிந்தால், “நீ அதுவாக இருக்கின்றாய்” என்ற முடிவு கிடைக்கும் என்கிறது இந்தியத் தத்துவக் கருவூலமாக விளங்கும் உபநிடதம். உடலும் உயிரும் ஒன்றைவிட்டு ஒன்று பிரியாமல் இருக்கப் போராடும் மருத்துவத்துறை அணு அணுவாக உடற்கூறுகளை ஆராய்ந்திருக்கிறது. மருத்துவத்துறை விரித்துப் பார்க்காத உடற்பகுதியே இல்லை. ஆனால் அவ்வுடலில் வாழும் “உயிர்“ பற்றியத் தெளிவான கருத்தைத் தற்கால மருத்துவத்துறையிலும் காணமுடியவில்லை.

## மேலைத் தத்துவத்தில் உயிர் பற்றியக் கருத்து

"உயிர்" உண்டு என்பதைப் பெரும்பாலான தத்துவங்கள் ஒப்புக் கொள்கின்றன. உயிரென ஒன்று இல்லையென்று மருப்போருங்கூட, "நான் மறுக்கிறேன்" என்று சொல்வதன் மூலம் உண்டு என்பதையே நிறுவுகின்றனர். உலகப் பொருள்களின் இருப்பு நிலையை ஐயுறத் தொடங்கிய பிரெஞ்சுத் தத்துவ அறிஞர் தெகார்த், "நான் ஐயுறுகிறேன். எனவே, நான் இருக்கின்றேன் என்ற முடிவுக்கு வருகின்றனர். "நான் யார்" என்னுடைய எல்லாச் செயல்கட்கும் கர்த்தாவாக இருக்கும் உயிரை உணர்வ தெவ்வாறு? நான் எப்படி என்னுடைய ஆன்மாவாக ஆவது? என்பது ஒவ்வொரு மனிதனுடைய மனத்தின் அடித்தளத்திலும் எழுகின்ற வினாக்கள் இவையேயாகும்.[21]

உலகப் பொருள்களும் நிகழ்ச்சிகளும் தரும் இன்ப துன்பங்களை உடற் கருவி மூலம் ஏற்று நுகர்வது உயிர். பிறப்பு இறப்பிற்கு இடையே உடல் எண்ணற்ற மாற்றங்கட்கு ஆட்பட்ட போதும் ஒவ்வொரு மனிதனின் தனித்தன்மையைச் சுட்டுவது ஆன்மாவே. தன் உணர்வுகளைத் தானே உணர்கின்ற ஒன்றைக் குறிப்பிட உயிர், ஆன்மா, சீவன், மனம் எனப் பல சொற்களைப் பயன்படுத்துகின்றனர். "உலகப் பொருள்களைச் சுவைக்கவும், உலகில் செயல்படவும் நம் உடல் உறுப்புகளை இயக்கவும் உயிர் என்ற ஒன்று இருக்கிறது. நம் முன்னே அது இருந்தும் நாமே அதை உணர்ந்தும் பனி மலரையும் பளிங்கு கல்லையும் விவரிப்பது போல அதை விவரிக்க இயலவில்லை"[22] சொற்களால் விவிரிக்க இயலாவிடினும் அதன் இருப்பை அனுமானிக்கலாம்.

## இந்திய தத்துவத்தில் உயிர் பற்றிய கருத்து

இந்திய தத்துவங்களில் சாருவாகம் தவிர மற்றவை "உயிர்" என்றொரு தனி உறுதிப் பொருள் உண்டென்பதை ஒப்புக் கொள்கின்றன. பொருளியல்வாதிகளான சாருவாகர்கள் பொருள் தன்மைக்கு மாறான "உயிர்" என்பதைக் கற்பனை என்கின்றனர். நான்கு பூதங்களின் சேர்க்கைக்கப்பால் "உயிர்" என்று தனியே இல்லை. பூதங்களின் சேர்க்கை உடைந்து உடல்

அழியும்போது உயிரும் அழிகிறது. உடலை நிலைக்களனாகக் கொண்ட ஒரு பண்பே “உயிர்” எனப்படுகிறது. இவ்வாறு சாருவாகம் கூறுகிறது.

காட்சியளவை மட்டுமே அறிவு மூலமாகவும் அளவு கோலாகவும் கொண்டு பின்னப்பட்ட சாருவாகத் தத்துவத்தை மற்ற இந்தியத் தத்துவங்கள் மறுக்கின்றன. வேதப் புறம்பான பௌத்தமும் சமணமும் கூட “ஆன்மா” உண்டென்பதை ஒப்புக் கொள்கின்றன. உடலும் புலன்களும் இயங்கும் ஒழுங்கினைக் கொண்டு அவற்றை இயக்கும் உயிர் உண்டு என்று சமணமும் அனுமானிக்கின்றது. உயிர்கள் பல்வேறு வினைகளால் கட்டுண்டு கிடக்கின்ற காரணத்தால் துன்பத்தில் உழல்கின்றன என்றும் வினைப்பயன் அறுப்பதே ஆன்ம விடுதலை என்றும் சமணர்கள் கூறுகின்றனர்.

கடவுள் மறுப்புக் கொள்கையுடைய சாங்கியத் தத்துவங் கூட ஆன்மா உண்டென்பதை ஒப்புக் கொள்கிறது. பிரகிருதியைச் சுவைப்பதற்காக ஆன்மா இருக்கின்றது. அறியாமையின் காரணமாகத் தன்னைப் பிரகிருதியோடு இணைத்துக்கொண்டு ஆன்மா துன்புறுகின்றது. விவேக ஞானத்தால் தன்னைப் பிரகிருதியிலிருந்து விடுவித்துக் கொண்டு ஆன்மா முத்தி நிலை பெறவேண்டும் என்பது சாங்கியத் தத்துவத்தின் மையக்கருத்து.

“ஆன்மா” உண்டென்றும் ஆன்மாவும் பரம்பொருளும் ஒன்றே என்றும் வேறுபட இருப்பது வெற்றுத் தோற்றமே என்றும் அத்துவதை வேதாந்தம் கூறுகின்றது. சத்து, சித்து, ஆனந்தம் என்பனவற்றின் இயல்பான ஆன்மா, மாயை வலையில் சிக்குண்டு தன் பரம்பொருள் தன்மையை மறந்து நில்லாதனவற்றை நிலையினது என்று பிறழ உணர்ந்து பிறவித்தொடரில் சுழல்கின்றது. ஆத்மா ஞானம் கைவரப் பெற்றால் அறியாமையால் விளைந்த மாய இருள் விலக ஆன்மா தன்னையறிந்து இன்பமுறும்.

சைவ சித்தாந்திகள் இறைவன், உயிர், உலகு ஆகிய மூன்றும் அநாதிப் பொருள்கள் என்பர். இவற்றை முறையே பதி, பசு, பாசம் என்று கூறுகின்றனர். என்றுமுள தனி உறுதிப் பொருளாக “உயிர்” கருதப்படுகின்றது. ஆணவம், கன்மம், மாயை என்ற மூன்று மலங்களால் சூழப்பட்ட ஆன்மா இறையின்பத்தைச் சுவைக்க முடியாமல் உழல்கின்றது. இம்மலங்களின்

தாக்கத்தைச் செயலிழக்கச் செய்வதன் மூலம் ஆன்மா இறையின்பத்தைச் சுவைக்க முனைகின்றது. இது சைவ சித்தாந்திகளின் கருத்து.

## உயிர் பற்றி சித்தர் கோட்பாடு

இந்தியத் தத்துவப் பின்னணியில் சித்தர்களின் தத்துவம் உருவாகி இருக்கின்றது. சித்தர்களின் இலக்கியங்களை ஒரு சேரப் பார்த்தால் அவற்றில் இந்தியத் தத்துவங்களில் உள்ள அனைத்துக் கருத்துக்களையும் காணலாம். அதேபோல், சித்தர் தத்துவம் பிற இந்தியத் தத்துவங்களிலிருந்து வேறுபடுவதையும் காணலாம். எல்லாக் கருத்துக்களையும் பேசுவதால் சித்தர்களை இந்தியத் தத்துவத்தின் எந்த ஒரு அமைப்பின் கீழும் கொண்டு வருவது கடினம்.

ஆன்மீக விடுதலைக்கான வழிகளில் வேறுபட்டாலும் ஆன்மா உண்டென்பதை அனைத்துச் சித்தர்களும் ஒப்புக் கொள்கின்றனர். "உடல் ஒரு மரப்பாவை" தானே இயங்கும் தன்மையற்றது. அந்த மரப்பாவையை அசையத் செய்வதும் இசைய வைப்பதும் ஆட்டுவிப்பதும் சீவன் – உயிர். திரைக்கு வெளியே ஆடும் உடலைக் காண்கின்றோம் ˙ உள்ளிருந்து ஆட்டுவிக்கும் "உயிரைக்" காண முடியவில்லை. உயிரெனும் கயிறறுந்தால் உடலில் ஓர் அசைவும் இருக்காது என்பதைப் பாம்பாட்டிச் சித்தர்,

**"மரப்பாவை போலவொரு மண்ணுருவஞ்செய்து**
**வளமான சீவனெனும் சூத்திரம் மாட்டித்**
**திரைக்குள் இருந்தசைப்போன் தீர்ந்த பொழுதே**
**தேகம் விழுமென்று தெளிந்தாடு பாம்பே"[23]**

என்ற பாடல்வழி படமாக்கிக் காட்டுகின்றார்.

உயிர், உடலில் குடியிருக்கும் பறவை என்ற பொருளில் பட்டினத்தாரும் இவ்வாறு கூறுகிறார். "உடலில் குடியிருக்கும் குருகுவிட்டோடும் குரம்பை" உடலைக் கூத்தாட்டுவது உயிர் என்பதை திருமூலர் "கூத்தன் புறப்பட்டுப்போன இக்கூட்டையே என்றும் குறிக்கின்றார். இவை மட்டுமல்லாது ஆன்மா உண்டென்பதை மெய்கண்டார் சிவஞானபோதம் மூன்றாம் சூத்திரத்தில்

அனுமான வழியில் நிறுவுகின்றார்". உளது இலது என்ற வாதங்கட்குக் கருப்பொருளாய் இருப்பதாலும் எனதுடல் என்ற வழக்காலும் ஐம்புலன் வழி அறிதலைச் செய்தலாலும் ஐம்புலநொடுங்கிய கனவு நிலையிலும் அறிதலைச் செய்தலாலும் கண்படில் இன்பதுன்ப நுகர்ச்சியும் வினையும் இன்மையாலும் உணர்த்தப்பட்டதை உணருகின்ற ஒன்று உண்டென்பதலாலும் மாயவியந்திர உடலை இயக்க அதனினும் வேறான சத்தியொன்று உண்டென்பதலாலும் ஆன்மா உண்டென அனுமானிக்கலாம் என்பது மெய்கண்டார் வாதமாகும்.

இக்கருத்தை எல்லா சித்தர்களின் பாடல்களிலும் பரக்கக்காணலாம்.

## உயிர் பற்றி சிவவாக்கியரின் கூற்று

உயிர் உண்டென்பதை அனைத்துச் சித்தர்களும் தம் பாடல்களில் கூறிப்போந்தப் போதிலும், உயிர் எப்படி உடலுள் வந்தது, உடலுள் உயிர் வந்து சேர்ந்தது எங்ஙனம், உயிரானது உடலில் வந்து சேர்வதற்கு முன் எங்கே இருந்தது. போன்ற கேள்விகளுக்கு தெளிவான ஒரு விளக்கம் தந்தாரில்லை மாறாக சூக்கும மாகவே கூறிச் சென்றுள்ளனர். அவ்வகையில் சித்தர் சிவவாக்கியர் உயிரின் தன்மைப் பற்றியும் உடலில் உயிர் வந்து சேர்ந்த தன்மையையும் கூறியுள்ளவற்றை மேற்கொண்டு காண்போம்.

**"உயிரிருந்தது எவ்விடம் உடம்பெடுத்த தின்முனம்**
**உயிராவது ஏதடா உடம்பதாவது ஏதடா**
**உயிரையும் உடம்பையும் ஒன்றுவிப்பது ஏதடா**
**உயிரினால் உடம்பெடுத்த உண்மைஞானி சொல்லடா"**[24]

ஒரு தாயின் வயற்றில் உடம்பு உருவாவதற்கு முன்பு இந்த உயிர் எந்த இடத்தில் இருந்தது? உடம்பும் உயிரும் சேர்வதற்கு முன்பு இந்த உயிருக்கும் அல்லது உடம்புக்கும் அடையாளம் எதுவும் இல்லை .

அடையாளம் தெரியாமல் இருந்த இந்த உயிரையும் உடம்பையும் ஒன்றாகச் சேர்த்தது எது? உடம்பின்றி உயிர் தனித்திருந்ததால் ஓர் உடம்பு தேவைப்பட்டது. அவ்வுயிரினால் உடம்பை மேற் கொண்ட ஞானியே சொல்வாயாக என வினவுகிறார்.

சில அணுக்கள் கூடி ஓர் உடம்பாக மாறுகின்றன. ஆனால் உயிர் ஒரே அணு மட்டும்தான். உடலாக உருவான அணுக்கள் மறுபடி பிரிந்து மறுபடியும் உடம்பாகச் சேரும். ஆனால் உயிர் மறுமுறையும் அதே உடம்பிற்குள் புகாது. இங்கே உயிர் என்றது ஆன்மாவே ஆகும்.[25]

**"உயிரகத்தில் நின்றிடும் உடம்பெடுத்த தற்குமுன்**
**உயிர்அகாரம் ஆயிடும் உடல்உகாரம் ஆயிடும்**
**உயிரையும் உடம்பையும் ஒன்றுவிப்பது அச்சிவம்**
**உயிரினால் உடம்புதான் எடுத்தவாறு உரைக்கிறேன்."[26]**

உடம்பின் உள்ளேயாக உயிர் நிற்கிறது. இப்படி உடம்பு வருவதற்கு முன் உயிர் தன் சார்புகளுடன் தனியாக இருந்தது. உடலுக்குரியவையும் தனியாக இருந்தன.

உயிரையும் உடம்பையும் ஒன்றாக்கியது அந்தச் சிவமே ஆகும். உயிரினால் இந்த உடம்பு வந்து சேர்ந்ததை இனிச் சொல்கிறேன்.[27]

**"அண்டம்ஏழும் உழலவே அணிந்தயோனி உழலவே**
**பண்டுமால் அயனுடன் பரந்துநின்று உழலவே**
**எண்திசை கடந்துநின்ற இருண்டசத்தி உழலவே**
**அண்டர்அண்டம் ஒன்றதாய் ஆதிநட்டம் ஆடுமே"[28]**

அண்டத்தின் ஏழு அடுக்குகளும் பிரியுமாறு உழலவும், அவற்றில் உள்ள பலவித உயிர்களும் சாயுமாறு உழலவும், திருமாலும் பிரம்மனும் தம் செய்கை தவிருமாறு உழலவும், எட்டுத் திசைகளையும் கடந்து நின்ற வெளிக்காண முடியாத சத்திகள் உழலவும், அண்டங்களும் அதில் உள்ளவர்களும் தம்முடன் ஒன்றாய் இருக்குமாறும் உள்ள ஆதியாகிய சிவம் நடனம் ஆடுகின்றார்.[29]

**"உருவநீர் உறுப்புகொண்டு உருத்தரித்து வைத்திடும்**
**பெரியபாதை பேசுமோ பிசாசை ஒத்த மூடரே"[30]**

உருவம் கொண்டுள்ள நீர்இ உம் உறுப்புக்கள் கொண்ட உடலைக் கொண்டு அவை உயிருடன் கலந்த பெரிய பாதையை உணரமுடியுமோ?

**"அன்னைகர்ப்ப அறையதற்குள் அங்கியின் பிரகாசமாய்**
**அந்த அறைக்குள் வந்திருந்து அரியவிந்து ரூபமாய்**
**தன்னையொத்த நின்றபோது தடையறுத்து வெளியதாய்**
**தங்கநற் பெருமைதந்து தலைவனாய் வளர்ந்ததே"**[31]

தாயின் கருவறையில் அக்கினிப் பிரகாசமாய் விந்து வடிவில் கடவுள் அருளே வந்திருந்தது. கடவுள் அருளை ஒத்துநின்றபோது தடையில்லாது ஆகாய பூதமே வந்து தங்குமாறு பெரும் செயல் செய்து தலைவனைப் போலவே அக்கரு வளர்ந்தது என உணர்க.[32]

**"உண்மையான சுக்கிலம் உபாயமாய் இருந்ததும்**
**வெண்மையாகி நீரிலே விரைந்துநீர தானதும்**
**தன்மையான காயமே தரித்துருவ மானதும்**
**தொன்மையான ஞானிகாள் தெளிந்துரைக்க வேணுமே"**[33]

தெளிந்த ஞானம் உடையவர்களே! உண்மையான சுக்கிலமே உற்பத்திக்குத் துணையாக இருந்ததையும், நீரில் விட்டால் அது விரைவில் கரைந்து வெள்ளை நீராக மாறக்கூடியதையும், அதுவே பெண்ணிடம் உடம்பை உருவம் கொள்ள வைப்பதையும் நீங்கள் தெளிவாகக் கூறவேண்டும்.[34]

**"உள்ளதோ புறம்பதோ உயிர்ஒடுங்கி நின்றிடம்**
**மெள்ளவந்து கிட்டிநீர் வினவவேணும் என்கிறீர்**
**உள்ளதும் புறம்பதும் ஒத்தபோது நாதமாம்**
**கள்ளவாச லைத்திறந்து காணவேணும் மாந்தரே"**[35]

உடம்பிற்கு உட்புறமாகவா வெளிப்புறமாகவா உயிர் ஒடுங்கிய இடம் உள்ளது? அருகில் மெல்ல வந்து வினவி உணர்த்த வேண்டும் என்கீர்.

உள்ளதோ புறத்ததா என்று தேடும்போது நாத வடிவமாக இருக்கும். அதைக் கண்ணால் எப்படிப் பார்க்க முடியும்?

**"கருத்தரிக்கு முன்னெலாம் காயம்நின்ற தேயுவில்**
**உருத்தரிக்கு முன்னெலாம் உயிர்ப்புநின்றது அப்புவில்"**[36]

கருவில் உடல் உண்டாகும் முன்பு அது எங்கே இருந்தது என்றால் அது சோதியில் என உணர்க. உரு உண்டாவதற்கு முன் உயிர்ப்பு எங்கே இருந்தது என்றால் அது நீரிலேயாகும் என்று சிவவாக்கியர் மேற்கண்ட ஐயங்களுக்கெல்லாம் ஒரு தெளிவினைத் தருகிறார். சித்தர் சிவவாக்கியரின் கூற்றுப்படி உடலானது "தேயுவிலும்" (ஒளி) உயிரானது "அப்புவிலும்" (நீர்) என்பது தெளிவு.

தெய்வப்புலவர் திருவள்ளுவரும் சிவவாக்கியரின் இக்கூற்றினை உறுதி செய்யும் வண்ணம் தம் குறளில்

**"விசும்பின் துளிவீழின் அல்லால் மற்றாங்கே**
**பசும்புல் தலைகாண்பு அரிது"**

நீர் இல்லையென்றால் உலகத்தில் ஓரறிவு உயிராகிய பசும்புல்லின் தலைத்தல் கூட இல்லாமல் போய்விடும் என்று கூறுவதின் மூலம் உயிர்களின் தோற்றம் நீரினால் அமையப்பெருகிறது என்ற சித்தர் சிவவாக்கியரின் கூற்றினிக்கு துணைப்புரிகிறது எனலாம்.

## உலகத்தில் நீரின் தோற்றம்

உலகத்தின் நீரின் பெருமளவு விண்மீன்கள் உருவாதலின் துணைப் பொருளாக விளைந்திருக்கலாம். விண்மீன்களின் தோற்றத்தின் போது, அவற்றின் பிறப்பு வலிமையான வெளிநோக்கு வளிக்காற்று மற்றும் புழுதிப் புயலால் சூழப்பட்டிருக்கிறது. இத்தகைய வெளியேற்றம் நாளடைவில் சூழ்ந்திருக்கும் வாயுக்களைத் தாக்குவதனால் உருவாகும் அதிர்வலைகள் வாயுக்களை அழுத்தி வெப்பமேறச் செய்கிறது. எவ்வமயம் தென்படுகிற நீரானது இந்த வெப்பச் செறிவான வாயுக்களால் அதிவேகமாக உற்பத்தி செய்யப்பட்டதாகும்.[38]

பால்வெளியெனும் நமது விண்மீன் மண்டலத்தினுள் காணப்படும் நட்சத்திரங்களுக்கிடையேயான மேகங்களில் தண்ணீர் கண்டறியப்பட்டுள்ளது. நீரின் கூறுகளான ஹைட்ரஜன் மற்றும் ஆக்சிஜன் ஆகியவை அண்டத்தில் மிகுதியாகக் காணப்படும் தனிமங்கலாதளால், ஏனைய விண்மீன்மண்டலங்களிலும் தண்ணீர் மலிந்திருக்கிறதென நம்பப்படுகிறது.

முப்பத்திரண்டு (32) நட்சத்திரங்களுக்கிடையேயான மேகங்கள் நாளடைவில் சூரிய ஒலிமுகிலாகவும், சூரியமண்டலமாகவும் சுருங்குகின்றன.

**கோள்களில் நீராவியளவு கீழ்காணும் அளவுகளில் அமைந்துள்ளது**

- புதன் – வளிமண்டலத்தில் 3.4% நீரும்இ புறவழி மண்டலத்தில் பெருமளவு நீரும் உள[39]
- வெள்ளி – வளிமண்டலத்தில் 0.002% நீர் உள
- பூமி – வளிமண்டலத்தில் நீரின் சுவடுகளே உள (கால நிலையுடன் மாறக்கூடியது)
- செவ்வாய் – வளிமண்டலத்தில் 0.03% உள
- வியாழன் - வளிமண்டலத்தில் 0.0004% உள
- சனி – உறை பனி படலங்களில் மட்டும் உள
- என்ஸெலேடஸ்(சனியின் சந்திரன்) – வளிமண்டலத்தில் 91% நீர் உள
- வெளிக்கோள்கள் (எக்சோப்ளாநெட்ஸ்) HD 189733[40] மற்றும் HD 209458 என்பனவாம்.[41]

நீர் (WATER) என்பது $H_2O$ என்ற மூலக்கூற்று வாய்ப்பாட்டைக் கொண்ட ஒரு சேர்மம் ஆகும். ஒரு நீர் மூலக்கூற்றில் ஓர் ஆக்சிஜன் அணுவுடன் இரண்டு ஹைட்ரஜன் அணுக்கள் பங்கீட்டுவலுப்பிணைப்பு மூலம் பிணைக்கப்பட்டுள்ளன. நீரானது உலக உயிரினங்களின் நிலவுகைக்குத் தேவையானதாகும். திடவெப்பழுத்தத்தில் நீர் ஓர் திரவமாக இருந்தாலும், இது புவியில் திட வடிவில் பணியாகவும் மற்றும் வளிம வடிவில் நீராவியாகவும் காணப்படுகிறது.

புவிப்பரப்பின் 71% பகுதி நீரால் சூழப்பட்டுள்ளது.[42] புவியின் தண்ணீரில் பெரும்பகுதி சமுத்திரங்கள், ஏனைய பரந்த நீர்நிலைகளிலும், சுமார் 1.6% பகுதி நிலத்தடி நீர்கொள்படுகைகளிலும் காணப்படுகிறது. வளி மண்டல நீரின் 0.001% பகுதி வாயு வடிவிலும், காற்றில் மிதக்கும் திட மற்றும் திரவ துகள்களால் உருவாகும் மேகங்களிலும் காற்றின் நீராவி குளிரிந்து சுருங்குவதால் ஏற்படும் நீர்க்கோர்வைகளிலும் காணப்படுகிறது.[43] நில மேலோட்ட

நீரின் 97% பகுதி உவர்நீர்ச் சமுத்திரங்களிலும் 2.4% பனி ஆறுகள் மற்றும் துருவபனிக்கவிகைகளிலும்இ 00.6% பகுதி ஏனைய நிலமேலோட்ட நீர் நிலைகளான ஆறுகள், ஏரிகள், குளம், குட்டைகளிலும் காணப்படுகிறது. புவியின் தண்ணீரில் ஒரு சிறிய அளவு உயிர்களின் உடல்களிலும், உற்பத்தி செய்யப்பட பொருட்களிலும் காணப்படுகிறது.

## உயிரினங்களின் பரிணாம வரலாறு

பூமி தோன்றி ஒரு பில்லியன் ஆண்டுகளுக்குள் உயிரினங்கள் தோற்றம் பெற்றன. தற்போதுள்ள உயிரினங்களுக்கிடையே உள்ள அமைப்பொற்றுமை ஒரு பொது மூதாதையர் அனைத்து உயிரினங்களுக்கும் உள்ளதை உறுதிப்படுத்துகின்றது. புவியில் தோன்றிய முதல் உயிரினமாக நுண்ணுயிரி வகையொன்றே கருதப்படுகின்றது. முதல் உயிரானது வேதியியல் தாக்கங்களின் விளைவால் நீரினடியில் உருவாகியவையாகும்.

இதற்கான சூழல் தரையில் இல்லாமையால் ஆழமான நீரே இதற்குப் பொருத்தமான ஊடகமாக விளங்கியது. இவ்வகை வேதியல் தாக்கங்களுக்கான சக்தி கடலடி எரிமலைகளாலும், புற ஊதாக் கதிர்களாலும் மின்னலாலும் வழங்கப்பட்டது.

தற்போசணை நுண்ணுயிரிகள் கிட்டத்தட்ட 3.5 பில்லியன் ஆண்டுகளுக்கு முன்பு தோன்றின. இவை தற்போதைய சயனோபாக்டீரியாக்களைப் பெரிதும் ஒத்துருக்கின்றன. இவற்றினால் ஆக்சிஜன் வாயு புவியின் வளிமண்டலத்தில் தோன்ற ஆரம்பித்தது. அதுவரையும் கரியமிலவாயு, நீராவி, அமோனியா, ஹைட்ரஜன் போன்ற வாயுக்களே புவியின் வளிமண்டலத்தில் காணப்பட்டன.

இதன் காரணமாக ஓசோன் வாயு உருவாகி நீரிலிருந்து நிலத்திற்கு உயிரினங்கள் பரவலடைவது சாத்தியமாகியது. ஓசோன் வாயு இல்லாவிடில் நிலமும் அழமற்ற கடற்பிரதேசங்களும் உயிரினங்களுக்கு ஆபத்தான புறஊதாக்கதிர்களின் தாக்கங்கள் இருந்திருக்கக்கூடும். இதன் காரணமாக தற்போசணை நுண்ணுயிரிகலிளிருந்தும் ஏனைய பாக்டீரியாக்கலிளிருந்தும் 1.7 பில்லியன் ஆண்டுகளுக்கு முன்பு பரிணாமித்து வந்த மெய்க்கருவுயிரிகளான தாவரங்கள் மற்றும் விலங்குகள் நீரிலிருந்து நிலத்தை ஆக்கிரமித்தன.

மிகப்பழமையான நிலத்தாவரங்கள் 450 மில்லியன் வருடங்களுக்கு முற்பட்டவையாகும். 525 மில்லியன் ஆண்டுகளுக்கு முன்பு கேம்பிரியன் காலத்தில் முள்ளந்தண்டுளிகள் தோற்றம் பெற்றன. ஜுராஸிக் மற்றும் கிரேடீசியஸ் காலத்தில் ஊர்வன வகையைச் சார்ந்த தொன்மாக்கள் ஆதிக்கம் செலுத்தின. அப்போது தோற்றம் பெற்ற முலையூட்டிகள் சிறிய பூச்சியுண்ணிகளாகவே இருந்தமையால் அக்காலம் ஊர்வனவற்றின் காலம் என அழைக்கப்படுகிறது. 65 மில்லியன் வருடங்களுக்கு முன்பு விண்கல் ஒன்று மோதியமையால் பறக்கமுடியாத தொன்மாக்கள் உட்பட பல உயிரனங்கள் அழிந்து போயின. இயற்கை தேர்வினால் அவ்வழிவிற்குப் பின் சூழலானது பறவைகளுக்கும் முளையூட்டிகளுக்கும் சாதகமாக அமைந்தது.

சுவட்டு ஆதாரங்களின் படி பூக்கும் தாவரங்கள் 130 தொடக்கம் 90 மில்லியன் வருடங்களுக்கு முன்பு தோற்றம் பெற்றிருக்கலாம் எனக் கருதப்படுகிறது இவற்றின் மகரந்தச் சேர்க்கைக்கு பூச்சிகள் தேவைப்பட்டமையால் அதே காலத்தின் தேனிக்கள் போன்ற சமூகப் பூச்சிகளும் பரிணாம வளர்ச்சிப் பெற்றன. இருகால்களில் நடக்கும் வாலில்லாக் குரங்குகளில் இருந்து 6 மில்லியன் வருடங்களுக்கு முன்பு மனித இனம் தோற்றம் பெற்றது. பழங்கால மனித இனங்களுக்கு சிம்பன்சி அளவான மூளையே காணப்பட்டாலும் 3 மில்லியன் வருடங்களுக்கு முன்பிலிருந்து மனித மூளையின் அளவு படிப்படியாக வளர்ச்சியடைந்துள்ளது.[44]

## உயிர் பற்றி அறிவியல் நோக்கு

புவியில் உயிர் 4.28 பில்லியன் ஆண்டுகள் அளவிலேயே தோன்றிவிட்டது. புவியில் நீர் தோன்றி 4.41 பில்லியன் ஆண்டுகளுக்கு முன்பு கடல்கள் உருவானதும் உயிர் தோன்றியுள்ளது. அதாவது 4.54 பில்லியன் ஆண்டுகளுக்கு புவியானது தோன்றியதும் நெடுங்காலம் எடுத்துக்கொள்ளாமால், சிறிய காலத்துக்குப் பிறகே உயிர்களானது முகிழ்த்துவிட்டது. புவியில் அண்மையில் நிலவும் உயிர் உள்ளணுக்கள் (ஆர் என் ஏ) [ RNA ] உலகில் இருந்து மரபாக வந்ததாகும். உள்ளணுக்கள் (ஆர் என் ஏ) [ RNA ] உயிர் வகைதான் முதலில் தோன்றியதா என்பதும் இன்னமும் உறுதியாகவில்லை. புவியில் உயிரிலிவழியாக உயிர் எந்நிகழ்வு அல்லது இயங்கமைப்பு

உருவாகியது என்பது இன்னமும் அறியப்படவில்லை, என்றாலும் பல கருதுகோள்கள் உருவாகியுள்ளன. இவை பெரும்பாலும் மில்லர் – யூரே செய்முறையைச் சார்ந்தே உருவாக்கப்பட்டுள்ளன. மிகப்பழமையான உயிர் வடிவங்களாக அறியப்பட்ட குச்சுயிரிகளின் புதைவடிவங்களே கிடைத்துள்ளன. அறிவியலாளர்கள் 2016 ஜூலையில் இன்று நிலவும் அனைத்துயிரிகளுக்கான மிகவும் பொதுவான மூதாதையில் (LUCA) 355 மரபன் கணங்களை இனங்கண்டுள்ளனர்.[45]

முதல் தொடக்கத்தில் இருந்தே புவிவாழ் உயிர் புவியியல் காலக்கட்டந்தோறும் தான் வாழும் சூழலைத் தொடர்ந்து மாற்றிக்கொண்டே வந்துள்ளது. பெரும்பாலான சூழல் அமைப்புகளில் உயிர்தரிக்க உயிர் பல்வேறு நிலைமைகளுக்கு ஏற்ப தகவமைந்திருக்க வேண்டும். சில அருஞ்சூழல் நுண்ணுயிரிகள், புறநிலையாகவும் புவி வேதியியலாகவும் புவிவாழ் உயிருக்குப் புறம்பான அவை வாழ்வதற்கே இயலாத அருஞ்சூழல்களில் உயிர்தரிக்க வல்லனவாக அமைகின்றன. உயிரினத்தை முதலில் வகைபடுத்தியவர் அரிசுடாட்டில் தான். பின்னர் இலின்னேயசு உயிரினங்களுக்கான (சிறப்பினங்களுக்கான) ஈருறுப்பு பெயரீட்டு முறையை அறிமுகப்படுத்தினார். நாளடைவில், உயிரின் புதிய குழுக்களும் வகையினங்களும் கண்டறியப்பட்டன. உயிர்க்கலனின் கண்டுபிடிப்பும் நுண்ணுயிரிகளின் கண்டுபிடிப்பும் வாழும் உயிர்களின் இடையே நிலவும் உறவுக் கட்டமைப்பைப் பேரளவில் மாற்றவைத்தன. உயிர்க்கலங்கள், உயிரின் மிகச் சிறிய அலகுகளும் கட்டுமான உறுப்புகளும் ஆகும். இவற்றில் முற்கருவன் உயிர்க்கலன், முழுக் கருவன் உயிர்க்கலன், என இருவகைகள் உண்டு. இருவகையிலும் மென்படலத்தால் உறையிடப்பட்ட கலக்கணிகம் அமைந்துள்ளது. இதில் உட்கரு அமிலம், புரதம் போன்ற பல உயிர்மூலக்கூறுகள் அமைந்துள்ளன. உயிர்க்கலப் பிளவு வழி உயிர்க்கலங்கள் இனப்பெருக்கம் செய்கின்றன. இந்நிகழ்வே ஒரு தாய் உயிர்க்கலன் இரு சேய்க்கலன்களாகின்றன.

உயிர் புவியில் மட்டுமே உள்ளதாக இப்போது அறியப்பட்டாலும். புவிக்கப்பாலும் புடவியில் உயிர் நிலவ வாய்ப்புள்ளதாக பல அறிவியாலாளர்கள் கூறுகின்றனர்.

## உயிர் தோற்றம் பற்றி சிவவாக்கியர் கருத்து

**“நீரிலே பிறந்திருந்து நீர்சடங்கு செய்கிறீர”[46]**

சுக்கிலமாகிய நீரில் தோன்றும் நீவிர் நீரிலே சடங்குகளைச் செய்கிறீர்

**“உதிக்கநின்றது எவ்விடம் ஒடுங்குகின்றது எவ்விடம்**
**கதிக்குநின்றது எவ்விடங் கண்ணுறக்கம் எவ்விடம்**
**மதிக்கநின்றது எவ்விடம் மதிமயக்கம் எவ்விடம்**
**விதிக்கவல்ல ஞானிகாள் விரித்துரைக்க வேணுமே”[47]**

குழந்தை உண்டாகும் இடம் எது? உண்டாகிய அது வளவர்வதற்கு ஒதுங்கும் இடம் எது? பின்னர் விளங்கித் தோன்றுமிடம் எது? இவை போன்றதை வேதித்துக் கூறும் ஞானிகளே இதனை அராய்ந்து அறிந்து கூறுங்கள்.

ஆண் விந்துவும் பெண் முட்டையும் சேர்வதே கரு உதிக்குமிடம். கருப்பையே உறங்குமிடம், கருவானது வளர்வதற்கு ஒதுங்குமிடமும் இதுவேயாகும்.[48]

**“வட்டமான கூட்டிலே வளர்ந்தெழுந்த அம்புலி**
**சட்டமாம் படத்தில் சங்குசக்கரங்களாய்**
**விட்டதஞ்சு வாசலில் கதவினால அடைத்தபின்**
**முட்டையில் எழுந்தசீவன் விட்டவாறது எங்ஙனே”[49]**

மூலாதார வட்டத்தில் வளர்ந்த நெருப்பு மேல் ஏறி வரும் (அம்புலி)ச் சட்டம் போல் ஒழுங்காகி அமைந்த நாடிகளில் வந்து விளங்குகிறது. சங்கு சக்கரம் இடது வலது என்பது இடது பக்கம் ஓடும் இடா நாடியையும் வலத்தில் ஓடும் பிங்கள நாடியையும் குறிக்கிறது.

இவைகளில் வரும் பிராணவாயுவே குண்டலினி நெருப்பை விரியச் செய்யும். மூலாதாரம் முதல் விசுத்தி வரை முறையே நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என்ற ஐம்பூதங்களும் நிரப்பப்பெற்றுள்ளன. இதனை அஞ்சு வாசலில் கதவினால் அடைக்கப்பட்டது என்றார் சித்தர்.

கருமுட்டையில் வளர்ந்த உயிர் இந்த ஐம்பூதங்களால் உடம்பில் நிறுத்தப் பெற்றுள்ளது. இவை தளர்ந்த பின் உயிர் உடலை விட்டும் வெளியே போகும் என உணர்க.[50]

**“சுக்கிலத் திசையுளே சுரோணிதத்தின் வாசலுள்**
**முச்சதுரம் எட்டுளே மூலாதார அறையிலே**
**அச்சமற்ற சவ்வுளே அறியரன் அயனுமாய்**
**உச்சரிக்கும் மந்திரம் உண்மையே சிவாயமே”[51]**

ஆண் விந்து பெண் முட்டையின் வாசலில் நுழைந்ததும் உயிர் உண்டாகிறது. அது எட்டு முக்கோணங்களை உடைய யோக ஆதாரமாகிய நுண்உடம்பாக வளர்கிறது. இவ்வுடலில் மூலாதாரம் முதல் இந்த எட்டு ஆதாரங்களிலும் பிரம்மமுடிச்சு, விஷ்ணு முடிச்சு, உருத்திர முடிச்சுகளைக் கடந்து செல்லும் மந்திரம் உண்மையில் சிவாயநம என்பதே ஆகும்.

முச்சதுரம் என்பது முக்கோணமாகும். எட்டு என்பது இந்திரயோனியும் கபால உச்சியும் ஆறு ஆதாரமும் ஆக எட்டு ஆகும். சவ்வு என்பது முடிச்சினைக் குறிக்கும் (கிரந்தி).[52]

**“ஐந்தும்ஐந்தும் ஐந்துமாய் அல்லவத்துள் ஆயுமாய்**
**ஐந்துமூன்றும் ஒன்றுமாகி நின்றஆதி தேவனே**
**ஐந்தும்ஐந்தும் ஐந்துமாய் அமைந்தனைத்தும் நின்றநீ**
**ஐந்தும்ஐந்தும் ஆயநின்னை யாவர்காண வல்லரே”[53]**

முதல் ஐந்தில் மாகாபூதம் ஐந்தும் நுண்பூதம் ஐந்தும் ஒன்றின் விரிவே மற்றதாகையால் அடக்கிக் கூறினார். (மகாபூதம் என்பது நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என்பனவாகும் : நுண்பூதம் என்பது தன்மாத்திரை என்று அழைக்கப்படும் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்பனவாம்.)

இரண்டாம் ஐந்து ஞானேந்திரியம் எனப்படும் மெய், வாய், கண், மூக்கு, செவி என்பதாகும்.

மூன்றாம் ஐந்து கர்மேந்திரியம் எனப்படும் கை, கால், நீர்வாய், மலவாய், நாக்கு போன்றவையாகும். இவற்றினால் அடங்கிக் கிடப்பது

உயிராகும் ஒன்பது துளைகளிலும் உயிர் ஓடாமல் கடவுள் காத்ததாகக் கொள்க.

இப்படித் தத்துவங்களின் நடுவே ஆன்மாவை வைத்து இந்த உடலைத் தந்த நீ அவற்றின் உள்ளேயும் நிற்கிறாய். இப்படி இவற்றை இயக்கப் பத்து வித வாயுவாகவும் நீ நின்றதை யாரால் கண்டு உணர முடியும் எனக் கொள்க.[54]

**“பொங்கியே தரித்தஅச்சு புண்டரீக வெளியிலே**
**தங்கியே தரித்தபோது தாதுமாது வையதாம்**
**அங்கியுள் சரித்தபோது வடிவுகள் ஒளியுமாய்**
**கொம்புமேல் வடிவுகொண்டு குருவிருந்த கோலமே”[55]**

தாமரை விரித்தது போன்ற பிரபஞ்ச வெளியோடு பெண்ணின் கர்ப்பப்பை தொடர்பு கொள்வதால் முட்டை உருவாகிறது. அதில் ஆணின் விந்து படிந்து வடிவமும் ஒளியும் கொண்ட ஓர் உடல் உண்டாகிறது.

வான கதிர்களின் சங்கமமே எல்லா உயிர்களின் கர்ப்பத்தை உண்டாக்குகிறது என இதில் கூறப்பட்டதாம்.[56]

**“மண்ணுளோரும் விண்ணுளோரும் வந்தவாறு எங்ஙனில்**
**கண்ணினோடு சோதிபோல் கலந்தநாத விந்துவும்**
**அண்ணலோடு சத்தியும் அஞ்சுபஞ்ச பூதமும்**
**பண்ணினோடு கொடுத்துழிப் பாரொடேழும் இன்றுமே”[57]**

மண்ணில் உள்ளவர் வானில் உள்ளவர் அனைவரும் வந்த வழி இதுவே. அது எது என்றால் சூரிய ஒளி நம் கண் ஒளியோடு கலந்து பார்வை பெற்றது போல், வானக் கதிர்கள் ஆண் பெண் வழியாக விந்து நாதம் என்று கலந்தன. அவை சிவமும் சக்தியும் ஆகும். இப்படி இதை செய்வித்தவர் ஏழு உலகத்தோடு தொடர்பையும் தந்துள்ளார்.[58]

## உயிர் தோற்றம் பற்றி அறிவியல் கூற்று

பாலணு அல்லது புணரி (Sex Cell or Gamete) என்பது பாலியல் அடிப்படையில் இனப்பெருக்கம் செய்யும் உயிரினங்களில் கருக்கட்டலின்போது, இன்னொரு பாலணுவுடன் சேரும் ஆற்றலுள்ள ஒரு கலம் ஆகும். ஒரு இனம் உருவியல் அடிப்படையில் இரண்டு வேறுபட்ட வகையான பாலணுக்களை உருவாக்குமாயின், அவை பெண் புணரி அல்லது கருமுட்டை என்றும, ஆண் புணரி அல்லது விந்து எனவும் அழைக்கப்படுகின்றன.

ஒரு உயிரினத்தின் ஒரு தனியன் ஒரு வகைப் பாலணுவை மட்டும் உருவாக்குமாயின், அவை உருவாக்கும் பாலணுக்களின் தன்மைக்கேற்ப பெண், ஆண் தனியன்களாக இருக்கும். பெண் பெரிய பாலணுவையும், ஆண் சிறிய பாலணுவையும் உருவாக்குகின்றன. ஆண் பாலணு “விந்து” எனவும் பெண் பாலணு “கருமுட்டை” எனவும் அழைக்கப்படுகின்றன. இது, ஆண், பெண் பாலணுக்கள் வெவ்வேறு அளவுகளில் அமையும், மாறுபட்ட பாலணு இணைவு அல்லது பல்லின புணரித்தன்மை நிலைக்கு எடுத்துக்காட்டு ஆகும். மனித இனத்தின் நிலையம் இத்தகையதே. மனித இனத்தில் கருமுட்டைகள், விந்துக்களிலும் 20 மடங்கு பெரியவை. மாறாக, ஒத்த பாலணு இணைவு என்பதில் ஆண், பெண் பாலணுக்கள் இரண்டும் ஒரே அளவையும் வடிவத்தையும் கொண்டவை.

பாலணு ஒரு உயிரினத்தின் அரைப்பகுதி மரபுத் தகவல்களைக் கொண்டிருக்கும். இது ஒவ்வொரு வகை மரபணுக்களிலும் ஒவ்வொன்றைக் கொண்டிருக்கும். மனிதர்களில் சாதாரண உயிரணுக்களில் 23 சோடி நிறப்புரிகள் இருக்கும். இவற்றில் ஒரு சோடி நிறப்புரிகள் பாலின வகையை, அதாவது ஒரு குறிப்பிட்ட தனியன் ஆணா, பெண்ணா என்பதைத் தீர்மானிக்கும், பாலினத்தைத் தீர்மானிக்கும் நிறப்புரிகள் பாலினநிறப்புரிகள் எனவும், ஏனையவை தன்நிறப்புரிகள் எனவும் அழைக்கப்படுகின்றன. பாலின நிறப்புரிகள் X,Y என இருவகைப்படுகின்றன. அவற்றில் XX நிறப்புரிச் சோடிகள் இருப்பின˙ பெண்ணாகவும், X,Y நிறப்புரிச் சோடிகள் இருப்பின் ஆணாகவும் இருக்கின்றன.

பாலணுக்கள் உருவாகும்போது, ஒவ்வொரு பாலணுவும் சாதாரண உயிரணுவில் இருக்கும் நிறப்புரிச் சோடிகளில் இருந்து ஒவ்வொரு நிறப்புரியை

மட்டுமே பெற்று உருவாவதால், 23 தனி நிறப்புரிகளைக் கொண்டிருக்கும். கருமுட்டை X நிறப்புரிகளை மட்டும் கொண்டிருக்கும், விந்துக்கள் X அல்லது Y நிறப்புரிகளைக் கொண்டிருக்கலாம்.

எனவே ஆண், பெண் பாலணுக்கள் இணைந்து உருவாகும் கருவின் பாலின வகையைக் கட்டுப்படுத்துவது ஆண்களே ஆகும். பால் வகையைத் தீர்மானிக்கும் நிறப்புரிகள் ஆணுக்கு X,Y ஆகவும் பெண்ணுக்கு XX ஆகவும் இருப்பதனால், Y நிறப்புரியைக் கொண்டுள்ள ஒரே பாலணுவான விந்து மட்டுமே ஆண் பிறப்பதைத் தீர்மானிக்க முடியும்.[59]

## உயிரணு

உயிரணு (இலங்கை வழக்கு ˙கலம், ஆங்கிலம் Cell) என்பது உயிரினங்கள் அனைத்துக்கும் அடிப்படை கட்டமைப்பு, தொழிற்பாட்டு அலகு ஆகும். அனைத்து உயிர்களும் ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட உயிரணுக்களின் கூட்டினால் உருவானவை. உயிரினங்களாக வகைப்படுபவற்றில் காணப்படும் மிகச் சிறிய அலகாக இருக்கும் இந்த உயிரணுக்களை உயிரினங்களின் கட்டடத்தொகுதிகள் எனலாம்.[60] தமிழில் உயிரணுவை செல், கலம், கண்ணறை, திசுள் என்றும் குறிப்பிடுவர் விலங்குகள், தாவரங்களில் உள்ள கலங்கள் 1 தொடக்கம் 100 மைக்ரோ அளவு வரை வேறுபடுவதனால், அவற்றை வெறும் கண்ணால் பார்க்க முடியாது. எனவே அவற்றைப் பார்க்க நுணுக்குக்காட்டி தேவைப்படுகின்றது.[61] உயிரணுக்கள் குறைந்த பட்சம் 3.5 பில்லியன் ஆண்டுகளுக்கு முன்னாள் உருவாகியிருக்கும் என அறியப்படுகின்றது[(62) (63) (64)]

தனியொரு உயிரணுவினால் ஆன உயிரினங்களாக பாக்டீரியா, ஆர்க்கீயா போன்ற நுண்ணுயிர்களை உள்ளடக்கிய நிலைக்கருவிலிகளையும், அநேகமான அதிநுண்ணுயிரிகளையும் ஒரு சில பூஞ்சைஇனங்களையும் குறிப்பிடலாம். மனிதன் போன்ற விலங்குகள் தாவரங்கள், அநேகமான பூஞ்சைகள் பல்லுயிரணுவுள்ள உயிரினங்களுக்கு எடுத்துக்காட்டுகள். விலங்குகளின் உயிரணுக்களில் இருந்து, தாவரங்களின் உயிரணுக்கள் வேறுபட்டுக் காணப்படுகின்றன. ஆண், பெண் வேறுபாடுடைய உயிரினங்களில்

பாலணுக்கள் இணைந்து உருவாகும் முதலாவது உயிரணு கருவணு (Zygote) என அழைக்கப்படுகிறது.

மனிதரில் பெண்ணின் இனப்பெருக்க உறுப்பான சூலகத்தில் இருந்து வெளியேறும் சூல்முட்டையுடன், ஆணின் விந்து இணைந்து உருவாகும் முதலாவது உயிரணு, அதாவது கருவணு மீண்டும், மீண்டும் கலப்பிரிவுக்குள்ளாகி பிரதி செய்யப்பட்டு கோடிக்கணக்கான கூட்டுக் களங்களாகி குழந்தையாக உருப்பெறுகிறது.

உயிரணு விழுங்கல் ஊடாக கருவினுள் ஒரு பொருள் உட்செல்லல் நிகழும். உயிரணு மென்சவ்விலிருந்து கருவுக்குச் செல்லும் பகோசோம், பின்னர் கருவால் விழுங்கப்படும். இதனால் அதன் உள்ளடக்கங்கள் விடுவிக்கப்படுகின்றன. உயிரணு உயிரியலில், சில நேரங்களில் “கட்டுப்பாட்டு மையம்” எனவும் அழைக்கப்படும் கரு வானது (கருக்கள் என்பது பன்மை ஆகும். இது இலத்தின் மொழியின் Nucleus அல்லது Nuculeus என்ற சொல்லிலிருந்து வந்ததாகும். இது கருமூலப்பகுதி என்னும் பொருளுடையது), யூக்கரியோட்டி உயிரணுக்களில் காணப்படுகின்ற மென்படலத்தால் உள்ளடக்கப்பட்ட அணு உள் அமைப்பாகும். இது உயிரணுவின் பாரம்பரியப் பொருளைக் கொண்டிருக்கும். இது நிரமூர்த்தங்களை உருவாக்குவதற்கு, ஹிஸ்டோன்கள் போன்ற பலவகைப் புரதங்களுடான சேர்மத்தில் பல நீண்ட நேரான டி.என்.ஏ மூலக்கூறுகளாக ஒழுங்கமைக்கப்பட்டிருக்கும்.

இந்த நிறமூர்த்தங்களிலுள்ள மரபணுக்களே உயிரணுவின் கருவுக்குரிய மரபுத்தொகுதியாகும். மரபணு வெளிப்படும் தன்மையை ஒழுங்குப்படுத்துவதன் மூலம், இந்த மரபணுக்களின் ஒருமைப்பாட்டைப் பேணுவதும், உயிரணுவின் செயற்பாடுகளைக் கட்டுப்படுத்துவதும் கருவின் பணியாகும். எனவே கருவானது உயிரணுவின் கட்டுப்பாட்டு மையமாகும். கரு உறை மற்றும் கரு அடுக்கு ஆகியவை கருவை உருவாக்குகின்ற முக்கியமான கட்டமைப்புகளாகும். இதில் கரு உறை என்பது இரட்டை மென்சவ்வாகும். இது அணு உள்ளமைப்பை முழுமையாக மூடி, கருவின் சைட்டோப்பிளாசத்திலிருந்து அதன் உள்ளடக்கங்களைப் பிரிக்கிறது. கரு அடுக்கு என்பது கருவுக்குள் உள்ள ஒரு வலைப்பின்னல் ஆகும். செல்சட்டகம் மொத்தமாக உயிரணுவைத் தாங்குவது போல, இது பொறிமுறை ஆதரவை வழங்குகிறது.

கரு மென்சவ்வானது பெரும்பாலான மூலக்கூறுகளை ஊடுபுகவிடாது என்பதால், கரு உரையினூடாக மூலக்கூறுகள் அசைவதை அனுமதிப்பதற்கு கருத்துளைகள் தேவைப்படுகின்றன. இந்தத் துளைகள் இரு மென்சவ்வுகளையும் கடக்கின்றன. இது சிறிய மூலக்கூறுகளும், அயன்களும் சுதந்திரமாக அசைய அனுமதிக்கின்ற தடத்தை வழங்குகின்றது. புரதங்கள் போன்ற பெரிய மூலக்கூறுகளின் அசைவானது கவனமாகக் கட்டுப்படுத்தப்படுகிறது. இதற்கு காவிப் புரதங்களால் ஒழுங்குப்படுத்தப்படும் இயக்கத்திலுள்ள போக்குவரத்து அவசியமாகும். கருவுக்குரிய போக்குவரத்தானது உயிரணுவின் செயற்பாட்டுக்கு இன்றியமையாததாகும். ஏனெனில் துளைகளின் ஊடான அசைவானது மரபணு வெளிப்படுத்தும் தன்மை மற்றும் நிறமூர்த்தப் பராமரிப்பு இரண்டுக்குமே தேவையானதாகும்.

கருவின் உட்பகுதியானது மென்சவ்வால் சூழப்பட்ட எந்தவொரு உப அறைகளைக் கொண்டிராத போதும், இதன் உள்ளடக்கங்கள் சீரானவை அல்ல. மேலும் தனித்துவமான புரதங்கள், ஆர்.என.ஏ, மூலக்கூறுகள் மற்றும் நிறமூர்த்தங்களின் நுணுக்கமான பகுதிகள் ஆகியவற்றாலான பல துணைக்கரு உடல்கள் உள்ளன. இவற்றில் மிகவும் அறியப்பட்டது புன்கரு என்பதாகும். இது ரைபோசோம்களின் கூட்டத்தில் உள்ளடக்கப்படும். புன்கருவில் உருவாக்கப்பட்ட பின்னர், ரைபோசோம்களானவை MRNA I மொழிப்பெயர்க்கின்ற சைட்டோபிளாசத்திற்கு அனுப்பப்படும்.

கரு என்பது விலங்குகளிலுள்ள மிகப்பெரிய உயிரணு உள்ளுறுப்பாகும். பாலுட்டிகளின் உயிரணுக்களில் கருவின் அண்ணளவான விட்டம் தோராயாமாக 6 மைக்ரோமீட்டர்களாகும். இது உயிரணுவின் கனவளவின் கிட்டத்தட்ட 10 சதவீதத்தை நிரப்புகிறது. இதனுள் காணப்படும் பாகுநிலையான திரவம் கருமுதலுரு என அழைக்கப்படும். மேலும் இது கருவுக்கு வெளிப்புறமாகக் காணப்படும் சைட்டோசெல்லுடன் அதன் உள்ளடக்கத்தில் ஒத்தது. இது அடர்த்தியாக கிட்டத்தட்ட கோளமான உள்ளுறுப்பாகத் தோன்றுகிறது.[65]

## கருவணு

கருவணு அல்லது நுகம் ( Zygote ) என்பது பாலின இனப்பெருக்கம் மூலம் ஆண் பாலணுவும், பெண் பாலணுவும் இணைந்து உருவாகும் முதலாவது உயிரணு ஆகும். பல்கல உயிரனங்களில் இந்த உயிரணுவே முளையவிருத்தியின் தொடக்க நிலையாகும். ஒருமடிய நிலையில் உள்ள இரு பாலணுக்கள் இணைவதனால் கருவானது இருமடியமாக இருக்கும். அத்துடன் இரு பெற்றோரிலிருந்தும் மரபியல் தகவல்களைப் பெற்றிருக்கும். மனிதரில் பெண்ணின் கருப்பைக்குள் குழந்தை உருவாகுவதற்கான ஆரம்ப நிலைத் தோற்றப்பாடே “கருவணு“ எனப்படுகின்றது. பெண்ணின் பாலணுவான சூல்முட்டையும், ஆணின் பாலணுவான விந்தும் இணைவதனால் உருவாகும் கருவணு பின்னர் குழந்தையாக விருத்தியடையும்.

ஒரு பெண்ணின் வயிற்றில் உள்ள ஒரு பை போன்ற உறுப்பிலேயே கருவணு வளர்வதனால் அந்த உறுப்பு கருப்பை என்று அழைக்கப்படுகின்றது. கருவணுவானது உருவாகும்போது, பெண்ணில் கருத்தரிப்பு நிகழ்கின்றது.[66]

## முளையம்

முளையம் (Embryo) எனப்படுவது. மெய்க்கருவுயிரி (Eukaryote) உயிரினங்களில், ஆண், பெண் பாலணுக்கள் கருக்கட்டலுக்கு உட்பட்டு உருவாகும் கருவணுவானது தனது முதலாவது கலப்பிரிவின் பின்னர், பிறப்பு அல்லது குஞ்சு பொரித்தல் அல்லது முளைத்தல் வரை கொண்டிருக்கும் இருமடிய பல்கல ஆரம்ப விருத்தி நிலையாகும். கருவணுவிலிருந்து முளையம் உருவாகி விருத்தியடைவதனை முளையவிருத்தி என்பர்.

மனிதரில் கருக்கட்டலின் நிலைக்குப் பின்னர் 8 வாரங்கள் வரைக்குமே பொதுவாக முளையம் என அழைக்கப்படும். கருக்கட்டலின் பின்னர் நிலையை முதிர்கரு என்று அழைக்கின்றனர்.

பாலியல் தொடர்பு மூலம் இனப்பெருக்கம் செய்யும் உயிரினங்களில், விந்தானது சூல்முட்டையுடன் கருக்கட்டிய பின்னர் தோன்றும் கருவணுவானது இரு பெற்றோரிடமிருந்து அரை அரைவாசி டி.என்.ஏ கொண்ட இருமடிய

உயிரணுவாக இருக்கும். இது பின்னர் இழையுருப்பிரிவு எனப்படும் கலப்பிரிவுக்கு உட்பட்டு பல்கல நிலையில் விருத்தியடையும், இந்த செயல்முறையால் தனியன் உருவாதலுக்கான ஆரம்பநிலையே முளையமாகும்.[67]

## கருத்தரிப்பு

கருத்தரிப்பு என்பது, பாலுட்டிகளில், கருக்கட்டல் நிகழ்வின்போது உருவாகும் ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட அடுத்த சந்ததிக்கான உயிரி, முளையவிருத்தி மூலம் முளையமாக விருத்தியடைந்து, பின்னர் முதிர்கரு நிலையில் குழந்தை பிறப்புவரை பெண்களின் இனப்பெருக்க உறுப்பான கருப்பையில் பதிந்துஇ தாங்கிக் கொள்ளப்படும் நிலையாகும்.

ஒவ்வொரு மாதமும் ஒரு பெண்ணின் சூல்முட்டை வெடித்து வெளியேறுகிறது. வெளி வந்து ஒரு நாள் அது உயிரோடு இருக்கும்.[68] அக்காலத்தில் ஆணும் பெண்ணும் கலவியில் ஈடுபட்டால், ஆணின் விந்துக்கள் பெண்ணின் இனப்பெருக்க உறுப்பினூடாக நீந்தி கருமுட்டையைச் சென்றடைகின்றன. கலவியின்போது பெண்ணின் இனப்பெருக்க உறுப்பினுள் உட்புகும் விந்தானது, யோனியதைத் தொடர்ந்து கருப்பை வாய், கருப்பை வழியாக நீந்திச் சென்று பாலோப்பியன் குழாயை அடையும். அதேவேளை சூலகத்தில் இருந்து வெளியேறும் முட்டையும் பாலோப்பியன் குழாயை அடையுமாயின், விந்தானது அங்கே கருமுட்டையுடன் இணையும். அந்த விந்துக்களில் ஏதாவது ஒன்று சூல்முட்டைக்குள் உள்புகுந்தால் கருக்கட்டல் நிகழ்ந்து கருத்தரிக்கும். ஒரு விந்து சூல்முட்டைக்குள் போன பின்னர், வேறு விந்துக்கள் அந்த முட்டைக்குள் உள்ளே போக முடியாது.

வெளியேறும் விந்தானது உடனேயே கருக்கட்டக் கூடிய இயல்பை முழுமையாகக் கொண்டிருப்பதில்லை.[69] அவை நீந்திச் செல்லும்போது, பல மணித்தியாலங்களுக்கு அவற்றில் நிகழும் சில மாற்றங்களே, அவற்றைக் கருக்கட்டலுக்குத் தயார்படுத்துகின்றன. கருக்கட்டலின்போது ஒருமடிய விந்தும், ஒருமடிய கருமுட்டையும் இணைந்து இருமடிய நிலையிலுள்ள கருவணுவை உருவாக்குகின்றது. கருவணுவானது பின்னர் கருப்பை நோக்கி நகர

ஆரம்பிக்கும், அது கருப்பையை வந்தடைய 4–7 நாட்கள் எடுக்கும், அதேவேளை கருவணு தொடர்ந்து பல மாற்றங்களுக்கு உட்படும்.

கருக்கட்டல் நிகழ்ந்த பின்னர், தோன்றும் கருவணுவானது கிட்டத்தட்ட 24–36 மணித்தியாலங்களில் இழையுருப்பிரிவு என்னும் கலப்பிரிவுக்குள்ளாகும். கலப்பிரிவின் போது, உயிரணுக்களின் எண்ணிக்கை விரைவாகவும், இரட்டிப்படைந்து கொண்டும் அதிகரித்துச் செல்லும். கிட்டத்தட்ட 70–100 உயிரணுக்களைக் கொண்ட நிலையில், இளம்கருவளர் பருவம் (Blastocyst) என அழைக்கப்படும். பொதுவாக கருக்கட்டல் நிகழ்ந்து 5 நாட்களில் இவ்வாறு அழைக்கப்படும் இந்நிலையில் இது மூன்று படலங்களைக் கொண்டிருக்கும். இவை புறப்படலம் (Ectoderm) இடைப்படலம் (Mesoderm), எனப்படும். வளர்ச்சியுற்ற நிலையில் புறப்படலம் தோல், நரம்புத் தொகுதியையும், இடைப்படலம் தசை, எலும்புத் தொகுதியையும், அகப்படலம் சமிபாடு, சுவாசத்தொகுதி போன்றவற்றையும் உருவாக்க வல்லன, கருப்பையை வந்தடையும் இளம் கருவளர் பருவமானது கருப்பைச் சுவரில் பதிந்து உறுதியாக இருக்கும்.

இது மேலும் விருத்தியடைந்து செல்லும் நிலையில், அது முளையம் எனப்படும். அப்படி உயிரணுக்களின் எண்ணிக்கை அதிகரித்துச் செல்லும் போது உயிரணுக்களில் மாற்றங்கள் ஏற்பட்டு, உயிரணு வேற்றுமைப்பாடு மூலம் வெவ்வேறு இழையங்கள் உருவாகும், இது முளைய விருத்தி எனப்படும். கருவின் வளர்ச்சிக்கு ஆதாரத்தைக் கொடுக்கும் சூல்வித்தகம், தொப்புள்கொடி போன்றனவும் விருத்தியடையும், இந்த விருத்தி நிலையங்களின் போது உருவாகும் குழந்தைக்கு தகுந்த பாதுகாப்பை வழங்குவதற்காக, கருவை அல்லது முதிர்கருவைச் சுற்றி பனிக்குடநீர், அல்லது பணிக்குடப்பாய்மம் என்னும் திரவத்தைக் கொண்ட, பணிக்குடப்பை எனப்படும் ஒரு பையும் உருவாகியிருக்கும். தொடரும் விருத்தியின்போது கண், விரல்கள், வாய், காது போன்ற உடலுறுப்புகள் தெரிய ஆரம்பிக்கும். உயிரணு வேற்றுமைப்பாடு கிட்டத்தட்ட 8 கிழமைகளில் நிறைவடைந்துவிடும். அந்நிலையில் முதிர்கரு என்று அழைக்கப்படும்.

முளைய விருத்தியில் விருத்தியடையத் தொடங்கிய உடல் உறுப்புக்கள், மற்றும் உடலியக்கத் தொகுதிகள் முதிர்கருவில் தொடர்ந்தும்

விருத்தியடையும், கருத்தரிப்பின் மூன்றாவது மாதத்தில் பால் உறுப்புக்கள் வெளித்தெரிய ஆரம்பிக்கும். தொடர்ந்து முதிர்கருவானது நீளமும் நிறையும் அதிகரித்துச் செல்லும். அதிகளவு நிறை அதிகரிப்பு கருத்தரிப்பின் இறுதி நிலைகளிலேயே ஏற்படும்.[70]

## கருக்கட்டல்

கருக்கட்டல் என்பது இரு புணரிகள் இணைந்து ஒரு புதிய உயிரினம் உருவாகும் செயல்முறையாகும். விலங்குகளில் இது முட்டை விந்து எனும் இரு புணரிகள் இணைந்து, இறுதியில் ஒரு முளையம் உருவாதலைக் குறிக்கிறது. குறிப்பிட்ட விலங்கைப பொறுத்து, கருக்கட்டல் செயல்முறையானது உடலின் உள்ளே நடைபெறுமா, அல்லது உடலுக்கு வெளியே நடைபெறுமா என்பது முடிவாகிறது. தாவரங்களில் மகரந்த மணிகளில் இருக்கும் புணரிக்கலமானது, முட்டைக் கலத்துடன் இணைந்து உருவாகும் செயல்முறையே கருக்கட்டல் எனப்படுகிறது. கருக்கட்டளின் பின்னர் ஒரு தனி உயிரினம் உருவாகும் முழுமையான செயல்முறையை இனப்பெருக்கம் என்கின்றோம்.

வெவ்வேறு விலங்குகளில் கருக்கட்டலின்போது விந்துக்கள் வேறுபட்ட முறைகளில் முட்டையை சென்றடையும். அத்துடன் பல விந்துகளில் ஒன்று மட்டும் முட்டையுடன் இணையும். கருக்கட்டலானது உள்ளான கருக்கட்டலாகவோ, அல்லது வெளியான கருக்கட்டலாகவோ இருக்கலாம். உள்ளான கருக்கட்டல் என்பது உடலுக்கு உள்ளாக விந்தும், முட்டையும் இணைவதையும், வெளியான கருக்கட்டல் என்பது உடலுக்கு வெளியாக விந்தும்இ முட்டையும் இணைவதையும் குறிக்கும்.

மீன், ஐதரா (Hydra), பவளம் (Coral) போன்ற பொதுவான நீர்வாழ் விலங்குகளில் வெளியான கருக்கட்டலே நிகழ்கிறது. இங்கே ஆணிலிருந்து நீர்த்தன்மையான வெளியூடகம் ஒன்றில் வெளியேற்றப்படும் விந்துக்கள் நீந்திச் சென்று, அங்கே பெண்ணிலிருந்து வெளியேற்றப்படும் முட்டைகளுடன் இணைகின்றது. இவ்வகையான கருக்கட்டலுக்கு, விந்து இலகுவாக உட்புகக் கூடியதாக, முட்டையானது மெல்லிய வெளிமென்சவ்வைக் கொண்டதாக இருக்க

வேண்டும். அத்துடன் விந்தானது வீரியமான அசையும் திறன் கொண்டதாக இருப்பதுடன், வெளிச்சூழலை எதிர் கொள்வதால், மிக அதிகளவில் விந்துக்கள் உருவாக்கப்படும் நிலையிலும் இருக்க வேண்டும். இவ்வாறான கருக்கட்டலில் உடல்திரவங்களின் தொடர்பு குறைவாக இருப்பதனால், தொற்றுநோய்களிலிருந்து பாதுகாப்பு கிடைக்கும். அத்துடன் தேர்வற்ற புணரிகளின் இணைவால், மரபியல் வேறுபாடு அதிகளவில் உருவாகும் சந்தர்ப்பமும் ஏற்படும்.

உள்ளான கருக்கட்டலில், பொதுவாக விந்தும், முட்டையும் இணைவது பெண் விலங்குகளின் உடலின் உள்ளேயே நடைபெறும். இவ்வகை கருக்கட்டலில், கருக்கட்டலின் நிகழ்வுகள் அதிகமாக இருப்பதுடன், புணரிகள் வீணாதலும் குறைக்கப்படும். அத்துடன் புணரிகளை தேர்வு செய்ய முடிவதுடன், முட்டைக்கான அதிகக்காலம் பாதுகாப்பும் கிடைக்கும். கோழி போன்ற தடித்த வெளி மென்சவ்வைக் கொண்ட முட்டைகளை உருவாக்கும் விலங்குகளில், முட்டைகள் உடலைவிட்டு வெளியேறிய பின்னர் விந்துக்கள் உட்புகுவது கடினமாதலால், முட்டைகள் உடலினுள் இருக்கையிலேயே, மென்சவ்வை தடிப்பதற்காக இருக்கும் நிலையிலேயே கருக்கட்டல் நிகழ்ந்துவிடும்.

தாவரங்களில் பூக்கும் தாவரங்கள் (Flowering Plants) வித்துமூடியிலிகளை (Gymnospermae) உள்ளடக்கிய வித்துத் தாவரங்கள் (Seed – Bearing Plants) என்ற பிரிவினுள் வரும் விதை கொண்ட தாவரங்களில் இவ்வகையான கருக்கட்டல் நடைபெறுகிறது. ஆனாலும் அது நடைபெறும் செயல் முறையானது வேறுபடுகின்றது. கருக்கட்டலின் பின்னர் உருவாகும் முளையமானது புதியதொரு தாவரமாக விருத்தியடையும் வல்லமை கொண்டதாக இருக்கும்.(71) (72)

## உயிரியல் வளர்ச்சிக் கோட்பாடு

உயிரியலின் படி மனித வளர்ச்சியானது கருத்தரிப்பின் போதே தொடங்குகிறது. விந்தணுவானது சினை முட்டையினுடைய சவ்வினுள் வெற்றிகரமாக உள்ளே செல்வது கருவுறுதல் எனப்படுகிறது.விந்தணு மற்றும் முட்டை இரண்டினுடைய மரபணு பொருட்கள் சேர்ந்து ஒரே செல்லாக

மாறுவதை சைகோட் என்கிறோம். இதிலிருந்து தான் பிறப்பிற்கு முன் ஏற்படக் கூடிய வளர்ச்சியானது ஆரம்பிக்கிறது.[73]

கருவுருதலின் நிலையானது, கரு உருவானதிலிருந்து கரு ஒட்டுதல் வரையான காலமாகும். இந்நிலையானது 10 நாட்களில் கருத்தங்கள் நிலையோடு நிறைவு பெறுகிறது.[74] சைகோட் முழுவதும் மரபணு பொருட்களே உள்ளன. சைகோட்டானது வளர்ச்சியடைந்து கருவாகிறது. சுருக்கமாக, கருவளர்ச்சியானது நான்கு நிலைகளைக் கொண்டது அவையாவன, மொருலா நிலை, பிளாஸ்டுளா நிலை, கேஸ்டுளா நிலை மற்றும் நியுருலா நிலையாகும். கரு ஒட்டுதலுக்கு முன்பாக, கரு புரத ஓட்டுக்குள் இருக்கும். சோனா பெலுசிடா, மைடாசிஸ் முறையில் செல் பிரிதலை நிகழ்த்துகிறது. கருவுறுதல் அடைந்து ஒரு வாரத்தில் கரு அளவில் பெரிதாகி இருக்காது ஆனால், சோனா பெலுசிடாவிலிருந்து விடுபட்டு தாயினுடைய கருப்பையின் சுவரில் ஒட்டிக் கொள்கிறது. கருப்பை எண்டோமெட்ரியத்தில் பல்வேறு வினைகள் ஏற்பட்டு கருப்பை செல்கள் வேகமாக பெருக்கம் அடைந்துஇ கருவை சூழ்ந்து கொள்கிறது. இதனால் கருவானது, கருப்பையின் திசுவில் புதைந்துவிடுகிறது. அதே நேரத்தில் கரு, முளையத்துக்குரிய மற்றும் மூலவுருவுக்கப்புறமான திசுக்களாக வளர்ச்சியடைகிறது. இறுதியில், உருப்பேற்றக் கருவினுடைய சவ்வு மற்றும் நஞ்சுக்கொடியும் உருவாகிறது.

மனிதனில், பிறப்பிற்கு முன் ஏற்படக் கூடிய வளர்ச்சியில் கருவானது கருக்குழவி என்றழைக்கப்படுகிறது. கருவுறுதலில், கரு நிலையிலிருந்து கருக்குழவி நிலைக்கு விதி கட்டுப்பாடு ஏதும் இல்லாமல் மாறுவதற்கு எட்டு வாரங்கள் ஆகின்றன. கருவினை ஒப்பிடும் போது, கருக்குழவியனது நன்கு அறியக் கூடிய வெளிப் பண்புகளையும் உள்ளுறுப்புகள் வளர்வீரியம் கொண்டும் காணப்படுகின்றன. மனித வளர்ச்சியகம் போன்ற மற்ற சிற்றினங்களிலும் ஒத்த வகையிலேயே வளர்ச்சியானது ஏற்படுகிறது. 4 வாரங்களில் தெளிவான ஆம்னியான் திரவத்தைக் கொண்ட பையில் கருவைச் சுற்றி உருவாகிவிடுகிறது.

- மனித உடல் வளர்ச்சி நிலை வாரம்வாரியாக கீழே குறிக்கப்படுகிறது
- கருத்தரித்த 24 மணி நேரத்திலிருந்து 30 மணி நேரத்திற்குள், சைகோட்டின் முதல் செல் பிளவு முடிகிறது.
- மைட்டாசிஸ் என்ற இந்த செய்கையின் மூலம், ஒரு செல் இரண்டாக, இரண்டு நான்காக பெருகுகிறது.
- ஒரு வாரத்திற்குள, உள்ளடங்கிய பிண்டத்தில் செல்கள் இரண்டு அடுக்குகளை உருவாக்குகின்றன. அவை ஹைப்போபிளாஸ்ட் மற்றும் எப்பிபிளாஸ்ட் எனும் ஹைப்பொபிளாஸ்ட் கரு உறையையும் எப்பிபிளாஸ்டின் செல்கள் ஆம்னியான் என்ற சவ்வை உருவாக்குகின்றன.
- ஏறத்தாழ 2 ½ வாரங்களில், எப்பிபிளாஸ்ட் 3 பிரத்யேக சவ்வுகளை அல்லது செல் அடுக்குகளை உருவாக்குகிறது. இவை எக்ட்டோடர்ம் மற்றும் மீசோடர்ம் எனப்படும்.
- 3 வாரங்களில் மூளை 3 முக்கிய பகுதிகளாகப் பிரிகிறது. இவை முன்பகுதி, நடுபகுதி மற்றும் பின்பகுதி எனப்படும். இதயத்துடிப்பு கருவுற்ற 3 வாரங்கள் மற்றும் 1 நாளில் தொடங்குகிறது.
- 3 முதல் 4 வாரங்களுக்குள், உடல் அமைப்பு உருவாகி மூளை, முதுகுத்தண்டு மற்றும் கருவின் இதயம் ஆகியவை கரு உறையை ஒட்டி காணப்படுகின்றன.
- 4 முதல் 5 வாரங்களுக்குள் மூளை வேகமாக வளர்ந்து, மூளையின் அரைக்கோளம் தோன்றி, அது மூளையின் பெரும்பகுதியாக மாறுகிறது.
- 5 வாரங்களில் நிரந்தரமான சிறுநீரகங்கள் தோன்றுகின்றன.
- 5 ½ வாரங்களில் குருத்தெலும்பு உருவாகத் தொடங்குகிறது.
- 6 வாரங்களில் மூளையின் அரைக்கோளங்கள் மற்ற பகுதிகளை விட வேகமாக வளர்கின்றன.

- 7 வாரங்களில் கால் அசைவுகள் தோன்றுகின்றன.
- 7 ½ வாரங்களில் கண்ணின் வண்ண விழித்திரை உண்டாகிறது. கண்இமைகள் வேகமாக வளர்கின்றன.
- 8 வாரங்களில் மூளை வெகுவாக வளர்ச்சியடைந்து, கருவின் மொத்த உடல் எடையில் பாதியாக வளர்ச்சியடைகிறது.
- 9 முதல் 10 வாரங்களுக்குள் நிகழும் திடீர் வளர்ச்சி உடல் எடையை 75 % க்கும் மேல் அதிகரிக்கச் செய்கிறது.
- 11 முதல் 12 வாரங்களுக்குள், சிசுவின் எடை ஏறத்தாழ 60 % அதிகரிக்கிறது.
- 12 வாரங்கள் கர்ப்பத்தின் முதல் மூன்று மாதங்கள், அல்லது முப்பருவம் முடிவடைந்ததைக் குறிக்கிறது.
- 20 வாரங்களில் காக்லியா எனப்படும் கேள்வி உறுப்பு முழு வளர்ச்சி அளவை அடைகிறது.
- 24 வாரங்களில் கண் இமைகள் திறப்பதால் சிசுவானது கண் சிமிட்டும் எதிர்வினை புரிகிறது.
- 28 வாரங்களில் சிசு ஒலியின் எற்றத்தாழ்வுகளை இனம் பிரித்தறிகிறது.
- 30 வாரங்களில் ஒரு சராசரி சிசுவின் சுவாசம் 30 முதல் 40 % நேரம் நடைபெறுகிறது.
- ஏறத்தாழ 32 வாரங்களில் ஆல்வியோலை அல்லது காற்று செல்கள் நுரையீரலில் உருவாகத் தொடங்குகின்றன.
- 36 வாரங்களில் சிசு பிரசவத்தைத் தொடங்குகிறது.[75]

## விந்து

விந்தணு அல்லது விந்து (Sperm) என்பது ஆண் இனப்பெருக்க அணு. Sperm என்ற வார்த்தை கிரேக்கத்தின் ஸ்பெர்மா என்ற வார்த்தையிலிருந்து உருவானதாகும். இதற்கு கிரேக்கத்தில் விதை என்று பொருள்படும். பொதுவாக விந்தணுக்கள் விதைப்பைகளில் சேமிக்கப்பட்டாலும். முன்னிருக்கு சுரப்பி (PROSTATE GLAND)-யிலிருந்து வரும் திரவம் 98 விழுக்காடும், விந்தணுக்கள் 2 விழுக்காடும் இருக்கும். விந்தணுக்கள் விந்தகங்களில் உற்பத்தியாகும். இந்த விந்தணுக்களானது விந்து கொள்பையில் சேகரிக்கப்படுகின்றன.

விந்தணுவிற்கு தலை, உடல், வால் என மூன்று பகுதிகள் உள்ளன. இந்த பகுதியானது, பெண்ணின் இனப்பெருக்க உறுப்பினுள் நீந்திச் சென்று முட்டையுடன் கருக்கட்ட உதவுகிறது. கருக்கட்டலின் பொது ஒருமடிய நிலையுள்ள ஆணின் விந்தணுவில் உள்ள 23 நிறப்புரிகள்/ குரோமோசோம்கள், ஒருமடிய நிலையுள்ள பெண்ணின் முட்டையிலுள்ள 23 நிறப்புரிகள்/ குரோமோசோம்களுடன் இருமடிய நிலையுள்ள கருவை உருவாகின்றன.

- ஒரு விந்து தள்ளலில் வெளியேற்றப்படும் விந்துப் பாய்மத்தின் சராசரி அளவு 2 முதல் 6 மில்லி மீட்டர்
- வாழ்நாளில் ஒரு மனிதன் விந்து பாய்ச்சும் தடவைகளின் சராசரி எண்ணிக்கை : 5000
- வாழ்நாளில் மொத்த விந்துப் பாய்மப் பாய்ச்சல் : 17 லிட்டர்
- ஒரு தேக்கரண்டி விந்துப் பாய்மத்தின் கலோரிப் பெறுமானம் : 7
- ஓர் ஆரோக்கியமான ஆணின் விந்துதள்ளில் வெளியேற்றப்படும் விந்துக்கலங்களின் சராசரி எண்ணிக்கை : 40 முதல் 600 மில்லியன்
- ஒரு விந்து முட்டையுடன் கருக்கட்டப் பயணிக்கும் தூரம் : 7.5 – 10 சென்டி மீட்டர்.

- விந்து ஆயுட்காலம், உருவாக்கத்திலிருந்து பாய்ச்சப்படும்வரை 2.5 மாதங்கள் ஆகும்
- பாய்ச்சப்பட்ட விந்தின் ஆயுட்காலம் : 30 நொடிகளிருந்து ஆறு நாட்கள் வரை (கிடைக்கப்பெறும் சூழலை பொறுத்து இது அமையும்)[76]

## சூல்முட்டை

கரு முட்டை (OVVUM) அல்லது சூல் முட்டை என்பது பெண்ணின் இனப்பெருக்க உயிரணு ஆகும். இது ஆண், பெண் வேறுபாடுள்ள இனங்களில், பெண் உயிரினங்களில் இருக்கும் பால் உயிரணுவாக இருப்பதனால், பெண் பாலணு எனவும் அழைக்கப்படும். சூல் முட்டையானது ஆணின் பாலணுவுடன் இணைந்து கருவணுவை உருவாக்கும். மனிதரில் பெண்ணின் சூலகத்தில் இந்த சூல் முட்டைகள் உருவாகும். குழந்தைப் பிறப்பின்போதே ஒரு பெண்ணிற்கு வாழ்நாள் முழுமைக்குமான முட்டை மூலங்கள் (Primordial Follicles) உண்டாகிவிடுகின்றன, பெண் பூப்படைந்த காலத்திலிருந்து அனைத்து முட்டை மூலங்களும் தீரும் வரை மாதத்திற்கு ஒரு முட்டையாக முதிரவைத்து வெளியிடப்படுகிறது. இது முட்டைப் பிறப்பு எனப்படுகிறது.

பின்னர் இவை ஆணின் விந்தோடு சேர்ந்து கருவணுவை உருவாக்கி, அந்த கருவணு பெண்ணின் கருப்பையில் பதிந்து வளரும். கருவணுவானது முளைய விருத்தி மூலம் முளையமாக விருத்தியடைகிறது. முளையத்திற்கு தாயிடமிருந்து சூல்வித்தகம் மூலம் ஓட்டம் கிடைக்கிறது. பின்னர் முதிர்கருவாகி, குறிப்பிட்ட கருத்தரிப்பு காலம் நிறைவடைந்ததும், குழந்தையாக பிறக்கும்.

மனித உடலில் உள்ள உயிரணுக்களிலேயே மிகவும் பெரியது சூல் முட்டை ஆகும். இதனை நுண்ணோக்கியின் உதவியின்றி காண இயலும், இது 100 முதல் 200 மில்லி மீட்டர் நீளமுள்ளது. இருப்பினும் இவை வெளியில் முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கும் ஊர்வன, பறப்பனவற்றை விட பல மடங்கு சிறியதாகும். எனவே தான் இவற்றிக்கு கருப்பையில் நீண்ட நாள் வளர்ச்சிக்குத் தேவையாக உள்ளது.[(77) (78) (79) (80)]

## பிற பாலூட்டிகள்

பிற பாலூட்டிகள் பாலிவினைச் சுழற்சி முற்றிலும் வேறுபட்டது, சூடாக இருக்கும்போது மட்டுமே இவற்றின் பெண் இனங்களால் விந்துக்களை ஏற்றுக்கொள்ள இயலும், எனவே இந்தக் காலத்தில் மட்டுமே சூலகத்திலிருந்து முட்டை வெளிவருவது தூண்டப்படுகிறது. அடுத்த சில நாட்களுக்கு பால்வினை செயல்பாடு நிகழ்கிறது பின்னர் அடுத்த சூடு காலம் வரை முழுவதுமாக நிறுத்தப்படுகிறது.[81]

## தாவரங்கள்

பல தாவரங்களில் தாவர பெண் உறுப்புக்களில் ஒடுக்கற்பிரிவு மூலம் முட்டைகள் உருவாகின்றன. இந்த உறுப்புகள் முட்டை உயிரணுக்களை நீண்ட கழுத்துப்பகுதியில் கொண்டுள்ளன. முட்டை முதிர்வடையும்போது இந்தக் கழுத்து திறந்து கொள்ள விந்தணு நீந்தி கருக்கட்டலை நிகழ்த்துகிறது.

மலரும் தாவரங்களில் பெண் பாலணுக்கள் எட்டு உயிரணுக்களைக் கொண்டு சூல் வித்தில் உருவாகின்றன. இவை முளையைப்பை எனப்படுகின்றன. முளையப்பையின் திறப்பிற்கு அண்மையிலுள்ள உயிரணு முட்டை அணுவாகிறது. மகரந்தச் சேர்க்கையின்போது விந்தணு முளையைப் பைக்குள் நீந்தி முட்டையை கருக்கட்டுகிறது. உருவாகும் கருவணு பின்னர் முளையமாக சூல் வித்தில் வளர்கிறது.[82]

## மனிதனின் பிறப்பு நிலை

ஆணும் பெண்ணும் கூடியதால் கருத்தரித்து குழந்தைப் பிறக்கிறது. கருத்தரிப்பதற்கு முன் காயம் (உடல்) என்பது வெப்பமாய் இருந்தது என்றும், உருவம் தரிப்பதற்கு முன் உயிர் என்பது நீராய் இருந்தது என்றும், சிவவாக்கியர் தன் பாடலின் வழியாகத் தெளிவுபடுத்தியோடு மட்டுமன்றி, உருத்தரிப்பதற்கு முன்பு உயிரானது, ஆடவரிடம் விந்து என்ற நாதத்துடன் கலந்து நிற்கும் என்பதனையும், கருத்தரிப்பதற்கு முன்பு உடல் எனும் காயம்,

பெண்ணிடம் தோன்றும் சுரோனிதம் என்னும் சோவிதத்திலே நிலை கொண்டிருக்கிறது என்றும் தெளிவுபடுத்துகிறார்.

விந்து என்ற சுக்கிலமே மானுடப் பிறப்புக்கு வித்தாகிறது. அந்த வெண்ணிறமாகிய நீரே பெண்ணுடல் கலந்தபின் கருத்தரித்து உருவாமாகிறது. அவ்வாறு உருப்பெற்று, மனிதனிடமே மீண்டும் தோற்றமெடுப்பதுவும் அதுவேயாகும். அது தொடர்ந்து இடையறாமல் செயல்படுகிறது என்றும் விளக்கமளிக்கிறார்.

தெய்வப்புலவர் திருவள்ளுவரும் சிவவாக்கியரின் இக்கூற்றினை உறுதி செய்யும் வண்ணம் தம் குறளில்

நீர் இல்லையென்றால் உலகத்தில் ஓரறிவு உயிராகிய பசும்புல்லின் தலைத்தல் கூட இல்லாமல் போய்விடும், என்று கூறுவதின் மூலம் உயிர்களின் தோற்றம் நீரினால் அமையப்பெருகிறது என்ற சித்தர் சிவவாக்கியரின் கூற்றினிக்கு துணைப்புரிகிறது எனலாம்.

## உலகம் மற்றும் உயிர் தோற்றத்தின் சூக்குமம்

அண்டத்தில் உள்ளது பிண்டத்திலும் உள்ளது. தானேயாய் மலர்ந்த தாதுவாகிய மூலப்பிரகிதியிலிருந்து பூமியானது தோன்றியதும், அந்தப் பூமியில் பல பொருள்களும் கலந்து நிரம்பியதும், பிறகு அவை பிரிந்ததும். ஐந்து புலன்களும், பொறிகளும் தமக்குள் கலங்கியே பூமியில் விழுந்து உடல்கள் வந்தது எனச் சிவவாக்கியர் கூறுகிறார்.

பிரபஞ்சமாகிய வெளி தமக்குள் ஒரு வட்டம் போல் ஐக்கியமாகிவிட்டது. பிண்டமாகிய உடலில் அண்டமாகிய பிரபஞ்சம் அடக்கமாகும். ஆதியும் அந்தமுமாகிய மூலப்பிரகிதியிலிருந்து விந்துவும், நாதமும் (ஒளியும், ஒலியும்) தோன்றி ஐந்து பூதங்களாய் விரிந்தன. இதேபோல் உடம்பிலும் மூலப்பிரகிதியிலிருந்து ஒளியும், ஒலியும் (விந்துவும், நாதமும்) ஐம்பூத ஆதாரங்களாக விரிந்தது. இவ்வாறாக அண்டத்திலும் உடலாகிய பிண்டத்திலும் மூலப்பொருள் விந்து, நாதங்களாகவே திகழ்கிறது.

புவியில் முதல் உயிரானது வேதியில் தாக்கங்களின் விளைவால் நீரினடியிலே உருவாகின. இதற்கான சூழல் தரையில் இல்லாமையால் ஆழமான

நீரே இதற்குப் பொருத்தமான ஊடகமாகத் திகழ்ந்தது. இந்த வேதியல் தாக்கங்களுக்கான சக்தி கடலடி எரிமலைகளாலும், புற ஊதாக் கதிர்களாலும், மின்னலாலும் கிடைக்கப்பெற்றன.

உலகத்தின் நீரின் பெருமளவு விண்மீன்கள் உருவாதலின் துணைப் பொருளாக விளைந்திருக்கலாம். விண்மீன்களின் தோற்றத்தின் போது உண்டான வளிக்காற்று மற்றும் புழுதிப்புயல் சூழ்ந்திருந்த வாயுக்களைத் தாக்கியதனால் உருவான அதிர்வலைகள் வாயுக்களை அழுத்தி வெப்பமேறச் செய்து, நீரினை உண்டாக்கியது.

நீரானது ஒரு தனிமமாகும். $H_2O$ என்ற மூலக்கூற்று வாய்ப்பாட்டைக் கொண்ட சேர்மமாகும். ஒரு நீர் மூலக்கூற்றில் ஓர் ஆக்சிஜன் அணுவுடன் இரண்டு ஹைட்ரஜன் அணுக்கள் பங்கீட்டுவலுப்பிணைப்பு மூலம் பிணைக்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது

பால்வெளியினும் நமது விண்மீன் மண்டலத்தினுள் காணும் நட்சத்திரங்களுக்கிடையேயான மேககங்களில் தண்ணீர் கண்டறியப்பட்டுள்ளது. நீரின் கூறுகளான ஹைட்ரஜன் மற்றும் ஆக்சிஜன் ஆகியவைகள் அண்டத்தில் மிகுதியாகக் காணப்படும் தனிமங்களாகும். நட்சத்திரங்களுக்கிடையே காணப்படும் இந்த மேகங்களே நாளடைவில், சூரிய ஒலி முகிலாகவும், சூரியமண்டலமாகவும் சுருங்குகின்றன.

புவி உட்பட மொத்த சூரியமண்டலமும், விண்மீனிடை சூழலும் தூசி மற்றும் வாயுக்களால் உருவானதாகும். அது சூரிய ஒன்மீன்படலம் எனப்படுகிறது. மீயொளிர் விண்மீன் பெருவெடிப்புக்குபின், நீரியம், மற்றும் ஈலியம் புவியில் உருவானது. மீயொளிர் விண்மீன் பெருவெடிப்பினால் ஏற்பட்ட அதிர்வுகளால் சூரியன் ஒன் மீன் படலம் சுருங்கத்தொடங்கியது. சுழல் வேக அதிகரிப்பும், பெருப்பொருட்கள் விழுதலும் மற்றும் பொருளீர்ப்பின் அழுத்தமும் படலத்தின் மையப்பகுதியில் இயக்க ஆற்றலை அதிகரிக்கிறது. இவ்வாற்றலினைக் கடத்தும் வழியின்றி வட்டின் மையம் வெப்பமாகி, நீரியமும், ஈலியமும் அணுவாக மாறியது. இவ்வணுக்கரு இணைவு ஏற்பட்டு சூரியன் உருவாகியது.

சூரியமண்டலத்தின் தோற்றம், கோள்கள் அமைவு பற்றி அனுமானிக்கப்பட்ட ஒன்மீன்படல கருதுகோளே ஏணைய அண்டம் மற்றும் புறக்கோள்களுக்கு கருதுகோளாகிறது. உயிர் தோற்றத்திற்கு முதன்மையான, கரிமச் சேர்வை புவி உருவாவதற்கு முன்பே பழங்கோள் வட்டிலுள்ள அண்டத்தூசியில் இருந்திருக்கலாம் எனக் கருதப்படுகிறது.

புவியானது சூரிய ஒன்மீன் படலத்திலிருந்து பிரிந்து அடர்வளர்ச்சியின் பயனாக உருவாகியது. தொடக்கத்தில் எரிமலை வாயுவால் காற்றுமண்டலம் உருவானது. புவியில் மோதிய வால்வெள்ளிகள் மற்றும் சிறுகோள்களின் காரணமாக மேகங்கள் உருவாகி, பெருங்கடல் தோன்றி உயிர்கள் வாழ தகுந்த சூழல் உருவானது. புவியின் தொடர் பிரிவினையின் காரணமே, பூமியின் மேற்பரப்பில் பல அடுக்குகளும் புவியின் காந்தப்புலமும் உருவாக வழிகோலியது எனலாம். சூரியப்புயலாலும், புவியின் ஈர்ப்பின் வெப்பத்தாலும்,நீராவியும், எரிமலைகளால், நைட்ரஜன் வாயுவும் படிப்படியாக உருவாகின.

அண்டமும் அதில் அடங்கியுள்ள அனைத்துமே, பருப்பொருட்களால் ஆனவையேயாகும். இப்பருப்பொருட்கள் யாவுமே வேதித்தனிமங்களால் உருவாக்கப்பட்டவையாகும்.

நமது உடலானது தோலால் மூடப்பட்டுள்ளதுஇ இந்த தோல்கள்இ உயிரணுக்களால் (CELL) உருவானது. இந்தத் தோல்களுக்கு அடுத்ததாக தசைகள் இருக்கின்றன, இந்தத் தசைகளும், தசையணுக்களால் உண்டானவையாகும். தசைகளுக்கு அடுத்தப்படியாக இருப்பது எலும்புகளும்இ நரம்புகளுமேஇ இந்த எலும்பு, எலும்பணுக்களாலும், நரம்பானது நரம்பணுக்களாலும் உண்டானவையே. ஆகமொத்தத்தில் உடலானது உயிரணுக்களால் தோற்றம் பெற்றது என்பது இதன் மூலம் தெளிவு. ஆனால் இந்த உயிரணுக்கள் எதனால் ஆனது என்றால்? புரோதம் என்கிற வேதித்தனிமத்தால் (Chemical Element) ஆனவையாகும். புரோதம் என்கிற இந்த தனிமம் பல அணுத்திரண்மத்தின் (Molecules) கலவையாகும். சராசரியாக ஒரு மனிதனின் உடலில் அடுத்தப்படியாக 65-90% வரை காணப்படும் வேதித்தனிமம் நீர். நீரானது மற்றுமொரு பல அணுத்திரண்மத்தின்

கலவையாகும். இந்த உயிரணுக்களின் (CELL) உள்ளிருப்பதே (DNA, RNA) என்கிற உள்ளணுக்களாகும்.

உயிரணுக்களினால் (CELL) ஆன இந்த உடலானது பல அணுத்திரண்மத்தின் கலவையின் கூடாரமாகும். இந்த அணுத்திரண்மங்கள், முன்கூறுகளினால் (ATOMS) ஆனவையாகும். தண்ணீர் என்கிற வேதித்தனிமம் (Chemical Element) ஆக்சிஜன் மற்றும் ஹைட்ரஜனின் அணுத்திரண்மத்தின் (Molecules) கலவையாகும். புரோதம் என்கிற வேதித்தனிமம் (Chemical Element) கார்பன்இ ஹைட்ரஜன்இ ஆக்சிஜன் போன்றவைகளின் முன்கூறுகளின் (ATOMS) கூறுகளாகும்.

முன்கூறுகள் (ATOMS) சேர்ந்து உயிரணுக்கள் (CELL) தோன்றுகின்றன, இந்த உயிரணுக்கள் பல முன்கூறுகளால் (ATOMS) ஆனவையாகும்.

சராசரியாக 70 கிலோகிராம் எடை உள்ள ஒரு மனிதனின் உடலில் எடையளவில் (நிறை அல்லது திணிவு என்றும் கொள்வதுண்டு) 65-90% நீர்தான் ($H_2O$). மீதம் உள்ளதில் மிகப்பெரும்பாலானவை கரிமம் உள்ள கரிமவேதிப் பொருட்களால் ஆனவை. மனித உடலில் 99% ஆறே ஆறு தனிமங்களால் ஆனவையே. அவை ஆக்சிஜன், கரிமம் , ஹைட்ரஜன், நைட்ரஜன் , கால்சியம், பாசுபரசு ஆகும்.

விந்து என்ற சுக்கிலமே மானுடப் பிறப்புக்கு வித்தாகிறது. அந்த வெண்ணிறமாகிய நீரே பெண்ணுடல் கலந்தபின் கருத்தரித்து உருவாமாகிறது. ஆணுக்குள் உற்பத்தியாகும் விந்தும், பெண்ணுக்குள் உற்பத்தியாகும் சுக்கிலமும் புரோதம் என்கிற வேதித்தனிமம் மற்றும் வைட்டமின்கள் போன்ற பலவகை தனிமங்களின் கலவையாகும். (200 சதவிகிதம் தனி வகை புரோதங்களும், வைட்டமின் C. குளோரின், சிட்ரிக் அமிலம், புரோக்டோஸ், லாக்டிக் அமிலம், மக்னேசியம், நைட்ரஜன், பாஸ்பரஸ், பொட்டாசியம், சோடியம், வைட்டமின் 12, மற்றும் துத்தநாதம்.....).

பரந்த இந்த அண்டம் பருப்பொருட்களினால் ஆனது, இந்தப் பருப்பொருள், பல தனிமங்களால் உண்டானது. இப்பலத் தனிமங்களே

வாயுக்களாக பரிணமித்தது, இந்த வாயுக்களே பஞ்சப் பூதங்கள் (தனிமங்கள்) என வழங்கப்பட்டு உலக உருவாக்கத்திற்கு அடிப்படைக் காரணம் எனக் கொள்ளப்படுகிறது. இந்தப் பஞ்சப் பூதங்களே புவியில் உயிர்களின் தோற்றத்திற்கு தோன்றுவாயாக அமைந்திருக்கிறது.

## முடிவுரை

உலகம் நிலையாக இயங்குகின்றது. இயங்கும் உலகத்தில் நிலையில்லாமல் மானுட உலகம் தொடர்கின்றது. இத்தொடர்ச்சியில், நிலையற்ற வாழ்வின் மானுடராய்ப் பிறந்தும், மெய்வருத்தி, வாழ்வின் நிலைப்பினைக் கண்டறிந்து, புத்துலகம் கண்டவர்கள் சித்தர்களாவார்.

சித்தர்கள் காட்டிய சித்தாந்தங்கள் வற்புறுத்தும் முதன்மைக் கருத்து, வாழ்வியற் செம்மையேயாகும்.

ஒன்றே பலவாக பரிணமித்திருக்கிறது என்பது இந்தியத் தத்துவங்களில் பரவலாகக் காணப்படும் கொள்கை. சித்தர்கள் பலரும் இக்கொள்கை உடையவர்களே பிறப்பு பற்றி சித்தர் சிவவாக்கியரின் ஞானக் கருத்து யாதுவாகின்.

கருவில் நாம் உருவாகும் முன் நமக்குரிய உடம்பு எங்கே காத்திருந்தது? உருவம் உடம்பிற்கு உண்டாவதற்கு முன்பு உயிர்ப்பு எவ்விடம் இருந்ததது? என்ற கேள்வியும் எழுப்பி,

கருவில் உடல் உண்டாகும் முன்பு அது எங்கே இருந்தது என்றால் அது சோதியில் என உணர்க. உரு உண்டாவதற்கு முன் உயிர்ப்பு எங்கே இருந்தது என்றால் அது நீரிலேயாகும் என்று, அதற்கான விடையையும் தமது பாடலிலே வைக்கிறார்.

விதையில் வளரும் ஆலமரம் அதற்கு முன்பு எங்கிருந்தது? அது சூரிய ஒளி சூழ்ந்த பரவெளியில் இருந்தது. அதன் துணையுடன்தான் மரம் வளர்ந்தது. உணர்வு கூட இந்த வெளியில்தான் உள்ளது. எல்லாமே வெட்ட வெளியில்தான் உள்ளன.

விதையில் உண்டாகும் உயிராற்றல் அதற்குரிய ஆல மரத்தை வெளியில் இருந்து பெறுகிறது. தாயின் கருவில் நுழைந்த உயிராற்றல் அதற்குரிய உடலை வெட்ட வெளியிலிருந்தே பெறுகிறது.

தானேயாய் மலர்ந்த தாதுவாகிய மூலப்பிரகிதியிலிருந்து பூமியானது தோன்றியதும், அந்தப் பூமியில் பல பொருள்களும் கலந்து நிரம்பியதும், பிறகு அவை பிரிந்ததும், ஐந்து புலன்களும், பொறிகளும் தமக்குள் கலங்கியே பூமியில் விழுந்து உடல்களாக வந்தன எனவும்,

ஆதியும் அந்தமுமாகிய மூலப்பிரகிதியிலிருந்து விந்துவும் நாதமும் (ஒளியும், ஒலியும்) தோன்றி ஐந்து பூதங்களாய் விரிந்தன. இதேபோல் உடம்பிலும் மூலாதாரத்திலிருந்து ஒளியும், ஒலியும் தோன்றி ஐம்பூத ஆதாரங்களாக விரிந்தன. இவ்வாறாக அண்டத்திலும் உடலாகிய பிண்டத்திலும் மூலப்பொருள் விந்து நாதங்களாகத் தோன்றுவது அவைகளாகவே அடங்குவதும் சிவாயத்தாலே என்கிறார்.

புவி உட்பட மொத்த சூரியமண்டலமும் விண்மீனிடை சுழலும் தூசி மற்றும் வாயுக்களால் உருவானதாகும். அது சூரிய ஒன்மீன்படலம் எனப்படுகிறது. $10^9$ ஆண்டுகளுக்கு முன் நடந்த “மீயொளிர் விண்மீன் பெருவெடிப்புக்குப்பின்” “நீரியம்” மற்றும் “ஈலியம்” புவியில் உருவானது. அருகே நடக்கும் “மீயொளிர் விண்மீன் பெருவெடிப்பு” அதிர்வுகளால் $4.5^9$ ஆண்டுகளுக்கு முன் இந்த சூரியன் ஒன்மீன் படலம் சுருங்கத்தொடங்கியது.

சுழல் வேக அதிகரிப்பும, பெருப்பொருட்கள் விழுதலும் மற்றும் பொருளீர்ப்பின் அழுத்தமும் படலத்தின் மையப்பகுதியில் “இயக்க ஆற்றலை” அதிகரிக்கத் தொடங்கியது. ஆற்றலை கடத்தும் வழியின்றி வட்டின் மையம் வெப்பமாகி, “நீரியம், ஈலியம்” அணுவாகமாறி “அணுக்கரு இணைவு” நடைபெற்று இறுதியில் டி டவுரி (T.Tauri) நட்சத்திரம் தீப்பற்றி “சூரியன்” உருவாகியது. இதற்கிடையில் சூரியனைச் சுற்றிக்கொண்டிருந்த பொருட்கள் குளிர்ந்து மேலும் அந்த பொருளீர்ப்பு விசைக்கு அப்பாற்பட்ட தூசிகளும் கூளங்களும் ஒன்றிணைந்து கோள்களாக உருமாறின. இப்படித்தான் புவியும் $4.5^4$ பில்லியன் ஆண்டுகளுக்கு முன் தோன்றி 10-20 மில்லியன் ஆண்டுகளுக்கு முன் அதிகளவு முழுமைப் பெற்றது.

சூரியமண்டலத்தின் தோற்றம், கோள்கள், அமைவு பற்றி அனுமானிக்கப்பட்ட ஒன்மீன் படல கருதுகோளே ஏனைய அண்டம் மற்றும் “புறக்கோள்களுக்கும்” கருதுகோளாகிறது.

புவியானது 4.5[4] பில்லியன் ஆண்டுகளுக்கு முன் சூரிய ஒன்மீன் படலத்திலிருந்து பிரிந்து அடர்வளர்ச்சியின் பயனாக உருவானது. தொடக்கத்தில் எரிமலை வாயுவால் காற்றுமண்டலம் உருவானது. ஆனால் அதில் உயிர்வாழத் தேவையான “பிராணவாயு” இல்லாமல் நச்சு வாயுக்களைக் கொண்டதாகயிருந்தது.

பல காலங்கள் கடந்த பின் புவி குளிர்ச்சியடைந்து திட நிலையானது. புவியில் மோதிய “வால்வெள்ளிகள்” மற்றும் “சிறுகோள்கள்” மூலமாக மேகங்கள் உருவாகி பெருங்கடல்கள் உருவாகின. அதன்பின்னரே உயிர்கள் வாழ தகுந்த சூழல் உருவானது அடுத்து “பிராணவாயுவும்” அதிகரிக்கத் தொடங்கியது.

புவி தோன்றிய காலம் தொட்டே நமது கோளில் உயிரியல் மற்றும் நிலவியல் மாற்றங்கள் நடந்தவண்ணமே உள்ளது. உயிரினங்கள் “படிவளர்ச்சிக் கொள்கைப்படி” புதிதுபுதிதாக உருவாகிக்கொண்டே மாற்றத்தை நிகழ்த்துகின்றன.

“கமழிப் படலத்” தோற்றமும், “பிராணவாயு” பெருக்கமும் “மண்” உருவாக்கமும் செய்து உயிரற்ற நிலைமையும் காற்றுவெளியின் கணிசமான மாற்றத்தையும் கொண்டுவந்தது இந்த “உயிர்க்கோளம்” ஆகும்.

பழைய புவிக்கோளின் வெப்பம் தன்னுள்ளிருந்த “உலோகங்களை” உருக்கப் போதுமானதாகயிருந்தது, அதனால் தான் உயர் அடர்த்தி கொண்ட உலோகங்கள், இரும்பை ஒத்த உலோகங்கள் (Siderophile Elements) எல்லாம் புவியின் மையத்தை நோக்கியும், அடர்த்தி குறைவான “சிலிக்கான்” புவியின் மேற்ப்புறத்திற்கும் வந்தன. இத்தகையத் தொடர் பிரிவினையின் காரணமாக புவி தோன்றி 10 மில்லியன் ஆண்டுகள் கழித்து மேற்ப்பரப்பில் பல அடுக்குகள் உருவாகின மற்றும் “புவியின் காந்தப்புலம்” உருவாகவும் வழிகோலியது.

குளிர்ச்சியின் பயனாக சிலிக்கான் வாயுக்கள் பாறைகளாக புவியின் மீது உருவாகியது. அப்போது வளிமண்டலத்தில் “நீரியம்” மற்றும் “ஈலியம்” போன்ற அடர்த்தி குறைவான வாயுக்கள் அதிகமாகியிருந்தன. பின்னர் சூரியப்புயலாலும் புவியின் ஈர்ப்பாலும் இந்த நச்சுவாயுக்கள் விரட்டப்பட்டு, வெப்பத்தால் நீராவியும், எரிமலைகளால்”நைட்ரஜன்” வாயுவும் படிப்படியாக உருவாகி புவியின் மேற்புறத் தோற்றமாகிய முதல் வளிமண்டலம் தோன்றின.

வேதித்தனிமம் (Chemical Element) என்பது “அணுக்கருவில்” ஒரே எண்ணிக்கையில் புரோட்டான்களைப் பெற்றிருக்கும் ஒரே வகையான அணுக்களைக் குறிக்கும் . இதுவரை 118 தனிமங்கள் அடையாளம் காணப்பட்டுள்ளன.

ஹைட்ரஜன், ஆக்சிஜன், நைட்ரஜன், இரும்பு, கந்தகம், பாசுபரசு, தங்கம்இ பாதரசம்இ யுரேனியம் போன்றவை தனிமங்களுக்கு சில எடுத்துக்காட்டுகளாகும். புவியில் “ஆக்சிஜன்” என்ற தனிமம் எங்கும் நிறைந்திருக்கும் தனிமமாகவும்இ “இரும்பு” என்ற தனிமம் நிறை அடிப்படையில் அதிகமாகக் காணப்படும் தனிமமாகவும் கருதப்படுகிறது.

அண்டமும் அதில் அடங்கியுள்ள அனைத்துமே, பருப்பொருட்களால் ஆனவையாகும். இப்பருப்பொருட்கள் யாவும் வேதிதனிமங்களால் உருவாக்கப்பட்டவையாகும்.

நமது உடலானது தோலால் மூடப்பட்டுள்ளது, இந்த தோல்கள், உயிரணுக்களால் (CELL) உருவானது. இந்தத் தோல்களுக்கு அடுத்ததாக தசைகள் இருக்கின்றன, இந்தத் தசைகளும், தசையணுக்களால் உண்டானவையாகும். தசைகளுக்கு அடுத்தப்படியாக இருப்பது எலும்புகளும், நரம்புகளுமே, இந்த எலும்பு, எலும்பணுக்களாலும், நரம்பானது நரம்பணுக்களாலும் உண்டானவையே. ஆகமொத்தத்தில் உடலானது உயிரணுக்களால் தோற்றம் பெற்றது என்பது இதன் மூலம் தெளிவு. ஆனால் இந்த உயிரணுக்கள் எதனால் ஆனது என்றால்? புரோதம் என்கிற வேதித்தனிமத்தால் (Chemical Element) ஆனவையாகும். புரோதம் என்கிற இந்த தனிமம் பல அணுத்திரண்மத்தின் (Molecules) கலவையாகும்.

பரந்த இந்த அண்டம் பருப்பொருட்களினால் ஆனது, இந்தப் பருப்பொருள், பல தனிமங்களால் உண்டானது. இப்பலத் தனிமங்களே வாயுக்களாக பரிணமித்தது, இந்த வாயுக்களே பஞ்சப் பூதங்கள் (தனிமங்கள்) என வழங்கப்பட்டு உலக உருவாக்கத்திற்கு அடிப்படைக் காரணம் எனக் கொள்ளப்படுகிறது. இந்தப் பஞ்சப் பூதங்களே புவியில் உயிர்களின் தோற்றத்திற்கு தோன்றுவாயாக அமைந்திருக்கிறது என்றும், இந்த அண்டத்தில் உள்ளதே பிண்டத்திலும் உள்ளது என்பதனை சித்தர் சிவவாக்கியரின் பாடல்கள் கொண்டும், நவீன அறிவியலின் சான்றாதரங்கள் வாயிலாகவும் மேற்கூறிய எடுத்துக்காட்டுகளாலும் நிறுவியுள்ளோம்.

சுக்கிலமாகிய நீரில் தோன்றும் நீவிர் நீரிலே சடங்குகளைச் செய்கிறீர். உருவம் கொண்டுள்ள நீர், உம உறுப்புக்கள் கொண்ட உடலைக் கொண்டு அவை உயிருடன் கலந்த பெரிய பாதையை உணரமுடியுமோ?

ஆண் விந்துவும் பெண் முட்டையும் சேர்வதே கரு உதிக்குமிடம். கருப்பையே உறங்குமிடம், கருவானது வளர்வதற்கு ஒதுங்குமிடமும் இதுவேயாகும்.

ஆண் விந்து பெண் முட்டையின் வாசலில் நுழைந்ததும் உயிர் உண்டாகிறது. அது எட்டு முக்கோணங்களை உடைய யோக ஆதாரமாகிய நுண்உடம்பாக வளர்கிறது. இவ்வுடலில் மூலாதாரம் முதல் இந்த எட்டு ஆதாரங்களிலும் பிரம்மமுடிச்சு, விஷ்ணு முடிச்சு, உருத்திர முடிச்சுகளைக் கடந்து செல்லும் மந்திரம் உண்மையில் சிவாயநம என்பதே ஆகும்.

தாமரை விரித்தது போன்ற பிரபஞ்ச வெளியோடு பெண்ணின் கர்ப்பப்பை தொடர்பு கொள்வதால் முட்டை உருவாகிறது. அதில் ஆணின் விந்து படிந்து வடிவமும் ஒளியும் கொண்ட ஓர் உடல் உண்டாகிறது.

வான கதிர்களின் சங்கமமே எல்லா உயிர்களின் கர்ப்பத்தை உண்டாக்குகிறது என இதில் கூறப்பட்டதாம்.

மண்ணில் உள்ளவர் வானில் உள்ளவர் அனைவரும் வந்த வழி இதுவே. அது எது என்றால் சூரிய ஒளி நம் கண் ஒளியோடு கலந்து பார்வை பெற்றது போல், வானக் கதிர்கள் ஆண் பெண் வழியாக விந்து நாதம் என்று

கலந்தன. அவை சிவமும் சக்தியும் ஆகும். இப்படி இதை செய்வித்தவர் ஏழு உலகத்தோடு தொடர்பையும் தந்துள்ளார்.

பாலணு அல்லது புணரி (Sex Cell or Gamete) என்பது பாலியல் அடிப்படையில் இனப்பெருக்கம் செய்யும் உயிரினங்களில் கருக்கட்டலின்போது, இன்னொரு பாலணுவுடன் சேரும் ஆற்றலுள்ள ஒரு கலம் ஆகும். ஒரு இனம் உருவியல் அடிப்படையில் இரண்டு வேறுபட்ட வகையான பாலணுக்களை உருவாக்குமாயின், அவை பெண் புணரி அல்லது கருமுட்டை என்றும், ஆண் புணரி அல்லது விந்து எனவும் அழைக்கப்படுகின்றன.

ஒரு உயிரினத்தின் ஒரு தனியன் ஒரு வகைப் பாலணுவை மட்டும் உருவாக்குமாயின். அவை உருவாக்கும் பாலணுக்களின் தன்மைக்கேற்ப பெண், ஆண் தனியன்களாக இருக்கும். பெண் பெரிய பாலணுவையும், ஆண் சிறிய பாலணுவையும் உருவாக்குகின்றன. ஆண் பாலணு “விந்து” எனவும் பெண் பாலணு “கருமுட்டை” எனவும் அழைக்கப்படுகின்றன.

ஒரு உயிரினத்தின் ஒரு தனியன் ஒரு வகைப் பாலணுவை மட்டும் உருவாக்குமாயின். அவை உருவாக்கும் பாலணுக்களின் தன்மைக்கேற்ப பெண், ஆண் தனியன்களாக இருக்கும். பெண் பெரிய பாலணுவையும், ஆண் சிறிய பாலணுவையும் உருவாக்குகின்றன. ஆண் பாலணு “விந்து” எனவும் பெண் பாலணு “கருமுட்டை” எனவும் அழைக்கப்படுகின்றன. இது, ஆண், பெண் பாலணுக்கள் வெவ்வேறு அளவுகளில் அமையும், மாறுபட்ட பாலணு இணைவு அல்லது பல்லின புணரித்தன்மை நிலைக்கு எடுத்துக்காட்டு ஆகும்

உயிரணு (இலங்கை வழக்கு ˙கலம், ஆங்கிலம் Cell) என்பது உயிரினங்கள் அனைத்துக்கும் அடிப்படை கட்டமைப்பு, தொழிற்பாட்டு அலகு ஆகும். அனைத்து உயிர்களும் ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட உயிரணுக்களின் கூட்டினால் உருவானவை.

தனியொரு உயிரணுவினால் ஆன உயிரினங்களாக பாக்டீரியா, ஆர்க்கீயா போன்ற நுண்ணுயிர்களை உள்ளடக்கிய நிலைக்கருவிலிகளையும், அநேகமான அதிநுண்ணுயிரிகளையும் ஒரு சில பூஞ்சைஇனங்களையும் குறிப்பிடலாம். மனிதன் போன்ற விலங்குகள் தாவரங்கள், அநேகமான பூஞ்சைகள் பல்லுயிரணுவுள்ள உயிரினங்களுக்கு எடுத்துக்காட்டுகள்.

விலங்குகளின் உயிரணுக்களில் இருந்து, தாவரங்களின் உயிரணுக்கள் வேறுபட்டுக் காணப்படுகின்றன. ஆண், பெண் வேறுபாடுடைய உயிரினங்களில் பாலணுக்கள் இணைந்து உருவாகும் முதலாவது உயிரணு கருவணு (Zygote) என அழைக்கப்படுகிறது.

மனிதரில் பெண்ணின் இனப்பெருக்க உறுப்பான சூலகத்தில் இருந்து வெளியேறும் சூல்முட்டையுடன், ஆணின் விந்து இணைந்து உருவாகும் முதலாவது உயிரணு, அதாவது கருவணு மீண்டும், மீண்டும் கலப்பிரிவுக்குள்ளாகி பிரதி செய்யப்பட்டு கோடிக்கணக்கான கூட்டுக் களங்களாகி குழந்தையாக உருப்பெறுகிறது.

பிற பாலூட்டிகள் பாலிவினைச் சுழற்சி முற்றிலும் வேறுபட்டது, சூடாக இருக்கும்போது மட்டுமே இவற்றின் பெண் இனங்களால் விந்துக்களை ஏற்றுக்கொள்ள இயலும், எனவே இந்தக் காலத்தில் மட்டுமே சூலகத்திலிருந்து முட்டை வெளிவருவது தூண்டப்படுகிறது. அடுத்த சில நாட்களுக்கு பால்வினை செயல்பாடு நிகழ்கிறது பின்னர் அடுத்த சூடு காலம் வரை முழுவதுமாக நிறுத்தப்படுகிறது.

பல தாவரங்களில் தாவர பெண் உறுப்புக்களில் ஒடுக்கற்பிரிவு மூலம் முட்டைகள் உருவாகின்றன. இந்த உறுப்புகள் முட்டை உயிரணுக்களை நீண்ட கழுத்துப்பகுதியில் கொண்டுள்ளன. முட்டை முதிர்வடையும்போது இந்தக் கழுத்து திறந்து கொள்ள விந்தணு நீந்தி கருக்கட்டலை நிகழ்த்துகிறது.

மலரும் தாவரங்களில் பெண் பாலணுக்கள் எட்டு உயிரணுக்களைக் கொண்டு சூல் வித்தில் உருவாகின்றன. இவை முளையைப்பை எனப்படுகின்றன. முளையப்பையின் திறப்பிற்கு அண்மையிலுள்ள உயிரணு முட்டை அனுவாகிறது. மகரந்தச் சேர்க்கையின்போது விந்தணு முளையைப் பைக்குள் நீந்தி முட்டையை கருக்கட்டுகிறது. உருவாகும் கருவணு பின்னர் முளையமாக சூல் வித்தில் வளர்கிறது.

ஆணும் பெண்ணும் கூடியதால் கருத்தரித்து குழந்தைப் பிறக்கிறது. கருத்தரிப்பதற்கு முன் காயம் (உடல்) என்பது வெப்பமாய் இருந்தது என்றும், உருவம் தரிப்பதற்கு முன் உயிர் என்பது நீராய் இருந்தது என்றும், சிவவாக்கியர் தன் பாடலின் வழியாகத் தெளிவுபடுத்தியோடு மட்டுமன்றி,

உருத்தரிப்பதற்கு முன்பு உயிரானது, ஆடவரிடம் விந்து என்ற நாதத்துடன் கலந்து நிற்கும் என்பதனையும், கருத்தரிப்பதற்கு முன்பு உடல் எனும் காயம், பெண்ணிடம் தோன்றும் சுரோனிதம் என்னும் சோவிதத்திலே நிலை கொண்டிருக்கிறது என்றும் தெளிவுபடுத்துகிறார்.

விந்து என்ற சுக்கிலமே மானுடப் பிறப்புக்கு வித்தாகிறது. அந்த வெண்ணிறமாகிய நீரே பெண்ணுடல் கலந்தபின் கருத்தரித்து உருவாமாகிறது. அவ்வாறு உருப்பெற்று, மனிதனிடமே மீண்டும் தோற்றமெடுப்பதுவும் அதுவேயாகும். அது தொடர்ந்து இடையறாமல் செயல்படுகிறது என்றும் விளக்கமளிக்கிறார்.

அண்டத்தில் உள்ளது பிண்டத்திலும் உள்ளது. தானேயாய் மலர்ந்த தாதுவாகிய மூலப்பிரகிதியிலிருந்து பூமியானது தோன்றியதும், அந்தப் பூமியில் பல பொருள்களும் கலந்து நிரம்பியதும், பிறகு அவை பிரிந்ததும். ஐந்து புலன்களும், பொறிகளும் தமக்குள் கலங்கியே பூமியில் விழுந்து உடல்கள் வந்தது எனச் சிவவாக்கியர் கூறுகிறார்.

புவியில் முதல் உயிரானது வேதியில் தாக்கங்களின் விளைவால் நீரினடியிலே உருவாகின. இதற்கான சூழல் தரையில் இல்லாமையால் ஆழமான நீரே இதற்குப் பொருத்தமான ஊடகமாகத் திகழ்ந்தது. இந்த வேதியல் தாக்கங்களுக்கான சக்தி கடலடி எரிமலைகளாலும், புற ஊதாக் கதிர்களாலும, மின்னலாலும் கிடைக்கப்பெற்றன.

பரந்த இந்த அண்டம் பருப்பொருட்களினால் ஆனது, இந்தப் பருப்பொருள், பல தனிமங்களால் உண்டானது. இப்பலத் தனிமங்களே வாயுக்களாக பரிணமித்தது, இந்த வாயுக்களே பஞ்சப் பூதங்கள் (தனிமங்கள்) என வழங்கப்பட்டு உலக உருவாக்கத்திற்கு அடிப்படைக் காரணம் எனக் கொள்ளப்படுகிறது. இந்தப் பஞ்சப் பூதங்களே புவியில் உயிர்களின் தோற்றத்திற்கு தோன்றுவாயாக அமைந்திருக்கிறது என்பது மிகவும் நுட்பமான அதே வேளையில் தின்னமான நிலை என்பதே நாம் இங்கு கண்டு தெளியலாம்.

## சான்றாதாரங்கள்

1. காகபுசுண்டர் – 32 . 1

2. சிவவாக்கியர் பாடல்கள். பா – 457

3. சிவவாக்கியர் பாடல்கள். பா – 168

4. சிவவாக்கியர் பாடல்கள். பா – 457

5. முனைவர். அ.அறிவொளி. சித்தர் பாடல்கள், மூலமும் உரையும்.ப– 247

6. சிவவாக்கியர் பாடல்கள். பா – 112

7. முனைவர். அ. அறிவொளி. சித்தர் பாடல்கள், மூலமும் உரையும்.ப–69

8. சிவவாக்கியர் பாடல்கள். பா – 102

9. முனைவர். அ. அறிவொளி. சித்தர் பாடல்கள், மூலமும் உரையும்.ப– 64

10. சிவவாக்கியர் பாடல்கள். பா – 189

11. முனைவர். அ. அறிவொளி. சித்தர் பாடல்கள், மூலமும் உரையும்.ப– 108

12. P.Goldreich, W.R. Ward (1973) The Farmation of Planetesimals, Astrophysical Journal 183: 1051 – 1062

13. P.Goldreich, W.R. Ward (1973) The Farmation of Planetesimals, Astrophysical Journal 183: 1051 – 1062

14. Moskowitz, Clara (29. March 2012) Life Building Blocks may Have formed in Dust Around Young sun space.com.

15. Earths Early Atmosphere – Universe Today (February 5, 2012)

16. Earths Early Atmosphere – Universe Today (February 5, 2012)

17. Ball, P. (2004). The Elements. A very short introduction, Oxford University Published.
18. Emsley. J.(2003) Nature's Building Block an A-Z Guids to the Elements Oxford University Published.
19. Thomas J. Glover, comp. Pocket Ref.3rd ed.(Litteton : Sequio, 2003) p.324.which in turn citties geigy scientific tables, ciba limited, based, Switzerland 1984
20. Ball, P. (2004). The Elements. A very short introduction, Oxford University Published.
21. வலைத்தளத் தகவல் – விக்கிபீடியா
22. Carl R. Rogers, Becoming a Person. P. 17
23. Karl Heim, Christian Faith and Natural Science P. 36 (21)
24. பாம்பாட்டிச்சித்தர், பா – 63
25. சிவவாக்கியர் பாடல்கள். பா – 219
26. முனைவர். அ. அறிவொளி. சித்தர் பாடல்கள்,மூலமும் உரையும்.ப–125-126
27. சிவவாக்கியர் பாடல்கள். பா – 232
28. முனைவர். அ. அறிவொளி. சித்தர் பாடல்கள், மூலமும் உரையும்.ப–132
29. சிவவாக்கியர் பாடல்கள். பா – 233
30. முனைவர். அ. அறிவொளி. சித்தர் பாடல்கள், மூலமும் உரையும்.ப–132
31. சிவவாக்கியர் பாடல்கள். பா–234
32. சிவவாக்கியர் பாடல்கள். பா–244
33. முனைவர். அ.அறிவொளி. சித்தர் பாடல்கள், மூலமும் உரையும்.ப– 137
34. சிவவாக்கியர் பாடல்கள். பா – 249

35. முனைவர். அ. அறிவொளி. சித்தர் பாடல்கள், மூலமும் உரையும்.ப– 139

36. சிவவாக்கியர் பாடல்கள். பா – 372

37. சிவவாக்கியர் பாடல்கள். பா – 168

38. முனைவர். அ. அறிவொளி. சித்தர் பாடல்கள், மூலமும் உரையும்.ப– 96

39. கேரி மேல்னிக், ஹார்வர்ட் – ஸ்மித்ஸநியன் சென்டர் ∴பார் அஸ்ட்ரோ∴பிசிக்ஸ் அண்டடேவிட் நியுகபீல்ட். The Harvard University Gazette. April. 23.1998

40. Messengers scientists astromised to find water in mercury thin atmosphere plantsry society (2008–07–03)

41. வாட்டர்∴பௌனட் ஆன்டிஸ்டன்ப்ளேனட் ஜூலை12, 2007. by lara flue time.

42. CIA – The world fact book – central intelligence agency.

43. வாட்டர் வேப்பர் இன் தி கிளைமேட் சிஸ்டம். ஸ்பெஷல் ரிப்போர்ட் (ஆகஸ்ட்) டிசம்பர் 1995

44. விக்கிபீடியா – உயிரினங்களின் பரிணாம வரலாறு.

45. Nicholas Wade ( 25 July 2016 ) Meet Luca the Ancerstor of all living things. New York Times

46. சிவவாக்கியர் பாடல்கள். பா – 283

47. சிவவாக்கியர் பாடல்கள். பா – 177

48. முனைவர். அ.அறிவொளி. சித்தர் பாடல்கள், மூலமும் உரையும்.ப– 101

49. சிவவாக்கியர் பாடல்கள். பா – 183

50. முனைவர். அ.அறிவொளி. சித்தர் பாடல்கள், மூலமும் உரையும்.ப– 104

51. சிவவாக்கியர் பாடல்கள். பா – 198

52. முனைவர். அ.அறிவொளி. சித்தர் பாடல்கள், மூலமும் உரையும்.ப– 112

53. சிவவாக்கியர் பாடல்கள். பா – 267

54. முனைவர். அ.அறிவொளி. சித்தர் பாடல்கள், மூலமும் உரையும்.ப– 151

55. சிவவாக்கியர் பாடல்கள். பா – 316

56. முனைவர். அ.அறிவொளி. சித்தர் பாடல்கள், மூலமும் உரையும்.ப– 174

57. சிவவாக்கியர் பாடல்கள். பா – 317

58. முனைவர். அ.அறிவொளி. சித்தர் பாடல்கள், மூலமும் உரையும்.ப– 174

59. விக்கிபீடியா, பாலணு.

60. Cell Movement and the Shapping of the Vertebrate Body, in chapter 21 Molecular Biology of the Cell Fourth Edition. Edited by Bruce Alberts (2002) Published by Garland Science.

61. Comphell Neil. A. Brad Williamson. J. Heyden (2006) Biology. Exploring Life Boshen Massastiusetts, Pearson Prentice Hall.

62. Schopf.J.W, Kudryavtsew, AB Czaiya, AD, and Tripathi, AB (2007) Evidence of Archean Life. Stormatetites and Microfossiles Precambrian Research 158 – 141 – 155.

63. Schopf .J.W (2006) Fossil Evidence Archean Life. Trans R. soc Land B Biol science

64. Peter Hamilton Rveen, George. Brooks Jhonson ( 2002 ) Biology MC.Graw – Hill Education P. 68

65. விக்கிபீடியா – உயிரணுக்கரு

66. விக்கிபீடியா – கருவணு

67. NH. Medical Encyclopedia. Wikipedia

68. பிரேமா கிருஸ்ணசாமி (2004) கருத்தரித்தல்இ உச்சி முதல் உள்ளங்கால் வரை சென்னை ஆனந்த விகடன்.

69. Fertilization – Wikipedia

70. Hand Book of Plant Science Chichester, West Sussex, England, Jhon Wiley.2007. 466

71. Johnstone, Adam, Biolody, Fact and Practices for a level, Oxford University Press 95

72. Sherk, Stephanie Dianne Prenatal Development Gale Encyclopedia of Childrens Healtւ 2006

73. Germinal Stage. Mosby's Medical Dictionary, 8th Edition Elsevien

74. The Biology of Prenatal Development.

75. விக்கிபீடியா – விந்து

76. The Ovvum Gray's Anatomy of the Human Body Yahoo! Education

77. Ovum online Medica Dictionary Cancer WEB New Castle University.

78. Definition of Ovvum Biology – online org.

79. Oogenesis. Dr. uzwiak New Jersey State University.

80. பிற பாலூட்டிகள் – விக்கிபீடியா

81. தாவரங்கள் – விக்கிபீடியா

# சித்தர் சிவவாக்கியரின் இறைநிலை கோட்பாடு

## முன்னுரை

மனித வாழ்வில் இன்ப உணர்வை அனைவரும் விரும்புகின்றனர். தொடர்ந்து இன்ப உணர்வை அடைய முயல்கின்றனர். பற்பல நினைவுகளால் தாக்குண்ட மனிதன் துன்ப உணர்வால் அலைக்கழிப்படுகின்றான். நிலையான இன்பம் எப்பொழுது கிடைக்கும், எப்படி கிடைக்கும் என்றெல்லாம் அவன் ஏங்குகின்றான். இந்நிலையில் உலகியலை அறிவால் அறிந்து நல்வுணர்வால் தூண்டப்படுகின்ற நன்னிலையை அடைந்தால் பேரின்பம் அடையமுடியுமோ என்று எண்ணிய சான்றோர்களின் சிந்தையில் தோன்றிய, உறுதியானதும் இறுதியானதும் ஆகிய நல்லுணர்வே இறையுணர்வு எனப்படுகிறது.

முன்னோர்களான நமது ஆன்மீக மூதறிஞர்கள் சிந்தைக்கும் புலன்களுக்கும் மிக எளிதில் எட்டாத இறையுணர்வை, மையமாக வைத்து மனித வாழ்க்கையைச் சுழலவிட்டனர். புலன்களுடைய இயல்பான உணர்வுகளுக்கு உட்பட்ட மனிதன் சிந்தையில் செயல்பட்டால் புலனை, இறையுணர்வின் பால் மடைமாற்றம் செய்து, புதுவகை உணர்வை அடைகின்றான். அவ்வுணர்வை இறையுணர்வு எனக்கூறலாம்.

தமிழ் இலக்கியங்களில் இறையுணர்வு மிகுதியாக இடம் பெற்றுள்ளது. சித்தரிலக்கியம் பிற இலக்கியங்களினின்றும் வேறுபடும். பிற இலக்கியங்களில் கதைகள் மூலம் நீதிக்கருத்துகளும், இலக்கிய இன்பமும் வெளிப்படுத்தப்படுகின்றன. ஆனால் சித்தர் இலக்கியங்களோ கடவுள் பற்றிய கருத்துக்களையும், வாழ்வியல் நெறிகளையும் மிகுதியாக விளக்கிக் குறிப்பிடுகின்றன. தமிழரின் கடவுள் கொள்கையானது மிகவும் தொன்மை வாய்ந்ததது. இதனை

**“பண்டை அறிவர் காலத்தே தமிழரது**
**கடவுள் கொள்கைக்குத் திருநெறி யென்றும்**
**சிவநெறி யென்றும், ஒருநெறி யென்றும்**
**பெருநெறி யென்றும் பல பெயர்கள் வழங்கின”[1]**

என்ற கூற்றின் வாயிலாக அறியலாகும் கருத்தாகும்.

அன்பின் வழி ஏற்படும் பற்று பக்தியாக மலர்கிறது. மொழிப் பற்றும் நாட்டுப்பற்றும் முறையே மொழி பக்தியாகவும் தேச பக்தியாகவும் வெளிப்படுகின்றன. இறைவன்மேல் கொள்ளும் பற்று இறை பக்தியாக மலர்கிறது. இறைவன் என்பது பொறி புலன் கடந்ததொரு கருத்து. எனவே அறிவியல் ஆய்வு முறைகட்கு அப்பாற்பட்டது. “இறைவன் உண்டு” என்பது ஒரு நம்பிக்கையே தவிர அறிவியல் முறையில் ஆதாரம் காட்டி

நிரூபிக்கப்பட்ட கருத்தன்று. எந்த மொழிச் சொற்களையும் சொற்றொடர்களையும் கொண்டு "இறைவன்" என்பதை முழுமையாக விளக்க இயலாது. ஆராயவும் விளக்கம் கூறவும் இயலவில்லை என்பதாலும் "இறைவன்" பற்றிய கொள்கைகள் எண்ணிலவாகப் பெருகின. தத்தம் காலத்திற்கேற்பவும் கருத்து வளர்ச்சிகட்கேற்பவும் தத்துவச் சிந்தனையாளர்கள் இறைக் கோட்பாட்டை மாற்றியும் புதுப்பித்தும் வந்திருக்கின்றனர். இறைவன் அன்றும் இன்றும் என்றும் ஒருவனாகவே மாறாதிருக்கலாம். ஆனால் மனிதனின் அறிவும் நாகரிகமும் வளரும் மாறுதல்களுக்கேற்ப கடவுள் பற்றிய கருத்துகளும் விளக்கங்களும் வழிபாட்டு முறைகளும் மாறிய வண்ணம் இருக்கின்றன.

இப்பிரபஞ்சப் பொருள்களும் நிகழ்ச்சிகளும் காரண—காரியத் தொடர்களாக விளக்கப்படுகின்றன. அறிவியல் விளக்கங்களும் இவற்றிற்கு ஆதாரங்கள் ஆகின்றன. இக்காரண— காரியச் சங்கிலியைப் பற்றிக்கொண்டு பின்னோக்கிச் சென்றால் எல்லாவற்றுக்கும் தொடக்கமாக இருக்கும் முதற் காரணமே இறைவன்—கடவுள் எனலாம்.

ஒன்றின் இருப்பு நிலையிலிருந்து அதன் இல்லாமையையும், இல்லாமையிலிருந்து அது இருந்த தன்மையையும் அனுமானிப்பது மனித மனத்தின் ஓர் இயல்பு. நிறைவின்மை, நிலையாமை ஆகிய குறைபாடுகளை உலகியல் வாழ்வியல் அனுபவிக்கின்ற மனிதன் நிறைவானதும் நிலையானதுமான ஒன்றை அனுமானித்து அதனை "இறைவன்" என்றழைக்கின்றான்.

ஒவ்வொரு பொருளுக்கும் நிகழ்ச்சிக்கும் நோக்கமுண்டு என்று மனித மனம் எண்ணுகிறது. இப்பிரபஞ்சத்தின் முறையான வடிவம் ஒழுங்கான இயக்கமும் ஏதோ ஒரு குறிக்கோளை நோக்கியே அமைந்திருகின்றன என்று மனிதன் கருதுகிறான். இக்குறிக்கோளையும் அதை அடைவதற்கான இயக்கத்தையும் தருவதற்கு எல்லாம் அறிந்தவரும் எல்லாம் வல்லவரும் ஆன ஒருவர் இருக்க வேண்டும் என்று மனிதன் அனுமானித்து அவர்க்கு "இறைவன்" என்று பெயரிடுகிறான்.

அறச் செயல்கள் ஏன்? என்ற வினாவை அடுத்தடுத்து கேட்டுக் கொண்டால் அது இறுதியில் கடவுளை ஆதாரமாகக் கொண்டு விளக்கம் தரும். பிறப்புக்கு முன் நிலை இறப்புக்குப் பின் நிலை என்ற வினாக்களுக்கு விளக்கம் தேடும்போது கடவுள் என்ற நிலையே முன் நிற்கிறது.

## சிவவாக்கியரின் இறை கோட்பாடு

"ஒன்றே தெய்வம்" என்னும் முடிவே சித்தர்கள் காட்டிய இறை கொள்கை. அவ்வொன்றினை உணர்ந்து அறிதற்கு அமைந்த நெறிகளே சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பர். இவற்றுள் யோக நெறியால் —

உள்ளுணர்வால் உள்ளத்தினுள்ளே ஒளிந்து நிற்கும், உருவற்ற பேரொளியாய் நிற்கும் இறைவனை எண்ணுத்தினுள்ளே இயங்காது கண்டுகளிக்கும் முத்திநெறியே சித்தர்கள் உணர்த்தும் சித்திமுத்தி நெறியாகும். இதனை "ஒன்றென்றிரு, தெய்வம் உண்டென்றிரு" என்று பட்டினாத்தாரும்,

**"தித்திக்கும் தெள்ளமுதை சித்தாந்தத் துட்பொருளை**

**முத்திக்கு வித்தை முதல் நினைப்ப தெக்காலம்"**

என்று பத்ரகிரியாரும் கூறுவர்.

இவ்வாறு மானுடவுடம்பில் மறைந்து கிடக்கும் சித்தி முத்தி தரும் தெள்ளமுதைப் புறவுலகில் தேடிக் காலம் கழிக்காமல் உண்மை வழியே எளிதில் உணரச் செய்தவர் சித்தர் சிவவாக்கியர் ஆவார்.

**"கோயில் பள்ளி ஏதடா குறித்துநின்றது ஏதடா**
**வாயினால் தொழுதுநின்ற மந்திரங்கள் ஏதடா**
**ஞாயமான பள்ளியில் நன்மையாய் வணங்கினால்**
**காயமான பள்ளியில் காணலாம் இறையையே"**

கோயில் என்பதும், பள்ளி என்பதும், குறிப்பாக உள்ள வடிவங்களும், வாயால் வேண்டுவதும், மந்திரம் ஓதுவதும் தேவையில்லை. நியாயமாக நடப்பதே பள்ளியாகும். நன்மை செய்வதே வணக்கமாகும். இப்படிச் செய்தால் நம் (காயம்) உடம்பிலேயே இறைவனைக் காணலாம். என்பது தம் அனுபவமாக இறைமையைக் காணும் எளிய நிலையாகும் என்பதனை விளக்குகிறார்.

இறைவன் எல்லாமுமாக எங்கும் நிறைந்திருக்கிறான் என்பார் சித்தர் சிவவாக்கியர் **"மண்ணும் விண்ணும் மரிகடல்கள் ஏழும் ஆன இயற்கையிலும் எண்ணமும் மொழியும் இசைப் பண்ணும் எனப்படும் செயற்கையிலும், கண்ணும் மணியும் கண்ணுள் ஆடும் பாவையும் என உடலமைப்பிலும் இயக்கத்திலுமாக இறைவன் எங்கும் உளான்"**[2] என்பது சிவவாக்கியர் கருத்தாகும்.

இறைவன் சிவம், சத்தி ஆகிய இரு நிலைகளை உடையவன். இயங்கிச் செயல்படும் நிலையில் சத்தியாகவும் இயக்கமற்றும் செயலற்றும் இருக்கும் நிலையில் சிவமாகவும் இறைவனைக் கருதுகின்றனர். **"இன்னதென்று விவரிக்க முடியாத பெருவெளியில் இறைவன் சிவமாகவும் சக்தியாகவும் இருக்கின்றான். உயிரினங்களின் உடலாக இருப்பது சிவம், உடலின் இயக்கமாக இருப்பது சக்தி"**[3] என்று சிவவாக்கியர் கருதுகிறார். ஓர் உடல் வழியாகவன்றி சக்தி தனித்துச் செயல் படல் என்பது இயலாது. சக்தி இன்றி உடலுக்கும் இருப்பும் இல்லை, இயக்கமும் இல்லை. சிவமும் சக்தியும் தனித்திருக்கவோ, தனித்தியங்கவோ முடியாது.

## சிவவாக்கியரின் சமயச் சிந்தனைகள்

சித்தர் சிவவாக்கியர் காலத்தில், சைவமும் வைணவமும் பேரெழுச்சி பெற்றிருந்தன. ஆழ்வார்களும், நாயன்மார்களும் உருவாக்கிய வரலாற்றுத் தடங்களைத் தாங்கிக் கோயில்களும் சடங்கு சம்பிரதாயங்களும் விரிவடைந்தன. காலப்போக்கில், அவற்றின் ஆழ்பொருள்களை விடுத்து வெற்றாரவாரமிக்கவையாக அவை மலிவுறத் தொடங்கின. வழிபாட்டுநிலையிலும், வாழ்வியல் போக்கிலும் இடைத்தரகர்கள் மிகுந்தனர். ஆன்மிகம் தடமாறியது. உட்பொருள் இழந்து, பொருள் குவிக்கும் கருவியாகச் சமயம் ஆக்கப்பட்டது. அடிப்படை நோக்கத்தைவிடுத்து, ஆதிக்கத்தை நிலைநாட்டிக் கொள்ளச் சமயங்களை முதன்மைப்படுத்திப் பூசல்கள் எழுந்தன.

மக்கள் மனிதத்துவத்தை விட்டு, மதப்பூசல்களுக்குப் பலியாகத் தொடங்கினர். அவர்களைக் காக்கவும், சமயநெறிகளைச் செம்மைப்படுத்தவும் முயன்ற சித்தர்களின் பணியினைச் சித்தர் சிவவாக்கியர் அவர்கள் சிறப்புறச் செயல்படுத்தியிருப்பதையும் காணமுடிகிறது. **“ஒன்றே குலம் ஒருவனே தேவன்”**[4] என்னும் திருமூலரின் வாக்கைப் பின்பற்றி சிவவாக்கியரும் தமிழ்மக்களிடையே சமயப் பொதுமையை நிலைநாட்டியுள்ளார் என்பது இங்கு காண கிடைக்கிற உண்மையாகும்.

## சிவவாக்கியர் வழியுணர்த்திய சமயசமநிலை

சித்தர் சிவவாக்கியரின் காலம், சைவ, வைணவப் பிரிவினைப்போர் உச்ச நிலை அடைந்திருந்த காலமாகும். வாழ்வியல்நோக்கில் ஒன்றுபடவாழும் மக்கள், வழிபாட்டுநோக்கில் பிரிந்து பகைமை வளர்த்துத் தம்மை அளித்து ஒழிந்து போவதில் உடன்பாடில்லாத நிலையில், இருசமய இணைப்பைச் சிவவாக்கியர் தம் பாடல்களின் வாயிலாக அழுத்தமாக வலியுறுத்தத் தொடங்குகிறார். அதற்காக,

**“சிவாயமென்ற வச்சரம் சிவனிருக்கு மச்சரம்**
**உபாயமென்று நம்புதற்கு உண்மையான வச்சரம்”**[5]

என்று சிவநாமத்தின் பெருமைகூறிச் சைவர்களை அழைக்கிறார் சிவவாக்கியர்.

**“சதாவிடாம லோதுவார்கள் தமக்குநல்ல மந்திரம்**
**இதாமி ராம ராமராம ராமவென்னும் நாமமே”**[6]

என்று பாடி வைணவர்களையும் ஈர்க்கிறார். பின் இரண்டு பிரிவினரையும் ஒருசேர நோக்கி,

**"தில்லைநா யகனவன் திருவரங்க னுமவன்**

**எல்லையான புவனுமு மேகமுத்தி யானவன்"[7]**

என்று இரண்டு தெய்வமும் ஒன்று தான் என்பதையும் உணர்த்துகிறார்.

**"நாழியப்பு நாழியுப்பு நாழியான வாறுபோல்"[8]**

"அப்பும் உப்பும்" என்கிற உவமை வழியாக, நாழி அளவு உப்பானது நாழியளவு நீரில் கரைந்து ஒன்றிவிடுவது போல், சிவனும் மாலும் ஒன்று கலந்து நிறையும் பாங்கை எளிமைப்படச் சிவவாக்கியர் விளக்கிவிடுகிறார்.

அத்துடன் சிவன் திருமால் ஆகிய இருவருக்கும் அப்பால் "பரம்பொருள்" எனும் மேம்பட்ட நிலை உள்ளது என்பதனையும் எடுத்து விளக்குகிறார்.

**"அரியுமல்ல வரனுமல்ல வப்புறத்தி லப்புறம்**
**கருமை செம்மை வெண்மையைக் கடந்துநின்ற காரணம்"[9]**

என்று ஒன்றென நின்ற பரம்பொருளின் உண்மையை உலகிற்கு உணர்த்துகிறார். மேலும், அப்பொருளை அடைவதற்கான வழிமுறைகளையும் சுட்டிக்காட்டுகிறார் சித்தர் சிவவாக்கியர் அவர்கள். தமது சித்தர் மரபில் ஒன்றும்படும் யோகநெறியை, மக்கள் மனதில் நிலைநிறுத்த முனைகிறார். அதற்கான தம் குறிக்கோளைத் தெளிவாகக் குறிப்பிடுகிறார். அத்தகு யோகநெறியில் நின்று தன்னுள் கடவுளைக் காணமுடியும் என்று காட்டுகிறார். வானில் மின்னல் எழுந்து பரந்து தோன்றி பின்னர் அதே வானில் மறைந்து போவதுபோல், இறைவன் தன்னுள் தோன்றி உயர்ந்து தன்னுள் மறைகிறான் என்பதை,

**"மின்னெழுந்து மின்பரந்து மின்னொடுங்கு வாறுபோல்**
**என்னுள் நின்ற வெந்நுனீச நின்னுளே யடங்கும"[10]**

என்று கூறித் தன்னுள் தோன்றும் கடவுட்காட்சி அனுபவத்தையும் கனிவுடன் கூறுகின்றார். இந்தக் கடவுளே சிவன், அவனே திருமால், ஒளிவடிவான இறைவனைத் தாம் கருதிய உருவின் வடிவில் வைத்துச் சண்டையிட்டுக் கொள்ளும் மூடரே, இறைவனானவன் அங்கும் இங்கும் உள்ளான் என்று தேடிக் கண்டலைகிற அறிவிலிகளே, அனைத்துமான அவன் உம்முளே எழுந்து நிறைந்து உம்முளே மறைந்தும் நிற்கிறான். என்று உணர்த்துவதற்காக, கண்ணில் காணமுடிகிற மின்னலைக் காட்டி, கண்ணால் காண இயலாக் கடவுளின் தன்மையை மிக நுட்பமாக எடுத்துரைக்கிறார்.

## சிவவாக்கியர் உணர்த்தும் இறைநெறி

மனிதனாகப் பிறந்திருந்தும் தெய்வீகப் பெருநிலைக்கு உயர்ந்து நிற்பவர்கள் சித்தர்கள். அவர்கள் தன் உடம்பின் உள்ளேயே ஆன்மாவை ஒடுக்கி அழியாத உடம்புடன் பரு உடம்புடன் ஆண்டாண்டு காலமாய் ஞானநிலையில் திளைத்திருப்பவர்கள். தன்னை நாடி வருபவர்களுக்கு அருளமுதம் வழங்குபவர்கள். இத்தகு பேராற்றல் நிலையை எல்லோரும் பெற முடியும் என்பதற்கான நுட்பங்களைச் சித்தர் சிவவாக்கியர் தம் பாடல்களின் வழியாக எடுத்தியம்புகிறார். அவற்றைப் பின்வருமாறு காணலாம்.

## யோகம்

சித்தர் சிவவாக்கியர் உணர்த்தும் இறைநெறிகளுள் முதன்மையானதாகத் திகழ்வது யோகம் ஆகும். **"யோகம் என்ற சொல்லுக்கு மனத்தை ஒன்றுபடுத்தும் முயற்சி என்று பொருள் உரைப்பர்"**[11] இதனை,**"இறைவனோடு ஆன்மா ஒன்றுபடும் நிலை எனவும் பொருள் கூறுவர்"**[12] [யோகம் – என்ற சொல்லிற்குச் - சேர்க்கை – உயர்ச்சி – வழி –அடைதல் போன்ற பொருள் இருப்பதை கருத்தில் கொள்ளுதல் வேண்டும் ]. இங்கு "யோகம்" என்ற சொல்லுக்கு இருவகையாகப் பொருள் சொல்லப்படுகிறது. சாங்கியத் தத்துவ வாதிகள் யோகம் என்ற சொல்லுக்குப் பிரிதல் என்றும் வேதாந்திகள் இணைதல் என்றும் பொருள் கூறி யோக நெறியை விளக்குகின்றனர்.

சாங்கியத் தத்துவத்தில் கடவுள் என்ற கருத்துக்கு இடமில்லை. இப்பிரபஞ்சம் முழுவதும் மூலப்பிரகிருதியில் இருந்தே வெளிப்படுகிறது. மூலப்பிரகிருதி செயலற்ற சடப்பொருள் என்பதால், தானே தனித்திருந்து இப்பிரபஞ்சத்தை வெளிப்படுத்த முடியாது. மூலப்பிரகிருதியை இயக்கிப்பிரபஞ்சத்தை வெளிப்பட வைப்பது புருடன் (அறிவுள்ள பொருள்) என்னும் இயக்கசக்தி. புருடன் என்பது உயிர்ப்பியக்கம். இப்புருடன் பிரகிருதியில் சேர்வதன் விளைவாகவே பிற தத்துவங்கள் யாவும் தோன்றுகின்றன. பிரபஞ்ச வெளிப்பாட்டால் புருடன் பிரகிருதியோடு ஐக்கியப்பட்டு விடுகின்றான். பிரபஞ்சத் தத்துவங்களால் சிறைப்படுத்தப்படுகின்றான். புருடனைப் பிரகிருதியிலிருந்து பிரித்தல் வேண்டும் என்பதே யோக நெறியின் முழுமுதற் குறிக்கோள். பிரகிருதியிலிருந்து பிரிக்கப்பட்ட புருடன் தனித்திருக்கும். பிரிக்கப்பட்ட புருடன் போய் இணைவதற்குப் புருடன், பிரகிருதி என்பனவற்றுக்கு மேலாக ஏதுமில்லை. எனவே, சாங்கியர்கள் யோகம் என்றால் பிரிதல் எனப் பொருள் கூறி, பிரகிருதியில் இருந்து புருடன் என்றழைக்கப்படும் ஆன்மாவைப் பிரிப்பதே யோகப் பயிற்சியின் குறிக்கோள் என்று விளக்குன்றனர்.

யோகம் என்பதற்கு வேதாந்திகள் தரும் விளக்கம் வேறு வகையானது. ஆன்மாவும் பிரம்மமும் ஒன்றே. அறியாமையின் விளைவால் ஆன்மா வேறாகத் தோன்றுகின்றது. பிரிந்துகிடக்கின்றது. மாயை வலையில் சிக்குண்டு அறியாமையில் சிறைப்பட்டுக் கிடக்கும் ஆன்மாவை விடுவித்துப் பூரணமாய் இருக்கும் பிரம்மத்தில் கலக்கச் செய்வதே யோகநெறியின் குறிக்கோள். எனவே, யோகம் என்றால் இணைதல் என்று பொருள் கூறி யோக நெறியை வேதாந்திகள் விளக்குகின்றனர்.

**“யோகம் என்னும் வடச்சொல்லானது, யுஜ் என்னும் அடிச்சொல்லிருந்து வந்தது என்பர். யுஜ் என்றால் ஒன்றுபடுத்துதல், இணைத்தல் என்ற பொருள் தரும் என்பர்”[13]** மனிதனின் வாழ்வியல் நிலை பரம்பொருளுடன் ஒன்றினையும் நிலையையே யோகம் என்று பண்டைய இந்தியத் தத்துவங்கள் கூறுகின்றன. இத்தகைய இணைவை அடையவே பல விதமான வழிமுறைகளை ஞானிகளும், சித்தர்களும் முன்வைத்தனர்.

அண்டத்தில் உள்ளது பிண்டத்தில் என்ற கொள்கையே யோக நெறியின் அடிப்படையாகும். பேரண்டத்தில் காணப்படும் பொருள்கள், இயக்கங்கள், விதிமுறைகள் யாவும் பிண்டமாகிய நம் உடலிலும் இருக்கின்றன. அண்டப் பெருவெளியில் நடைபெறும் இயற்பிய வேதியிய மாற்றங்களும் அவற்றுக்கான விதிகளும் நம் உடலிலும் உண்டு. அண்டத்தின் சுருக்கமாகப் பிண்டமும் பிண்டத்தில் காண முடியும் என்றும் பிண்டத்தை அண்டமாக மாற்ற முடியும் என்றும் ஞானியர்களும், சித்தர்களும் உறுதியாக நம்புகின்றனர். யோகப்பயிற்சியில் வல்லவர்கள் அண்டத்தில் உள்ள அனைத்தையும் பிண்டத்தில் காண்பர். பேரண்டத்தை இயக்கும் ஆற்றல்களின் உருவமாக தெய்வங்களை ஞானியர்களும், சித்தர்களும் தம் உடலிலேயே கண்டனர்.

## இருவகை யோகங்கள்

யோகப் பயிற்சிகளைப் பொதுவாக இருவகைப்படுத்தலாம். உடலை அடிப்படையாகக் கொண்ட யோகப் பயிற்சிகள் ஒருவகை என்றும், மனத்தை அடிப்படையாகக் கொண்டது மற்றுமொரு வகை என்றும் நிலைப்படுத்தலாம். இவ்விருவகைப் பயிற்சிகளும் ஒன்றுக்கொன்று துணை செய்வனவே தவிர முரணானவை அல்ல. பல்வேறு ஆசனங்களில் உடலை அமர்த்துவதும் மூச்சடக்கி பயிலுவதும் உடலுறுப்புக்களை வளைத்து நெளித்து அசைத்து முத்திரைகள் செய்வதும் உடலை அடிப்படையாகக் கொண்ட யோகப் பயிற்சிகளில் முதன்மை பெறுகின்றன. மனத்தை அடிப்படையாகக் கொண்ட யோகப் பயிற்சிகளில், மனத்தைக் கட்டுப்படுத்தி ஒருமுகப்படுத்துவதே முதன்மை பெறுகிறது. இப்பயிற்சிக்கு உடல் துணை செய்யும் கருவியாகிறது.

**“யோகம் என்பது மனத்தைக் கட்டுபடுத்தி அகமுகமாகக் கடவுளைத் தன்னுள்ளே உணர்வதாகும். மனம் ஆசைகளால் அலைக்கலைக்கப்பட்டால், உலக விவகார விடயங்களால் ஓடினால் – அமைதி அடையாவிட்டால் ஆத்மஞானம் அடைவது எளிதன்று. வெளியில் பரவி சலித்துக் கொண்டிருக்கின்ற சக்தியை எப்பொழுது வெளியில் பரவி சலிக்காமல் தன்னில்தானே இலயிக்கிறதோ – அப்பொழுது யோகமாகிறது என்கிறது சித்தவேதம்”**[14] கருமயோகம் – பக்தியோகம் – கடயோகம் – இராஜயோகம் – அட்டாங்கயோகம் – ஞானயோகம் முதலிய பல பெயர்களையுடைய முறைகளெல்லாம் மனம் என்ற ஒன்றை அடக்கும் வழிகளேயாம். இதற்குப் பல யோக நூல்கள் துணைபுரிகின்றன.

பரம்பொருளான இறைவனோடு உயிரானது இணைகிற வழிமுறைகளை தான் யோக நூல்கள் வலியுறுத்தி நிற்கின்றன. யோகநிலைகளை பற்றிக் கூறும் முதல் நூலாக இன்று நமக்கு கிடைப்பது பதஞ்சலி யோக சூத்திரம் என்ற நூலாகும். சாமி விவேகானந்தர் தமது இராஜயோக நூலில் பதஞ்சலிசூத்திரத்தின் நான்கு பாதங்களையும் இணைத்துள்ளார். இதில் கூறப்படும் அட்டாங்க யோகமான இயமம், நியமம்,ஆசனம், ஆகிய இவை மூன்றும் உடற்பயிற்சி, மனத்தின் பங்கு சிறிதுள்ளது என்றும், பிராணயாமம், பிரத்தியாகாரம், தாரணை ஆகிய இவை மூன்றும் மனப்பயிற்சி, இதில் ஆன்மாவின் பங்கும் சிறிதுள்ளது என்றும், தியானம், சமாதி ஆகிய இவை இரண்டும் ஆன்மப்பயிற்சி என்றும் தெளிவாக இவற்றினை வகைப்படுத்திக் காட்டி விளக்கமளிக்கிறார் டாக்டர் மாணிக்கவாசகம் அவர்கள்.

## வெட்டவெளி

வீடுபேறு என்பது சுவர்க்கத்தில் எல்லாவகையான வசதிகளுடன் இன்பம் துய்ப்பதென சிலர் எண்ணுகின்றனர். இன்பமும் இல்லை துன்பமும் இல்லை என்பதே முத்தி நிலையாகும். இன்பம் பொன்னாலான சங்கிலி, துன்பம் இரும்பாலான சங்கிலி. இந்த இரு வகை சங்கிலிகளும் ஆன்மாவைச் சிறைப்படுத்தி அதன் உண்மை நிலையை உணர ஒட்டாமல் செய்கின்றன. இவ்விருவகைச் சங்கிலிகளும் அற்றுபோகும் நிலையை முத்தி நிலை எனலாம். இந்நிலையினையே சித்தர்கள் வெளி என்றும் வெட்டவெளி என்றும் குறிக்கின்றனர். வெட்டவெளியில் ஆன்மா தன் உண்மை நிலையை உணருகின்றது. இருப்பதுபோல் தோன்றி மறையும் பொய்மையிலிருந்து விடுபட்டு என்றும் இருக்கும் உண்மை நிலைக்குச் செல்வதே ஆன்மப் பயணம்.

சீவன் முத்தியும் காயச்சித்தியும் சித்தர்களின் குறிக்கோள்கள். ஆதலின், காயகற்பங்கள் செய்வதில் கவனம் செலுத்தினர். யோக நெறிகளையும் வற்புறுத்தினர். இளமை குன்றாமலும் உறுதி தளராமலும் இயக்கம் கெடாமலும் உடலைக் காத்துக் கொள்ள காயகற்பங்கள் உண்டனர். கூண்டோடு கைலாயம் போதல், சாவாது வாழ்தல், மூவாதிருத்தல்

என்பன தமிழ்நாட்டில் நீண்ட காலமாகப் பழகிவரும் மொழிகள். அழிவிலிருந்து உடலைக் காக்கச் சித்தர்கள் எடுத்துக் கொண்ட முயற்சியை இப்பழமொழிகள் உறுதி செய்கின்றன.

**“உயிரணுக்களில் உள்ள அமிலங்கள் கணந்தோறும் பழுதடைகின்றன. இவ்வமிலங்களைப் பழுதடையாமல் நிலைக்கச் செய்யும் மூவா மருந்து உயிரணுக்களில் இயல்பாக அமைந்துள்ளது அந்த அமுதத்தைச் சுரக்கச் செய்ய மனிதனால் முடியும்”[15]** இவ்வாறு மருத்தவ அறிஞர் ஒருவர் கூறுகின்றார்.

யோகப்பயிற்சியின் மூலமும் உடலை அழியவிடாமல் காக்க முடியும் என்று திருமூலர் முதற்கொண்டு பல சித்தர்களும் கூறுகின்றனர். **“இதயத் தானமாகிய அநாகத்தில் சித்தத்தை ஒன்ற வைத்தால் தேகத்துக்கு என்றும் சிதைவில்லை............”[16]** என்று திருமந்திரம் கூறுகின்றது.

பருவுடலை ஒளியுடம்பாக்கி அழியாமல் வைக்கலாம் என்பது சித்தர்களின் கருத்து. பருவுடலை அழியாமல் வைத்துக்கொள்ளுதல் என்பது சாத்தியமில்லை என்பது அறிவியலின் கருத்தாகும்.

## நால்வகை படிநிலைகள்

பிறவி முத்தி பெறுவதற்கு சரியை, கிரியை, யோகம், ஞானம் எனும் நான்கு படிநிலைகளை ஏறவேண்டும். **“சரியை என்றால் - ஒழுக்கம், கிரியை என்றால் – இறைவனது ஆகமங்களில் விதித்துள்ளவாறு புறத்தொழிலானும் அகத்தொழிலானும் வழிபடுதல், யோகம் என்பது – ஆழ்ந்த நிட்டை, இயமம், நியமம், பிரத்தியாகாரம்,ஆசனம், பிராணயாமம், தாரணை, தியானம், சமாதி போன்றவை எல்லாம் அட்டாங்கயோகமாகும். ஞானம் என்பது அனைத்தையும் அறியும் அறிவு ஆகும்”[17] “சரியையாளர் பக்தர், கிரியையாளர் தொண்டர், யோகியர் சாதகர், ஞானியர் சித்தர் ஆவர்”[18]**

மேற்சுட்டிய ஒவ்வொரு படியிலும் தெளிநிலை எய்துபவர்கள் அவ்வப்படிகளுக்குரிய பேறுகளைப் பெறுவார். சரியையில் தெளிவடைந்தோர் சாலோகம் என்னும் பேறு பெறுவர்.

கிரியையில் தெளிவடைந்தோர் சாமீபம் என்னும் பேறடைவர். யோகத்தில் தெளிவடைந்தோர் பெறுவது சாரூபம் என்னும் பேறாகும், ஞானத்தில் தெளிவடைந்தோர் சாயுச்சியம் என்னும் பேறு பெறுவர் என்பதைச் சிவவாக்கியர் தம் பாடலில் தெளிவுபடுத்துவதை அறிய முடிகிறது.

**"அங்க சுத்தியு மாலயந்தொழுவதும்**
**சரியையென் றறைவார்கள்**
**மங்களத்துட வட்டமா சித்தியும்**
**வரையும் சக்கரப்பூசை**
**பொங்கமாவது கிரியையாம் வாயுவை**
**இரண்டிடா திழுத்திட்டு**
**தங்கநின்றதோர் யோகமென் றிதனையே**
**சாற்றிடு மறைதானே"**[19]

எனவும்,

**"ஞானமோ வெனக் கேட்டிடின் தத்துவம்**
**நானென உணர்ந்திந்த**
**ஊனை நானென உரைத்ததை யகன்று**
**பின்னொளிவளத் தனைக் கண்டு**
**மானம் வெட்கமும் துக்கமும் கவலையும்**
**வஞ்சனை தான்போக்கி**
**வீனமற்று நான் சிவமெனத் துணிந்தது**
**மிடிந்தது முடிவாமே"**[20]

என்றும் சிவஞானபேதம் சிறப்பாக விளக்கம் தருகிறது. இம்முடிவான மேனிலையை அடையும் வழிமுறையே சித்தர்நெறி எனப்படுகிறது. இதற்குச் சித்தவித்தை என்றும் பெயர். வித்தை என்றால் கல்வி என்று பொருளாகும். சித்தவித்தை என்பது புறக்கல்வியன்று, அகக்கல்வியாகும்.

இக்கல்வியை அருளும் சித்தர்கள் காடுகளிலும், மலைகளிலும், குகைகளிலும் மட்டுமன்றி ஊருக்குள்ளேயும் வாழ்ந்து வந்திருக்கின்றனர் என்பது காணக்கிடைக்கும் தெளிவு. சித்தர்கள் தங்கள் ஆற்றலை மக்களின் நல்வாழ்வுக்காக யாத்திருக்கின்றனர்.

பிரம்மவித்தை, தாரகமந்திரம், அஜபாகாயத்ரி, சாகாக்கலை, பஞ்சாச்சரம், அட்டாச்சரம், ஏகாச்சரம், ஓங்காரம், வெட்டாதசக்கரம், சொல்லாத மந்திரம், ஊமை எழுத்து, ஒருமொழி, அமிர்தசஞ்சீவினி என்னும் பல பெயர்களால் இச்சித்தவித்தை அழைக்கப்படுகிறது. இப்பயிற்சியைச் செய்வதற்கு நாடு, மொழி, இன, சாதி முதலான பேதங்களோ, பிற தடைகளோ கிடையாது. யாவரும் மேற்கொள்ளலாம். இந்த சித்தவித்தையைத் தக்க குருவிடம் நேரில் பெறவேண்டும் என்பது நியதி, இதனை, சிவவாக்கியர்,

“ குருவினால் தெளிந்துகொண்டு கோதிலாத ஞானமாம்”[21]

என்று தம் பாடலில் குறிப்பிட்டுச் சொல்லுகிறார்.

## பிராணயாமம்

உயிர்ச்சக்தி நம் உடலில் சூக்கும நாடிகள் வழியே வாயுவாக ஓடிக் கொண்டிருக்கிறது. நம் உடலில் ஓடும் வாயுக்கள் மூச்சுப்பயிற்சியின் வழியாக கட்டுப்படுத்தப்படுகின்றன. பிராணயாமம் என்பது பொதுவாக மூச்சுப்பயிற்சியைக் குறித்தாலும், அது நம் உடலில் ஓடிக் கொண்டிருக்கும் பிராணன் என்னும் உயிர்க்காற்றின் பயிற்சியையே சிறப்பாகக் குறிக்கிறது. நாசி, மூச்சுக்குழல், காற்றுப்பை வழியாக வாங்கிவிடும் மூச்சை ஒழுங்குப்படுத்தும் பயிற்சியின் மூலமே பிராணனின் ஓட்டத்தைக் கட்டுப்படுத்த முடியும். மூச்சுப் பயிற்சியின் மூலம் கட்டுப்படும் பிராணன் எனும் உயிர்ச்சக்தி தன் கொதிப்பும் கொந்தளிப்பும் அடங்கி அமைதி அடைகிறது. மூச்சோடு மிக நெருங்கிய தொடர்புடையது மனம். மன அதிர்வுகளே மாயா காரியங்கள் அனைத்திற்கும் காரணமாகின்றன. மூச்சுப்பயிற்சியின் மூலம் கட்டுப்படும் மனத்தில் அதிர்வலைகள் மறைகின்றன, அமைதி நிலவுகின்றது. எனவே, மூச்சுப்பயிற்சியானது பிராணனை ஒழுங்குப்படுத்தவும் மனத்தை ஒருமுகப்படுத்தவும் வழி செய்கிறது எனலாம்.

பிராணயாமப்பயிற்சி மூன்று உறுப்புக்களை உடையது, மூச்சை வெளியிடுதல், உள்ளிழுத்தல், நிறுத்துதல் என்ற முறையில் இப்பிராணயாமப் பயிற்சியானது நடக்கிறது. காற்றுப்பை ஏறத்தாழ வெற்றிடமாகும் வரை முதலில் காற்றை வெளியேற்ற வேண்டும். இது இப்பயிற்சிக்குத் தயாராகும் நிலையாகும். தாமரைத் தண்டில் நீர் ஏறுவதைப் போல மூச்சை நேராக உள்ளிழுக்க வேண்டும். இதற்குப் பதினாறு நொடியளவு காலம் எடுக்கலாம். இதனைப் பூரகம் என்றும் இவ்வாயுவை அபானன் என்றும் கூறுவர். உள்ளிழுத்த காற்றை அறுபத்து நான்கு நொடி கால அளவு உள்ளே நிறுத்துதல் கும்பகம் எனப்படும். கும்பகப்படும் வாயுவை வியானன் என்று கூறுவர். உள்ளே நிறுத்திய காற்றை முப்பத்திரண்டு நொடி கால அளவு சீராக வெளியிடுதல் ரேசகம் எனப்படும். இவ்வாயுவைப் பிராணன் என்று கூறுவர்.

இம்மூச்சுப்பயிற்சியைத் தொடங்குமுன் உடலை நிலையாக, நேராக, உறுதியாகவும் அதேவேளை, ஓய்வாக இருத்திக் கொள்ளும் ஆசனநிலையைக் கைவரப் பெற்றிருக்க வேண்டும். கும்பக நிலையில் மூச்சை நிறுத்தும்போது உடலில் அசைவோ நெளிவோ வளைவோ இருக்கக் கூடாது. தொடக்க நிலையில் மூச்சுப் பயிற்சியைப் படிப்படியாகப் பயிலுவது நலம், எளிதுங்கூட. ஏற்ற ஆசனத்தில் உடலை நிலையாக வைத்துக்கொண்டு இடது நாசியை வலது கை விரல்களால் அடைத்து வலது நாசி வழியாகக் காற்றை வெளித்தள்ளி காற்றுப்பையை வெற்றிடமாக்க வேண்டும். இடதுகை

விரல்களால் வலது நாசியை அடைத்துக் கொண்டு இடது நாசி வழியாகக் காற்றை இழுக்க வேண்டும். பின்னர் உள்ளிழுத்து காற்றைக் குறிப்பிட்ட கால அளவுப்படி நிறுத்தி வெளியிட வேண்டும்.

மூச்சை உள்ளிழுத்து, நிறுத்தி வெளியிட முறையே 16, 64, 32 நொடிகள் எனச் சாத்திரங்கள் வரையறை செய்கின்றன. தொடக்க நிலையில் இக்கால அளவைப் பின்னப்பற்ற முடியாமல் போகலாம். நீண்ட காலப் பயிற்சியுடையோர் இக்கால அளவுகளை முறையாக நீட்டித்துக் கொள்ளவும் கூடும். மூச்சை உள்ளிழுக்க எடுத்துக் கொள்ளும் கால அளவைப் போல் நான்கு மடங்கு கால அளவு நிறுத்த வேண்டும் என்றும் இரண்டு மடங்கு கால அளவில் சீராக வெளியிட வேண்டும் என்றும் கடைப்பிடித்தால் போதும். பூரகம், கும்பகம், ரேசகம் என்பன 1:4:2 என்ற கால விகிதத்தில் நடப்பதே சிறந்ததெனப் பெரும்பாலான யோக சாத்திரங்கள் கூறுகின்றன. சிலர் இம்மூச்சுப்பயிற்சியின் கால விகிதம் 1:1:1 என்ற அளவில் அமைய வேண்டும் என்கின்றனர்.

மந்திரச் சொற்களுக்கும் எழுத்துகட்கும் முதன்மை தரும் மந்திர யோகத்தார், பிராணயாமத்தை ஓம் எனும் பிரணவ மந்திரத்தோடு இணைத்துப் பேசுவர். ஓம் என்பது ஒரு கூட்டொலி ஆகும். இவ்வொலியில் அ, உ, ம் எனும் மூன்று ஒலிகள் கலந்துள்ளன. மூச்சை உள்ளிழுத்தல் அ கரம் என்றும், நிறுத்துதல் உ கரம் என்றும் வெளிவிடுதல் ம கரம் என்றும் கொள்வர். அ கர ஓசையோடு மூச்சை உள்ளிழுத்து உ கர ஓசையோடு நிறுத்தி ம கர ஓசையோடு வெளிவிடும் மூச்சிப்பயிற்சியே ஓம் எனும் பிரணவ மந்திரத்தின் தத்துவம் என்பர்.

மூவகையான தசை இருக்கங்கள் மூச்சுப் பயிற்சியின் பயனைக் கூட்டிப் பெருக்கும். மூச்சை உள்ளிழுத்து முடித்தவுடன் தாழ்வாய்களை இறுக்கிக் கொள்ள வேண்டும், மூச்சை வெளியிட்டு முடித்தவுடன் குதத்தின் தசைகளைச் சுருக்குக் குதவாயை இறுக்கிக் கொள்ள வேண்டும், மூச்சை நிறுத்தும் பொது இவ்விரு இயக்கங்களோடு வயிற்றின் தசைகளையும் சுருக்கி இறுக்க வேண்டும், இத்தகைய தசை இறுக்கங்களோடு செய்யப்படும் மூச்சுப் பயிற்சி விரைவாகவும் கூடுதலாகவும் பயன்தரும்.

**“காலையும் மாலையும் தொடர்ந்து இம்மூச்சுப்பயிற்சியை செய்வோரது உடலும் உள்ளமும் மாற்றமடையும். நீண்ட கால முறையான பயிற்சிக்குப்பின் முதல் நிலையாக உடல் முழுவதும் வியர்வைத் துளிகள் அரும்பும். வழக்கமான வியர்வைப்போல் இது கெடு நாற்றம் வீசாது. அடுத்த கட்டமாக உடல் அதிரும். இறுதியாக உடல் இலேசாகும். மனம் தெளிந்து அமைதியுறும். தந்திர இராச தந்திர சாத்திரம் இவ்வாறு கூறுகிறது.”**[22]

**"இம்மூச்சுப்பயிற்சியில் நிறைவு கண்டவர்களின் சிறப்பியல்புகளை இரகயமாலா எனும் சாத்திரம்விரிவாகக் கூறுகிறது. இம்மூச்சுப்பயிற்சியில் முழுமை அடைந்தவர்களின் முகம் எப்போதும் மலர்ந்திருக்கும், கண்கள் ஒளி வீசும். அவர்களிடம் சூக்குமு ஆற்றல்கள் நிறைந்திருக்கும். மனம் அமைதியும் நிறைவும் உடையதாக இருக்கும். உடல் காற்றினும் இலேசாக இருக்கும்"[23]**

## பிராணயாமப் பயிற்சியின் பலன்

பிராணாயாமம் என்னும் மூச்சுப்பயிற்சியானது, நாடி சுத்தி, நாடி சோதனா, சீத்தலி, சிட்டகாரி, பஸ்திரிகா, கபாலபதி, உஜ்ஜைனி, பிராமரீ, சூரியபோதன போன்ற பலவகைகளை உள்ளடக்கியதாகத் திகழ்கிறது. இப்பிராணாயாமப் பயிற்சியை மேற்கொண்டு மனிதன் உயிர் வாழ அடிப்படையாக விளங்கும் மூச்சினை ஒழுங்குப்படுத்தி தமது கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவந்து விட்டால். உடலின் உள் உறுப்புகளும் வலிமை பெறும். நீண்ட ஆயுட்காலத்தையும் மனிதனானவன் தனது வாழ்நாளில் எய்துவான், அவனது ஆரோக்கியமும் மேன்மையடையும். இதனை, ஔவையார்,

**"வாயு வழக்கம் செறித்தடங்கில்**

**ஆயுள் பெருக்கம் உண்டாம்"**

என்று தமது பாடலின் வாயிலாக எடுத்துரைக்கின்றார்.

## சங்கீதம் பாடுபவர்கள்

நாபிகமலத்தில் வீற்றிருக்கும் காற்றை முறையாகக் கட்டுப்படுத்தி, மனிதனின் உணர்வுக்கும், உணர்ச்சிக்கும், கால சூழ்நிலைக்கும் ஏற்றார்போல் வார்த்தைகளை, பயன்படுத்தி இனிமையாக்கி பாடுவதே சங்கீதமாகும். சங்கீதம் பாடுவதற்கு மூச்சுப்பயிற்சி என்பது அடிப்படையான ஒன்றாகும். சரியான குரல் வளம், நன்றாக பாட வேண்டுமென்றால் உள் மூச்சை நன்றாக இழுத்துப் பிடித்து பாட வேண்டும் என்பர்.

ஒருவர் பாட்டினைப் பாடும்போதோ அல்லது அதற்கானப்பயிற்சியை மேற்கொள்ளும்போதோ மேற்குறிப்பிட்ட பிராணாயாமப் பயிற்சியானது மேற்கொள்ளப்படுவதை நாம் இங்கு கவனத்தில் கொள்ள வேண்டும். ஆம், மூச்சினை (காற்றை) உள்ளிழுக்கும்போது பூரகம் என்ற நிலையும், பிறகு மூச்சினை (காற்றை) உள் நிறுத்திக் கொண்டு பாடுவது கும்பகம் என்ற நிலையும், பிறகு பாடுகிறபோது மூச்சினை (காற்றை) சீராக வெளியிடுதல் ரேசகம் என்ற நிலையிலையும் நிகழ்கிறது.

இவ்வாறாக பாடகர்கள் பாட்டினை பாடும்போது, இப்பிராணாயாமப் பயிற்சியானது நிகழ்வதால் தான் பாடகர்கள் அனைவரும் நீண்ட ஆயுளைப் பெற்று வாழ்வதை நாம் காண்கிறோம். மேற்கூறிய எடுத்துக்காட்டு ஔவையாரின் கூற்றினக்கு துணைபுரிகின்றன. இப்பிராணாயாமப் பயிற்சியின் மூலம் காற்றினை கட்டுக்குள் கொண்டுவந்து உயிர்சக்தியை மேன்மையுறச் செய்து உள்ளுறுப்புக்களை வலுபடுத்தி ஆன்ம இன்பம் அடையும் வழியான வாசியோகப் பயிற்சியை மேற்கொள்ளுவதற்கு வழிகோலும் முறையாக அமைவதை நாம் காணலாம்.

இறை நிலையை உணரவோ, அல்லது இறைவனுடன் ஒன்றெனக் கலந்திடவோ சித்தவித்தையான வாசியோகத்தினை மேற்கொள்ள இப்பிராணாயாமப் பயிற்சியானது முன்னிலையாக அமைவதை இங்கு நாம் கருத்தில் கொள்ளுதல் வேண்டும்.

## வாசியோகம்

யோகநெறியில் குறிக்கத் தக்க ஒன்று வாசியோகம் என்பதாகும். சித்தர்கள் கண்ட சித்தவித்தைதான் இந்த வாசியோகம். வாசி என்பதைத் திருப்பி நோக்கினால் சிவா என்று ஆகும். இந்த சிவயோகக் கலையே சித்தர்களின் கலையாகும். வாசி என்பது உயிர்மூச்சு. அதாவது மூச்சுக்காற்று. இதனை, சிவவாக்கியர் **“வாசி”**[24] என்று கூறுவதுடன் **“வாயு”**[25] என்றும் **“மாருதம்”**[26] குறிப்பிடுகின்றார். **“வாசி சித்தநாதன்”**[27] என்று இறைவனைச் சித்தர் சிவவாக்கியர் குறிப்பிடுகிறார். சித்தர் நெறி சாவிலிருந்து தப்பும் காயசித்தி மார்க்கத்தை அடிப்படையாகக் கொண்டாதாகும்.

இவ்வாசியை **“ஜீவசக்தியுமாகிய வாயு”**[28] என்கிறார் சுவாமி சிவானந்த பரமஹம்சர். இதனை ஜீவகாந்தசக்தி என்று உரைக்கிறார் **“வேதாத்திரி மகரிஷி.”**[29] வாசியோகம் என்பது மூச்சை அடுக்குவது அன்று. உரிய முறையில் உள்ளில் கூடி மேல்நோக்கி நெறிபடுத்தல் ஆகும். இது மூச்சுக்களை பற்றிய நுட்பமான அறிவாகும். இதற்கான பயிற்சிக்காலம் பின்வருமாறு சுட்டப்படுகிறது.

## பயிற்சிக்காலம்

**“நடக்கினும் வாசிபாரு நாட்டமும் வாசிபாரு**
**முடக்கினும் வாசிபாரு முனைச்சுழி வாசிபாரு”**[30]

என்பதற்கேற்ப, நிற்கும்போது, நடக்கும்போது, இருக்கும்போது எந்த ஒரு வேலையைச் செய்யும் போது இப்பயிற்சியை உள்வழியாகச் செய்துகொண்டே இருக்கலாம். என்றாலும் பிரம்மமுகூர்த்தம் எனப்படும்

அதிகாலை 3 மணிமுதல், 4.30 மணிவரை உள்ள நேரமும், மாலை நேரமும் இதற்குரிய சிறப்பான நேரங்களாகும். இதனை சிவவாக்கியர்,

**“காலமே எழுந்திருந்து”[31]**
**காலை மாலை வசிபாரு முனைச்சுழி வாசிபாரு”[32]**

என்றெல்லாம் குறிக்கிறார். காகபுசுண்டர்,

**“கூறாத மந்திரத்தின் குறியைப் பார்த்து**
**சித்தம் ஒன்றாய் அந்திசந்தி யுச்சிக் காலம்”[33]**

என்று உச்சிக்காலத்தையும் சேர்த்துக் கூறுவது உரிய நேரங்களை உறுதிபடுத்துகின்றது.

## ஆசனம்

வாசியோக பயிற்சியைச் செய்யும்போது, ஏகாந்தமான தனியிடத்தில் சந்தடியற்ற அறையில் அதிகநேரம் இருப்பாக அமரக்கூடிய ஆசனத்தில் உட்காரவேண்டும். வெறும் தரையில் அமரக்கூடாது மின்சாரம் தரையில் இறங்குவதுபோல், வாசியோகப் பயிற்சியின்போது பெறக்கூடிய ஆற்றல் முழுவதும் அப்படியே தரையில் இறங்கிவிடும். அதனால் அமரும் ஆசனத்தில் இருப்பு நிலை சரியாக அமையவேண்டும். இது அமரும் ஆசனம் எனவும், இருப்பு அசனம் எனவும் இருவகைப்படும். அமரும் ஆசனம் என்பது உட்காரும் அளவுள்ள மரப்பலகை. இது அதிஉயரம் இல்லாமல் ஓரங்குல உயரம் இருப்பது நல்லது. அப்பலகையின் மீது விரிப்பை விரித்து அமர வேண்டும். இருப்பு ஆசனம் என்பது உடலின் உருப்புகளை ஒவ்வொரு விதமாகவும், அமைத்துக்கொள்ளும் முறையாகும். அவை, **“திரிகோண ஆசனம், ஹஸ்தபாத ஆசனம், சவாசனம், சர்வாங்க ஆசனம், ஹலாசனம், மத்தியாசனம், புஜங்காசனம், சலபாசனம், தனுராசனம், சக்கராசனம், மகராசனம், மயூராசனம், குக்கடாசனம், வஜ்ராசனம், பச்சிமோத்தாசனம், அர்த்தமத்தியேந்திராசனம், பத்மாசனம், சித்தாசனம், சுகாசனம்”**[34] முதலியனவாகும். இத்தனை ஆசனங்களிலும் வாசியோகப் பயிற்சிக்கு பத்மாசனம் தான் எளிமையானது, சிறப்புடையது, விரைந்து பயன்தர வல்லது என்பதைச் சிவவாக்கியர்,

**“வடிவுபத்ம ஆசனத்து இருந்து”[35]**

என்று அறிவுறுத்துகிறார். பத்மசானம் என்பது இரண்டு தொடைகளில் இரண்டு பாதங்களையும் மாற்றியமைத்து செம்மையாக உட்காருதல், அமரும்போது மான்தோல், புலித்தோல், வெண்துகில், சித்திராசனம், தர்ப்பை ஆகியவற்றை விரிப்பாகப் பயன்படுத்த வேண்டும்.

**“இடை, வயிறு, கண்டம், தலை, சமனாய் கம்பத்தைப்போல் நிமிர்ந்திருக்கவேண்டும். இதில் இல்லறத்தாருக்குப் பத்மசானம் என்றும், துறவறத்தார்க்குச் சித்தாசனம் என்றும் ஹடயோக தீபிகையில் சொல்லப்பட்டிருக்கிறது”**[36]

## பார்வைநிலை

**“வாசியோகப் பயிற்சியின்போது, அதாவது, அப்பியாச சாதனைப் பயிற்சியின்போது, கண்களை மூடக் கூடாது. கண்கள் திறந்த நிலையில், மூக்கின் மேல்நுனியில் நுனி, புருவமத்தி ஆகிய சந்திப்பு நிகழும் இடத்தில் கருவிழிகளைச் செருகிக் கொண்டு சமநோக்காக இருக்க வேண்டும். இதனைப் பட்டத்தைப் போன்று உயிர்பறந்து கொண்டும், கயிற்றைப் போன்று உடம்பு இருந்துகொண்டும், இருக்க இவை ஈசனால் இயக்கம் கொண்டுள்ளது. இதில் அந்த ஈசனை உன் பார்வையினாலேயே பார்த்து மூச்சுக் காற்றைக் கும்பகத்தில் நிறுத்தியபடி முடிச்சுப் போடவேண்டும்.”**[37] என்று சொல்வர்.

**“விழித்திருந்து அகக்கண்ணை நோக்கி எண்ணங்களை அங்கேயே குவித்தால் ஓங்காரம், பஞ்சாட்சரம் என்ற எழுத்துக்கள் எல்லாம் அங்கேயே ஒன்றினைந்து மெய்யான மௌனம் கிட்டும்”**[38].

வாக்கினாலும், மனத்தாலும் இறைவனை எந்நேரமும் நேசமுடன் பூசித்து யோக ஞானத்தை மதித்துக் கடைபிடித்த காரணத்தால் உண்மையான பரம்பொருளின் காட்சி கிட்டும். **“நோக்கொணாத நோக்கை அகக்கண்ணால் நோக்கி தியானியுங்கள்”**[39] **“தியானத்தில் இருந்து விழித்த கண்கள் உன்னைத் துதித்திருந்தது”**[40] என்றும் விளக்குகிறார்.

**“சிவவாக்கியரின் இக்கருத்திற்கு யோகியானவர் யோகதீபம் ஏற்றி, யோகபீடத்தில் ஆசனமிட்டு அமர்ந்து, கங்காமுத்திரை பிடித்த நிலையில் இரண்டு கண்களையும் நன்கு அகலத்திறந்து இரண்டு கருவிழிகளையும் புருவத்தின் மையத்தில் கொண்டு வந்து அவ்விடத்திலிருந்து பின்பு மெதுவாக இருவிழிகளையும் சிரசின் உட்புறம் பார்க்கும்பொருட்டு, மேல்நோக்கித் திருப்பி நெற்றியின் மத்தியில் இரு புருவங்களுக்கு இடையிலிருந்து ஓர் அங்குல உயரத்தில் பார்வையை நிலைத்தபடி அப்படியே அசைவற்று இருக்க வேண்டும்..... என்று யோகவேதம்”**[41] தரும் விளக்கம் வலுவூட்டுகிறது.

## முத்திரை

முத்திரை என்பது ஆசனங்களுடன் இணைந்த செயல்முறையாகும். அதாவது, பயிற்சியின் போது கைவிரல்களைக் குறிப்பிட்ட வடிவத்தில் அமைத்துக்கொள்ள வேண்டும். இதனை முத்திரா என்றும் முத்திரை என்றும் அழைப்பர்.

**“இம்முத்திரைகள், மகாமுத்திரை, ஆகாயமுத்திரை, பிதேகரினிமுத்திரை, கேசரிமுத்திரை, சக்திமுத்திரை, வஜ்ரோலிமுத்திரை, யோகமுத்திரை, சன்முகிமுத்திரை, சாம்பவிமுத்திரை, யோனிமுத்திரை, பைரவிமுத்திரை, நாசிக்முத்திரை என முத்திரைகள் பல வகைப்படும். இதனை சிவவாக்கியர் முடிவு முத்திரைப்படுத்தி.......”**[42] என்று குறிப்பிடுகிறார்.

## மூச்சுக்கணக்கு

வாசியோகத்தில் செய்யப்படும் மூச்சுப் பயிற்சிக்கும் ஒரு கணக்கு உண்டு , இதனை திருமூலர்,

**“காற்றைப் பிடிக்கும் கணக்கு”**[43]

என்கிறார். இக்கருத்தை,

**“மூச்சறிந்து விட்டபின்”**[44]

என்று சிவவாக்கியர் மொழிகின்றார். இக்கணக்குப் பின்வருமாறு.

**“சுவாசத்தை ஒருதடவை இயல்பாக உள்ளே இழுத்து, வெளியே விட்டால், அது ஒரு மூச்சு ஆகும். ஒரு நாழிகைக்கு 360 மூச்சு, 60 நாழிகை கொண்டது ஒருநாள். நாழிகை ஒன்றுக்கு 360 சுவாசங்கள். 60 நாழிகைக்கு 21600 சுவாசங்கள். எனவே ஒரு நாளைக்கு மொத்தம் 21600 மூச்சு நடக்கிறது. மூச்சின் உற்பத்தித்தலமான உச்சந்தலையிலிருந்து, மூக்கு நுனி வரை பனிரண்டு அங்குலம். ஆகவே சாதாரணமாக வெளிவரும் மூச்சின் நீளம் 12 அங்குலம். மீண்டும் சுவாசத்தை உள்ளே இழுக்கும்போது, திரும்பவும் உள்மீளும் மூச்சு 8 அங்குலம். ஒரு மூச்சின்போது ஆகும் இழப்பு 4 அங்குலம். இவ்வாறு ஒவ்வொரு மூச்சுக்கும் 4 அங்குலம் ஜீவசக்தி நட்டமாகிக் குறைந்துகொண்டே வந்தாலும் மனிதன் 120 ஆண்டுகள் வரை உயிர் வாழலாம்”**[45]

**“ஆனால், எல்லோரும் 120 வயதுவரை வாழ்வதில்லை. ஏனென்றால், சாதரணநோக்கில் 12 அங்குலமாகப் போகும் மூச்சின் நீளம் சாப்பிடும்போது, 18 அங்குலமாகப் போகிறது. அதுவே நடக்கும்போது 24 அங்குலமும் ஓடும்போது 42 அங்குலமும் யோகத்தின்போது 50 அங்குலமும் தூங்கும்போது 60 அங்குலமும் போகிறது”**[46]

இப்படி எத்தனையாவது வயது நடந்துகொண்டிருக்கும்போது உயிர்மூச்சின் சத்து முழுவதுமாக இழந்துபோய்விடுகிறதோ, அப்போது மரணம் நேர்கிறது. சத்து முழுவதும் தீர்ந்து போன இதைத்தான் வழக்குச்சொல்லில் செத்துப்போச்சு என்பர். மூச்சு இழப்பினால் செத்துப்போவதையே இழவு என்பர். இதனை, சிவவாக்கியர்,

**"இழையறுந்து போவதும்"[47]**

என்று நயமாகக் குறிப்பிடுகிறார்.

மூச்சு விடுதலில் ஏற்படும் நட்டங்களைத் தவிர்க்கவேண்டும் எனவும், அதற்குரிய வழியினையும் சிவவாக்கியர் மூன்று பாடல்களில் குறிப்பிடுகின்றார். இரண்டு பாடல்களில் மறைமுகமாகவும், ஒரு பாடலில் வெளிப்பட உவமம் கூறியும் குறிப்பிடுகின்றார், அவை,

1. தாரை ஊதுதல்
2. நாலுகட்டு அறுத்தல்
3. துருத்தியும் கொல்லனும்

என்பவையாகும்.

## தாரை ஊதுதல்

தாரை என்பது அண்ணாக்கின் உள்ளில் கூடி மேல்நோக்கி, அமைந்துள்ள சன்னமான குழல் போன்ற அமைப்பு ஆகும். சிவவாக்கியர் மூக்கின் இரண்டு துவாரங்களை,

**"சங்கிரண்டு"[48]**

என்று குறிப்பிட்டு, மூக்குத் துவாரங்களாகிய சங்கிரண்டின் மூலம் சுவாசிப்பதைத் தவிர்த்துவிட்டு, உள் தாரையின் வழியாக, மூச்சை முறைப்படி, அண்ணாக்கின் வழியாக மேல்நோக்கி ஊதி செயற்படுங்கள் என்கிறார். இது வசியோகத்தின் முக்கியமான செயற்பாடாகும்.

## நாலுகட்டு அறுத்தல்

**"மூலமாம் குளத்திலே முளைத்தெழுந்த கோரையை**
**காலமே எழுந்திருந்து நாளுகட் டறுப்பிரேல்**
**பாலனாகி வாழலாம் பரபிரம்மம் ஆகலாம்**
**ஆலமுண்ட கண்டர்பாதம் அமமைபாதம் உண்மையே"[49]**

இது சிவவாக்கியர் வாக்கு. இங்கு கோரை என்பது நேர்காற்று. மூலமாம் குளம் என்பது சிரசின் உச்சி. கோரை என்பது தலை உச்சி அளவு முட்டிப் பாயக்கூடிய உள் காற்றாகிய வாசி. இவ்வாசியை உள்ளே கூடி, மேலும் கீழும் ஊத ஊத, வெளியிலே காற்றுக் குறையும். ஒவ்வொரு மூச்சுக்கும் மூச்சின் அளவு மேற்கண்ட முறையில் இழப்பு ஆகும். நான்கு அங்குல வாசியை இழக்கவிடாமல் சேமித்தலே அக்கோரையை நாலுகட்டு

அறுத்தல் எனப்படும். இதனால் என்றும் இளமைப்பருவத்தோடு இருக்கலாம். பரபிரம்மநிலை எய்தலாம் என்று சித்தர் சிவவாக்கியர் அறுதியிட்டுக் கூறுகிறார்.

## துருத்தியும் கொல்லனும்

**“துருத்தி என்பது மேற்கூறிய தாரையாகிய சுழிமுனை நாடியாகும். கொல்லன் என்ற சொல் உயிரைக் குறிப்பதாகும். துருத்தியை ஊத ஊத, துருப்பிடித்த இரும்பும் தங்கமாக ஒளிவிடும். இதுபோல் வாசி கொண்டு உள்ளில் கூடி ஊத, ஊத ஒளிமயமான (தேஜோரூபமாகிய) இறைவனும் யோகியும் தவிர, வேறொருவர் அவ்விடத்தில் காணப்படமாட்டார்கள்”[50]**

இச்சோதி நிலை அடையத்தான் ஊதச் சொல்லுகிறார் சிவவாக்கியர். இப்படி உள்ளே ஊதும் முறையே ஒருவன் உண்மையாக அறிந்து கொள்வானேயானால் அவன் ஒரு சித்தனாவது திண்ணம் என்று உரைக்கிறார் அகத்தியர். இதனை அவர்,

**“ஊதியதோர் ஊதறிந்தால் அவனே சித்தன்”[51]**

என்று அறுதியிட்டுக் கூறுகிறார்.

## ஆறு ஆதாரங்கள்

நரம்புமண்டலமானது, நம் உடலிலுள்ள வேறு மண்டலங்களையும் இணைத்துச் செயல்படுகிறது. மேலும், சிறப்புத் தொழிலாகிய அறிவாற்றலுக்கு நரம்புமண்டலமே முக்கியக் காரணமாகும். இம்மண்டலத்தில் முதுகுவடம், முதுகுத் தண்டு, எலும்புக்குழாயினுள் பாதுகாக்கப்படுகிறது. இதன் அடிப்பகுதிக்கு மூலாதாரம் என்று பெயர். உடம்பு முழுவதும் நெருக்கமாகப் பரவியுள்ள கோடிக்கணக்கான நரம்புகள் முதுகுவடத்தின் ஆறு இடங்களில் கூடிபிரிகின்றன. இவ்விடங்கள் ஆதாரங்கள் என்றும் கமலங்கள் என்றும் சக்கரங்கள் என்றும் அழைக்கப்படுகின்றன.

மூலாதாரத்திற்கு மேலே இடுப்புக்குழியில் உள்ளது சுவாதிட்டான சக்கரம். இதிலிருந்து பிரியும் நரம்புகள் உயிர்க்குறியுடன் தொடர்புடையனவாகத் திகழ்கிறது.

மணிபூரகசக்கரம் தொப்புளுக்கு நேர் பின்னால் முதுகுத் தண்டில் உள்ளது. இதிலிருந்து புறப்படும் நரம்புகள் வயிற்றை இயக்கி உணவு செரிக்கவும் தன்வயப்படுத்தவும் உதவுகின்றன.

இதற்கு மேலே உள்ளது அனாகத சக்கரம். இது இருதயத் துடிப்பைக் கட்டுப்படுத்திக் குருதி ஓட்டத்தைச் செம்மைப்படுத்துகிறது.

விசுத்தி சக்கரம் கழுத்தில் இருக்கிறது. இங்கிருந்து பிரியும் நரம்புகள் நுரையீரல்களை இயங்கவைத்து காற்றோட்டத்தைச் சீராக்குகின்றன, அத்துடன் இது மூலையிலிருந்து உடலுறுப்புக்குச் செல்லும் நாடி நரம்பின் வேலைகளையும் நெறிப்படுத்துகின்றது.

புருவமத்தியில் உள்ளது ஆக்ஞை சக்கரம். இது சிரசிலுள்ள நாடி நரம்புகளைக் கண்காணிப்பதுடன் கண், நாக்கு, மூக்கு, செவி முதலியவற்றிலிருந்து வரும் செய்திகளை இணைந்து அவற்றிற்குரிய செயல் ஆணைகளையும் பிறப்பிக்க உதவுகின்றது. எனவேதான். இது ஆக்ஞை (ஆணை இடும்) சக்கரம் எனப்படுகிறது. இந்த ஆறு ஆதாரங்களையும் சிவவாக்கியர் பின்வருமாறு கூறுகிறார்.

**"முளரி ஆறு"**[52]

**"ஆறு பங்கயம்"**[53]

**"ஆறு மாநிலம்"**[54]

## மூன்று மண்டலம்

ஆறு ஆதாரங்களையும் சிவவாக்கியர் மூன்று மண்டலங்களைத் தொகுத்துக் கூறுகின்றார். மூலாதாரமும், சுவாதிட்டானமும் அக்கினி மண்டலம். அதற்கு மேல் உள்ள மணிபூரகமும், ஆனாகதமும் சூரியமண்டலம் ஆகும்.

அதற்கு மேல் உள்ள விசுத்தியும், ஆக்ஞையும் சந்திரமண்டலம் ஆகும். இந்த மூன்று மண்டலங்களும் முள்ளந்தண்டில் உள்ள சுழுமுனை நாடியில் சேர்ந்துள்ளன. இதனை சிவவாக்கியர்,

**"மூன்று மண்டலத்தினு முட்டிநின்ற தூணிலும்....."**[55]

**"வானிருந்த மதியமூன்று மண்டலம் புகுந்த பின்"**[56]

**"தோன்றுமண்டலத்திலே"**[57]

என்றெல்லாம் சுட்டிக்காட்டுகின்றார்.

## குண்டலினி ஆற்றல்

**"நமது உடலில் உணர்ச்சியும் சக்தியும் செயல்திறனும் நிறைந்து கிடக்கின்றன. எல்லாவிதமான உணர்ச்சிகளுக்கும் அடிப்படை இருப்பிடமாக அமைந்திருப்பது மூலாதாரமாகும். மூலாதாரம் தான் உணர்ச்சிகள் யாவையையும் சேகரித்து வைத்திருக்கும் களஞ்சியமாகும். இங்ஙனம் எல்லா உணர்ச்சிகளும் சக்தியும் அங்கு திரட்டி அடக்கிச் சுருண்டு குண்டலம் போல்**

**வைக்கப்பட்டிருப்பதால் தான் அதற்குக் குண்டலினி சக்தி என்று பெயர். குண்டலினி என்பது விந்துவை குறிப்பதாகும்.”[58]**

**“இது உலக உற்பத்தியின் பொருட்டு தக்க வயதில் ஆண் உறுப்பில் சேகரிக்கப்படுகிறது. சுமார் என்பது துளி குருதிகள் சேர்ந்து ஒரு விந்தணுவாக உருவாகிறது”.[59]**

**“உணவு உண்ட மறுநாள் திப்பி நீங்கி அன்னரசமாகும். மூன்றாவது நாள் உதிரமாகும். நான்காவது நாள் மாமிசமாகும். ஐந்தாவது நாள் மற்றும் ஆறாவது நாள் மேதை ஆகும். ஏழாவது மற்றும் எட்டாவது நாள் மஜ்ஜை ஆகும். மஜ்ஜை நிலையைத் தொடர்ந்து இந்திரியமாகிறது”[60]**

இந்திரியமாகிய இந்த விந்து, தூய இரத்தத்தினின்றும் வடிகட்டப்படும் ஓர் அபூர்வப்பொருளாகும். இவ்விந்துவிற்கு, விந்தணு, சுக்கிலம், இந்திரியம், ஜீவசக்தி, உயிர்த்துளி, உயிராற்றல், உடற்சாறு என்றெல்லாம் பல பெயர்கள் உண்டு.

**“விந்து, உயிர் உற்பத்திக்கு வித்தாக உள்ளதால், விந்துவைச் சித்தர் சிவவாக்கியர், வித்து”[61]** என்றே குறிப்பிடுகிறார். உற்பத்தி நடைபெறவேண்டுமானால், வித்து கீழ்நோக்க வேண்டும். முத்தி கூடவேண்டும் என்றால், வித்து மேல்நோக்க வேண்டும். வித்து இல்லாமல் மேல்நிலையும் இல்லை. கீழ்நிலையும் இல்லை. தச்சனைக் கொண்டு தான் குடியிருக்க அழகிய மாளிகை அமைக்கப்படுகிறது. ஆனால், அற்புதமான உடலாகிய இம்மாளிகையை அமைத்த தச்சன் எதுவெனில் அது விந்து ஆகும். **“சிற்றின்பத்தின் பால் செல்கிறவர்கள், சித்தியும் முத்தியும் அடைவதற்கு அடிப்படையாக இருக்கிற இந்த ஜீவசக்தி தீரத் தீர, உடம்பு தளர்ந்து நலிந்து ஜீவனில்லாமல் போய்விடுவார்கள்”[62]** என்று சிவவாக்கியர் எச்சரிக்கையும் விடுக்கிறார்.

**“பிராணாயாமப் பயிற்சியின் மூலம் குண்டலினியை எழுப்பும் வாசியோகம் பற்றிக் கூறுவதால், சித்தர்கள் தந்திரயோக நெறியைச் சார்ந்தவர்கள் என்று கூறுவோரும் உளர்”[63]**

## குண்டலினி ஆற்றலை எழுப்பும் முறை

நமது உடம்பில் அக்கினி இருப்பதால் தான் எப்போதும் சீரான வெப்பம் இருந்துகொண்டிருக்கிறது. தொடர்ந்து உட்கார்ந்து இருக்கிற இடம் சூடாக இருப்பதில் இருந்தும் தூங்கி எழுந்தபின் தரையில் வெப்பம் தெரிவதிலிருந்தும் உள்ளங்கைகள் இரண்டையும் ஒன்றோடொன்று விரைவாகத் தேய்த்தால் சூடாவதிலிருந்தும் உடம்பில் அக்கினி இருப்பது உறுதியாகிறது. சிவவாக்கியர் இதனை, மூலவனல், மூலவங்கி, தணல் என்றெல்லாம் குறிப்பிடுகிறார்.

1. மூலாக்கினி

2. யோகாக்கினி

3. கோபாக்கினி

4. தீபாக்கினி (பசி)

5. தாபாக்கினி (காமம்)

இவ்வாறாக, அக்கினியானது ஐந்து வகைப்படும். இவற்றுள் கோபாக்கினி, தீபாக்கினி, தாபாக்கினி ஆகிய மூன்றின்போதும் குண்டலினி சக்தி கீழ்நோக்கிப் பாய்ந்து விடயபோக சிற்றின்ப விவாகாரங்களில் சிதறி விரயமாகிறது. ஆனால் மூலாக்கினி, யோகாக்கினி இரண்டிலும் குண்டலினி சக்தி ஊர்த்துவ முகமாக மேல்நோக்கிப் பாய்ந்து பேரின்ப நிலையில் சேர்க்க உதவுகிறது.

சிவவாக்கியர், அக்கினி மண்டலமான மூலாதாரத்திலிருந்து மூல அனலை எழுப்புவதற்கும் நுட்பமான வழியினையையும் கூறுகிறார்.

**"மூல வனலையே**
**மாருதத்தி னாலெழுப்பியே"**[64]

என்று கூறுகின்றார். உள்ளில் கூடியே வாசியைத் தொடர்ந்து நடத்தும்போது மூல அனலாகிய அக்கினி மேலும் வெப்பமடைகிறது. அக்கினியின் வெப்பத்தால் செவ்வையாகத் தகிக்கப்படுகின்றதால், தூங்குகின்ற குண்டலினி சக்தி நன்றாய் விழிப்புடையதாகிறது. தண்டத்தால் அடிபட்ட அரவத்தைப்போல, நிச்சுவாசத்தை செய்து நிமிர்ச்சி அடைகிறது. அதன்பின் பிலத்தில் பிரவேசித்த பாம்பைப்போல், சுழிமுனையிலுள் பிரவேசிக்கிறது.

**"இங்கு நான்ற பாம்பின் வாயிலும்"**[65] என்று குண்டலினிப் பாம்பினைக் குறிப்பிடுகிறார். சித்தர் சிவவாக்கியர் அவர்கள்.

## மூலவினாத்தண்டு

முதுகுத்தண்டின் நடுவில் ஓடும் சூக்கமநாடிக்கு, சுழுமுனை நாடி என்றும், மேருதண்டம் என்றும் பெயர். இதனைத் தண்டுவடம் என்று உடலியாளர்கள் குறிப்பிடுகின்றனர். இது மூலாதார முதல் புருவமத்தி வரை முதுகுத்தண்டின் உள்ளில் கூடி அமைந்துள்ளது. ஆறு ஆதார கமலங்களும் இம்மூல வினாத்தண்டினையே அமைவிடமாகக் கொண்டுள்ளன, இதனை சிவவாக்கியர்,

**“முடிவு முத்திரைப்படுத்தி மூலவினாத் தண்டினால்”**[66]

என்றும்,

**“விட்டலர்ந்த மந்திரம் வினாவதண்டி னூடுபோய்”** [67]

என்றும் குறிப்பிடுகிறார்.

## சுழிமுனை

சூக்கமநாடியின் மேல்நுனியே சுழிமுனை ஆகும். மூக்கின்மேல் நுனியும், புருவங்கள் இரண்டும் சந்திக்கும் இடத்திற்கு முச்சந்திவீடு என்று பெயர். இதுவே ஆறாவது ஆதாரமாகிய ஆக்ஞை ஆகும். ஐந்தாதரங்களுக்கு மேலே இது இருப்பதால் இதனைப் பஞ்சணை மேலிருக்கை என்றும் உருவகப்படுத்துவர். சைவர்களும் மங்கள மகளிரும் புருவத்தின் நடுவே குங்குமப்பொட்டும், வைணவர்கள் திருமண்ணால் இட்டுக்கொள்ளும் திருநாமமும் சுழிமுனையின் அமைவிடத்தையும் அச்சுழிமுனை அக்கினித்தன்மை வாய்ந்தது என்பதையும் உணர்த்துவனவாகும். இதனை,

**“சுடரெழுப்பும் சூச்சமும் சுழிமுனையின் பீட்சமும்”** [68]

**“சூட்சுமான கொம்பிலே சுழிமுனை சுடரிலே”**[69]

என்றெல்லாம் சிவவாக்கியர் கூறுகிறார்.

**“நெருப்பறை திறந்த பின்னே நீயு நானு மீசனே”**[70]

**“காலமே யெழுந்திருந்து கண்கள் மூன்றி லொன்றினால்”**[71]

எனும் பாடல் வரிகளால் தெளிவாக சிவவாக்கியர் அவர்கள் சுட்டுகிறார். சுழிமுனைக்கு, நெருப்பறை என்றும் நெற்றிக்கண் என்று வேறு பெயர்களும் உண்டு என்பதனை இட்டுக்காட்டுகிறார்.

1.ஆக்ஞை

2.லலாடம்

3.சிற்றம்பலம்

4.துரியமலை

5.திரிவேணி சங்கமம்

6.கண் புருவநடு

7.சூன்யபதவி

8.பிரம்ம ஆன்மா

9.பெருவழி

10.மயானம்

11.சாம்பவி மத்திய பாகம்

12.சிற்சபை

13.முக்கோணம்

14.குருபீடம்

15.அக்கினி குண்டம்

16.அக்கினி நேத்திரம்

17.ஞானக்கண்

18.நெற்றிக்கண்

19.ஞானநாடி

20.மூலநாடி

21.அடைத்திட்ட வாசல்

22.ஈசன் இருக்கும் வாசல்

23.ஊசிமுனை வாசல்

24.எல்லை வாசல்

25.ஒரு வாசல்

26.ஞான வாசல்

27.திருவாசல்

28.தில்லை வாசல்

29.நல்ல வாசல்

30.நான்ற வாசல்

31.பத்தாவது வாசல்

32.மகாமேரு

ஆகிய பிற பெயர்களால் சுழிமுனையை ஞானநூல்கள் குறிக்கின்றன.

மனிதனின் உடம்பில் மொத்தம் ஒன்பது வாயில்கள் உள்ளன. அவை,

| | | |
|---|---|---|
| 1. | கண்கள் | இரண்டு |
| 2. | காதுகள் | இரண்டு |
| 3. | மூக்கின் துளைகள் | இரண்டு |
| 4. | வாய் | ஒன்று |
| 5. | கருவாய் | ஒன்று |
| 6. | எருவாய் | ஒன்று |

என மொத்தம் ஒன்பது துளை வாயில்கள் உள்ளன. அவை விம்பும்படி, பத்தாவது வாயிலான உள் நெற்றி வாயிலை வாசியோகமாகிய உள்முக ஊதற் பயிற்சியின் மூலம் திறந்து ஞானவாசலின் ஊடே சென்று எல்லை கண்டுவிட்டால், **“இனிப்பிறப்பில்லை”**[72] என்பது சித்தர்கள் நல்கும் உறுதி முடிவாகும்.

அதனால் தான், சுழிமுனையை, **“நல்லவாசல்”**[73] **“ஞானவாசல்”**[74] **“எல்லை வாசல்”**[75] என்றெல்லாம் சிவவாக்கியர் குறிப்பிடுகிறார்.

## தீர்த்தமாடல்

இடகலை, பிங்கலை, சுழிமுனை ஆகிய மூன்று சுவாசநாடிகள் சமகதியில் சேருமிடமே, திரிவேணி சங்கமம் எனப்படும் புருவமத்தியாகும். இத்திரிவேணி சங்கமமே புனித தீர்த்தம் எனப்படும். இந்நதியில், வாசி பிரவேசிப்பதுதான் தீர்த்தமாடுதல் ஆகும்.

தம்முள்ளே இருக்கின்ற இப்புனித நீரில் நீராடத்தெரியாமல், வெளியில், கங்கை, காவேரி, கடற்கரை நீர்நிலைகள் என்று தேடி அலைந்து திரிகின்றனர். அகத்துள்ளே இவ்வாறு தீர்த்தமாடாமல் புறத்தே நீர்நிலைகளைத் தேடித் தீர்த்தயாத்திரை மேற்கொள்கிற மக்களைப் பார்த்து,

**“தீர்த்த மாடவேணுமென்று தேடுகின்ற தீனர்கள்**

**தீர்த்த மாடலெவ்விடந் தெளிந்துநீ ரியம்புவீர்**

**தீர்த்தமாக வும்முளே தெளிந்துநீ ரீருந்தபின்”**[76]

என்று அறிவிலிகளை பார்த்து உண்மையை உணருமாறு உரைக்கிறார்.

## சோதி

இறைவனை ஒளிமயமானவன் என்று அனைத்துச் சமயத்தாரும் போற்றுகின்றனர். அருளாளர்கள் பார்வையிலும் ஒளிவடிவாகவே இறைவன் திகழ்கின்றான். சோதியே சுடரே என்றெல்லாம் அன்பர்கள் பரம்பொருளைத் தொழுது ஏத்துகின்றனர். சிவவாக்கியரும், இறைவனை, ஒளிவடிவிலேயே போற்றுகிறார்.

சுழிமுனை நாட்டத்தில் இலயமாகி, குண்டலினி சக்தியோடு கூடிய உணர்வால் கண்ணுங் கருத்துமாகக் கவனித்தால் சுவாசம் தானே அடங்கி, மனோலயம் உண்டாகும். அப்போது அங்கே உள்ளே விளக்கொளி தோன்றிவிளங்கும்.

காந்தவிளக்கில் (பெட்ரோமாக்ஸ்) காற்று அடித்து ஏற்றப்படுகிறது. அவ்வாறு காற்றடிக்கும் விசை இயக்கப்படும்போது, காற்றின் அழுத்தத்தினால், அவ்விளக்கின் அடிப்பாகத்தில் உள்ள மண்ணெண்ணெய் நுண்ணிய குழல் வழியாக மேலே ஏற்றப்படுகிறது. அது மேலே ஏறி, பற்றவைக்கப்பட்ட மாண்டிளில் ஒளியை உண்டாக்குகிறது. அதுபோல, உடம்பில் உள்ள குண்டலினி சக்தி நுண்ணிய குழலாகிய சூக்கும நாடி வழியாக மேலே ஏறி சுழிமுனையில் சோதியை உண்டாக்குகிறது. இறைவனாகிய, சோதி புண்டரீகம் என்னும் சுழுமுனையின் மத்தியில் உதித்து எழுவதை, சிவவாக்கியர்,

**“புண்டரீக மத்தியில் உதித்தெழுந்த சோதியை”**[77]
**“மூலநாடி தன்னிலே முளைந்தெழுந்த சோதியை”**[78]

என்றெல்லாம் மிகவும் நுட்பமாகக் கூறிச் செல்கிறார்.

இதனை **“பயில்பவன் புருவநடுவான ஆக்ஞைச் சக்கரத்தில் ஒளியைக் காண்கிறான்”**[79]

**“மனித உடம்பிலே பின்மூளையில் உள்ள பயனியல் கிளான்ட் என்னும் சுரப்பியின் ஆற்றலும், முன் மூளையில் உள்ள பிட்டியூட்ரிகிளான்ட் என்னும் சுரப்பியின் ஆற்றலும் பொருந்தும்போது நீல ஒளி தோன்றுகிறது”**[80] என்கிறார் மீ.ப.சோமு.

இன்றைய அறிவியல் அறிஞர்களும் இலக்கிய ஆய்வாளர்களும் கூறுகிற இந்த உண்மையை,

**“நெத்திபத்தி லுளழுகின்ற நீலமா விளக்கினை”**[81]

**“நெற்றியிற் றியங்குகின்ற நீலமாம் விளக்கினை”**[82]

என்று அன்றே வெளியிட்டுள்ளதை அறியமுடிகிறது. மேலும், இறைவனாகிய சோதியைக் காண வழியும் கூறுகின்றார்.

**“குரு உபதேசித்த சிவயநம என்ற திருவைந்தெழுத்தையும் இறப்பதற்கு முன் அறிந்துகொண்டு வணங்கித் தியானம் செய்வதுவே இப்பிறவிப் பிணிதீர்க்கும் மருந்தாகும் என்பது சிவவாக்கியரின் உள உறுதிப்பாடாகும்”[83]**

மேலும், வாசிப்பயிற்சியைப் பெற்றிருந்தும் குரு சொன்னபடி இயங்காமல் மாறுபடும் பேதைகளை இடித்துரைகின்றார்.

**“யோகிகள் பரிவுநரம்பு மண்டலத்தைத் தமது மனக்கட்டுபாட்டில் கொண்டு வந்து பீனியல் உறுப்பைத் தூண்டி ஒரு உள்ளொளியைக் காண்பர் என்று உறுதி செய்யப்படுகின்றது”[84]**

இத்திருவிளக்கு மேனியில் இறைவன் செஞ்சுடராய்க் காட்சி தருவதை,

**“முட்பொதிந்த தென்னிலே முருகிநின்ற செஞ்சுடர்”[85]**

**“முந்தவோ ரெழுத்துளே முளைத்தெழுந்த செஞ்சுடர்”[86]**

**“முத்தியான வித்துளே முளைத்தெழுந்த செஞ்சுடர்”[87]**

என்று சிவவாக்கியர் உரைப்பதிலிருந்தே விளங்குகின்றது.

**உச்சி**

**“உச்சி வாயி லுச்சி நீலா”[88]**

என்ற பாடலின் மூலம் சிவவாக்கியர் உச்சியைக் குறிப்பிடுகின்றார். **“பிறந்த குழந்தைக்குத் தலையின் உச்சிப்பகுதியில் வட்டமான சிறு பள்ளம் இருக்கும். அப்பளத்திற்கு உச்சுகுழி, உச்சிப்பள்ளம் என்று பெயர் கூறுவர். குழந்தையின் உச்சிப் பள்ளத்தில் நாடி துடிப்பது”[89]** நன்றாகத் தெரியும். இக்கருத்தை அகிலத்திரட்டு அம்மானை என்னும் நூல்,

அல்லும் பகலும் அமுதுடன் தூங்கினால் தவம் முதிர்ச்சியடைந்து உச்சிக்குழி திறந்துகொள்ளும், குழந்தைப்பருவத்தில் இருந்து பள்ளம் மீண்டும் ஏற்படுவது வியப்புத்தானே.

அப்பள்ளத்தினைத் தொட்டுப் பார்த்தால், கனிந்த மாம்பழத்தைத் தொடுவதைப்போல் நெளுக்கென்று இருக்கும். நாளாக, ஆக, அந்த உச்சிக்குழி உள்ளே பள்ளமாக இருக்கவே மேலே மண்டை ஓடு கெட்டியாகிப் பொருந்தி மூடிக் கொள்ளும். இந்த மண்டை ஓட்டிற்கும் மூளைக்கும் இடையில் குழியாய் இருந்த பள்ளம் இடைவெளியாகவே இருக்கும். முட்டையின் அகன்ற பகுதியின் ஓட்டினில் தட்டி உடைக்கும்போது, அந்த ஓட்டிற்கும், உள்ளேயிருக்கும் திரவப்பகுதிக்கும்

மத்தியில் காணப்படும் காற்றறை போன்றது இது, சிரசின் உள்ளே இந்த இடைவெளிக்கு

1. சகஸ்ரநாமம்
2. உச்சி வெளி
3. உச்சிக் கண்
4. பிரமாந்திர முடிவு
5. பேரம்பலம்
6. பேரின்பவீடு
7. வெட்டவெளி
8. இரவு பகல் அற்ற இடம்
9. பரதேசம்
10. சிதாகாசம்

முதலிய பலபெயர்கள் உண்டு . இப்பிரதேசத்தில் பிரவேசித்துச் சஞ்சரிப்பவர்களே, பரதேசிகள் ஆவர். மூளையின் இம்மேல்தளமான ஆயிரந்தளங்கள் – வட்ட வீடு – ஆயிர இதழ் தாமரை – ஜீவமலர் என்றல்லாம் அழைக்கப்படுகின்ற இதனை,

- **“அப்புறத்தில் வெளி கடந்த வாரியங்கள் சோதியை”[90]**
- **“மின்னியே வெளிக்கு நின்ற வேறிடத் தாமர்ந்ததும்”[91]**
- **“உச்சி கண்டு கண்கள் கட்டி உண்மை கண்டதெவ்விடம்”[92]**
- **“வீடு கண்டு கொண்டபின்பு வெட்டவெளி காணும்”[93]**
- **“சென்னியான தளத்திலே சீவனின்றி லங்கிடும்”[94]**
- **“அந்திசந்தி யற்றிட மறிந்துணர்ந்து பாருமே”[95]**
- **“வட்டவீ டறிந்த பேர்கள் வானதேவ ராவரே”[96]**
- **“தச்சி வாயு லுச்சிமே லாயிருந்த வங்கலாய்”[97]**

என்றெல்லாம் சிவவாக்கியர் தெளிவாகக் காட்டுகிறார். இதனையே பட்டினாத்தார்,

**“உச்சி வெளியை உறுதியுடன் பாராமல்**

**அச்சமுடன் நான் அறிவிழந்தேன் பூரணமே”[98]**

என்கிறார், குதம்பைச் சித்தரோ,

**“உச்சிமேற் சென்றங்கு யர்வெளியைக் கண்டார்க்கு**

**இச்சிப் பிங்கேதுக்கடி – குதம்பாய்**

**இச்சிப்பிங்கேதுக்கடி”[99]**

என்றும்,

**“வெட்டவெளியை மெய்யென் றிருப்பார்க்குப்**

**பட்டய மேதுக்கடி – குதம்பாய்**

**பட்டய மேதுக்கடி”[100]**

என்றும் உணர்த்துகிறார்.

## அக ஒலிகள்

பொதுவான காலங்களில் ஏகாக்கிரசித்தம் ஏற்படும்போது சில்வண்டின் ரீங்காரம் ஒழித்து நம்மை மூடிக் கொள்ளும், அப்போது ஓர் ஆனந்தப்பரவசம் ஏற்படும். மேலும் ஞானநிட்டையில் ஆழ்ந்து உடல் உலக நினைவுகள் அற்றுவிடும்போது, உடம்பில் சுவாசம் இயங்கும் நாதம் இரத்த ஓட்டநாதம், குடல்புரளும் நாதம், மூளை சலனநாதம் ஆகிய சத்தஜாலங்கள் இனிய நாதங்களாக எழுந்து ஒலிக்கும்போது, இன்பநாதமாக கந்தர்வ கானமாக – பரநாதத்தொலி ஆனந்த மயக்கம் தரும். இவ்வனுபவத்தை,

**“கதிரான காயத்தில் கலந்தெழுந்த நாதமே”[101]**

என்றும்,

**“பேசிடாதிருப்பிரேல் நாதம்வந் தொலிக்குமே”[102]**

என்றெல்லாம் சித்தர் சிவவாக்கியர் அவர்கள் குறிப்பிடுகின்றார்.

அத்துடன் யோகிகளுடைய உயர்ந்த ஐந்துவாசல்களிலும் சிங்கநாத ஓசை முழங்கும் என்பதை,

**“பங்குகொண்ட யோகிகள் பரமவாசல் அஞ்சிலும்**

**சிங்கநாதம் ஓசையும்”[103]**

**“பங்குகொண்ட சோதியும் பரந்தவஞ்செழுத்துமே**

**சிங்கநாத ஓசையும்”[104]**

என்று சிவவாக்கியர் குறிப்பிடுகிறார்.

படுத்திருந்தாலும், அமர்ந்திருந்தாலும், நடந்துகொண்டிருந்தாலும் இடைவிடாமல் இந்நாதசங்ககமாவது உள்ளில் ஒலித்துக்கொண்டே இருப்பதை,

**"கிடக்கினு மிருக்கினும் கிலேவசந் திருக்கினும்**

**நடக்கினும் மிடைவிடாத நாதசங் கொலிக்குமே"**[105]

**"முரண்டெழுந்த சங்கினோசை மூலநாடி யூடுபோய்"**[106]

என்றெல்லாம் சிவவாக்கியர் வெளிப்படுத்துகிறார்.இந்த அனுபவங்கள் அனைத்தும் உண்மை என்பதற்கு,

வாயு பிரம்மரந்திரத்திற் செல்லும் காலத்து, அமுத்திரம், அக்கரம், மேகம், பேரிகை, தாரை, தப்பட்டை, என்பவற்றால் உண்டாகும் சப்தத்தைப் போன்ற நாதமும் பிராணன் பிரம்மரந்திரத்தின் மிகவும் ஸ்திரப்பட்டபின் மத்தளம், சங்கு கண்டாமணி, சாசனம் என்பவற்றால் உண்டாகும் சப்தத்தைபோன்ற நாதமும், கிண்கிணி, வேணு, வீணை, தந்திரிவண்டு என்பவனவற்றின் சப்தங்களைப் போன்ற நாதங்களும் இன்னும் நானாவித நாதங்கள் தேகத்தின் மத்தியில் உள்ளவனாகக் கேட்கப்படும் என்று கூறும் சிவயோக சாரம் சான்றாக விளங்குகிறது.

**"வணிகடல் யானை வளர்குழல்மேல்**
**மணிவண்டு தும்பி வளைபேரிகை யாழ்**
**தனிந்தெழ நாதங்க டாமவை பத்தும்"**[107]

என்று நிஜானந்தபோதமும்,

**"செயகண்டி சங்கினோசை காதில் கேழ்க்கும்**
**தியானிப்பார் சிலம்பொலிஇ னோசை கேட்கும்"**[108]

என்று யோகமுனிவர் சுத்த காண்டமும் இவ்வனுபவத்தை உறுதி செய்கின்றன.

**மேற்சுட்டப்பட்ட அகவோலிகள்**

1. கோஷம்
2. காம்யம்
3. கொம்பு
4. கண்டாமணி
5. வீணை
6. புல்லாங்குழல்
7. துந்துபி

8. சங்கநாதம்

9. மேக கர்ஜனை

போன்ற ஒன்பது விதங்களாகும் என்று அறியமுடிகிறது.

## சித்திகள்

உரிய பயிற்சியின் மூலம் சிதறும் சக்திகளைச் சேமிக்கும் மனிதன் நுட்பமான புலன் உணர்வுகளையும் மனித இயல்புக்கு மீறிய திறமைகளையும் அடைகிறான். இந்தச்சித்தத்தின் சேமிப்பு ஆற்றலே சித்தி எனப்படும். இதனை, சிவவாக்கியர்,

**“முத்திசித்தி தொந்தமாய் முயங்குகின்ற மூர்த்தியை”**[109]

என்று குறிப்பிடுகிறார்.

பிராணன் எங்குமுள்ள சக்தி. உடலின் பல இயக்கங்களுக்கும் இது அடிப்படையானது. மனத்தின் மாறுபாடுகளைப் போலல்லாமல் புத்தி உறுதியாய் இருப்பதற்கும் கூட, வாசியாம் பிராண சக்தியே காரணம் ஆகும், இதுபோல, வெளியே பிரபஞ்சத்தில் காணும் இயக்கங்களுக்கும் அதுவே அடிப்படை, இதனால், தன் உடலில் இருக்கும் பிராணனை அடக்க முடிந்தவன். வெளியியங்கும் பிரபஞ்ச இயக்கங்களையும் அடக்க முடிந்தவன் ஆகிறான். எனவே, பிண்டப்படைப்பான தன் உடலை, ஆட்டிப்படைப்பது போலவே, அண்டப்படைப்பான, பிரபஞ்ச முழுமையையும் கூட ஆட்டிப்படைத்து அற்புதங்களைப் புரிகிறார்.

வாசியோகத்தின் மூலம் இடகலை, பிங்கலை, நாடிகளில் இயங்கும் வாயுவாகிய பிராணனை அபானனுடன் சேர்த்து, மகாவாயுவாக்கி சூக்குமநாடியில் செலுத்தி ஒவ்வொரு ஆதராமாக மேலேற்றிக் கொண்டு வந்தால் ஒடுக்கநிலைக்கு உயரலாம்.

## ஒடுக்கம்

தீவிரமான இந்த அகமுகப்பயிற்சியின் மூலம் வெளிவிடும் 12 அங்குல சுவாசத்தை, ஒரு அங்குலம் குறைத்து, 11 அங்குலமாகவும், 2 அங்குலம் குறைத்து, 10 அங்குலமாகவும், 3 அங்குலம் குறைத்து, 9 அங்குலமாகாவும், இப்படி உள்ளில் மேல்நோக்கி மூச்சை ஒடுக்கி ஒடுக்கி இறுதியில் 12 அங்குலத்தையும் உச்சியின் உள்ளேயே ஒடுங்கச் செய்யும் சாதனையில் வெற்றி கொள்ளவேண்டும். இவ்வாறு சுவாசம் உள் ஒடுங்க ஒடுங்க கீழ்காணும் வண்ணம் ஒவ்வொரு விதமான அரிய ஆற்றல்கள் உண்டாகின்றன. மூச்சு காற்றானது, மொத்தம் பனிரெண்டு அங்குலம் உடையது. அதன் தன்மையில் இருந்து படிப்படியாகக் குறைவதால் ஏற்படும் பலன்களைக் குறிப்பிடும் பட்டியல் பின்வருமாறு.

| குறையும்போது | விளையும் பலன் |
|---|---|
| ஓர் அங்குலம் குறைந்தால் | இவ்வுலகத்திசையில் நின்று சுவாதீனப்படலாம் |
| 2 அங்குலம் குறைந்தால் | மன ஆனாந்தம், ஞானசெல்வம் உண்டாகும் |
| 3 அங்குலம் குறைந்தால் | விவேகம் உண்டாகும் |
| 4 அங்குலம் குறைந்தால் | தொலைவில் நடப்பதை இருந்த இடத்தில் இருந்தபடி கண்டு உரைக்கும் ஆற்றல்உண்டாகும் |
| 5 - 6 அங்குலம் குறைந்தால் | ஆகாசத்தில் உள்ள அனறித்தையும் உணரலாம் |
| 7 அங்குலம் குறைந்தால் | அழியா உடம்பு (காயசித்தி) பெறலாம் |
| 8 அங்குலம் குறைந்தால் | அணிமாசித்திகளை அடையலாம் |
| 9 அங்குலம் குறைந்தால் | நவகண்டங்களில் சஞ்சரிக்கலாம் |
| 10 அங்குலம் குறைந்தால் | கூடுவிட்டுக் கூடு பாயலாம்,(தேகம் விட்டு மறு தேகத்தில் பிரவேசித்தல்) |
| 11 அங்குலம் குறைந்தால் | தனது ஆன்மாவைக் கண்டு வசனிக்கலாம் |
| 12 அங்குலம் குறைந்தால் | மரணமில்லாப் பெருவாழ்வு எய்தலாம். |

அதாவது, **"முற்றிலும் அடங்கும் சுவாசமானது, உதித்த இடத்திலேயே சுழன்று கொண்டிருக்கிறபடியால், அந்தப் பரமயோகி, நெடுங்காலம் அன்னபானதிகளை நீக்கி, அவாற்றிருப்பன்"**[110] என்பர்.

இவ்வாறு அனைத்து நுட்பங்களையும் அறிந்த சிவவாக்கியர்.

**"பனிரெண்டு அங்குலம் சூரியகலையில் இருந்து வெளியேறும் காற்றைக் கும்பகம் செய்து, சிவயநம என்று மௌன பஞ்சாட்சரத்தை ஐந்து வண்ணங்கள் கொண்ட திருப்பாதத்தில் ஏற்றுங்கள். அங்கு மின்னிய வண்ணம், நின்ற தீ உள்ள சோதியே அமர்ந்திருப்பதையும் அறியலாம்"**[111] என்கிறார்.

மேற்சுட்டிய வகையில், எட்டு அங்குலம் மூச்சுக் காற்றுக் குறையும்போது , அட்டமாசித்திகள் என்னும் எண் வகைப்பேறுகள் (அணிமாதிகள்) வந்தெய்தும்.

அவ்வாறு சுட்டப்படும் எண்வகைப்பேறுகளும் அவற்றின் விளக்கங்களும் பின் வருமாறு.

1. அணிமா – சிரித்தால் – உடலைவேண்டும் வண்ணம் சிறிதாகச் சுருக்கிக் கொள்ளல்.

2. மகிமா– பெரிதாதல் – உடலை, மிகப்பெரிதாக ஆக்கிக் கொள்ளல்

3. இலகிமா– இலேசாதல் – காற்றைப் போல இலேசாதல்.

4. கரிமா– கனமாதல் – மிகவும் கடினமாதல்

5. வசித்துவம் – தன்வயமாதல் – எல்லாமே தம்வயப்பட்ட நிலை எய்தல்

6. பிராப்தி – ஆளுதல் – அனைத்தையும் ஆளுதல்

7. பிரகாமியம் – கூடுவிட்டுக் கூடுபாய்தல் – ஒரு உடல் விடுத்து மற்றோர் உடலில் புகுதல்.

8. ஈசத்துவம் – எண்ணியவாறெய்தல் – விரும்பியதைச் செய்து அனுபவித்தல்[112] என்பவனவாகும்.

## அமுதம்

**“சிரமுருக்கி அமுதளித்த சீர்உலாவு நாதனே”[113]**

என்று சிவவாக்கியர் இறையைப் போற்றுகிறார். சிரமுருக்கி அமுதளிப்பது என்பது வாசியால் ஏறிய குண்டலினி சக்தி சகஸ்ரநாமமாகிய பிரம்மரந்திரத்தைத் தட்டி வெப்பமாக்குகிறது. தக்க வெப்பம் உண்டானவுடன் அங்குள்ள அமுதகலசம் இளகி உருகிறது. உருகிய வெண்ணெய்ப்போல் அது அண்ணாக்கின் வழியாக உள்ளே சொட்டத் தொடங்குகிறது. இங்ஙனம் இளகி, உருகிச் சொட்டும் இவ்வமுதத்திற்குப் பல பெயர்கள் உண்டு அவையாவன.

1. நெய்

2. நரலை

3. அமுரி

4. அருளமுது

5. மேற்பாலமுது

6. மது

7. எண்சான் பானங்கள்

8. அமுதபானம்

9. ஆகாசபானம்

10. சோமபானம்

11. சந்திராமிர்தம்

12. காயகற்பம்

13. அபூர்வ சஞ்சீவி

14. காயதபால்

15. கறவாப்பால்

16. மாங்காய்ப் பால்

17. சுக்கிலத்தேன்.

ஆகியனவாகும்.

சிவவாக்கியர், உள்ஞூறும் இந்த அமுதத்தினைத் தமது பாடலில்,

**"ஈயிலாத் தேன்"[114]**

என்று குறிப்பிடுகிறார். சிரசின் உச்சியில் இருந்து சுரந்துவரும் இவ்வமுதம் மேல் அண்ணாக்கைக் கடந்து தொண்டை வழியாகச் சொட்டுச் சொட்டாகத் தானே இறங்கும். இதனை அருந்தவோர் காயசித்தி அடைவர். உடம்பு பொன்னிறம் பெறும். மௌனம் கைகூடும். இதனைச் சித்தர் இடைக்காடர்,

**"அண்ணாவின் மேல்வரும் பால்கற — பேர்**
**அண்டத்தில் ஊறிவரும் பால்கற"[115]**

என்று பாடுகிறார். கணபதிதாசர்,

**"காயாத பாலுண்டு ககனவம் பலத்தைக் கண்டு"[116]**

என்று பாடுகிறார்.

**"மாங்காய்ப் பாலுண்டு மலைமே லிருப்போர்க்குத்**
**தேங்காய்ப் பால் ஏதுக்கடி — குதம்பாய்**
**தேங்காய்ப் பால் ஏதுக்கடி"[117]**

என்று குதம்பைச் சித்தர் குறிப்பிட்டுப் பாடுகிறார்.

**“இப்பாடல் அடிகளால் சுட்டப்படும், மாங்காய்ப் பால் , மங்காத பாலாகிய அமுதம் அமுதம் ஆகும். தேங்காய்ப் பால் என்பது சீவன் உடலில் தேங்காமல் வெளியே போய்க் கொண்டிருப்பதைக் குறிக்கும்”**[118]

இங்ஙனம், தொண்டை வழியாக இறங்கும் அமுதத்தை, நாக்கை உள்மடித்து, சுவைத்துப் பருகுவோர், எல்லையற்ற ஆனந்தத்தில் திளைப்பர். இதனை, சிவவாக்கியர்,

**“நாக்கையூன்றி உள்வளைத்து ஞானநாடி யூடுபோய்”**[119]

என்று குறிப்பிடுகிறார். அவ்வாறு அருந்தத் தொடங்கினால்,

**“விருத்தரும் பாலராவார் மேனியும் சிவந்திடும்”** [120]

என்றும் விளக்கம் அளிக்கிறார். அத்தகு மேனியானது.

**“திருவிலங்க மேனியாகும்”**[121]

என்பது அவர்தம் வாக்கு.

இதனையே வடலூர் வள்ளலாரான இராமலிங்க அடிகள்.

**“விரைந்து விரைந்து படிகடந்தேன்**
**மேற்பால் அமுதம் - வியந்து உண்டேன்**
**திறைந்து நெகிழ்ந்து தோல் உடம்பு**
**செழும்பொன் உட்ம்பாய்த் திகழ்ந்தேன்”**[122]

எனத் தம்மையே சான்றாக்கிக் காட்டுகிறார்.

போகமுனிவரோ,

**“பொன்னாகும் நரைதிரையு மாற்றுப் போகும்**
**போகாது சடலமது கல்த் தூணாகும்**
**மன்னா கேள் மூப்பைதுவும் அகலும் பாரு**
**மைந்தனே வாலையது ஆவாய் நீயும்**
**பண்ணவே மூச்சதுவும் கீழே நோக்கும்**
**பாங்கான முனைமூக்குப் பிடரி தன்னில்**
**எண்ணவே மூச்சதுவே மேவும் பாரு**
**எழிலான சுழிமுனையும் மாருந் தானே”**[123]

என்று பாடுகிறார், குணங்குடி மஸ்தானும்,

**“கஞ்சா அபினியினைக் கற்பமென உண்ணாமல்**
**எண்சாண் பணங்கள் இறக்கி உண்ப தெக்காலம்**
**வாசி வாவென்று வருந்தெள் ளமுதுண்டு**
**பேசிநான் வாழ்ந்தேன் பிழைதீர்வரவ தேக்காலாம”**[124]

என்று ஏங்கிப் பாடுவதையும் இங்கு ஒப்புநோக்கத்தக்கதாகும்.

இவ்வமுதமே உணவும் ஆவதால், யோகத்தில் அமர்ந்திருப்பவர்க்கு, பசியோ, நீர் வேட்கையோ, களைப்போ ஏற்படாது. எத்தனை ஆண்டுகள் அப்படியே அமர்ந்திருந்தாலும் வெளியில் இருந்து உணவோ, நீரோ, காற்றோ, வெளிச்சமோ எதுவும் பெற்றாக வேண்டிய தேவை அவர்களுக்கு இல்லை. தான்வேறு பரம்பொருள் வேறு என்ற வேறுபாடு நீங்கும். இங்ஙனம் இறைவனோடு இரண்டறக் கலந்து ஏகமாகிவிடுகின்ற சீவசமாதி நிலை கைகூடும். தோளுக்கு மேலே சிரசினைச் சுற்றி ஞான ஒளிவட்டம் சுழன்று ஒளிரும். இப்பெருநிலையைச் சிவவாக்கியர்,

**“எகபோகமாகிய இருவரு மொருவராய்”**[125]

என்றும்,

**“எந்தைப் பூரணப் பிரகாசர்”**[126]

என்றும்,

**“பார்க்கப் பார்க்கத் திக்கெலாம் பரப்பிரம்மம் ஆகுமே”**[127]

என்றும் பேரானந்தப் பெருநிலை எய்துதலை உணர்த்துகிறார்.

## சமாதி நிலை

சித்தர் மரபில் சமாதி என்பது நிறைநிலையைக் குறிக்கவரும் சொல்லாகும். சமம், ஆதி சமாதி என்று இச்சொல்லைப் பிரித்துப் பொருள் கொள்ளலாம். ஆதியாகிய பிரமத்திற்குச் சமமான நிலைக்கு மனிதன் உயர்ந்து விடுதல் என்ற ஆழ்ந்த பொருளுடையது இச்சொல். சமாதி என்பது ஒளிபடரும் குண்டலினியை உன்னி உணர்வால் எழுப்பிச் சுழுமுனையின் வழிதிறந்து உச்சிமுனையாகிய சிதாகாச அகண்டாகார வெட்டவெளியில் நிறைந்து பேரின்பப் பெருநிலையில் இலயிப்பதாகும். இந்நிலையில் கருவி கரணாதிகள் ஒடுங்கிவிடும். உலக உடல் வாதனைகள் அற்றுப்போகும். இவ்வுணர்வற்ற நிலையையும்,

**“சித்தற்று சிந்தையற்று சீவனற்று நின்றிடும்**

**சத்தியற்றுச் சம்புவற்றுச் சாதிபேத மற்றுநன்**

**முத்தியற்று மூலமற்று மூலமந் திரங்களும்......”**[128]

யாவும் அற்று ஒடுங்கும் நிலையினையும் சிவவாக்கியர் இங்ஙனம் விளக்குகிறார்.

சிவவாக்கியருக்கு, அளவில்லாமல் நின்ற தேஜோமாயப் பொருளானது எங்கும் ஒரே விதமாக எரிந்தது. தந்தையின் பரிபூரணப் பிரகாசமானது ஏகபோகமாகிய அவரை உயர்ந்த மோன சாகரத்தில் மூழ்கச் செய்தது, யாவராலும் நாடமுடியாத சந்திராமிர்தத்தை உண்டு, நான் என்னும் அகங்காரம் அழிந்து ஆழ்ந்து ஒடுங்கினார். தனது இந்த அனுபவத்தை,

**“எல்லையற்ற பரம்பொருளே நமக்குள் சோதியாக நின்று ஏகமாய் எரிந்து கொண்டிருக்கிறது. அது எல்லாம் வல்ல பரிபூரணப் பொருளாகிப் பிரகாசம் பொருந்தி மிளிர்கிறது. அதில் நான் என்ற ஆணவம் அழிந்து நானே அதுவாகி நின்றேன்”** [129] என்று சிவவாக்கியர் உரைக்கின்றார்.

மேலும், கைகூடிய இந்த உயர்மோனப் பெருநிலையைச் சிவவாக்கியர்,

- **“உட்கமலமோனம்”**[130]
- **“இலங்குமுச்சி மோனம்”**[131]
- **“பரந்துநின்ற மோனம்”**[132]
- **“தரித்திருந்த மோனம்”**[133]

என்றெல்லாம் குறிக்கின்றார்.

அத்துடன்,

**“ஞானம் பொங்கி நின்றது மவுனமே**

**உடம்பின் ஊமை எழுத்தாகி பொதிந்து நின்றது மவுனமே**

**உயிரில் தங்கி நின்றது மவுனமே**

**வாசியென்ற கதிக்குல் நின்றதும் மவுனமே**

**சந்திரனாகிய மதியம் மவுனமே**

**சிவன் இருந்த மோனத்தில் தியானியுங்கள்”**[134]

என்றும் மேன்மையுற எடுத்தியம்புகின்றார்.

**“கேளப்பா கேசரமே அண்ட வுச்சி**

**கெட்டியாய்க் கண்டவர்க்கே மவுன மாகும்”**[135]

என்ற காகசுண்ட முனிவரின் வாக்கும் இதனை வலியுறுத்துகிறது.

**“பாயு மீராறு காலைப் பாயாது**

**பக்குவம் பண்ணுவது சமாதி”[136]**

**“ஓவியம் போலிருந் துள்ளுருகு நல்லமிர்தம்**

**ஒழுகு வுண்பது சமாதி”[137]**

**“நிலையம்விட் டகலாது நீவாத தீபமென**

**நிலையி னிற்பது சமாதி”[138]**

என்று மென்மேலும் சிவவாக்கியர் விளக்குகின்றார்.

**“மனதாவது, சடப்பொருள்களில் இருந்து விலகிக் கொண்டு ஆத்மசொருபத்தில் இலயமாகுங்கால், அந்நிலை சமாதி என்று சொல்லப்படுகின்றது”[139]**

**“மன இயக்கம், உடல் இயக்கம் இரண்டும் நின்றுவிட்டபின், உடலிலேயே உயிர் அடக்கம் பெற்று இருக்குமானால், அதனை சீவசமாதி என்றும் மரணமிலாப் பெருவாழ்வு எண்டும் முன்னோர்கள் கூறியிருக்கிறார்கள்”[140]**

இங்ஙனம் தற்போதம் இழந்த அகண்டாகார சிவானுபூதி அடைந்து எல்லாமாகி ஏகமாகும் நிர்விகற்ப சமாதியே இனிப்பிறவா முத்திப்பதம் என்பதைச் சிவவாக்கியர்,

**“முத்தி சித்தி தொந்தமாய் முயங்குகின்ற மூர்த்தி”[141]**

என்பதுடன், பிறவாத பூசை என்றும் குறிப்பிடுகிறார்.

**“மெத்ததீப மிட்டதில் பிறவாத பூசை யேத்தியே”[142]**

இதுபோழ்து அமரநிலை அமையும் என்பதை,

**“ஆசையால் மறக்கலா தமரராக லாகுமே”[143]**

என்றும் உறுதி கூறுகிறார். இம்மேலான நிலையை எய்தியவர்கள் எத்தனை ஆயிரம் ஆண்டுகள் வேண்டுமானாலும் அழியாது இருப்பர் என்பதைச் சிவவாக்கியர்,

**“உய்யடர்ந்து கொண்டுநீங்கள் ஊழிக்காலம் வாழ்வீரே”[144]**

என்றும் அறுதியிட்டு கூறுகின்றார்.

## பஞ்சபூதங்கள் - தத்துவநிலை

**“தத்துவநிலை என்ற சொல் ஆன்மா என்பதாகும். இறைத்தன்மை எய்துதல் ஆகிய பரம்பொருள் அனுபவம் ஆகும்”**[145] உலகியலில் தெளிந்து துறந்து சித்தராயினரின் தத்துவங்கள் அனைத்தையும் சிவவாக்கியர் பாடலில் இடம்பெற்றுள்ளன.

**“சித்தர் மரபில் பஞ்சபூதங்கள் மிகக்குறிப்பாகப் பேசப்படுகின்றன. பஞ்சபூதங்களின் சேர்க்கையே அனைத்தும். பஞ்சபூதங்களான நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் இவற்றில் ஆண்டவன் உறைந்திருக்கிறான் என்ற கருத்தை, சிவவாக்கியர், இவ்வுலகில் பஞ்சபூதங்கள் பூமியில் ஐந்து வகைநிலங்களாகவும், நான்குவகை நீராகவும்,மூன்று வகை அக்கினியாகவும், இரண்டு வகைக் காற்றாகவும், ஆகாயவெளியாகியது ஒன்றாகவும் அமைந்து வேறு வேறு தன்மையாய் இருக்கின்றது. அதுவே அஞ்செழுத்தாகி, அதில் சிகாரமாகி நீ நிற்கிறாய்”**[146] எனவும்

**“இவ்வுடலில் அஞ்செழுத்தாக ஈசன் பஞ்சபூதங்களாய், ஆகாயம் அந்தரத்தில் மனம் ஒன்றாகவும், காற்று இரண்டாகவும், அக்கினி மூன்றாகவும், நீர் நான்காகவும், மண், எலும்பு,தசை, ரோமம் என்று ஐந்தாகவும் உள்ளது . பஞ்சபூதங்களிலும் இறைவன் ஐந்தெழுத்தாகப் பரவி அமர்ந்துள்ளான்”**[147] எனவும் தெரிவிக்கிறார்.

**“நீரிலே பால் கலந்தால், அது எப்படி நீரில் முழுவதும் பரவி நிற்கிறதோ, அப்படி இறைவன் பிரபஞ்சத்தில் கலந்து நிற்கிறான்”**[148] எனத் திருமூலர் தெரிவிக்கிறார்.

## ஐந்தெழுத்தின் இயக்கநிலை

பஞ்சபூதங்களும் கூட ஐந்தெழுத்தின் மூலம் படைக்கப்பட்டவையேயாகும். என்பது சித்தர்களின் துணிபு ஆகும். அதாவது,

| | |
|---|---|
| ந என்ற எழுத்து | நிலத்திற்கும் (மண்) |
| ம என்ற எழுத்து | நீருக்கும் (நீர்) |
| சி என்ற எழுத்து | நெருப்புக்கும் (தீ) |
| வ என்ற எழுத்து | காற்றுக்கும் (வளி) |
| ய என்ற எழுத்து | ஆகாயத்திற்கும் (விண்) |

**“அஞ்செழுத்தில் ஐம்பூதம் படைத்தவன்”[149]**

எனத் திருமந்திரம் கூறும், இத்தன்மையாகவே, மனித உடம்பும் ஐந்தெழுத்தின் மூலமே படைக்கப்பட்டது என்ற தத்துவத்தைச் சிவவாக்கியர்,

**“பஞ்சாட்சரம் நமது உடம்பில் நகாரம், இடுப்பிலிருந்து கால்கள் வரையிலுமாகவும், மகாரம், வயிறாகவும், சிகாரம் நெஞ்சிலிருந்து இரண்டு தோள்களாகவும், வகாரம் தொண்டை வாயாகவும், யகாரம் இரண்டு கண்களாகவும் அனைவருக்கும் அமைந்துள்ளது என்பதை ஓவியம் போல அமைத்துக் காட்டியுள்ளார்”[150]** அதாவது,

| | |
|---|---|
| ந | இடுப்பில் இருந்து கால்கள் வரை |
| ம | வயிறு |
| சி | நெஞ்சில் இருந்து இருதோள்கள் வரை |
| வ | தொண்டை வாய் |
| ய | இரு கண்கள் |

என்பதாகக் கொண்டமைவதை மேற்கண்டவாறு நாம் அறியலாம்.

மேலும் சித்தர் சிவவாக்கியர் ஐந்தெழுத்தின் சிறப்புகளை,

**“அரியதோர் நமசிவயா மாதியந்த மானதும்**

**அறிரண்டு நூறுதேவ ரன்றுரைத்த மந்திரம்”[151]**

என்றும் சிறப்பித்தும் கூறுகிறார்.

## எட்டும் இரண்டும்

**“ஆகாயமே மனமாகி, வெளியாகித் திகழ்கிறது. எட்டு இரண்டு எனும் அகார, உகார அட்சரத்தால், இதமாக இருத்தி, ஞானயோகத்தால் தியானித்தால் மனம் மெய்ப்பொருளாகிய ஈசன் இருப்பிடத்தை அடைந்து, இறைவனுடன் இரண்டறக் கலந்து ஆனந்தமாகிய பேரின்பம் அடையும்”[152]** என்று சிவவாக்கியர் எடுத்துரைக்கிறார்.

மேலும்,

**“எத்தனை பேர் எண்ணினாலும் எட்டிரண்டும் பத்தலோ”[153]**

என்ற பாடல் மூலம் எட்டு இரண்டுமகிய அகார உகாரத்தையும் தம்மில் அறிந்து பத்தாம் வாசலில் இருக்கும் ஈசனைப் பற்றி இருத்தல் வேண்டும் என்கிறார். அத்துடன்,

**“எட்டிரண்டும் கூடியே இழிங்கமான தேவனை**
**மட்டதாக உம்முளே மதித்துநோக்க வல்லிரேல்”[154]**

என்னும் போது எட்டாகிய அகாரமும், இரண்டாகிய உகாரமும் கூடியே இலிங்கமாக ஆகியுள்ளது என்று தெளிவுபடுத்தியுள்ளார். இனி எட்டு என்பது பற்றி பின்வருமாறு விளங்கக் காணலாம்.

## எட்டு என்பதின் உட்பொருள்

ஒரு மனித உடலானது அணுக்களின் கூட்டமைப்பில் திடமானதொரு பொருளாக உள்ளது. இந்தத் திடமான பொருளே தூல தேகம் எனப்படுகிறது. இந்தத் தூல உடலானது எட்டுவிதமான அடுக்களை உடையாதாகும். அவை,

1. உடலைச் சுற்றியுள்ள ஒளிகாந்த மண்டலம்
2. உரோம மண்டலம்
3. சதை மண்டலம்
4. சவ்வு மண்டலம்
5. தசை மண்டலம்
6. நரம்பு மண்டலம்
7. எலும்பு மண்டலம்
8. மாவு (மஜ்ஜை) மண்டலம்

ஆகியவையாகும்.

## இரண்டு என்பதின் உட்பொருள்

**“வாயுவானது நாசி வழியாக உட்செல்வதையும் வெளிவருவதையும் புறச் சுவாசம் என்றும், உடலுக்குள் ஓடிக் கொண்டிருக்கும் வாயுவை உட்சுவாசம் என்றும் கொள்ள வேண்டும்,ஆக, இந்த அகசுவாசம், புறசுவாசம் என்பன இரண்டு, இவை இரண்டும் முற்கூறிய எட்டு அடுக்குகள் கொண்ட தூல உடலை இயக்க முழு மூலப் பொருளாகின்றன. எனவே எட்டு அடுக்குகள் கொண்ட தூல தேகமும், இரண்டு நிலைகள் கொண்ட பிராணமய கோசமுமே எட்டும் இரண்டும் ஆகும்”[155]** என்பர்.

யோகத்தின் மூலம் இறைவனுடன் இரண்டறக் கலந்து ஆனந்தமாகிய பேரின்பம் அடைவதற்குரிய வழியாகச் சிவவாக்கியர் காட்டும் எட்டும் இரண்டும் என்பதற்கு இவ்விளக்கம் துணைபுரிகிறது. யோக ஞானத்திற்கு

அடிப்படையாக இருப்பது ஓங்காரத்துள்ளிருக்கும் எட்டு, இரண்டு, இதற்கான விளக்கத்தை குறிக்காத சித்தர்களே இல்லை எனலாம்.

| எட்டு | இரண்டு |
|---|---|
| அ | உ |
| சிவன் | சக்தி |
| நாதம் | விந்து |
| உடம்பு | உயிர் |
| சூரியன் | சந்திரன் |
| வலக்கண் | இடக்கண |
| பிங்கலை | இடகலை |
| அபானன் | பிராணன் |
| அமுரி | உபரி |

இவைபோல் இன்னும் பலவிதமாய்ச் சித்தர்கள் **“எட்டிரண்டு”**[156] என்பதற்கு விளக்கங்கள் அளித்துள்ளார்.

## உள்ளகத்துளே இறைவன்

இவ்வுலகில் உள்ள எல்லாப் பொருள்களிலும் கலந்து நிற்கும் இறைவன் உள்ளத்திலேயேயும் உறைகின்றான் என்று உறுதியாக நம்புவார்கள் எதற்கும் அஞ்சமாட்டார்கள். காலன் வந்து கவர்ந்து செல்வானோ என்று எண்ணிக் கலங்கமாட்டார்கள் என்பதைச் சிவவாக்கியர்,

**“ஆலம் உண்ட கண்டனார் அகத்துளே இருக்கவே**

**காலன் என்று சொல்லுவீர் கனாவிலும தில்லையே”**[157]

என்று எடுத்துரைக்கிறார்.

## மெய்யறிவு

**“உள்ளத்தை விரிவுபடுத்தித் தமக்குள் இருக்கும் உண்மைகளைக் கண்டறிய முயல்வதுதான் அறிவாகும். இதுவே மெய்ஞ்ஞானம் எனலாம். ஆனால், ஞானநூல்கள் பலவும் தேடிப் படித்து ஞானப்பொருளானதில் நின்ற சோதியை சுழுமுனை நாடியில் தேடித் தியானிக்க வேண்டும். ஞானமாகிநின்ற ஓரெழுத்தாகிய மெய்ப்பொருளில் குருநாதனாக உள்ள ஈசனை அறிந்துகொண்டு அம்மெய்ப்பொருளைத் தவிர வேறெதுவும் இல்லை என்பதுவே உண்மை என்று உறுதியாகக் கூறுகின்றார்”**[158]

ஞானநூல்களைத் தேடிக்கொண்டு அதைப்பற்றிப் பேசிக் கொண்டிருப்பவர்கள் உண்மை ஞானத்தை அறியாமல் ஞானயோகிகள் என்று பேர் சூட்டிக் கொண்டிருப்பவர்களே ஆவர். அவர்கள் ஞானமாகிய சத்தியை, பெருஞ்சுடரை – ஒப்பற்ற ஒளியை – உள்ளத்திலே இருப்பைத் தேடிக் காணாமல் இருக்கிறார்கள் என்று குறிப்பிடுகின்றனர்.

## ஞானியர் இயல்பு

**“உண்மை ஞானியர் உறங்கினாலும் விழித்தாலும் உணர்வு சென்று அறிவில் ஒடுங்கி இருந்தாலும் சிறந்த ஐம்புலன்களையும் அடக்கி எல்லாத்திசைகளும் ஒன்றென ஒன்றி இருந்தாலும் புறத்திலும் உள்ளிலும் மெய்பொருளோடே பொருந்தி இருப்பர்”**[159] என்றும் சிவவாக்கியர் விளக்குகின்றார்.

## உடற்பற்றழிதல்

சிவவாக்கியர் உடலில் இருந்து உயிர் பிரிந்து இறப்பு நேர்ந்தபின் ஆகும் நிலைமையை,

- **“நடுவன் வந்தழைத்தபோது நாறுமிந்த நல்லுடல்”**[160]
- **“ஓடுபெற்ற தவ்விலை பெறாது காணு முடலுமே”**[161]
- **“ஆடுபெற்ற தவ்விலை பெறாது காணு மிவ்வுடல்”**[162]
- **“நன்கலம் கவிழ்ந்தபோது நாறுமென்று போடுவார்”**[163]

என்று உடலின் இழிவை எடுத்துரைக்கின்றார்.

அதே நேரத்தில், உயிருடன் வாழும் காலத்தில் உரிய முறையில் முயன்றால்,

**“காயமான பள்ளியிற் காணலா மிறையையே”**[164]

என்று உடம்பின் சிறப்பையும் உரைக்கின்றார்.

## குறிக்கோள்

இறைவனோடு ஆன்மா, இரண்டறக் கலக்கும் நிறைனிலையாகிய சாயுச்சியமே குறிக்கோள் என்பதை,

**“தெளிந்த ஞானம் நான்கினும் சேரலாஞ்சா யுச்சியமே”**[165]

என்கிறார், இதனை,

இறைவனோடு ஆன்மா ஒன்றபடும் நிலை என்பதை வருணிக்கிறார்

**"அலைன்டேனியல்"[166]**

## ஐம்பத்தோர் அட்சரம்

**"ஆகமம் நிறைந்து நின்ற வைம்பத்தோ ரெழுத்துமே"[167]**

என்கிறார் சித்தர் சிவவாக்கியர். ஆறு ஆதாரங்களும் ஐம்பத்தோர் அட்சரங்களும் தொடர்புடையன. இவ்வாறு ஆதாரங்களிலும் குண்டலினி, பொருந்தும்போது ஓசை எழும். அவ்வோசையின் சுருங்கிய வடிவமாகச் சில எழுத்துக்கள் கருதப்படுகின்றன.

| | | |
|---|---|---|
| மூலாதாரத்தில் | ஓம் | 4 |
| சுவாதிட்டானம் | ந | 6 அ – ஐம் |
| மணிபூரகம் | ம | 10 இ – லிகம் |
| அநாகதம் | சி | 12 உ – செளம் |
| விசுத்தி | வ | 16 ரிம் |
| ஆக்ஞை | ய | 3 ஹ்ரீம் |
| சகஸ்ரநாமம் | - | 4 |

இவ்வெழுத்துக்களுக்கு மேலே காட்டியவண்ணம் எண்களும் தரப்படுகின்றன. ஒவ்வோர் அறையில் வரும் எழுத்தக்களுக்கு உரிய எண் இட்டுச் சுட்ட ஒவ்வொரு வரிசையிலும் ஐம்பத்தோர் எழுத்துக்கள் வருவது காணலாம் என்பது இதன் விளக்கமாகும்.

டாக்டர். இரா. மாணிக்கவாசகம் தரும் விளக்கம் இச்சிறப்பை இன்னும் நுட்பமாகப் புரிந்துகொள்ள உதவுகிறது.

ஆதாரங்களின் இதழ்களில் ஏற்படும் 51 அதிர்வுகளே 51 ஒலிகள். அவற்றின் வரிவடிவங்களே 51 அட்சரங்கள். அவ்வொலிகளின் அட்சரங்கள் கீழ்வருவன.

| ஒலிகள் | அட்சரங்கள் |
|---|---|
| அ முதல் ஔ வரை | 12 |
| க வரிசை | 4 |
| ங வரிசை | 1 |
| ச வரிசை | 1 |
| ஞ வரிசை | 4 |
| ட வரிசை | 1 |
| ண வரிசை | 1 |
| த வரிசை | 4 |
| ந | 1 |
| ப வரிசை | 4 |
| ம | 9 |
| ய | 9 |
| ர | 9 |
| ல | 9 |
| வ | 9 |
| ழ | 9 |
| ற | 9 |
| ன | 9 |
| ஹ | 5 |
| ஷ | 5 |
| ஜ | 5 |
| ஸ | 5 |
| க்ஷ | 5 |
| | 50 + ஓம் = 51[168] |

## யோகாசனம்

யோகப் பயிற்சிக்கு ஏற்ற வகையில் உடலை இருத்திக் கொள்ளும் நிலைக்கு ஆசனம் என்று பெயர். யோகப் பயிற்சிக்கான இடம், உடலின் இருப்புநிலை ஆகியவற்றை இவ்வாசனம் என்ற சொல் விளக்கி நிற்கிறது. யோகப்பயிற்சிக்கான இடம் தூய்மையானதாகவும், அமைதியானதாகவும், நல்ல காற்றோட்டம் உடையதாகவும் அமைய வேண்டும். அத்தகைய இடத்தில் நாணல் புல் பரப்பியோ, மான்தோல் அல்லது புலித்தோல் விரித்தோ அதில் அமர்ந்து கொண்டு யோகம் பயில்வது சிறப்பென்று பண்டைய யோகசாத்திர நூல்கள் கூறுகின்றன. யோகப்பயிற்சியின் போது நம்முள் ஏற்படும் காந்தசத்தி விரிப்பொன்றால் தடுக்கப்படாவிட்டால் தரையில் பாய்ந்து பயனற்றுப் போய் விடும். அவ்வாறு சத்தியைத் தடுத்துச் சாதகனுள் செலுத்துவதில் புலித் தோலும் மாந்தோலும் சிறந்தனவாகக் கருதப்படுகின்றன.

இடம், சூழ்நிலை, விரிப்புகள் இவற்றை விட முதன்மையானது உடலை இருத்திக்கொள்ளும் நிலை. உடல் கட்டுப்பாட்டுக்கு முதன்மை தரும் அடயோகம் பல நூறு வைகயான ஆசனங்களைக் குறிப்பிடுகின்றது. உடல் நலத்திற்கும் வளத்திற்கும் உறுதுணையாகும், இவ்வாசன வகைகளை யோக சாத்திர நூல்கள் விரிவாக கூறுகின்றன. ஆன்ம இன்பத்தை நோக்கும் யோகப் பயிற்சிக்கு உடலை அசையாமல் நேராக இருத்திக்கொள்ள வேண்டும் என்பதே அடிப்படை. குறிப்பாக முதுகுத் தண்டுவடம் வளையாமல் நேராக நிமிர்ந்திருக்காமாறு அமர்ந்து கொள்ள வேண்டும். அவ்வாறு அமர்வது, சூக்கும நாடிகளில் வாயுவின் ஓட்டத்தைச் சீர்படுத்தத் துணை செய்யும். வளைந்து நெளிந்து உட்கார்ந்திருப்போரைக் காட்டிலும் நேராக நிமிர்ந்து உட்காருவோர் சுறுசுறுப்பும் தெளிந்த சிந்தையும் உடையவராக இருப்பதை அன்றாட அனுபவத்தில் காணலாம்.

ஆன்மாவை இறைமையில் கலக்கச் செய்யும் யோகப்பயிற்சிக்கு உறுதுணையாக உடல் இருப்பதால் அதன் நலனுக்காவும், வலிவோடும் வளமோடும் வைத்துக்கொள்ளவுமே சிலப் பயிற்சிகள் மேற்கொள்ளப்படுகின்றன. இதுவே யோகாசனம் என்று அழைக்கப்படுகிறது. இப்பயிற்சிகளின் மூலம் உடலின் அகபுற உறுப்புக்களையும் அவற்றின் இயக்கங்களையும் கட்டுப்படுத்தி நாம் விரும்பும் வண்ணம் உடலை இயக்கமுடியும்.

எனவே ஆசனங்களின் வகைகளையும் எண்ணிக்கையையும் இடர்பாடான இயல்புகளையும் எண்ணிக் களைக்கவோ மலைக்கவோ தேவையில்லை. உடல் தனக்கொரு தொல்லையாக இல்லாமல் யோக சாதகன் தன் உடலை இருத்திக்கொள்ள வேண்டும் என்பதே இங்கு முக்கியம். ஆன்ம இன்பம் சுவைக்க விரும்பும் யோக சாதகன் எந்த ஆசனத்தையும் மேற்கொள்ளலாம். உடல் நிலையாக நேராக, அதேபோது ஓய்வாக இருக்க வேண்டும் என்பதை நினைவில் கொள்ள வேண்டும். ஆன்ம

இன்பம் பெற்று இறைநிலையை உணர அல்லது இறைவனுடன் ஒன்றெனக் கலந்திட உடலானது ஒரு சுமையாகவோ தொல்லையாகவோ சாதகனுக்கு இருக்கக்கூடாது. சுருங்கச் சொல்லின் உடல் இருப்பதையே அவன் உணரக்கூடாது.

எப்படி அமர்ந்தால் இவையனைத்தும் கிட்டுமோ, அப்படி அமர்ந்து பயிலாலம். ஆசனம் என்ற பெயரால் உடலை வருத்தி அவ்வலியின் துன்பத்தில் சாதகன் மனம் செல்லக் கூடாது. இனிமையானதாக எளிமையானதாக ஆசனம் அமைதல் வேண்டும். அவரவர் உடல் நிலைக்கும் சூழ்நிலைக்கும் ஏற்ப ஆசனம் மேற்கொண்டு ஆன்ம இன்பம் பெறலாம்.

**“உடலுறுப்புகளின் கட்டுப்பாடும் ஒழுங்கும் இல்லாமல் மனப்பயிற்சி மேற்கொள்வது கடினம். அதேபோல், மனப்பயிற்சியும் பக்குவமும் கலவாத உடற் கட்டுப்பாட்டால் பயனேதும் இல்லை. எனவேதான், சித்தர்களின் யோகநெறி மனத்தை அடிப்படையாக உடையது. இத்தகைய சித்தர்களின் யோகநெறி, இராசயோகம், வாசியோகம், குண்டலினியோகம் என்று பல பெயர்களால் அழைக்கப்பட்டாலும், கருத்துக்களை வலியுறுத்தும் வகையால் பெயர்கள் வேறுபட்டாலும், இத்தகைய யோகங்கள் யாவும் உடலையும் ஆன்மீக உணர்வையும் ஒன்று கூட்டிச் செய்யப்படும் யோகங்களே ஆகும்”**[169]

## முடிவுரை

ஒருவனே தேவன், எங்கள் தெய்வம், உங்கள் தெய்வம் என்று கூறுவது மடமையாகும். தில்லைநாயகனும், திருவரங்கநாயகனும் ஒன்று என்னும் சைவ, வைணவ சமநிலையை பேணுகிறார் சிவவாக்கியர் அவர்கள்.

சிவவாக்கியரின் நோக்கில், யோகம் என்பது மனதை ஒருநிலைப்படுத்தி அகமுகமாக இறைவனைத் தம்முளே உணர்வது அல்லது இறைவன் என்ற நிலையுடன் இரண்டறக் கலந்துவிடுவிடுதாகும்.

இறைவனை அடைவதற்குரிய படிநிலைகள் நான்கையும் அவற்றின் பயன்களையும் தனித்தனியாக மற்றவர்கள் சொல்லியிருக்க, சிவவாக்கியர் இன்ன இன்ன படிநிலைக்கு, இன்ன இன்ன பயன் பெறுவார் என்பதைப் பொருத்திக் காட்டியிருப்பது சிறப்பான மற்றும் முறையான விளக்கமாகத் திகழ்கிறது.

உயிர்ச்சக்தியானது நம் உடலில் சூக்கும நாடிகள் வழியே வாயுவாக ஓடிக் கொண்டிருக்கிறது என்றும், நம் உடலில் ஓடும் வாயுக்கள் மூச்சுப்பயிற்சியின் வழியாகவே கட்டுப்படுத்தப்படுகின்றன என்பதையும் விளக்கிக் கூறுகிறார். பிராணயாமம் என்பது பொதுவாக மூச்சுப்பயிற்சியைக் குறித்தாலும், அது நம் உடலில் ஓடிக் கொண்டிருக்கும் பிராணன் என்னும் உயிர்க்காற்றின் பயிற்சியையே சிறப்பாகக் குறிக்கிறது. நாசி, மூச்சுக்குழல், காற்றுப்பை வழியாக வாங்கிவிடும் மூச்சை ஒழுங்குப்படுத்தும் பயிற்சியின்

மூலமே பிராணனின் ஓட்டத்தைக் கட்டுப்படுத்த முடியும். மூச்சுப் பயிற்சியின் மூலம் கட்டுப்படும் பிராணன் எனும் உயிர்ச்சக்தி தன் கொதிப்பும் கொந்தளிப்பும் அடங்கி அமைதி அடைகிறது. மூச்சோடு மிக நெருங்கிய தொடர்புடையது மனம். மன அதிர்வுகளே மாயா காரியங்கள் அனைத்திற்கும் காரணமாகின்றன. மூச்சுப்பயிற்சியின் மூலம் கட்டுப்படும் மனத்தில் அதிர்வலைகள் மறைகின்றன, அமைதி நிலவுகின்றது. எனவே, மூச்சுப்பயிற்சியானது பிராணனை ஒழுங்குப்படுத்தவும் மனத்தை ஒருமுகப்படுத்தவும் வழி செய்கிறது என்பதனை தெளிவுபடுத்துகிறார்.

பிராணயாமப்பயிற்சி மூன்று உறுப்புக்களை உடையது, மூச்சை வெளியிடுதல், உள்ளிழுத்தல், நிறுத்துதல் என்ற முறையில் இப்பிராணயாமப் பயிற்சியானது நடக்கிறது. காற்றுப்பை ஏறத்தாழ வெற்றிடமாகும் வரை முதலில் காற்றை வெளியேற்ற வேண்டும். இது இப்பயிற்சிக்குத் தயாராகும் நிலையாகும். தாமரைத் தண்டில் நீர் ஏறுவதைப் போல மூச்சை நேராக உள்ளிழுக்க வேண்டும். இதற்குப் பூரகம் என்றும் இவ்வாயுவை அபானன் என்றும் கூறுவர். உள்ளிழுத்த காற்றை உள்ளே நிறுத்துதல் கும்பகம் எனப்படும். கும்பகப்படும் வாயுவை வியானன் என்று கூறுவர். உள்ளே நிறுத்திய காற்றை சீராக வெளியிடுதல் ரேசகம் எனப்படும். இவ்வாயுவையே பிராணன் என்று கூறுவர்.

இப்பிராணாயாமப் பயிற்சியை மேற்கொண்டு மனிதன் உயிர் வாழ அடிப்படையாக விளங்கும் மூச்சினை ஒழுங்குப்படுத்தி தமது கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவந்து விட்டால், உடலின் உள் உறுப்புகளும் வலிமை பெறும். நீண்ட ஆயுட்காலத்தையும் மனிதனானவன் தனது வாழ்நாளில் எய்துவான், அவனது ஆரோக்கியமும் மேன்மையடையும். இதனை, ஔவையாரும் தமது பாடலின் வாயிலாக எடுத்துக்கூறுகிறார்.

ஒருவர் பாட்டினைப் பாடும்போதோ அல்லது அதற்கானப்பயிற்சியை மேற்கொள்ளும்போது மேற்குறிப்பிட்ட பிராணாயாமப் பயிற்சியானது மேற்கொள்ளப்படுவதை நாம் இங்கு கவனத்தில் கொள்ள வேண்டும். ஆம், மூச்சினை (காற்றை) உள்ளிழுக்கும்போது பூரகம் என்ற நிலையும், பிறகு மூச்சினை (காற்றை) உள் நிறுத்திக் கொண்டு பாடுவது கும்பகம் என்ற நிலையும், பிறகு பாடுகிறபோது மூச்சினை (காற்றை) சீராக வெளியிடுதல் ரேசகம் என்ற நிலையும் நிகழ்கிறது.

இவ்வாறாக பாடகர்கள் பாட்டினை பாடும்போது, இப்பிராணாயாமப் பயிற்சியானது நிகழ்வதால் தான் பாடகர்கள் அனைவரும் நீண்ட ஆயுளைப் பெற்று வாழ்வதை நாம் காண்கிறோம். மேற்கூறிய எடுத்துக்காட்டு ஔவையாரின் கூற்றினக்கு துணைபுரிகின்றன.

வாசி என்பது உயிர்மூச்சு, வாசியோகம் என்பது உயிர்மூச்சை உள்மார்க்கமாக நெறிபடுத்தி உயர்நிலையை அடைதலாகும். இது மூச்சுக்கலை பற்றிய நுட்பமான விளக்கமாகும்.

உடம்பில் மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை ஆகிய ஆறு ஆதாரங்களைச் சிவவாக்கியர் ஆறுதாமரைகள் என்றும் ஆறு மாநிலங்கள் என்றும் குறிக்கின்றார்.

இரண்டிரண்டு ஆதாரங்களை ஒவ்வொரு மண்டலம் எனக்கொண்டு முறையே, ஆறு ஆதாரங்களை மூன்று மண்டலங்களாகாக் காட்டுகிறார்.

குண்டலினியைச் சிவவாக்கியர், வித்து என்று குறிப்பிடுகின்றார். குண்டலினி சக்தி என்பது. விந்துவின் சிறப்பு ஆற்றலாகும். இது போகத்தின்போது கீழ்நோக்கிப் பாய்ந்து சிற்றின்பம் ஆகிறது. யோகத்தின்போது மேல்நோக்கி ஏறிப்போய் பேரின்பம் பயக்கிறது.

மூலவினாத்தண்டு என்பது முதுகுத் தண்டாகும். ஆறு ஆதாரங்களும் இம்மூல வினாத்தண்டுகளையே அமைவிடமாகக் கொண்டுள்ளன. மூலவினாத்தண்டின் நடுவில் கீழிருந்து மேலாக அமைந்துள்ள மெல்லிய நுண் குழல் சூக்குமநாடி எனப்படும். சுழிமுனை என்பது மூக்கின் மேல்நுனியும் புருவங்கள் இரண்டும் சந்திக்கும் இடமாகும். இதனை, சிவவாக்கியர், மூன்றாவது கண் என்றும் நெருப்பறை என்றும் குறிப்பிடுகின்றார்.

நெற்றிக்கண் நாட்டத்தில் மனதை வைத்துக் குண்டலினி சக்தியோடு கூடிய உணர்வால், கருத்துடன் கவனித்தால் சுழிமுனையில் சுவாசம்தானே அடங்கி மனோலயம் உண்டாகும். அப்போது சிரசினுள்ளே செஞ்சுடர் சோதி தோன்றித்திகழும். பலவிதமான நாத ஒலிகள் பரநாத ஒலிகள் எழுந்து இன்பம் தரும்.

மூச்சின் நீளம், உச்சிநோக்கி ஒடுங்க அட்டமாசித்திகள் எனப்படும் எண்பெரும் ஆற்றல்கள் சித்தியாகும். மூளைக்கு மேலேயும் மண்டை ஓட்டிற்குக் கீழேயும் உள்ள இடைவெளி உச்சியாகும். இதைச் சிவவாக்கியர், வெளி என்றும் வட்டவீடு என்றும் குறிப்பிடுகின்றார்.

வாசியால் ஏறிய குண்டலினி சக்தி இந்த உச்சி வெளியாகிய பிரம்மரந்திரத்தைத் தட்டி, வெப்பம் ஆக்குகிறது. தக்க வெப்பம் கிடைத்தவுடன் உருகி அமிர்தம் கரந்து உள்ளில் இறங்கும். இவ்வமிர்தம் மாங்காய்ப் பால் எனப்படும்.

சமாதி என்பது மூச்சு உள்ளில் முழுமையாய் ஒடுங்கி இவ்வமிர்தபானத்தை உண்டு மரணத்தை வென்று பேரின்பத்தில் இலயித்திருப்பதாகும். இம்மேலான நிலையினை எய்திய சித்தர்கள், எத்தனை ஆண்டுகள் வேண்டுமானாலும் உயிரோடு கூடிய உடம்பு அழியாது இருப்பர். ஊழிக்காலம் வாழ்வார் என்பது சிவவாக்கியரின் கூற்றாகும்.

பெறற்கரிய இப்பேரின்பப் பெருநிலையை அளிப்பது, யோகநெறியாகிய வாசியோகமும், அதனாலாகும் குண்டலினி யோகமுமாகும். எனவே சிவவாக்கியர் உணர்த்தும் சித்தநெறி யோகநெறியே என்பது புலனாகின்றது.

பஞ்சபூதங்களின் குணங்களில் எல்லாம் இறைவனே நிறைந்து நிற்கிறான். மனித உடம்பு நமசிவய என்னும் ஐந்தெழுத்தின் அமைப்பாகப் படைக்கப்பட்டுள்ளது. 51 அட்சரங்கள், ஆறாதாரங்களுடன் தொடர்புடையனவாய், மந்திரமாய், ஆகமமாய் நிறைவது 51 எழுத்து.

எட்டும் இரண்டு என்பது அகரம், உகரம் என்பதுடன் எட்டு அடுக்குகள் கொண்ட தூல தேகமும், இரண்டு நிலைகொண்ட பிராமணகோசமும் ஆகும். மனத்தை ஒருமைப்படுத்தித் தன்னை அறிதலுக்கு முறைப்படுத்த வேண்டும்.

அகத்துள்ளே இறைவன் உறைகிறான். உண்மை, அறிவு என்பது ஞானமாகிய சோதி – உள்ளத்திலே இருப்பதைக் கண்டுணர்வதேயாகும்.

ஆன்மாவை இறைமையில் கலக்கச் செய்யும் யோகப்பயிற்சிக்கு உறுதுணையாக உடல் இருப்பதால் அதன் நலனுக்காவும், வலிவோடும் வளமோடும் வைத்துக்கொள்ளவுமே சிலப் பயிற்சிகள் மேற்கொள்ளப்படுகின்றன. இதுவே யோகாசனம் என்று அழைக்கப்படுகிறது. இப்பயிற்சிகளின் மூலம் உடலின் அகபுற உறுப்புக்களையும் அவற்றின் இயக்கங்களையும் கட்டுப்படுத்தி நாம் விரும்பும் வண்ணம் உடலை இயக்கமுடியும்.

உடலுறுப்புகளின் கட்டுப்பாடும் ஒழுங்கும் இல்லாமல் மனப்பயிற்சி மேற்கொள்வது கடினம். அதேபோல், மனப்பயிற்சியும் பக்குவமும் கலவாத உடற் கட்டுப்பாட்டால் பயனேதும் இல்லை. எனவேதான், சித்தர்களின் யோகநெறி மனத்தை அடிப்படையாக உடையது. இத்தகைய சித்தர்களின் யோகநெறி, இராசயோகம், வாசியோகம், குண்டலினியோகம் என்று பல பெயர்களால் அழைக்கப்பட்டாலும், கருத்துக்களை வலியுறுத்தும் வகையால் பெயர்கள் வேறுபட்டாலும், இத்தகைய யோகங்கள் யாவும் உடலையும் ஆன்மீக உணர்வையும் ஒன்று கூட்டிச் செய்யப்படும் யோகங்களே ஆகும்

இறந்தபின் இழிவினை அடையும் உடம்பினை அதனுள் உயிர் இருக்கும் காலத்திலேயே உரிய முறையில் முயன்றோமானால், இறைவனைக் காணுதற்குரிய திருக்கோயிலாக மாற்றிட முடியும்.

இறைவனோடு இரண்டறக் கலக்கும் நிறைநிலையைப் பெறுவதையே வாழ்வின் குறிக்கோளாகக் கொண்டிருந்த சித்தர்கள், அதனை அடைந்திட பின்பற்றிய நெறியானது யோகத்தை அடிப்படையாகக் கொண்ட சித்தநெறியே ஆகும்.

## சான்றாதாரங்கள்


1. சுப்பிரமணியபிள்ளை. கா. சைவசித்தாந்த வரலாறு. ப – 40
2. முனைவர்.அ. அறிவொளி. சித்தர் பாடல்கள் மூலமும் – உரையும். பா– 9
3. முனைவர்.அ. அறிவொளி. சித்தர் பாடல்கள் மூலமும்–உரையும். பா– 306
4. திருமூலர், திருமந்திரம். பா– 2066
5. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா– 73
6. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா– 12
7. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா - 56
8. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா– 55
9. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா– 10
10. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா– 486
11. டாக்டர். ப. சொ. காயாரோகணம், சித்தர் கண்ட செம்பொருள். ப – 63
12. இராம. சுப்பிரமணிய நாவலர் (மான் மருகனார்), ஆதாரயோகம், ப–5
13. Alain Damelou, Yoga – The method of Re – Integration,P – 7
14. சுவாமி சிவானந்த பரமஹம்சர், சித்தர்வேதம், ப – 342
15. சீனிவாசன், கு. சாகாக்கலை, மூன்றாவது ஆய்வுக் கோவை, இ,ப,க,த மன்றம்.
16. திருமூலர் திருமந்திரம் – 581
17. இரா. நிர்மலாதேவி, கருவூரார் பல திரட்டு, ப – 24
18. நா. சுப்பிரமணியம், திருமூலர் திருநெறி, ப – 7
19. சிவானந்தபேதம், பா – 79
20. சிவானந்தபேதம், பா – 80
21. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா– 239
22. Shyam sunder goswami, Fundamentals of Laya Yoga. ப – 52
23. Shyam sunder goswami, Fundamentals of Laya Yoga. ப – 54
24. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா– 441

25. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா– 479

26. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா– 372

27. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா– 244

28. சுவாமி சிவானந்த பரமஹம்சர், சித்தர்வேதம், ப – 290

29. யோகிராஜ் வேதாத்திரி மகரிஷி, மனவளக்கலை. ப – 27

30. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா– 155

31. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா– 143

32. காகபுசுண்டர், காகபுசுண்டர் ஞானம் – 80. ப – 69

33. ஸ்வாமி, பிராணாயாமம். ப – 79

34. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா– 372

35. அ. பாண்டியன். சித்தர் சிவவாக்கியர் ப – 96

36. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா - 205

37. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா - 252

38. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா - 292

39. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா– 323

40. கி. வெங்கட்ராமன், யோகவேதம்.ப – 210

41. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா– 372

42. திருமூலர், திருமந்திரம். பா– 553

43. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா– 125

44. அ. பாண்டியன். சித்தர் சிவவாக்கியர் ப – 98

45. சிவயோகசாரம் ப – 292

46. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா– 372

47. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா– 21

48. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா– 155

49. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா– 172

50. அகத்தியர், அகத்தியர்ஞானம். பா– 7

51. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா– 372

52. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா– 231

53. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா– 373

54. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா– 100

55. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா– 108

56. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா– 101

57. இரா. நிர்மலாதேவி. கருவூரார் பல திரட்டு. ப – 24

58. இரா. நிர்மலாதேவி. கருவூரார் பல திரட்டு. ப – 86

59. நிஜானந்தபோதம். பா – 526

60. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா– 17

61. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா– 103 – 104

62. P. Jaya,works of cittars and theirs places in Hindu Religious thought in Tamil Literature. ப – 406

63. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா– 372

64. சிவயோகாசாரம் பா – 291

65. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா– 100

66. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா– 327

67. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா– 425

68. யோகிராஜ் வேதாத்திரி மகரிஷி, மனவளக்கலை. ப – 32

69. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா– 338

70. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா– 340

71. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா– 127

72. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா– 132

73. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா– 512

74. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா– 111

75. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா– 111

76. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா— 111

77. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா— 65

78. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா— 70

79. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா— 473

80. மா. கோவிந்தன், பாபாஜியும், பதினெண் சித்தர் கிரியா யோகமரபும்.ப—176

81. மீ.ப சோமு, சித்தரிலக்கியம். ப — 3

82. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா - 166

83. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா - 168

84. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா - 203

85. க. சுந்தரேசன், சிவலிங்கம் (எ) பீனியல் சுரபி. ப — 72

86. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா— 362

87. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா— 430

88. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா— 515

89. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா— 508

90. ஆ. அரிசுந்தரமணி, அகிலத்திரட்டு அம்மானை, பாராயான உரை.ப—487

91. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா - 373

92. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா— 392

93. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா— 393

94. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா— 518

95. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா— 507

96. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா— 480

97. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா— 390

98. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா— 508

99. அரு. இராமநாதன், சித்தர் பாடல்கள். ப - 172

100. அரு. இராமநாதன், சித்தர் பாடல்கள். ப — 172

101. அரு. இராமநாதன், சித்தர் பாடல்கள். ப — 172

102. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா— 173

103. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா— 104

104. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா— 171

105. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா— 176

106. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா— 265

107. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா— 98

108. சிவயோகாசாரம். ப — 300

109. சிவயோகாசாரம். ப — 482

110. போகமுனிவர், போகமுனிவர் சித்தகாண்டம். பா— 61

111. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா— 509

112. சிவயோகாசாரம். ப — 301 — 302

113. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா— 392

114. ஸ்வாமி, பிராணாயாமம். ப — 142 — 143

115. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா— 484

116. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா— 253

117. இடைக்காட்டுச்சித்தர், இடைக்காட்டுச்சித்தர். பா— 112

118. கணபதிசித்தர். பா - 57

119. குதம்பைச்சித்தர். பா— 26

120. டாக்டர். ஏ.ஆர்.சாரங்கபாணி, சித்தர்நெறி. ப — 46

121. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா - 432

122. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா— 5

123. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா— 6

124. சக்தியுகம் மாத இதழ். 06/12/1986. ப — 35

125. போகமுனிவர், சித்தகாண்டம். ப — 65

126. இளங்கம்பன், தத்துக்குயில்கள். ப — 81

127. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா— 128

128. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா— 502

129. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா— 218

130. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா— 46

131. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா— 502

132. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா— 362

133. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா— 354

134. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா— 312

135. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா— 354

136. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா— 341

137. காகபுசுண்டர், காகபுசுண்டர் ஞானம் — 80. பா— 6

138. குணங்குடி மஸ்தான் சாகிபு, திருப்பாடற்றிரட்டு. பா — 1

139. குணங்குடி மஸ்தான் சாகிபு, திருப்பாடற்றிரட்டு. பா — 2

140. குணங்குடி மஸ்தான் சாகிபு, திருப்பாடற்றிரட்டு. பா — 8

141. சித்பவானந்தசுவாமி, ராஜயோக விளக்கம். ப — 241 — 242

142. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா— 46

143. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா— 509

144. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா— 273

145. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா— 63

146. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா— 315

147. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா— 23

148. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா— 219

149. ராஜாஜி — சோமு — திருமூலர் தவமொழி. ப — 125

150. திருமூலர், திருமந்திரம். பா— 166

151. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா— 97

152. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா– 1

153. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா– 266

154. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா– 504

155. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா– 505

156. கி. வெங்கட்ராமன், யோகவேதம்.ப – 157 – 159

157. நாராயணசாமி, ஓம்சக்தி பாட்டுச்சித்தர், சித்தர் சிவவாக்கியரின், ஜீவிதமும், சிந்தனையும். ப – 98

158. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா– 16

159. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா– 469

160. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா– 6

161. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா– 26

162. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா– 117

163. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா– 80

164. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா– 186

165. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா– 147

166. Alain, Danielon, Yoga – The method of Re – Integration.ப – 7

167. சிவவாக்கியர், சிவவாக்கியம். பா– 175

168. ஆ. அரிசுந்திரமணி, அகிலத்திரட்டு அம்மானை, பாராயாண உரை. ப–2

169. டாக்டர். இரா. மாணிக்கவாசகம். நம் நாட்டுச்சித்தர்கள். ப – 55 - 56

# முடிவுரை

தமிழ் இலக்கியப் படைப்புகள் காலந்தோறும் வடிவத்தாலும், பொருளாலும் மாறுபட்டு வந்துள்ளன. இலக்கிய வடிவங்கள் சுருக்கமும் செறிவும் வாய்ந்த வடிவமாதலால் தமிழர்கள் எல்லாவற்றையும் பாட்டு என்ற வடிவத்திற்குள்ளேயே ஆக்க முற்பட்டனர். தமிழில் காலந்தோறும் ஏற்பட்ட பதிவுகளில் சித்தர்களின் சிந்தனைப் பதிவும் குறிப்பிடத்தக்கது. சித்தர் இனம் நீண்ட நெடுங்காலமாக இந்த நிலத்தில் வேரூன்றி விழுது பரப்பி வருகிறது.

“எனக்கு முன்னே சித்தர்பலர் இருந்தார் அப்பா!” யானும் வந்தேன் ஒருசித்தன், இந்த நாட்டில்! என பாரதி தன்னைச் சித்தர் பரம்பரையில் இணைத்துக்கொண்டு பெருமைப்படுத்துகிறார். பட்டினத்தாரும், தாயுமாணவரும், வள்ளலாரும் சித்தர் தத்துவங்களைக் கோட்பாடுகளாக்கிக் கொடுத்தவர்கள் .உள்ளொளி பெற்ற சித்தர்கள் உண்மையை உணர்ந்து ஊருக்கு உபதேசம் செய்தனர். மெய்ஞ்ஞானம் மேவியோர் மேதினியில் ஐம்புலன் நுகர்வுகளை, ஆசாபாசங்களை, நலந்தீங்குகளை, அவலங்களைத் தத்துவப் பாடல்களாக வகுத்தனர் .

சித்தர் இலக்கியம் தமிழில் தனிவகை இலக்கியம், குறியீட்டு இலக்கியம், காலந்தோறும் வளர்ந்த இலக்கியம்,தத்துவ இலக்கியம், சித்தர்களின் நுண்ணுணர்வு, ஆழ்நிலை எண்ணங்கள், வெடிப்புறு சிந்தனைகளில் வீசும் அலைகள் பொறி போலச் சுடர்விடுகின்றன. சித்தர் சிந்தனை வளமும் கருத்துக் கொடைகளும், எண்ண விரிவுகளும் தவஞானியர்களின் சிந்தனை எச்சங்களாக மொழியைச் செழுமைப்படுத்துகின்றன.

தமிழ் நாட்டு வரலாற்றிலும், இலக்கிய வரலாற்றிலும் சித்தர்கள் இன்றியமையாதொரு இடம் பெறத்தக்கவர்கள். அவர்கள் பெயரில் கிடைக்கின்ற அச்சில் வெளிவந்துள்ள நூற்றுக்கணக்கான நூல்கள் மூலமாகவும், வெளிவராத ஏடுகள் மூலமாகவும் மக்களுக்கும், மொழிக்கும் ஆற்றியுள்ள தொண்டினை நன்கு முடிகிறது.

சித்தர்களின் மெஞ்ஞான தத்துவமும், விஞ்ஞான உணர்வும், காலத்தை வென்ற கருத்தும் தமிழுக்கு அழகையும் வலிமையும் வனப்பையும் தந்துள்ளதைக் காணமுடிகிறது. மருத்துவம், மந்திரம், ரசவாதம், யோகம், ஞானம் முதலிய பல்வேறு துறைகளில் எளிய தமிழில் பல்வேறு யாப்பு, சந்தம் முதலியவற்றோடு பாடல்களை இயற்றித் தமிழ் இலக்கிய உலகிற்குப் பெருமை சேர்த்துள்ளனர். சித்தர்கள் பேசாப் பொருளை பேசிய திறமும், உயிரின் இயல்பை உணர்த்திய திறமும், யோகத்தின் ஒருமையினை பெருமையினைப் பேசிய திறமும் பெருந்திறமாகும்.

உண்மையறியாது வாழ்க்கையில் உழலும் மக்களுக்கு உண்மைப் பொருளை உணர்த்தும் நோக்குடன் கருதிய பொருளை வினாவாக்கி அதற்கமைந்த விடையுடன் உணர்த்துவனவாகவும் சித்தர் இலக்கியங்கள் அமைவதைக் காணலாம்.

பாமர மக்களுக்கு விளங்கும் மொழிநடையில் சின்னஞ்சிறிய சொற்களால் கருத்துக்களை அளவிட்டுரைக்கின்றன. தென்பாங்கு, கும்மி, களிப்பு, கன்னி, தும்பி போன்ற கிராமிய விளையாட்டுப் பாடல்கள் நடையில் தாம் கருதிய பொருளைப் பக்குவமாகப் எடுத்துக் கூறுகின்றனர். கற்றோரும் வியக்குமாறு யாப்பு நலத்தாலும், சொல்லடுக்குகளாலும், சொல் மாலைகளாலும் பொருள் நலம் பயப்பதாகவும் விளங்குகின்றன சித்தர் பாடல்கள்.

சமயமும், வைதீகமும் வளர்த்த பொய்மைப் பூசனைகளை எடுத்துக்காட்டி அதன் பயனின்மையினை உணர்த்தியும், சாதி சமயங்களைச் சாடியும் சமரச சன்மார்க்க நெறியினைக் காட்டிடும் புரட்சி வழிபாட்டு இலக்கியமாகவும் அமைகின்றன. பாமர மக்களின் உடல் நோய்க்கு மருந்து உரைக்கும் மருத்துவ இலக்கியமாகவும், உள்ள விழைவிற்கான இரசவாதம், அட்டமாசித்திகள், யோகம் முதலியனவற்றை உரைக்கும் சித்து இலக்கியமாகவும், உயிர்கள் மேன்மையடையும் முத்திக்குறிய ஞானமுரைக்கும் ஞான இலக்கியமாகவும் நின்று தமிழ் கூறும் நல்லுலகிற்கு பன்முக இலக்கியத் தன்மையின் வழிச் செல்லும் சித்தர் இலக்கியம் தமிழ் இலக்கிய வகைமையில் செழுமையினை நிறுவியதனை இங்கு காணமுடிகிறது

சித்தர்களின் மெஞ்ஞான தத்துவமும், விஞ்ஞான உணர்வும், காலத்தை வென்ற கருத்தும் தமிழுக்கு அழகையும் வலிமையும் வனப்பையும் தந்துள்ளதைக் காணமுடிகிறது என்ற கூற்றினோடு, சித்தர்கள் தமிழ் மொழிக்கு ஆற்றியுள்ள தொண்டினையும் எடுத்துக்கூறி, சித்தர்களின் பங்கு மொழி என்ற அடிப்படையிலும், மெஞ்ஞான தத்துவமும், விஞ்ஞான அறிவும் கலந்த அவர்களின் அனுபவங்கள் தமிழ் இலக்கியத்தில் பெறும் இடத்தை தெளிவுருத்துவதாக முதல் இயல் அமைகிறது.

சித்தர்களுள் தலைச்சிறந்தவர் சிவவாக்கியர், திருமூலரின் திருவிளக்கமாகத் தோன்றியவர். தாயுமாணவரால் குறிப்பிடப்படும் பெருமைப் பெற்றவர். வரன்முறை நாத்திகக் கொள்கைகளைத் தெளிவாகவும், நிறைவாகவும் வெளியிட்டு உருவ வழிபாட்டினையும், சமயச் சடங்குகளையும், சாதி பேதங்களையும், ஆசார வேடமாகும் பிறவற்றையும் கடிந்து “உண்மைப் பொருளை” உணரக் கூறி மக்களைக் கடைத்தேற்றும் குறிப்பில் விழைந்து நின்ற சித்தராகத் திகழ்பவர் இவர்.

சிவவாக்கியர் வாழ்க்கை வரலாற்றைப் போகமுனிவர் சித்தகாண்டம், முருகதாச சுவாமிகளின் புலவர் புராணம், மா, வடிவேலு முதலியாரின் சிவவாக்கியார் பாடல் 500, கு. அருணாச்சலக் கவுண்டரின் சித்தர் பாடலும் அவர்தம் தத்துவமும் – ஒரு கண்ணோட்டம், அபிதான சிந்தாமணியிலும், தி. வி. சாம்பசிவம் பிள்ளை அவர்கள் எழுதிய தமிழ் – ஆங்கில மருத்தவ அகராதி ஆகிய நூல்களின் வாயிலாகவும் அறிய முடிகின்றது.

சித்தர் சிவவாக்கியார் தொடக்க காலத்தில் இயல்பான குடும்ப வாழ்க்கை மேற்கொண்டு பின்னர் துறவியானதாக அறியப்படுகிறது.

சித்தர் சிவவாக்கியார், திருமாலின் அருள்பெற்ற திருமதியாழ்வார் என்றும் , சிவனின் அருள் பெற்ற சிவவாக்கியார் என்றும் போற்றப்பட்டார் என்பதை நூல்கள் வாயிலாக அறிய முடிகிறது.

சிவவாக்கியர் கருவிலே இருந்த பொழுது, இவரது தாயார், சதா சர்வகாலமும் சிவ நாமத்தைக் கூறியப்படி இருந்தார். அதனால் தான் என்னவோ, இவர் பிறக்கும் பொழுது,"குவா, குவா" என்று அழாமல். "சிவா, சிவா" என்று அழுதார். இதனாலேயே இவருக்கு "சிவவாக்கியர்" என்ற பெயர் சூட்டப்பட்டது. காசிக்கு சென்ற இவர், செருப்புத் தைக்கும் சித்த யோகி ஒருவரிடம், உடலை "அன்ன கோசத்தால்" ஆக்காமல் "பிராண கோசத்தால்" ஆக்கும் வித்தையைத் தெரிந்து கொண்டார் என்பதை அறிய முடிகிறது.

சிவவாக்கியரை தன் சீடராக ஏற்றுக் கொண்ட, செருப்புத் தைக்கும் சித்த யோகி தனக்குத் தெரிந்தவற்றை எல்லாம் அவருக்கு சொல்லித் தந்தார். இறுதியில் சிவவாக்கியருக்கு அந்த குரு, யாருமே சமைக்க முடியாத கசப்பு மிக்க ஒரு பேய்ச்சுரைக்காயையும், கங்கை நதி மணலையும் அள்ளி சிவவாக்கியர் வசம் தந்து, இதனைக் கொண்டு உணவு சமைக்க முடியும் என்று நம்பி, உணவும் சமைத்து எவள் ஒருத்தி உனக்கு அன்னமிடுகிறாளோ அவளே உன் மனைவி என்று கூறினார். மேலும், அந்த குரு, சிவவாக்கியரிடம் "உனது விதிப் படி, குடும்ப வாழ்க்கையை நீ அனுபவித்த பிறகு தான் சித்த நிலையை அடைய முடியும்" என்றும் கூறி அனுப்பினார். இதிலிருந்து சிவவாக்கியாரின் இல்லற வாழ்வையும் துறவற வாழ்வையும் அறிய முடிகிறது.

சிவவாக்கியர், குறமகள் ஒருத்தியைக் கண்டார், அவளிடம் குரு தந்த பேய்ச்சுரைக்காயையும் மணலையும் கொடுத்து சமைக்க இயலுமா என்று கேட்க அதன், தாத்பரியத்தை உணர்ந்து கொண்ட குறமகள், அதனை அறுசுவை பட சமைத்தும் (சிவவாக்கியருக்குக்) கொடுத்தார். அவரும், அவளை அன்புடன் மணந்து கொண்டு இல்லற வாழ்வில் ஈடுபட்டார். இல்லற வாழ்க்கையில் ஈடுபட்ட பொழுதிலும், தனது யோக மார்கத்தை மறக்க வில்லை. இளமையிலேயே யோக வாழ்க்கை வாழ்ந்தவர் சிவவாக்கியார் என்பதை அறிய முடிகிறது.

சிவவாக்கியாரின் ஆசையை (உலகப்பற்றை) கொங்கணர் என்ற சித்தர் சோதித்து அறிந்தார் என்பதை அறிய முடிகிறது.

பின்னாளில் சிவவாக்கியர் தனது தவ வலிமையை உயர்த்திக் கொண்டார். சில, மூலிகைகள் மூலமாக "அன்னமய கோசமாக" இருந்த தனது உடலை "பிராணமய கோசமாக" மாற்றி, அதன் பின் "மனோமயத்துக்கும்" அதன் பின் "ஆனந்தமய கோசத்துக்கும்" மாற்றி ஆன்மீகத்தின் உச்ச நிலையை அடைந்துள்ளார் என்பது தெரிய வருகிறது.

புலவர் புராணம் என்ற நூலின் வழியும் உரையாசிரியர் மா.வடிவேலு முதலியார் அவர்களின் உரைக் குறிப்பிலிருந்தும் சிவவாக்கியாரின் வாழ்க்கை வரலாற்றை அறிய முடிகிறது.

. "சித்தர் பாடலும் அவர்தம் தத்துவமும் ஒரு கண்ணோட்டம்" என்னும் தலைப்பில் கு. அருணாசலக் கவுண்டர் கூறுவதாவது," சிவவாக்கியர் என்னும் பெயருடைய இச்சித்தர்,பலசமயங்களில் புகுந்தும், உணர்ந்தும், ஆய்ந்தும் பெற்ற அனுபவத்தில், சைவமே நிலையெனச் சார்ந்தார்: பல பாடல்களை இயற்றினார். சிவனருளாலே பல நாடுகளுக்குச் சென்று பிற மதங்களை வென்று, திருமயிலை வழியாக வந்தார். அப்போது அவரைப் பேயாழ்வார் கண்டார், இவரை வைனவராக்க மனங்கொண்ட பேயாழ்வார் சிவவாக்கியரின் குறைகளை எடுத்துக்கூறி வைணவத்தின் மீது இருந்த தவறான கருத்தை மாற்றினார். இதுவரை செய்து வந்த வாத, பிரதிவாதங்களை எண்ணிப்பார்த்த சித்தர் சிவவாக்கியர் "அட்டமாசித்திகள் கைவரப்பெற்றுப் பிறரை மயக்கி, தம்மையும் மயக்கி, திரிவதைக் கட்டிலும் சிறந்த குறிக்கோள் வேறு ஏதும் இல்லையா?" என்று தமக்குள் சிந்தித்தார். பேயாழ்வாரிடம் கலந்து உரையாடி, தெளிவுபெற்றார். "பக்திசார்" எனும் பெயர் பெற்று, வைனவரானார். வைனவவுலகம் இவரை "திருமிழிசையாழ்வார்" என்று அழைத்தது என்று பின்வருமாறு கூறுகிறார்.

கு. அருணாசலக்கவுண்டர் பார்வையில், சிவவாக்கியர், சைவராக இருந்து வைணவராக மாறினார். வடிவேல் முதலியார் எழுத்தாக்கத்தில், சிவவாக்கியர் வைணவராக இருந்து சைவராக மாறியிருக்கிறார். தத்தம் சமயக் கருத்தாக்கங்களை முன்னிறுத்திச் சொல்லப்படும் இவ்வரலாற்றின் மெய்த்தன்மையை அறிய, சித்தர்கள் பாடல்களை ஆராய்வது அவசியமாகிறது.

போகர், தமது சத்தகாண்டத்தில்,"சிவவாக்கியர்" திருமூலர் மரபினர் என்று குறிக்கிறார்.

சித்தர் மரபில், தனக்கு முன் வாழ்ந்தவர்களில் சிறந்தவர்களை, அருள் உபதேச அடிப்படையில், தனது முன்னோர் எனக்குறிப்பது வழக்கம். இம்மரபின் அடிப்படையில், திருமூலர் தன்னை "நந்தி மரபினர்" என்று காட்டுவார். இதன்படி, சிவவாக்கியரையும் "திருமூலர் மரபினர்" என்று

குறிபிடுவது கொள்ளத்தக்கதாகும். மேலும், திருமூலரின் கருத்துகள், யாப்பமைதி மற்றும் சொல்லும் முறைகள், இவரது பாக்களிலும் ஒத்திருப்பதைக் காணமுடிகிறது.

புலவர்புராண ஆசிரியர் குறிப்பிடும், “ஆன்மிக உயர்வுக்கு, மேல்கீழ் வேறுபாடுகள், வருணபேதங்கள் ஏற்புடையன அல்ல” என்பதற்கும், குறமகளோடு இச்சித்தர் இணைந்து வாழ்ந்ததற்கும் உரிய சுவடுகளை, சிவவாக்கியர் பாடல்களின் வழியே காணமுடிகிறது.

“பறைச்சி போகம் வேறதோ, பனத்திபோகம் வேறதோ” என்ற தொடரும், “மூங்கில் வெட்டி நாருரித்து” என்ற தொடரும் இவற்றிற்குத் தக்க அக்சான்றுகளாக அமைகின்றன.

ஆகவே, நமக்குக் கிடைக்கக்கூடிய அகச்சான்றுகளை அடிப்படையாகக் கொண்டு பார்க்கிறபோது, சிவவாக்கியரின் காலம் கி.பி. 10 ஆம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டது என்பது உறுதியாகிறது.

மேலும் மு. அருணாசலம் குறிப்பிட்டுள்ள காரணங்களையும் ஒப்பிட்டுப் பார்க்கும்போது சிவவாக்கியர் காலம் கி.பி. 14 ஆம் நூற்றாண்டு என்பது நிறுவப்படுகிறது. கொங்கு மண்டலத்தைச் சார்ந்த ஈரோடு மாவட்டத்தில் உள்ள பகுதி சிவன்மலையாகும், இது காங்கேயத்திலிருந்து திருப்பூர் செல்லும் வழியில், ஐந்து கி.மீ, தொலைவில் உள்ளது. இங்குள்ள மலைமேல் சிவவாக்கியர் பலகாலம் வாழ்ந்து தவம்புரிந்ததால் இம்மலை “சிவவாக்கியர் மலை” என்று பெயர் பெற்றுது “சிவவாக்கியர் மலை” என்பது நாளடைவில் மருவி, “சிவமலை” என்று ஆனது பின்னர், “சிவன்மலை” என்று தற்போது அழைக்கப்பட்டு வருவதை அறிய முடிகிறது.

சித்தர் சிவவாக்கியர் இறைவாகச் சீவசமாதி அடைந்த இடம், பெருங்களூர் என்னும் ஊராகும். இவ்வூர், புதுக்கோட்டையிலிருந்து தஞ்சாவூர் செல்லும் நெடுஞ்சாலையில் உள்ளது. இவ்வூருக்கு புறத்தே ஓர் காட்டுக் கோயில் இருக்கிறது. இதனுள் சிவவாக்கியர் சமாதி மண்டபம் அமைந்திருக்கிறது. அன்றிலிருந்து இன்றுவரை அப்பகுதி மக்கள் ஆண்டுதோறும் தை மாதம் மக நட்சத்திரத்தன்று சிவவாக்கியர் விழாவைச் சிறப்பாகக் கொண்டாடி வருகின்றனர்.

சிவவாக்கியரும் தம் வாழ்வின் முற்பகுதியைப் புறவழிபாட்டுக்களில் செலுத்திப் பயன் காணாமல் வாடி அகவழிபாடாம் ஞானமார்க்கத்துக்கு வந்து சித்தரானார் என்றே தோன்றுகிறது ஆலயங்களில் வடித்து வைக்கப்பட்ட உருவச் சிலைகளை இறைவன் என எண்ணினார். அவற்றுக்கு நீர் சொரிந்து மலர் தூவி மந்திரங்கள் செபித்தார். ஆலயங்களை மீண்டும், மீண்டும் வலம் வந்து வணங்கினார். எங்கும் நிறைந்த இறைவன் தன்னுள்ளும் இருக்கிறான் என்ற ஞானமின்றிப் பல்லாண்டுக்கால வாழ்வைப் புறவழிபாட்டில் கழித்திருக்கிறார் உலகியலில் உழன்று, தேர்ந்து, தெளிந்து, துறந்து

சித்தராயனரின் தத்துவங்கள் அனைத்தும் சிவவாக்கியர் பாடல்களில் இடம் பெற்றுள்ளன.

சிவவாக்கியர் உணர்த்தியுள்ள கருத்துக்களில், சித்தநெறிக் கொள்கைகள் சிறப்பாக விளக்கப்பட்டுள்ளதுடன், சமரச சன்மார்க்க நெறியும், ஒருமைப்பாட்டின் உயர்வும் தெளிவாக அமைந்துள்ளன. இவர், தம்முள்ளே சதாசிவம் கண்ட சித்தராதலின், சாத்திரங்களும் வேதங்களும் காட்டும் தெய்வ விளக்கங்களைப் புறக்கணிக்கின்றார். எங்குமாகி நிற்கும் சோதி தன்னுளே இருப்பதால் தாமே உலகம் எனும் தத்துவத்தில் நின்றவர். பூசனை, வாசனை, கோயில்கள், குளங்கள் இவற்றால் இறைமையை உள்ளவாறு உணரலாகாது என்பதுடன், சாதியையும், வேதாகம விதிகளையும் பொய்யென்று ஆக்கும் பொற்புடையவராகவும் விளங்குகின்றார்.

இளநீரை எடுத்துக்காட்டி, ஓட்டினுள் இனிய நீர் அடங்கி இருப்பது போல, மானுட உடம்பினுள்ளே இறைவன் இருக்கும் மாண்பினைச் சுட்டிக்காட்டுவதுடன், அரிவேறு அரன்வேறு என்று கூறி ஒன்றற்கொன்று எற்றத்தாழ்வென்று பேசி வழக்கிடும் சைவ, வைணவ சமய வெறியாளர்கட்கு, எல்லாம்வல்ல இறைமையின் உண்மை வடிவினை உணர்த்துமுகத்தான், நீரோடு கலந்த உப்பின் நிலையை, உவமையாக்கி, அரியும், சிவனும் ஒன்றென்றும் ஆழ்ந்த தத்துவத்தினை அளவிட்டுக் கூறித் தெளிய வைக்கிறார்.

எங்கள் தேவர், உங்கள் தேவர் என்று பல தெய்வங்கள் உள்ளனவோ? என்ற வினா தொடுத்து, அதற்குப் பதிலாக ஒருவனே தேவன் என்று உணர்வீர் அறிவிலிகளே! என்று விடையும் அளிக்கின்றார். சிவவாக்கியர் தம் பாடல்களில் உயிர் காக்கும் கலையாம் ‘பிராணாயாம’ முறைகளை விரிவாக விளக்கியுள்ளார். அவர் நாக்கை மூக்கிற்கு நேராக உட்புறமாக மடித்து வீணாதன்டில் கும்பகம் செய்ய வேண்டும் இந்நிலையில் இரேசகத்திற்குரிய பதினாறு மாத்திரைகளும் வெளிவிடாதிருக்க வேண்டும் அதனால் யாக்கை மூப்பெய்தாது உலகம் பரப்பிரமமாகத் தோன்றும் வழிகளை இவர் பாடல்கள் மூலம் தெரிந்துகொள்ளலாம்.

கறியைச் சுடவைக்கும் சட்டியும், சத்துவமும் அந்தக் கறியின் சுவையை அறியாதது போல உனக்குள் உள்ள நாதனையும் நீயும் அறியவில்லை. மந்திரமும் தெய்வமும் உமக்குள் தான் உள்ளன என எடுத்துக்காட்டுடன் கேட்கும் இவரின் எழுச்சி உரை சித்த நாத்திகத்தின் திறனைக் காட்டுவதாகும். அன்பின் வழிப்பட்ட அறநிலையாக விளங்கும் இவர், பசிப்பிணி போக்கும் அன்னதானச் சிறப்பினை, பிறருக்கு உணவு அளித்த புண்ணியம் செய்தோர் பலகோடி காலம் வாழ்வார்கள். தங்கத்தைத் (சொர்ணம் – சொன்னம்) தானமாக இட்டவர்கள் அரசாட்சி செய்வார்கள். இவை போல் உதவி செய்யாதவர்கள் (பின்னம் – வின்னம்) நரகத்தில் வீழ்வார்கள். கன்னம் வைத்துத் திருடியவர்களுக்கு கடவுள் அருள் காக்காமல் விலகிச் செல்லும். இது உறுதியாகும். என்று வாழ்த்துகின்றார்.

இதனால் இவரின் சன்மார்க்க நெறி புலனாவதுடன் தன்னுயிர் போல் மன்னுயிரையும் காக்க வேண்டும் என்ற மாண்பினையும் எடுத்துக் காட்டுகிறது

சைவம் என்று மக்கள் அமைத்துக்காட்டும் அமைப்பில் ஊன் உண்ணாமையே சிவமாகும் எனும் குறிப்பு நிற்பதனைக் கண்டு மயங்கிய சிவவாக்கியர் வேதியர்கள் மீன் இறைச்சியைச் சாப்பிடுவது இல்லை. ஆனால் மீன் வாழும் நீரில் தான் குளிக்கிறார்கள், அதைத்தான் குடிக்கிறார்கள் வேதியர்கள் மான் இறைச்சியை உண்பது இல்லை, ஆனால் மான்தோலில் தான் பூணூலில் ஒரு முடிச்சுக் கட்டுகிறார்கள். பசுவின்பாலும், ஆசனத்தோலும், மார்புநூலில் அணிவதும் பிராணிகளின் இரத்தமும் இறைச்சியுமாக இருப்பதை எடுத்துக்காட்டி, ஆருயிர்க்கெல்லாம் மனிதன் அன்பு செயும் நெறியே சைவ நெறி எனும் உண்மையினை உணர்த்துகின்றார்.

சிவவாக்கியர் சிவபக்தி நிறைந்த சித்தராகவே காணப்படினும், சமரச சன்மார்க்க ஞானியாகவே விளங்குகின்றார். அதற்குக் காரணம் அவர் வாழ்ந்த காலத்தில் சைவ வைணவ சமயப் போர்களும், புத்த சமண மதங்களின் போராட்டங்களும் வைதீக நெறியின் வளர்ச்சிக்காக நாடெங்கும் வளர்க்கப்பட்ட முறைகளுமேயாகும்.

ஐம்புலங்களும், ஐம்பூதங்களின் தொடர்புடையன. இது பிண்டமாகிய உடலை அண்டமாகிய பிரபஞ்சம் வரையில் விரித்துச் செய்யும் தியானமாகும். ஆத்மா பிரபஞ்சம் முழுதும் விரிந்தது அறிந்து கொள்க. என வழிபாட்டுச் சடங்கினை மானுட உடலினுள்ளேயே கண்டு யாவருக்கும் தெளிவாக எடுத்துரைக்கின்றார்.

சிவவாக்கியர் எல்லாச் சமயங்களைப் பற்றியும் குறிப்பிடுகின்றார். எல்லாச் சமயத்தைப் பற்றிக் கூறினாலும், அவர் ஊனிலே உருகி உள்ளத்தில் கலந்து உண்மையறிவாய் நிற்பது சைவம் என்பது மட்டுமே என்று தெளிவுபடுத்துகிறார். சிவவாக்கியர் சமுதாயத்தின் மீது மிக்க அன்பு கொண்டதால்தான் தவறான பாதையில் சென்றுகொண்டிருக்கிற உலகத்தை தேவையற்ற சாதி, சமய வேற்றுமை, சடங்குகள் இவற்றுக்கு மாறாகச் சாதி சமயப் பூசலற்ற, எல்லாச் சமயத்தையும் ஏற்றுக்கொள்கின்ற சமயக்கால்பற்ற, ஆன்மாக்களின் உள் இருக்கின்ற இறைவனை மெய்யறிவுப் பாதையில் உணர வழிகாட்டினார்

மக்கள் சமுதாயத்தில் நிலைத்திருக்கும் அனைத்து மூடத்தனத்திற்கும் காரணமாக அமைவது கல்வியின்மையே. அதாவது சாதி வேற்றுமை, மதவேற்றுமை, தேவையற்ற மூடத்தனமான சடங்குகள், பெண்களின் பெருமை அறியாது இல்லறத்தை இகழ்ந்து பேசல் போன்ற இவையனைத்திற்கும் காரணமாய் அமைவது கல்வியின்மை மட்டுமே. கல்வியின்மை என்பதையும் பொதுவாகக் கூறாமல் காணுமிடமெங்கும் நீக்கமற நிறைந்திருக்கும்

இறையை உணரத் தேவையாகும் ஞானக்கல்வி அல்லது ஆன்மீக் கல்வி இல்லாமை மட்டும்தான் என்பதனை எடுத்துக்கூறுகிறார்.

ஆனாதிக்கமும், பெண்ணடிமைத் தனமும் ஓங்கியிருந்த அந்த கால கட்டத்தில் பெண்ணடிமைத்தனம் அல்லது ஆண்,பெண் பாகுபாட்டினை எதிர்த்து கலகக் குரல் கொடுக்கிறார் சிவவாக்கியர்.

இறைவனின் பெயரில் நடக்கும் உயிர்ப்பலியைக் கூடாது என தமது பாடல்வழியாக கண்டிக்கவும் செய்கிறார் சிவவாக்கியர். இறைவனின் பெயரில் நடக்கும் உயிர்ப் பலியினை வன்மையாகக் கண்டிப்பதுடன், அவ்வாறு பலியிடுவதனால் உங்கள் தெய்வமே உங்களைப் வஞ்சிக்கும் என்றும் கடும் சினம் கொண்டு வலியுறுத்துகின்றார்.

தம் வாழ்நாளின் முற்பகுதியைப் புறவழிப்பாட்டில் செலுத்திப் பயனில்லாமல், வாடி அகவழிபாடம் ஞானமார்க்கத்திற்கு வந்ததடைந்ததை சிவவாக்கியரின் வாழ்க்கைக் குறிப்புக் காட்டிடுவதை அறியமுடிகிறது. ஆருயிர்கட்கெல்லாம் அன்புசெயல் வேண்டும் என்னும் அன்புநெறிக் கூறும் இவர் தம் பாடல்கள் மூலம் தீண்டாமையினைத் திட்டமாக வெறுக்கும் மகாத்தமாவாகவும் உருவ வழிப்பாட்டினை ஒப்புக்கொள்ளாத நிலையிலும் சமயங்கள் கொண்ட தனித்தனிக் கடவுளரை ஒன்றே என்றுணர்த்தும் உண்மைத் தன்மையினையும் கொண்டே தம் வாழ்வையும் தொண்டினையும் மக்களுக்கு ஆற்றுகிறார் என்ற நிலையைத் தெளிவுபடுத்துவதாக இரண்டாம் இயல் அமைகிறது.

சித்தர்கள் யாவரும் மனித நேயம் மிகுந்தவர்கள். சாதி சமய வேறுபாடு அற்றவர்கள். சமரச சன்மார்க்கத்தைப் போற்றுபவர்கள். போலிச் சடங்குகளையும், பொருளற்ற செயல்களையும், மூடநம்பிக்கைகளையும் கண்டிப்பவர்கள். அவர்கள், மனித வாழ்வு மிக உயர்ந்தது என்ற கருத்தை முன் வைத்துள்ளார்கள்.

சிவவாக்கியர் உருவ வழிவாடுகள், நாள், கோள் – பார்க்கும் சோதிடம், விரதங்கள் ஆகியவற்றால் வேடமிட்டு மக்களை ஏய்க்கும் சமயவாதிகளின் போலிச் செயல்களைப் புலப்படுத்தி, அவ்வழி உண்மைத் தத்துவங்களை உணர்த்துகின்றார். இதனை ஆழ்ந்து நோக்குங்கால் நிறைவான பகுத்தறிவு வாதங்களாகவே இவை அமைகின்றன. இத்தகைய சித்த நாத்திக உண்மை நெறிகளை, மக்களின் வாழ்க்கைக்குத் தேவையான அரணாக்கி பல அறங்களை எளிய முறையில் தம் பாடல்களில் வெளிப்படுத்துகிறார்.

சித்தர் சிவவாக்கியரின் அறிவியல் அறிவுரைகள் சமயக் குப்பைகளைச் சாடி நின்று, பொய் மதங்களைப் புறக்கணித்து போலிகளைத் தோலுரித்துக் காட்டுகின்றது. ஆசையால் தினமும் பிறர் பொருளை மோசம் செய்து அபகரிக்க சிலர் பூசை, நேமம் (வழிப்பாட்டு முறைகள்), நிட்டை (தியானம்) போன்றவற்றை சிறப்பாகச் செய்துக் காட்டுவர். அவ்வாறு

இருக்கும் போலிகள் இவ்வுலகில் அவர்களுக்காக காத்திருக்கும் நரகிற்கே போக நேரிடும் என்கிறார்.

முத்திக்குப் போக இங்கேயே சித்தி தருவேன் பார் என்று சத்தியம் சொல்லி எங்கும் சாமிவேடம் கொண்டு, தினமும் வயிறு வளர்ப்பதற்காக நீதி ஞானம் பேசும் இத்தகைய போலித் துறவிகள் பக்தியைச் சொல்லிச் சொல்லிப் பணம் பறிப்பார். இறுதியில் பாழ்நரகில் வீழ்வார்கள்.

இவ்வாறாக மேற்கண்ட பல பாடல்கள் மூலமாக போலி வேடதாரிகளின் புரட்டினை சாடியும், சாதி சமய வேடப் போலிகளைத் தட்டிக் கேட்டும், உண்மை நெறிகளை உணர்த்தியும்,சாதி சமய சடங்குகளின் மூடநம்பிக்கைகளையும் அதன் வாயிலாக எழுகின்ற பொய்மைகளையும் புலப்படுத்தி மக்களின் சித்தத்தைத் தெளிய வைக்கிறார்.

வாழ்வியல் உண்மைகளை ஞானத்தால் பகுத்தறிந்து மெய்ஞ்ஞானம் பெற்ற சித்தர்களே விஞ்ஞான கலரென்று குறிக்கப்பெற்றனர். அவ்வகையில் சித்தர் சிவவாக்கியர், அஞ்ஞானமாகிய அறியாமை நீங்க அவர் தந்த அறிவியல் தத்துவங்கள் யாவும் சித்த விஞ்ஞானமாகும். அறங்களிலே சிறந்தது இல்லறம் போற்றும் நல்லறமேயாகும் என்பதனை தம் பாடல் வழியாகவும் எடுத்துக்கூறுகிறார்.

சிவவாக்கியரின் படைப்பினை முழுமையாக நோக்குமிடத்து அவை அனைத்தும் “சமூகச்சீர்மை” எனும் மையப்புள்ளியை நோக்கிச் செல்வதை உணர முடிகிறது. ஒன்றேயாகிய பரம்பொருள் எங்கும் எதிலும் எவருக்கும் பொதுவாய் நிறைந்திருக்கிறது எனும் இயற்கைக் கோட்பாடும், இறையின்பம் துய்க்க இடைத்தரகரும், பொருட்செலவு மிக்க புறவழிபாடுகளும் தேவையில்லை எனும் புறவழிபாட்டு மறுப்பும், இறையின்பம் ஆகிய அகக்காட்சி அனுபவம் சாதி, சமய, சமூக மதிப்பு எனும் வேறுபாடுகளின்றி மக்கள் அனைவருக்கும் பொதுவானது என்ற எடுத்துரைப்பும், “ஆன்மீகப் பொதுவுடைமை” கூறும் சிவவாக்கியரின் கருத்துக்கள் யாவும் சமூகச் சீர்மையை நோக்கிச் சிறப்புற அமைந்துள்ளதைக் காணமுடிகிறது.

சமுதாயத்தில் மலிந்து நின்ற பொய்மைகளை எதிர்த்துப் புரட்சிக்குரல் கொடுத்தவர்களுள் குறிப்பிடத்தக்கவர் சிவவாக்கியர் ஆகிறார். தாம் வாழும் சமுதாயத்தைப் பற்றி அதிகம் அக்கறை கொண்டும் அவர் சமூக ஏற்றத்தாழ்வுகள், ஏமாற்றுகள் ஆகிய சமூகக் கேடுகளைக் களைந்து மக்கள் அனைவரும் இணைந்து அன்புடன் வாழ்ந்திட நெறிப்படுத்துகிறார்.

இறைவன் படைப்பில் எல்லோரும் சமம். இதில் உயர்ந்தவர் தாழ்ந்தவர் என்ற பேதம் இல்லை. மனிதருக்குள் வேறுபாடு காண்பது அவனுடைய அடிப்படை உரிமையையே (Constitutional Rights) பறிப்பதாகும் என்று தீண்டாமைக்கு எதிராக குரல் எழுப்புகிறார் சிவவாக்கியர். சாதிபேதங்களால் திளைந்து எழுந்த சர்வசீவன் ஆனபின் இறையோடு கலந்து

பல் பிறப்புகள் எய்தியபின் ஞானியாகி நிற்கும் பேறு கிட்டும் என்பது விளக்கமாகும் என்று உண்மையில் ஞானிகள் சாதி பேதத்தை ஏன் ஏற்பதில்லை என்பதற்கு விளக்கம் அளித்தவர் சிவவாக்கியர் மட்டுமே ஆவார்.

"பிறப்பொக்கும் எல்லாவுயிர்க்கும்" என்பது வள்ளுவம் கூறும் வாக்கு. சித்தர்களின் பார்வையும் அத்தகையதே. சிவவாக்கியரும்,"பிறப்பால் அனைவரும் ஒருவரே" என்ற கருத்தை அடியாகக் கொண்டு, எல்லா மனிதரும் சலம் திரண்ட நீராலே உருவானவர்கள் என்றிருக்கையில் "சாதி எங்கே" என்கிறார் சாத்திரங்களை மேற்சாதியினராகிய ஒரு சிலர் மட்டுமே கற்கும் வாய்ப்பினைப் பெற்றிருந்தனர். அவ்வாறு கற்றவர்கள் அவற்றை அறியாத பிறரை இழிவாக மதித்தனர். இவ்வாறு இழிவுபடுத்தச் சாத்திரங்களைத் துணைக்காக்கும் சாத்திரிகளையும், வேதம் ஓதும் அந்தணர்களையும் சிவவாக்கியர் கடுமையாகச் சாடுகிறார்.

சாத்திரங்களுக்கு அடுத்தநிலையில், பூசைகள், வழிபாட்டு முறைகள் போன்றவற்றில் சடங்குகளைப் பின்பற்றி மக்களைத் திசைமாற்றிவிடுகின்ற அவலமும் சமுதாயத்தில் நிலவுவதைக் கண்ட சித்தர்கள் அவற்றையும் கடுமையாகச் சாடுகின்றனர்.

கோவிலும் குளங்களும் வழிபாட்டுக்குரிய சிறப்புச் சாதனங்கள்தாம். என்றாலும், அவற்றின் உட்பொருள் அறியவொட்டாமல் புறச் சடங்குகளாக அவை போய்விட்ட நிலை கண்டு வெகுண்டு பாடும் சிவவாக்கியர் "**உள்ளமே கோயில் எண்ணமே தெய்வம்**" எனும் தெளிவைத் தருகிறார். கல்லொன்றை நட்டுக் கடவுள் என்று பேரிட்டுச் சுற்றிவந்து, என்னவென்று விளங்கிக் கொள்ள முடியாத வார்த்தைகளையும் தெளிவற்ற ஒலிச்சத்தத்தையும் மந்திரங்களென்று முணுமுணுக்கிறவர்களையும் கடுமையாகக் கண்டிக்கிறார்.

உருவநிலையிலும் அருவநிலையிலும் அருவுருவ நிலையிலும் வைத்து இறைவனைப்போற்றும் மரபு சமய உலகில் உண்டு. அதைபோல் உருவவழிபாட்டின் மூலமாக மக்களை ஏமாற்றிப் பணம் பண்ணுவதும் ஆன்மீகத்திற்குப் புறம்பான தீங்குகள் புரிவதும் ஆகிய நிலை கண்டு வெதும்புவது சிவவாக்கியர் தம் இயல்பாக இருப்பதைப் பார்க்கமுடிகிறது.

சமய வழிபாட்டில் ஒதுக்கத்தக்கதாய் இன்றைக்கும் அமைந்து மானுடருள் பேதம் பெரிதும் விளைக்கும் ஒரு நம்பிக்கை தீட்டாகும். இது பெரிதும் பெண்களைப் புறக்கணிக்கும் ஒரு போக்காகும். இதனை முன்னிறுத்தி அவள் சமய, சமுதாய, நிகழ்வுகள் அனைத்திலும் புறக்கணிக்கப்படுகிறாள் மாதந்தோறும் பெண்களுக்கு உண்டாகும் உதிரத்திரட்சி வெளிப்பாடு இயல்பாக நிகழ்கிறது. இது நிகழாவிடில் மகப்பேறு இல்லை. உயிர்கள் உடம்பெடுத்தலுக்கு இது இன்றியமையாதது. இதனை அறிந்திருந்தும், அவ்வகைச் சூழ்நிலையில் பெண்களைத் தீட்டு என்றுப் புறந்தள்ளுவதைச் சிவவாக்கியர் பெரிதும் சாடுகின்றார்.

ஒவ்வொரு தனிமனிதரும் ஒழுக்கம் நிறைந்தவராக மாறிவிடின் ஒட்டுமொத்த சமுதாயமும் திருந்த வாய்ப்புண்டு. அந்தவகையில் சித்தர்கள் சமுதாய ஒழுக்கத்தை மேம்படுத்தத் தனிமனித ஒழுக்கத்தை நன்கு வழியுறுத்துகின்றனர். மனத்திலே அழுக்கினை நீக்காத மௌனஞான யோகிகள் வனத்தகத்து இருந்து தவம் புரிந்தாலும் மன அழுக்குடையோராய் இருப்பர். மனத்தகத்து மாசு அறுத்த மௌனஞான யோகிகள் மாதரொடு முயங்கியிருந்தாலும் மனத்தால், தூய்மை உடையோராய்த் திகழ்வர். என்று சிவவாக்கியர் விளக்குகிறார்.

“சமயப் பிரிவுகள் மக்களிடையே ஏற்படுத்திவிட்ட பூசல்களையும் பகைமை உணர்வையும் கண்டு சித்தர்கள் மனம் வருந்தினர். அன்பைப் பெருக்க வேண்டிய சமயம், அறிவுக்குப் பொருந்தாத செயற்கைப் பிரிவுகளால், மக்களிடையே வெறுப்பையும், வன்முறையும் வளர்த்தது. இந்தச் சமயப் பூசல்கட்குக் காரணங்களைக் கண்டு அவற்றைக் களைவதில் முற்பட்ட சிவவாக்கியர் முதன்மையாகிறார்.

அவரது நோக்கில், **“அரியும் சிவனும் ஒருவரே”**. **“சைவமும் வைணவமும் ஒன்றேயாம்”**. ஒரு பரம்பொருளின் இருகூறுகளாகச் சிவனையும் மாலையும் அவர் சுட்டிக்காட்டுகிறார் சித்தர் சிவவாக்கியர் தீமைகளை, சமூக அநீதிகளை மட்டும் எதிர்த்தார் அல்லர். அவற்றுக்கு எதிராக நன்மைகளையும் சமூக நீதிகளையும் நிலைநிறுத்தினார். பொய்ம்மையை எதிர்க்க அவருக்குள் வலுவாக நின்றது உண்மைத் தெளிவேயாம். அவர் மறுதலித்த அத்தனை சமுதாயத் தீமைகளுக்கும் எதிராக நற்பயன் நல்கும் மாற்றுச் சிந்தனைகளையும் அவர் முன்வைத்திருக்கிறார் எனபதே இங்கு இவரின் செயலில் காணக்கிடைக்கும் சிறப்பாகும்.

தனிமனித ஒழுக்கத்தின் இன்றியாமையாததின் தன்மையினை அறிவுறுத்தல், சமய ஒருமைப்பாட்டினை வழியுறுத்தல் போன்றவற்றைப் பற்றி எல்லாம் அறிவியல் பூர்வமாக அணுகி, அணுகிய அவ்வனுபவங்களை அறங்களாக்கி மக்களுக்கு தம் பாடல்களில் வார்த்திருக்கிறார் சித்தர் சிவவாக்கியர் என்கிற நிலையினைத் தெளிவுபடுத்துவதாக இம்மூன்றாம் இயல் அமைகிறது.

**“ஆறிவுதான் ஆண்டவன்”** என்பதனை உணர்ந்து, அக்கோட்பாட்டின் கண் வழிப்பட்டுத் தன்னையறிந்து, தன் தலைவனை உணர்ந்து, வாழ்வின் உண்மையில் ஒன்றுப்பட்டு நின்ற சித்தர் சிவவாக்கியர் வாழ்வியல் கூறுகளை தம் பாடல்களில் கூறி சென்றுள்ளமையை காணமுடிகிறது.

ஒன்றே பலவாக பரிணமித்திருக்கிறது என்பது இந்தியத் தத்துவங்களில் பரவலாகக் காணப்படும் கொள்கை. சித்தர்கள் பலரும் இக்கொள்கை உடையவர்களே. உயிரும் உடலும் சேர்ந்து உலகியல் வாழ்வுக்கு வருவதைப் பிறப்பு என்பது சிவவாக்கியாரின் கருத்தாக உள்ளது.

கருவில் நாம் உருவாகும் முன் நமக்குரிய உடம்பு எங்கே காத்திருந்தது? உருவம் உடம்பிற்கு உண்டாவதற்கு முன்பு உயிர்ப்பு எவ்விடம் இருந்ததது? கருவில் உடல் உண்டாகும் முன்பு அது எங்கே இருந்தது என்றால் அது சோதியில் என உணர்க. உரு உண்டாவதற்கு முன் உயிர்ப்பு எங்கே இருந்தது என்றால் அது நீரிலேயாகும் என்றும் விளக்கியுள்ளார்.

விதையில் வளரும் ஆலமரம் அதற்கு முன்பு எங்கிருந்தது? அது சூரிய ஒளி சூழ்ந்த பரவெளியில் இருந்தது. அதன் துணையுடன்தான் மரம் வளர்ந்தது. உணர்வு கூட இந்த வெளியில்தான் உள்ளது. எல்லாமே வெட்ட வெளியில்தான் உள்ளன என்ற உண்மையை விளக்கியுள்ளார்.

தானேயாய் மலர்ந்த தாதுவாகிய மூலப்பிரகிதியிலிருந்து பூமியானது தோன்றியதும், அந்தப் பூமியில் பல பொருள்களும் கலந்து நிரம்பியதும், பிறகு அவை பிரிந்ததும், ஐந்து புலன்களும், பொறிகளும் தமக்குள் கலங்கியே பூமியில் விழுந்து உடல்களாக வந்தன எனவும் இந்த உலகின் தோற்றத்திற்கு காரணமாக இருக்கும் நிலையைக்கண்டு தெளிவுப்படுத்துகிறார்.

ஆதியும் அந்தமுமாகிய மூலப்பிரகிதியிலிருந்து விந்துவும் நாதமும் (ஒளியும், ஒலியும்) தோன்றி ஐந்து பூதங்களாய் விரிந்தன. இதேபோல் உடம்பிலும் மூலாதாரத்திலிருந்து ஒளியும், ஒலியும் தோன்றி ஐம்பூத ஆதாரங்களாக விரிந்தன. இவ்வாறாக அண்டத்திலும் உடலாகிய பிண்டத்திலும் மூலப்பொருள் விந்து நாதங்களாகத் தோன்றுவது அவைகளாகவே அடங்குவதும் சிவாயத்தாலே என்கிறார்

ஆணும் பெண்ணும் கூடியதால் கருத்தரித்து குழந்தைப் பிறக்கிறது. கருத்தரிப்பதற்கு முன் காயம் (உடல்) என்பது வெப்பமாய் இருந்தது என்றும், உருவம் தரிப்பதற்கு முன் உயிர் என்பது நீராய் இருந்தது என்றும், சிவவாக்கியர் தன் பாடலின் வழியாகத் தெளிவுபடுத்தியோடு மட்டுமன்றி, உருத்தரிப்பதற்கு முன்பு உயிரானது, ஆடவரிடம் விந்து என்ற நாதத்துடன் கலந்து நிற்கும் என்பதனையும், கருத்தரிப்பதற்கு முன்பு உடல் எனும் காயம், பெண்ணிடம் தோன்றும் சுரோனிதம் என்னும் சோவிதத்திலே நிலை கொண்டிருக்கிறது என்றும் தெளிவுபடுத்துகிறார்.

விந்து என்ற சுக்கிலமே மானுடப் பிறப்புக்கு வித்தாகிறது. அந்த வெண்ணிறமாகிய நீரே பெண்ணுடல் கலந்தபின் கருத்தரித்து உருவாமாகிறது. அவ்வாறு உருப்பெற்று, மனிதனிடமே மீண்டும் தோற்றமெடுப்பதுவும் அதுவேயாகும். அது தொடர்ந்து இடையறாமல் செயல்படுகிறது என்றும் விளக்கமளிக்கிறார்.

அண்டத்தில் உள்ளது பிண்டத்திலும் உள்ளது. தானேயாய் மலர்ந்த தாதுவாகிய மூலப்பிரகிதியிலிருந்து பூமியானது தோன்றியதும், அந்தப் பூமியில் பல பொருள்களும் கலந்து நிரம்பியதும், பிறகு அவை

பிரிந்ததும். ஐந்து புலன்களும், பொறிகளும் தமக்குள் கலங்கியே பூமியில் விழுந்து உடல்கள் வந்தது எனச் சிவவாக்கியர் கூறுகிறார்.

புவியில் முதல் உயிரானது வேதியில் தாக்கங்களின் விளைவால் நீரினடியிலே உருவாகின. இதற்கான சூழல் தரையில் இல்லாமையால் ஆழமான நீரே இதற்குப் பொருத்தமான ஊடகமாகத் திகழ்ந்தது. இந்த வேதியல் தாக்கங்களுக்கான சக்தி கடலடி எரிமலைகளாலும், புற ஊதாக் கதிர்களாலும், மின்னலாலும் கிடைக்கப்பெற்றன.

பரந்த இந்த அண்டம் பருப்பொருட்களினால் ஆனது, இந்தப் பருப்பொருள், பல தனிமங்களால் உண்டானது. இப்பலத் தனிமங்களே வாயுக்களாக பரிணமித்தது, இந்த வாயுக்களே பஞ்சப் பூதங்கள் (தனிமங்கள்) என வழங்கப்பட்டு உலக உருவாக்கத்திற்கு அடிப்படைக் காரணம் எனக் கொள்ளப்படுகிறது. இந்தப் பஞ்சப் பூதங்களே புவியில் உயிர்களின் தோற்றத்திற்கு தோன்றுவாயாக அமைந்திருக்கிறது என்பது மிகவும் நுட்பமான அதே வேளையில் தின்னமாகும் என்று சித்தர் சிவவாக்கியர் பாடல்களின் வழியாக அறிவியல் துணைக்கொண்டு விளக்குவதாக நான்காம் இயல் அமைகிறது.

மனித வாழ்வில் இன்ப உணர்வை அனைவரும் விரும்புகின்றனர். தொடர்ந்து இன்ப உணர்வை அடைய முயல்கின்றனர். பற்பல நினைவுகளால் தாக்குண்ட மனிதன் துன்ப உணர்வால் அலைக்கழிப்படுகின்றான். நிலையான இன்பம் எப்பொழுது கிடைக்கும், எப்படி கிடைக்கும் என்றெல்லாம் அவன் ஏங்குகின்றான். இந்நிலையில் உலகியலை அறிவால் அறிந்து நல்வுணர்வால் தூண்டப்படுகின்ற நன்னிலையை அடைந்தால் பேரின்பம் அடையமுடியுமோ என்று எண்ணிய சான்றோர்களின் சிந்தையில் தோன்றிய, உறுதியானதும் இறுதியானதும் ஆகிய நல்லுணர்வே இறையுணர்வு என்பதை சித்தர்கள் தெளிவுபடுத்துகின்றனர்.

தமிழ் இலக்கியங்களில் இறையுணர்வு மிகுதியாக இடம் பெற்றுள்ளது. சித்தரிலக்கியம் பிற இலக்கியங்களினின்றும் வேறுபடும். பிற இலக்கியங்களில் கதைகள் மூலம் நீதிக்கருத்துகளும், இலக்கிய இன்பமும் வெளிப்படுத்தப்படுகின்றன. ஆனால் சித்தர் இலக்கியங்களோ கடவுள் பற்றிய கருத்துக்களையும், வாழ்வியல் நெறிகளையும் மிகுதியாக விளக்கிக் குறிப்பிடுகின்றன.

சிவவாக்கியரின் நோக்கில், யோகம் என்பது மனதை ஒருநிலைப்படுத்தி அகமுகமாக இறைவனைத் தம்முளே உணர்வது அல்லது இறைவன் என்ற நிலையுடன் இரண்டறக் கலந்துவிடுவிடுதாகும்.

இறைவனை அடைவதற்குரிய படிநிலைகள் நான்கையும் அவற்றின் பயன்களையும் தனித்தனியாக மற்றவர்கள் சொல்லியிருக்க, சிவவாக்கியர் இன்ன இன்ன படிநிலைக்கு, இன்ன இன்ன பயன் பெறுவார் என்பதைப்

பொருத்திக் காட்டியிருப்பது சிறப்பான மற்றும் முறையான விளக்கமாகத் திகழ்கிறது.

உயிர்ச்சக்தியானது நம் உடலில் சூக்குமநாடிகள் வழியே வாயுவாக ஓடிக் கொண்டிருக்கிறது என்றும், நம் உடலில் ஓடும் வாயுக்கள் மூச்சுப்பயிற்சியின் வழியாகவே கட்டுப்படுத்தப்படுகின்றன என்பதையும் விளக்கிக் கூறுகிறார். பிராணயாமம் என்பது பொதுவாக மூச்சுப்பயிற்சியைக் குறித்தாலும், அது நம் உடலில் ஓடிக் கொண்டிருக்கும் பிராணன் என்னும் உயிர்க்காற்றின் பயிற்சியையே சிறப்பாகக் குறிக்கிறது. நாசி, மூச்சுக்குழல், காற்றுப்பை வழியாக வாங்கிவிடும் மூச்சை ஒழுங்குப்படுத்தும் பயிற்சியின் மூலமே பிராணனின் ஓட்டத்தைக் கட்டுப்படுத்த முடியும். மூச்சுப் பயிற்சியின் மூலம் கட்டுப்படும் பிராணன் எனும் உயிர்ச்சக்தி தன் கொதிப்பும் கொந்தளிப்பும் அடங்கி அமைதி அடைகிறது. மூச்சோடு மிக நெருங்கிய தொடர்புடையது மனம். மன அதிர்வுகளே மாயா காரியங்கள் அனைத்திற்கும் காரணமாகின்றன. மூச்சுப்பயிற்சியின் மூலம் கட்டுப்படும் மனத்தில் அதிர்வலைகள் மறைகின்றன, அமைதி நிலவுகின்றது. எனவே, மூச்சுப்பயிற்சியானது பிராணனை ஒழுங்குப்படுத்தவும் மனத்தை ஒருமுகப்படுத்தவும் வழி செய்கிறது என்பதனை தெளிவுபடுத்துகிறார்.

பிராணயாமப்பயிற்சி மூன்று உறுப்புக்களை உடையது, மூச்சை **வெளியிடுதல், உள்ளிழுத்தல், நிறுத்துதல்** என்ற முறையில் இப்பிராணயாமப் பயிற்சியானது நடக்கிறது. காற்றுப்பை ஏறத்தாழ வெற்றிடமாகும் வரை முதலில் காற்றை வெளியேற்ற வேண்டும். இது இப்பயிற்சிக்குத் தயாராகும் நிலையாகும். தாமரைத் தண்டில் நீர் ஏறுவதைப் போல மூச்சை நேராக உள்ளிழுக்க வேண்டும். இதற்குப் பூரகம் என்றும் இவ்வாயுவை அபானன் என்றும் கூறுவர். உள்ளிழுத்த காற்றை உள்ளே நிறுத்துதல் கும்பகம் எனப்படும். கும்பகப்படும் வாயுவை வியானன் என்று கூறுவர். உள்ளே நிறுத்திய காற்றை சீராக வெளியிடுதல் ரேசகம் எனப்படும். இவ்வாயுவையே பிராணன் என்று கூறியுள்ளார்.

இப்பிராணாயாமப் பயிற்சியை மேற்கொண்டு மனிதன் உயிர் வாழ அடிப்படையாக விளங்கும் மூச்சினை ஒழுங்குப்படுத்தி தமது கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவந்து விட்டால். உடலின் உள் உறுப்புகளும் வலிமை பெறும். நீண்ட ஆயுட்காலத்தையும் மனிதனானவன் தனது வாழ்நாளில் எய்துவான், அவனது ஆரோக்கியமும் மேன்மையடையும். இதனை, ஔவையாரும் தமது பாடலின் வாயிலாக எடுத்துக்கூறுகிறார்.

பாடகர்கள் பாட்டினை பாடும்போது, இப்பிராணாயாமப் பயிற்சியானது நிகழ்வதால் தான் பாடகர்கள் அனைவரும் நீண்ட ஆயுளைப் பெற்று வாழ்வதை நாம் காண்கிறோம். மேற்கூறிய எடுத்துக்காட்டு ஔவையாரின் கூற்றினக்கு துணைபுரிகின்றன.

வாசி என்பது உயிர்மூச்சு, வாசியோகம் என்பது உயிர்மூச்சை உள்மார்க்கமாக நெறிபடுத்தி உயர்நிலையை அடைதலாகும என்று மூச்சுக்கலை பற்றி நுட்பமாக விளக்கியுள்ளார். உடம்பில் மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை ஆகிய ஆறு ஆதாரங்களைச் சிவவாக்கியர் ஆறுதாமரைகள் என்றும் ஆறு மாநிலங்கள் என்றும் குறிக்கின்றார். இரண்டிரண்டு ஆதாரங்களை ஒவ்வொரு மண்டலம் எனக்கொண்டு முறையே, ஆறு ஆதாரங்களை மூன்று மண்டலங்களாகாக் காட்டுகிறார். குண்டலினியைச் சிவவாக்கியர், வித்து என்று குறிப்பிடுகின்றார். குண்டலினி சக்தி என்பது விந்துவின் சிறப்பு ஆற்றலாகும். இது போகத்தின்போது கீழ்நோக்கிப் பாய்ந்து சிற்றின்பம் ஆகிறது. யோகத்தின்போது மேல்நோக்கி ஏறிப்போய் பேரின்பம் பயக்கிறது.

மூலவினாத்தண்டு என்பது முதுகுத் தண்டாகும். ஆறு ஆதாரங்களும் இம்மூல வினாத்தண்டுகளையே அமைவிடமாகக் கொண்டுள்ளன. மூலவினாத்தண்டின் நடுவில் கீழிருந்து மேலாக அமைந்துள்ள மெல்லிய நுண் குழல் சூக்குமநாடி எனப்படும். சுழிமுனை என்பது மூக்கின் மேல்நுனியும் புருவங்கள் இரண்டும் சந்திக்கும் இடமாகும். இதனை, சிவவாக்கியர், மூன்றாவது கண் என்றும் நெருப்பறை என்றும் குறிப்பிடுகின்றார்.

நெற்றிக்கண் நாட்டத்தில் மனதை வைத்துக் குண்டலினி சக்தியோடு கூடிய உணர்வால், கருத்துடன் கவனித்தால் சுழிமுனையில் சுவாசம்தானே அடங்கி மனோலயம் உண்டாகும். அப்போது சிரசினுள்ளே செஞ்சுடர் சோதி தோன்றித்திகழும். பலவிதமான நாத ஒலிகள் பரநாத ஒலிகள் எழுந்து இன்பம் தரும்.

மூச்சின் நீளம், உச்சிநோக்கி ஒடுங்க அட்டமாசித்திகள் எனப்படும் எண்பெரும் ஆற்றல்கள் சித்தியாகும். மூளைக்கு மேலேயும் மண்டை ஓட்டிற்குக் கீழேயும் உள்ள இடைவெளி உச்சியாகும். இதைச் சிவவாக்கியர், வெளி என்றும் வட்டவீடு என்றும் குறிப்பிடுகின்றார்.

வாசியால் ஏறிய குண்டலினி சக்தி இந்த உச்சி வெளியாகிய பிரம்மரந்திரத்தைத் தட்டி, வெப்பம் ஆக்குகிறது. தக்க வெப்பம் கிடைத்தவுடன் உருகி அமிர்தம் கரந்து உள்ளில் இறங்கும். இவ்வமிர்தம் மாங்காய்ப் பால் எனப்படும் என்றும், சமாதி என்பது மூச்சு உள்ளில் முழுமையாய் ஒடுங்கி இவ்வமிர்தபானத்தை உண்டு மரணத்தை வென்று பேரின்பத்தில் இலயித்திருப்பதாகும். இம்மேலான நிலையினை எய்திய சித்தர்கள், எத்தனை ஆண்டுகள் வேண்டுமானாலும் உயிரோடு கூடிய உடம்பு அழியாது இருப்பர். ஊழிக்காலம் வாழ்வர் என்பது சிவவாக்கியரின் கூற்றாகும்.

பெறற்கரிய இப்பேரின்பப் பெருநிலையை அளிப்பது, யோகநெறியாகிய வாசியோகமும், அதனாலாகும் குண்டலினி யோகமுமாகும்.

எனவே சிவவாக்கியர் உணர்த்தும் சித்தநெறி யோகநெறியே என்பது புலனாகின்றது.

பஞ்சபூதங்களின் குணங்களில் எல்லாம் இறைவனே நிறைந்து நிற்கிறான். மனித உடம்பு நமசிவய என்னும் ஐந்தெழுத்தின் அமைப்பாகப் படைக்கப்பட்டுள்ளது. 51அட்சரங்கள், ஆறாதாரங்களுடன் தொடர்புடையனவாய், மந்திரமாய், ஆகமமாய் நிறைவது 51 எழுத்து என்றும், எட்டும் இரண்டு என்பது அகரம், உகரம் என்பதுடன் எட்டு அடுக்குகள் கொண்ட தூல தேகமும், இரண்டு நிலைகொண்ட பிராமணகோசமும் ஆகும். மனத்தை ஒருமைப்படுத்தித் தன்னை அறிதலுக்கு முறைப்படுத்த வேண்டும். என்று விளக்குகிறார்.

அகத்துள்ளே இறைவன் உறைகிறான். உண்மை, அறிவு என்பது ஞானமாகிய சோதி – உள்ளத்திலே இருப்பதைக் கண்டுணர்வதேயாகும்.

ஆன்மாவை இறைமையில் கலக்கச் செய்யும் யோகப்பயிற்சிக்கு உறுதுணையாக உடல் இருப்பதால் அதன் நலனுக்காவும், வலிவோடும் வளமோடும் வைத்துக்கொள்ளவுமே சிலப் பயிற்சிகள் மேற்கொள்ளப்படுகின்றன. இதுவே யோகாசனம் என்று அழைக்கப்படுகிறது. இப்பயிற்சிகளின் மூலம் உடலின் அகபுற உறுப்புக்களையும் அவற்றின் இயக்கங்களையும் கட்டுப்படுத்தி நாம் விரும்பும் வண்ணம் உடலை இயக்கமுடியும்.

உடலுறுப்புகளின் கட்டுப்பாடும் ஒழுங்கும் இல்லாமல் மனப்பயிற்சி மேற்கொள்வது கடினம். அதேபோல், மனப்பயிற்சியும் பக்குவமும் கலவாத உடற் கட்டுப்பாட்டால் பயனேதும் இல்லை. எனவேதான், சித்தர்களின் யோகநெறி மனத்தை அடிப்படையாக உடையது. இத்தகைய சித்தர்களின் யோகநெறி, இராசயோகம், வாசியோகம், குண்டலினியோகம் என்று பல பெயர்களால் அழைக்கப்பட்டாலும், கருத்துக்களை வலியுறுத்தும் வகையால் பெயர்கள் வேறுபட்டாலும், இத்தகைய யோகங்கள் யாவும் உடலையும் ஆன்மீக உணர்வையும் ஒன்று கூட்டிச் செய்யப்படும் யோகங்களே ஆகும்

இறந்தபின் இழிவினை அடையும் உடம்பினை அதனுள் உயிர் இருக்கும் காலத்திலேயே உரிய முறையில் முயன்றோமானால், இறைவனைக் காணுதற்குரிய திருக்கோயிலாக மாற்றிட முடியும் என்பது சித்தர் சிவவாக்கியாரின் இறைநிலைக் கோட்பாடாகும். சித்தர் சிவவாக்கியாரின் பாடல்கள் , மனித வாழ்வை மேன்மையுறச் செய்வதாயும், நோய்களற்ற வாழ்வவை வாழ்ந்து இறை நிலையை அடையும் பல வழிகளையும் சிறப்பாக விளக்கியுள்ளார்.

சித்தர் சிவவாக்கியாரின் யோகக் கலையைப் பற்றி எதிர்காலத்தில் ஆய்வு மேற்கொண்டால் மனித வாழ்விற்குத் தேவையான யோகக்கலையைப் பற்றிய செய்திகளை வெளிக்கொணரலாம்.

# முன்னுரை

தமிழ் இலக்கியப் படைப்புகள் காலந்தோறும் வடிவத்தாலும் பொருளாலும் மாறுபட்டு வந்துள்ளன. இலக்கிய வடிவங்கள் சுருக்கமும் செறிவும் வாய்ந்த வடிவமாதலால் தமிழர்கள் எல்லாவற்றையும் பாட்டு என்ற வடிவத்திற்குள்ளேயே ஆக்க முற்பட்டனர். இவ்வகையினிலேயே முகிழ்ந்து விளங்குவதுதான் சித்தர் இலக்கியமுமாகும். சித்தர்கள் தாம் கண்டறிந்த வாழ்வியல் உண்மைகள், உடலின் தோற்றம், பிறப்பு இறப்பு, ஞானநிலை, யோகம், உலகியல் உண்மைகள் போன்றவற்றை எல்லாம் இறைநிலையோடு இணைத்து இசைத்து பாடல்களாக்கி தமிழ்கூறும் நல்லுலக்கு வழங்கித் தமிழைப் போற்றுகின்றனர்.

இறைவனின் அருளை வேண்டி நிற்பவன் பக்தன், இறைவனின் தன்மையை உணர்ந்தவன் சித்தன். தமிழகத்தில் சித்தர்களின் மரபு என்பது ஆதி முதலே இருந்திருந்தாலும், அதற்கான குறிப்புகள் தொல்காப்பியர் காலத்திலிருந்துதான் நமக்குக் கிடைக்கப்பெறுகிறது.

**"மறுவில் செய்த மூவகை காலமும்**

**நெறியின் ஆற்றிய அறிவன"**

**(தொல்: புறத்திணையியல்: நூ- 2:16)**

என்ற தொல்காப்பியச் சூத்திரத்திற்கு உரைகூறுகிற இளம்பூரணர், அறிவனை, வானியலோடு கலந்து வருங்காலம் உணர்த்துகிற கணியன் என்று விளக்குகிறார். "இதே சூத்திரத்திற்குப் பொருள் கூறுகிற நச்சினார்க்கினியர் " அறிவன் " என்ற சொல்லுக்குத் தருகிற விளக்கமானது சித்தன் என்ற சொல்லுக்குரியப் பொருளாகவே அமைகிறது.

**"காமம் வெகுளி மயக்கமில்லாத ஒழுகாலற்றிணன், இறப்பும்**

**நிகழ்வும்,எதிர்வும் என்னும் மூவகைக் காலத்தினும் வழங்கும்**

**நெறியான் அமைந்த முழுதுணர்வுடையோன்"**

**(தொல்: இளம்: நூ -2)**

இந்த விளக்கத்தோடு அறிவர்க்குச் சான்றும் கூறுகிறார்.

"கலசயோனியாகிய அகத்தியர் முதலியோரும் அறிவரென்று உணர்க" என்று கூறுகிறார். அகத்தியர் அறிவர் என்று நச்சினார்க்கினியர் குறிப்பிடுவது இங்கு ஆழ்ந்து நோக்கத்தக்கது. சித்தர் பரம்பரையில் அகத்தியர் முதன்மையானவராகத் திகழ்வது கருத்தில் கொள்ளத்தக்கதாகும்

**“நிலமிசை வாழ்நர் அலமலர் தீரத்**
**தெறுகதிர்க் கனலி வெம்மை தாங்கிக்**
**கால் உணவாகச் சுடரோடு கொட்கும்**
**அவிர்சடை முனிவர்”**

**(புறநானூறு: பக்: 43: 1-4)**

பூமியில் உள்ள மாந்தர்களின் துயரங்கள் தணிவதற்காகசூரியன் முதலிய கோள்களின் வெப்பத்தை அமைதிப்படுத்திக் காற்றையே உணவாகக்கொண்டு, அச்சுடருடனே சூழவரும் சித்தர் எனப் புறநானுற்றுப் பாடலில் குறிக்கப்பெறுகின்றனர். இவை மட்டுமன்றி மணிமேகலை சித்தர்களைச் **சாரணன்** என்ற சொல்லால் அழைக்கிறது.

**“இருநிலம் புகுதலும் ஒருவிசும்பி வர்தலும்**
**வருதிரை நெடுங்கடல் வாய்க்கொண்டு மில்தலும்**
**மந்தர மேந்தலும், என்றிவை பிறவும்**
**பண்டியல் விச்சைப் பயிற்றி மாக்களைக் கண்டறிதும்”**

**(பெருங்கதை : 34: 86 –90)**

என்ற பெருங்கதையின் வரிகள் சித்தர்களின் சித்துக்களையே விளக்கி நிற்கிறது.

**“நீரினிற் பூவினில் வானினைந்துழி யொதுங்குகுகின்ற**
**சாரணரெண்மராவார் சமணரிலிருந்து பெற்றோர்”**

**(சூடாமணி நிகண்டு: பக்: 36)**

என்ற சூடாமணி நிகண்டின் வரிகளும் சித்தர்களையே விளக்கி நிற்பதைக் காணமுடிகிறது. சித்தர்கள் ஆதி முதலே தமிழகத்தில் வாழ்ந்துவந்தப் போதிலும், தொல்காப்பியரின் தொல்காப்பியதினின்று தான் அதற்கானத் தகவல்கள் முதலாக காணப்படுவதை அறியலாம். இதனின்றும் இலக்கியங்களும், இலக்கணங்களும் தமிழகத்தில் சித்தர்கள் காலந்தோறும் வாழ்ந்தமையை நன்கு உணர்த்துகின்றன.

## ஆய்வு நோக்கம்

சித்தர்கள் வாழ்ந்த காலத்தை வரையறை செய்தல் என்பது இயலாத ஒன்றாகும். ஏனெனில் வெவ்வேறு காலங்களில் தமிழகத்தின் பல பகுதிகளில் சித்தர்கள் பலர் வாழ்ந்துள்ளனர். தமிழ் இலக்கிய வரலாற்றில் “ சித்தர்காலம் “ என்று கி.பி. 14-ஆம் நூற்றாண்டின் தொடக்கம் முதல் கி.பி. 16-ஆம் நூற்றாண்டின் இறுதி வரையான காலத்தை வரையறுப்பர். இக்காலக்கட்டத்தில் வாழந்த சித்தர்களே “ பதினெண் சித்தர் “ என்று குறிக்கப்படுகின்றனர். கி.பி. 14-ஆம் நூற்றாண்டில் தோன்றியச் சித்தர் பாடல்களில் தான் சித்தர் பதினெண்மர் என்ற வரையறைப் பெறப்படுகின்றது.

**“திட்டதாய்ப் பாணம் வைத்துத் தேவி பூசை**

**சீர்பெற்றார் பதினெட்டுச் சித்தர் தாமே”**

**(கருவூரார் பூசைவிதி : பா -23)**

பதினெட்டு என்ற சொல் காணப்படுகின்றதே தவிர அவர்களைப் பற்றிய பெயர்களை எவரும் சுட்டவில்லை. இதனால் பதினெண் சித்தர் வரிசையில் அடங்குவோர் பற்றியக் கருத்து வேறுபாடுகளும் தோன்றலாயின.

பதினெண் சித்தரக்ளாகச் சிவவாக்கியர், அவ்வையார், பட்டினத்தார், பத்திரகிரியார், அகப்பேய், அழுகணி, இடைக்காடர், கடுவெளி, குதம்பை, பாம்பாட்டி, கருவூரார், கொங்கணார், காகபுசுண்டர், சட்டைமுனி, உரோமரிஷி, இராமதேவர், சூரியானந்தர், நந்தீசுவரர் ஆகியோரை சுட்டப்பெறுவது மரபாக உள்ளது.

கி.பி ஐந்தாம் நுற்றாண்டு முதல் இலக்கியங்களில் சித்தர்களின் பாடல்கள் பற்றியும் அவர்களின் நெறிகள் பற்றியும் விரிவாகப்பேசப்பட்டு வருகின்றன.மகிழ்ச்சியான மனநிலைக்கும், வீடுபேற்றிற்கும் உரியதாகச் சித்தர் சிவவாக்கியரால் கூறப்பெறும் யோகத்திலும், தியான முறைகளிலும், ஞானம் பெறுதலிலும் இருக்கின்ற பல அறிய உண்மைகளையும், அவர் தம் பாடல்களில் காணப்பெறும் வாழ்வியல் சிந்தனைகளைப் பற்றியும் காணுதல் அவசியமாக உள்ளது. சித்தர் சிவவாக்கியர் கூறும் நெறியான யோகாசனம், பிராணயாமம், தியானம் ஆகியவையை ஏன் இறைவனோடும், இறைநிலையை ஏத்தியும் பாடுகின்றார் என்பதனையும், மற்றும் அவரின் பாடல்களில் புதைந்து கிடக்கும் வாழ்வியல் சிந்தனைகள் பற்றியும் ஆராய்வதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

## ஆய்வுத்தலைப்பு

சித்தர்களுள் தலைசிறந்தவர் சிவவாக்கியர் ஆவார். திருமூலரின் திருவிளக்கமாகத் தோன்றியவர். தாயுமாணவரால் குறிப்பிடப்படும் பெருமை பெற்றவர். இவருடைய பாடல்களில் இக்காலத்தியப் புரட்சிகர சிந்தனைகள் பல இடம் பெற்றுள்ளன. உருவ வழிபாடு, தலயாத்திரை, மதவாதம், வேதம் ஓதுதல், சாதி ஆசாரம் முதலியவற்றை எதிர்த்து “ ஒன்றே குலம் ஒருவனே தேவன் “, உள்ளமே கோயில் எண்ணமே தெய்வம் என்னும் வகையில் வாழ்க்கைக்கு தேவையான கருத்துக்களை உணர்த்துவதனாலும் மேலும் இவரின் பாடல்களில் புதைந்துள்ள வாழ்வியல் கூறுகளை வெளிக்கொணர்வதின் முற்சியாகவும் “ சித்தர் சிவவாக்கியரின் பாடல்களில் வாழ்வியல் சிந்தனைகள் “ என்ற தலைப்பு இவ்வாய்வுக்கு எடுத்துக்கொள்ளப்படுகிறது.

## ஆய்வு மூலங்கள்

### 1. முதன்மை ஆதாரம்

சித்தர் சிவவாக்கியரின் பாடல்கள் மட்டும் முதன்மை ஆதாரமாகக் கொள்ளப்பட்டுள்ளன

1. சித்தர் பாடல்கள் - மணிவாசகர் பதிப்பு - இரண்டாம் பதிப்பு - ஜனவரி - 1996 - சிதம்பரம்

2. சித்தர் பாடல்கள் - முனைவர். அ. அறிவொளி - வர்த்தமான் பதிப்பகம் - முதற்பதிப்பு - 2006 - சென்னை.

### 2. துணைமை ஆதாரம்

இதுவரை வெளிவந்துள்ள சித்தர் இலக்கியங்கள் யாவும் துணைமை ஆதாரங்களாகக் கொள்ளப்பட்டுள்ளன. தமிழ் இலக்கியத்தில் யோகம் என்ற அ. செகதீசன் நூல் யோகம் பற்றித் தமிழ் இலக்கியங்கள் பேசும் கருத்துக்களைத் தொகுத்துரைக்கின்றது. மீ.ப. சோமுவின் சித்தர் இலக்கியம் ஒன்று, இரண்டு, மூன்று தொகுதிகளும் சித்தர் பாடல்களின் சிறப்பைப் பேசுகின்றன. நா. விஜயரெகுநாதனின் இன்றைய யோக நிலையம் சித்தர் பாடல்களின் பயன்பாடும் என்ற நூல் யோகக் கொள்கைகளையும், உடற்கல்வித்துறையில் யோகத்தின் தேவையையும் விளக்குகிறது. அ. அறிவொளியின் சித்தர் பாடல்கள் மூலமும் உரையும் ஒன்று, இரண்டு என்ற நூல் சித்தர் பாடல்களின் பொதிந்துள்ள கருத்துகளை விளக்குவதாக அமைகிறது. சி.கோ. தெய்வநாயகம் அவர்களின் சித்தர் சிந்தனைகள் எனும் நூல் சித்தர்களின் நெறிகளையும், அவர்தம் சிந்தனைகளைப் பற்றியும் அலசுவதாக அமைகிறது. க. நாராயணன் அவர்களின் சித்தர் தத்துவம் என்ற நூல் சித்தர்களின் கோட்பாடுகளையும்,சமுதாய நிலையில் சித்தர்களின் பங்களிப்பு, முத்திநிலை, இறைக் கோட்பாடு, உயிர்கோட்பாடு போன்றவற்றைப் பற்றி தத்துவார்த்தமாக எடுத்துக்கூறுவதாக அமைகிறது.

## ஆய்வு கருதுகோள்

தமிழில் காலந்தோறும் ஏற்பட்ட பதிவுகளில் சித்தர்களின் சிந்தனைப் பதிவும் குறிப்பிடத்தக்கது. சித்தர் இனம் நீண்ட நெடுங்காலமாக இந்நிலத்தில் வேரூன்றி விழுது பரப்பி வருகிறது. சித்தர் இலக்கியம் தமிழில் தனிவகை இலக்கியம், குறியீட்டு இலக்கியம், காலந்தோறும் வளர்ந்த இலக்கியம், தத்துவ இலக்கியம் என்றெல்லாம் அழைக்கப்பெறுகின்றன. சித்தர்களின் சிந்தனை வளமும் கருத்துக்கொடைகளும், எண்ண விரிவுகளும் தவஞானியார்களின் சிந்தனை எச்சங்களாக தமிழ் மொழியை செழுமைப்படுத்தியுள்ளன. சித்தர்கள் பேசாப்பொருளை பேசியத் திறமும் உயிர் இயல்பை உணர்த்திய திறமும், யோகத்தின் பெருமையினைப் பேசியத் திறமும் பெருந்திறமாகும்.

சித்தர்கள் கருத்துக்கெட்டாத சிந்தனைகளை அவர்களின் கவிதைகளில் சொல்ல முயன்றுள்ள திறம் கற்று இன்புறத்தக்கனவாகும். சித்தர்கள் அனைவருக்கும் பொதுவானவர்களாகவும், சாதி சமய வேறுபாடு அற்றவர்களாகவும், நாடு மொழி இனம் ஆகிய குறுகிய எல்லையைக் கடந்தவர்களாகவும், எங்கும் எபோதும் தோன்றி மக்கள் வாழ நல்வழி காட்டியிருக்கின்றனர். சித்தர்களில் முதன்மையானவராக திகழ்ந்த சிவவாக்கியர் தம் பாடல்களில் இக்காலத்தியப் புரட்சிகர சிந்தனைகள் பல இடம் பெற்றுள்ளன. உருவ வழிபாடு, தலயாத்திரை, மதவாதம், வேதம் ஓதுதல், சாதி ஆசாரம் முதலியவற்றை எதிர்த்து “ ஒன்றே குலம் ஒருவனே தேவன்” “உள்ளமே கோயில் எண்ணமே தெய்வம்” என்னும் கொள்கையை உணர்த்தி நிற்பதனால், அவரின் பாடல்களை ஆய்வு செய்து நிரம்பியிருக்கும் வாழ்வியல் சிந்தனைகளை வெளிக்கொணர்வதே இவ்வாய்வின் கருதுகோளாகும்.

## ஆய்வின் பயன்

சித்தர்களில் தலைச்சிறந்தவராகத் திகழக்கூடிய சிவவாக்கியர் தம் பாடல்களில் மனிதனின் வாழ்வியலுக்குத் தேவையானச் சிந்தனைகளான, நீண்ட ஆயுள், நோய்களற்று வாழும் முறை, உயிரின் தோற்றம் போன்றவற்றைப் பற்றியெல்லாம் இறைவனோடும், இறைநிலையைக் கலந்தும் பாடியுள்ளார் அவற்றினை முழுமையாக வெளிக்கொணரும் முயற்சியே இவ்வாய்வின் பயனாகக் கொள்ளப்படுகிறது.

## ஆய்வுப்பகுப்பு

சித்தர் சிவவாக்கியரின் பாடல்களில் வாழ்வியல் சிந்தனைகள் என்ற தலைப்பில் நிகழ்த்தப்பெறும் இவ்வாய்வானது முன்னுரை, முடிவுரை நீங்களாக ஐந்து இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. அவை,

1. தமிழ் இலக்கியத்தில் சித்தர்களின் பங்கு
2. சித்தர் சிவவாக்கியரின் வாழ்வும் தொண்டும்
3. சித்தர் சிவவாக்கியர் கூறும் அறக்கருத்துக்கள்
4. சித்தர் சிவவாக்கியரின் பாடல்களில் காணப்படும் வாழ்வியல் கூறுகள்
5. சித்தர் சிவவாக்கியரின் இறைநிலை கோட்பாடு

என்பனவாகும்.

## இயல் ஒன்று : தமிழ் இலக்கியத்தில் சித்தர்களின் பங்கு

சித்தர்களின் பாடல்கள் தன்னகத்தே இலக்கிய மரபினை ஏற்று நிற்பனவாய் அமைந்துள்ளன. பாமர மக்களுக்கு விளங்கும் மொழிநடையில் சின்னஞ்சிறிய சொற்களால் கருத்துக்களை அளவிட்டுரைக்கின்றன.

தென்பாங்கு, கும்மி, களிப்பு, கன்னி, தும்பி போன்ற கிராமிய விளையாட்டுப் பாடல்கள் நடையில் தாம் கருதிய பொருளைப் பக்குவமாகப் பெற்றுள்ளன. உண்மையறியாது வாழ்க்கையில் உழலும் மக்களுக்கு உண்மைப் பொருளை உணர்த்தும் நோக்குடன் கருதிய பொருளை வினாவாக்கி அதற்கமைந்த விடையுடன் உணர்த்துவனவாகவும் சித்தர் இலக்கியங்கள் அமைவதைக் காணலாம்.

நினைவுக்கு வரும் வண்ணம் சொல்லும் பொருளும் அமைய முன்னிலைப்படுத்தலும், மூடரென்றும், பேதையென்றும் குறிப்பதுமாக சித்தர்களின் பாடல்கள் அமைகின்றன. கற்றோர் வியக்குமாறு யாப்பு நலத்தாலும், சொல்லடுக்குகளாலும், சொல் மாலைகளாலும் பொருள் நலம் பயப்பதாகவும் விளங்குகின்றன. உணர்த்தக் கருதிய குறிப்பினை மயக்கமின்றி உணர்த்துவதற்கு உவமைகள் அமைவதைக் காணமுடிகிறது. அவ்வகையில் சித்தர் பாடல்கள் சிறந்த எளிய அனுபவத்திற்குரிய உவமைகளில் பொருள் விளக்கந்தருவதாகவும் அமைந்துள்ளன. பிற இலக்கியக் கருத்துக்களை மாறுபட்ட எளிய நடையில் தருகின்ற வடிவமும் சித்தர் பாடல்களில் இடம் பெறுகின்றன.

சமயமும், வைதீகமும் வளர்த்த பொய்மைப் பூசனைகளை எடுத்துக்காட்டி அதன் பயனின்மையினை உணர்த்தியும், சாதி சமயங்களைச் சாடியும் சமரச சன்மார்க்க நெறியினைக் காட்டிடும் புரட்சி வழிபாட்டு இலக்கியமாகவும் அமைகின்றன. பாமர மக்களின் உடல் நோய்க்கு மருந்து உரைக்கும் மருத்துவ இலக்கியமாகவும், உள்ள விழைவிற்கான இரசவாதம், அட்டமாசித்திகள், யோகம் முதலியனவற்றை உரைக்கும் சித்து இலக்கியமாகவும், உயிர்கள் மேன்மையடையும் முத்திக்குறிய ஞானமுரைக்கும் ஞான இலக்கியமாகவும் நின்று தமிழ் கூறும் நல்லுலகிற்கு பன்முக இலக்கியத் தன்மையின் வழிச் செல்லும் சித்தர் இலக்கியம் தமிழ் இலக்கிய வகிமையில் செழுமையினை நிறுவியதனை இங்கு காணமுடிகிறது.

## இயல் இரண்டு : சித்தர் சிவவாக்கியரின் வாழ்வும் தொண்டும்

தம் வாழ்நாளின் முற்பகுதியைப் புறவழிப்பாட்டில் செலுத்திப் பயனில்லாமல் வாடி, அகவழிபாடாம் ஞானமார்க்கத்திற்கு வந்ததடைந்ததை சிவவாக்கியரின் வாழ்க்கைக் குறிப்புக் காட்டிடுவதை அறியமுடிகிறது.

உலகியலில் உழன்று, தேர்ந்து, தெளிந்து, துறந்து சித்தரானவர்களின் தத்துவங்கள் அனைத்தும் சிவவாக்கியர் பாடல்களில் இடம் பெற்றுள்ளன. எளிதில் நினைவில் நிற்கக்கூடிய சொற்களால் அமைந்த இவரது பாடல்கள் நாட்டுப்பாடல்களின் நயத்தினையும் பெற்றுள்ளமையால் இவற்றை பாமர மக்கள் இலக்கியம் என்று கூறலாம். இவர் உணர்த்தியுள்ள கருத்துக்களில், சித்தநெறிக் கொள்கைகள் சிறப்பாக விளக்கப்பட்டுள்ளதுடன், சமரச சன்மார்க்க நெறியும், ஒருமைப்பாட்டின் உயர்வும் தெளிவாக அமைந்துள்ளதைக் காணலாம்.

ஆருயிர்கட்கெல்லாம் அன்புசெயல் வேண்டும் என்னும் அன்புநெறிக் கூறும் இவர் தம் பாடல்கள் மூலம் தீண்டாமையினைத் திட்டமாக வெறுக்கும் மகாத்தமாவாகவும் திகழ்கின்றார். இவர் உருவ வழிப்பாட்டினை ஒப்புக்கொள்ளாத நிலையிலும் சமயங்கள் கொண்ட தனித்தனிக் கடவுளரை ஒன்றே என்றுணர்த்தும் உண்மைத் தன்மையினையும் உணர்த்துகின்றார்.

சிவவாக்கியர் தம் பாடல்களில் உயிர் காக்கும் கலையாம் “பிராணாயாமம்” முறைகளை விரிவாக விளக்குவதுடன், யோகத்தின் மூலம் ஞானநிலை அடைந்து முத்திப் பெறுதலுடன் இறப்பைத் தடுத்துச் சிவனுடன் சேர்ந்து வாழமுடியும் என்பதனையும் தெளிவுப்படுத்துகிறார்.

ஆண்டவனை உள்ளவாறு அறிந்து வழிபடாது, பொய்யினை மெய்யெனக் கண்டு பேதமை கொண்டு நிற்கும் மக்களை நோக்கி நட்டுவைத்த ஒரு கல்லை தெய்வமாக நினைத்து பூக்கள் சொரிந்து சுற்றி வந்து வழிபாடு செய்கிறாயே, அந்தக்கல்லுனுள் நாதன் இல்லை உனக்குள் இருக்கும் நாதனை நீவீர் அறிந்திடாமல் மூடர்களாய் இருக்குரீர்க்ளே என ஆத்திகர்களைப் பார்த்து நாத்திக வாக்குக் கூறுகிறார்.

அன்பின் வழிப்பட்ட அறநிலையாக விளங்கும் இவர், பசிப்பிணிப் போக்கும் அன்னதானச் சிறப்பினை, பிறருக்கு உணவு அளித்து புண்ணியம் செய்தோர் பலகோடி காலம் வாழ்வார்கள். இவ்வாறு எந்த ஒரு உதவியும் செய்யாதாவர்களுக்கு கடவுள் அருள் காக்காமல் விலகிச் செல்லும் இது, உறுதியாகும் என்று கூறுவதால், இவரின் சன்மார்க்க நெறி புலனாவதுடன், தன்னுயிர்போல் மன்னுயிரையும் காக்க வேண்டும் என்ற மாண்பினையும் எடுத்துக் காட்டுகிறது.

சைவம் என்று மக்கள் அமைத்துக்காட்டும் அமைப்பில் ஊன் உண்ணாமையே சிவமாகும் எனும் குறிப்பு நிற்பதனைக் கண்டு மயங்கிய இவர், அதனை மறுத்துக் கூறி, ஆருயிர்க்கெல்லாம் மனிதன் அன்பு செய்யும் நெறியே சைவநெறி எனும் உண்மையினை உணர்த்துகின்றார்.

சிவவாக்கியர் சிவபக்தி நிறைந்த சித்தராகவே காணப்படினும், சமரச சன்மார்க்க ஞானியாகவே விளங்குகின்றார். இவர் சமயப் போர்வையில் வளர்க்கப்பட்ட பொய்மைகளையும், மூடநம்பிக்கைகளையும் விளக்கமாக மறுப்பவராகத் திகழ்கின்றார். தான் உணர்ந்தறிந்திட்ட தெய்வநிலையின் உண்மைத் திறனினை உணர்த்திடும் நோக்குடன், என் உள்ளமாகிய கோயிலில் கற்பனையால் பூவும், நீரும், பக்தி மனத்தோடு பொருந்துமாறு செய்கிறேன். என் ஆன்மாவே லிங்கமாய் உள்ளது அதனால் பறந்து விரிந்த பிரபஞ்சம் முழுதும் எனக்குள் ஒடுங்கி விடுகிறது.

ஐம்புலங்களும், ஐம்பூதங்களின் தொடர்புடையன, இது பிண்டமாகிய உடலை அண்டமாகிய பிரபஞ்சம் வரையில் விருந்துச் செய்யும்

தியானமாகும். என வழிபாட்டுச் சடங்கினை மானுட உடலினுள்ளேயே கண்டு யாவரும் உணரும் படி தெளிவுப்படுத்துகிறார்.

உலகின் மூலமாக அறியும் வாழ்வியல் நெறிமுறைகளின் மூலம் சீவானானது சிவமாக மாற முடியும் என்பதை அறிவுறுத்துவது சமயமாகும். சிவவாக்கியர் எல்லாச் சமயங்களைப் பற்றியும் குறிப்பிடுகின்றார். எல்லாச் சமயத்தைப் பற்றிக் கூறினாலும், ஊனிலே உருகி, உள்ளத்தில் கலந்து உண்மையறிவாய் நிற்பது சைவம் மட்டுமே என்பதனையும் இவர் தெளிவுப்படுத்துகிறார்.

அன்பு என்பது அகத்தே உணர்வுநிலை, அன்பிற்கு புறவடிவு இல்லையென்றாலும், வாழ்வதற்கும், உயர்விற்கும், ஆன்மீக உயர்விற்கும் வழிவகுக்கும் என்பதனை மக்கட் சமுதாயத்திற்கு எந்தச் சுயநலமுமில்லாமல் உணர்த்துவது அவர் சமூகத்தின் மீது கொண்டுள்ள அன்பினால் மட்டுமே என்பது தெளிவு.

மக்கள் சமூகத்தில் நிலைத்திற்கும் அனைத்து மூடத்தனத்திற்கும் காரணமாக அமைவது கல்வியின்மையே, அதாவது சாதிமத வேற்றுமைகள், மூடத்தனமான சடங்குகள், பெண்களை இகழ்ந்துப் பேசுதல் போன்றவற்றிற்குக் காரணம் கல்வியின்மை மட்டுமே. கல்வியின்மை என்பதனையும் பொதுவாகக் கூறிடாமல் காணுமிடமெங்கும், நீக்கமற நிறைந்திருக்கும் இறையை உணரத் தேவையான ஞானக்கல்வி அல்லது ஆன்மீகக் கல்வி இல்லாமையே என்பதனை எடுத்துக்காட்டுகிறார்.

கருவில் உயிர் நிலையில், ஆண் என்றோ ! பெண் என்றோ ! வேற்றுமை இல்லை. உயர்வான அந்த நிலையில் வேற்றுமை காணதவர்கள், மனிதனாய் பிறந்த பின்னர் வேற்றுமை பாராட்டுவது ஏன் ? என ஆணாதிக்கமும், பெண்ணடிமைத் தனமும் ஓங்கியிருந்த அந்தக் காலத்திலேயே பெண்ணடிமைத்தனம் அல்லது ஆண், பெண் பாகுபாட்டினை எதிர்த்த புரட்சியாளராய்த் திகழ்கிறார்.

பிரம்ம முகூர்த்தத்திலே சிவமும், பிரம்மமும் கூடிக்கலந்த உயர்ந்த பிரம்ம சக்தியாய் முழுமையாக நிறைந்திருக்கும், யோகம் பயில்வதற்கான காலம் நேரம் இப்பிரம்ம முகூர்த்தமே ( அதிகாலை ) சிறந்தது என்பதனைத் தெளிவுப்படுத்துகிறார்.

இவ்வுலகில் உள்ள ஒவ்வொரு பொருள்களின் தன்மையாகவும் இறைவன் இருக்கிறான். இறைவனின் இந்த நிலைகளை உணர்ந்தவனே இறைவனை காணவல்லவராவார்.

பிராணனால் எழுப்பட்ட குண்டலினியான சக்தி ஆறு ஆதாரங்களைக் கடந்து புருவமைய வாசலில் ஒருமுகப்படுத்திப் பார்த்திட சகஸ்ரகாரத்தில் இருக்கும் இறைவனுடன் ஐக்கியமாவதையும் அறிவாகவும், இவற்றையெல்லாம் உணர்த்துகின்ற குருவாகவும், இறைவன் உம்முளே

உலவுகின்ற கோலம் தன்னை அறிந்துணர் என இறைவனின் நிலையினை விளக்குகிறார்.

மனிதர்கள் தங்களின் உடம்பில் நோய்நொடி, துன்பம் ஏற்பட்டதும், நேர்த்திக்கடன் என்ற பெயரில் ஆடு, கோழிகளைப் பிடாரி கோவிலில் பலிக் கொடுப்பதைக் கண்ட சிவவாக்கியர், இறைவனின் பெயரில் நடக்கும் உயிர்ப்பலியைக் கூடாது எனக் கண்டித்திடும் பாங்கினையும் இங்கே காணமுடிகிறது.

சிவவாக்கியர் தம் வாழ்வையும், சிந்தனை, செயல்கள் யாவையும் மக்கள் சமூகத்தினை நல்வழியில் கொணர்வதற்கென தொண்டாகச் செய்தார் என்பது மேற்கண்ட தகவல்கள் நமக்குத் தெளிவுப்படுத்துகிறது. சிவவாக்கியர் சமயத்தொண்டின் வழி சமூக தொண்டாற்றிட தம் வாழ்வை அர்பணித்து வாழ்ந்தார் என்பது திண்ணம்.

## இயல் மூன்று : சித்தர் சிவவாக்கியர் கூறும் அறக்கருத்துக்கள்

அறியாமையில் உழன்ற மக்களை அறிவியல் வழியில் ஆளாக்க முயன்ற சான்றோர்கள், ஒழுக்க நெறிகளை உருவாக்கி வைத்தனர். அவ்வொழுக்க நெறியைப் பரப்பும் தொண்டுநெறி காலப்போக்கில் சமய நெறிகளாயின. சமூதாயத்தில் சமயமானது மலர, சாதி சமய சடங்காசாரங்கள் மிகுந்தன. அதன் காரணமாக சமயச் சழக்குகள் தோன்றின. இதனால் மனிதர்களிடையே ஏற்றத்தாழ்வு ஏற்ப்பட்டது. இதன் காரணமாக சமயப் பூசல்கள் தோன்றின.

சமூதாயம் உய்ய பொய் வழக்குகளைப் புலப்படுத்தி மெய்யுணர்வைப் புகட்டியவர்கள் சித்தர்களேயாவர். சித்தர்களின் மரபுவழித் தொடர்ந்த வழக்கும் சொல்லும் மக்கள் வாழ்வாங்கு வாழ வழி காட்டின. அவ்வகையில் சித்தர் சிவவாக்கியரின் அறிவியல் அறிவுரைகள் சமயக் குப்பைகளைச் சாடி நின்று, பொய் மதங்களைப் புறக்கணித்து, சமயப் போர்வையில் இருந்த போலிகளைத் தோலுரித்துக் காட்டின.

பிறரின் பொருளை மோசம் செய்து அபகரிக்க சிலர் பூசைகள், தியானம் போன்றவற்றை செய்வார்கள் போலிகள், இவர்கள் நேசம் கொண்டு பூசை செய்து, நீறு, சந்தன வாசமோடு பூசி நெற்றியில் திலகம் வைத்து மோசமும் செய்வார்கள். வெள்ளியைப் பொன்னாக்கிட ரசவாதம் செய்வேன் என்று பொய் கூறி அதற்கு முதலில் தேவைப்படும் பொன்னும் பொருளும் பெற்றுக்கொண்டு ஓடி மறைவார்கள். இன்னும் சில போலிகளோ யோக சாடிகள் செய்வார்கள், உயர எழும்புவார். வேகமாக அட்டமாசித்து கற்று நிறையப்பேசுவர். ஆனால் மாதரின் பால் மோகம் கொண்டு ஆசை வைப்பர்.

இன்னும் சிலரோ மாயவித்தைகள் செய்வர், காயகல்பம் தின்று உடலைக் காப்பதாக கூறி பலபடியாக மோசம் செய்வார்கள். கஞ்சா அடிப்பர், அபினை நேரிலேயே தின்பர். இந்த உலகில் உதாரியாகத் திரிவர்.

சீராக ஞானசித்தி உண்டாக்குகிறேன் என்று சொல்லிப் பிறர் பொருட்களை நீண்ட நாள் கைப்பற்றுவர். வேறு சிலரோ, காவி உடை அணிந்து, சடைமுடி தரித்து, கமண்டலம் கொண்டு இருக்க ஆசனம் பெற்று உருத்திராட்ச மாலைகள் அணிந்து யோகத்தண்டு முதலியன வைத்துக்கொண்டு தம் மனைவியரை அலையவிட்டுப் பல நாடுகள் சுற்றி வீடு தோறும் பிச்சை கேட்டு அலைவார்கள்.

இன்னும் சிலப் போலிமார்களோ, முத்திக்குப் போக இங்கயே சித்தி தருவேன் பார் என்று சொல்லிக்கொண்டு எங்கும் சாமிவேடம் கொண்டு தினமும் வயிறு வளப்பர். பக்தியைச் சொல்லிச் சொல்லிப் பணம் பறிப்பார்கள் என்று பலவாறாக இந்த சமூகத்தில் இருக்கும் சமய போலிகளை தோலுரித்துக் காட்டுகிறார்.

வாழ்வியல் உண்மைகளை ஞானத்தால் பகுத்தறிந்து மெய்ஞ்ஞானம் பெற்ற சித்தர்களே விஞ்ஞான கலரென்று குறிக்கப்பட்டனர். அவ்வழியில் சித்தர் சிவவாக்கியர் அஞ்ஞானமாகிய அறியாமையை நீக்க தந்த அறிவியல் தத்துவங்கள் யாவும் சித்தவிஞ்ஞானமாகும். அறங்களிலேயே சிறந்தது இல்லறம் போற்றும் நல்லறமேயாகும் என்பதனை விளக்கி நாதம் கணவனாகிய சிவம் எனவும், தீபம் மனைவியாகிய பராசக்தி என்பதனையும் தெளிவுப்படுத்துகிறார்.

அவைமட்டுமன்றி, பெண்ணைச் சேராத தேவர் ( தெய்வம் ) இவ்வுலகில் எங்ஙனும் உள்ளரோ, மாதர் தோள் சேரும் மனிதருக்கு வாழ்வு சிறக்கும். மாதராவது ஒரு சக்தியே. அதனால் தான் கங்கையை ஈசனுமே மகிழ்ந்து ஏற்றுக்கொண்டான் என்று மனைவியின் முக்கியத்துவத்தை எடுத்துக் கூறுகிறார். ஆகவே தான் வளமான மனையில் இருந்து இல்லறம் செய்து வருவிருந்தினரைப் பேணி வாழுங்கள். வரும் விருந்தே தெய்வமாகி உங்களுக்குச் சிவாயம் வாழ்வு அளிக்கும் என்று கூறி இல்லறம் போற்றுவதே சிறந்த நல்லறமாகும் என்று நிலைநிறுத்துகிறார்.

சிவவாக்கியரின் படைப்புகள் ,முழுமையாக சமூகச்சீர்மை எனும் மையப்புள்ளியை நோக்கியே செல்கிறது. ஒன்றாகிய பரம்பொருளானது எங்கும் நிறைந்திருக்கிறது என்ற கோட்பாடும், இறையின்பம் துய்க்க இடைத்தரகரும், பொருட்செலவு மிக்க புறவழிபாட்டு முறை மறுப்பும், இறையின்பம் எனும் அகக்காட்சி அனுபவம் சாதி, சமய சமூக மதிப்பு எனும் வேறுபாடுகளின்றி மக்கள் அனைவருக்கும் பொது என்று எடுத்துரைப்பதும், ஆன்மிகப் பொதுவுடமை இவையாவும் சமூகச்சீர்மையை நோக்கியே அமைந்துள்ளது.

சிவவாக்கியர் தனிமனித உள்ளத்தில் மாற்றத்தையும்,மலர்ச்சியையும் உருவாக்குவதன் மூலம் சமூக அமைப்பிலும், போக்கிலும் மாபெரும் மாற்றத்தையும் வளர்ச்சியையும் காண விரும்புகிறார். சமூகத்தில் வரன்முறை நாத்திகக் கொள்கைகளைத் தெளிவாகவும் நிறைவாகவும் வெளியிட்டு,

உருவ வழிபாட்டினையும், சமயச் சடங்குகளையும், சாதிபேதங்களையும் ஆசாரவேடமிடும் அனைத்தையும் கடிந்து உண்மைப் பொருளை உணரக் கூறி மக்களைக் கடைந்தேற்றும் கருணையில் விழைந்து நிற்கிறது சிவவாக்கியரின் பாடல்கள்.

சமூதாயத்தில் மலிந்து நிற்கும் பொய்களை எதிர்த்து புரட்சிக்குரல் கொடுத்தவர்களுள் குறிப்பிடத்தக்கவர் சிவவாக்கியர் ஆவார். தாம் வாழும் சமூதாயத்தைப் பற்றி அதிகம் அக்கறை கொண்டு சமூக ஏற்றத்தாழ்வுகள் ஏமாற்றுகள் போன்ற சமூகக் கேடுகளைக் களைந்து மக்கள் அனைவரும் இணைந்து அன்புடன் வாழ்ந்திட நெறிப்படுத்துகிறார். சாதி சமய ஒருமைப்பாடு தனிமனித வாழ்க்கை அறம், ஆகியனவையை அறிவுறுத்துகிறார். சாதி மத பேதங்கள் மலிந்த மண்ணில் அறியாமையால் பெருகிக்கிடக்கும் மூடப்பழக்கவழக்கங்கள் மக்களை இருளில் ஆழ்த்திய நிலையிலும் அவரின் சொல்லாற்றாலால் அதனை சாடுகிறார்.

இறைவன் படைப்பில் எல்லோரும் சமம். இதில் உயர்ந்தவர் தாழ்ந்தவர் என்ற பேதம் இல்லை. மனிதருக்குள் வேறுபாடு காண்பது அவனுடைய அடிப்படை உரிமையே (Constitutional Rights) பறிப்பதாகும். ஒரு மனிதன் மற்றொரு மனிதனைப் பார்த்து ஒதுங்கிக்கொள் என்று கூறுவது ஒருவரின் உரிமையைத் தடை செய்வதேயாம், எனத் தீண்டாமையைக் கண்டிக்கிறார்.

இதைத் தொடதே, இது எச்சில்என்று சொல்கின்றவர்களே, வாயில் குடிக்கும் நீரானது எச்சில் என்றால் வாயால் முணுமுணுக்கும் வேதம் எச்சில் இல்லையோ! என்றும் ,வேதம் எச்சில் வேதம் எச்சில், பூதலங்கள் எச்சில், விந்து எச்சில், மதமும் எச்சில், ஒளியும் எச்சில் எதில் எச்சில் இல்லை எடுத்துரைப்பீர்! என்று கூறுகிறார். சாதிப்பெயரில் தீண்டாமை கொடுமை நிகழ்ந்தமையை எடுத்துரைக்கிறார்.

சாதிசமய பேதமற்ற சமநிலைச் சமுதாயம் காண முற்பட்டோருள் சிவவாக்கியர் சிறந்து விளங்குகிறார். ஆன்மாவிற்கு சாதி இல்லை, ஆன்மா எடுக்கின்ற உடல், அவ்வுடல் வாழுகின்ற இடம், மேற்கொள்ளும் செயல் போன்றவற்றை கொண்டே சாதிகள் கற்பிக்கப்படுகின்றன. மனித இனம் அடிப்படையில் ஒன்றே, சதி வேறுபாடுகள் யாவும் புறத்தளவே கற்பிக்கப்பட்டவைகளாகும். போக இன்பம் எல்லாச் சாதி உடல்களில் வேறுபாடின்றியே வெளிப்படுகிறதே என்றும் எடுத்துரைக்கின்றார்.

நான்கு வேதங்கள் கூறும் உண்மையும், அனைத்து சாத்திரங்களில் உரைக்கப்பட்டுள்ள உண்மையும், ஐந்துபூதத் தத்துவங்களில் காணும் உண்மையும் ஒன்றான மெய்ப்பொருளை அறிவதற்கே அமையப்பெற்றது. அதுதான் சாதி பேதம் இல்லை என்கிற உண்மை பேதமாக இருக்கிறது. பிறக்கும்போது, பூணூல், குடுமி, கோவணம் ஆகியவற்றோடு எவரும் பிறப்பதில்லை, வேத சாத்திரங்கள் நிறைந்த மனத்தோடு எவரும்

பிறப்பதில்லை எனவே பிறப்பால் உயர்வும் இல்லை, தாழ்வும் இல்லை என்று சிவவாக்கியர் கசடறத் தெளிவுறுத்துகிறார்.

எல்லா மனிதரும் சலம்திரண்ட நீராலே உருவானவர்களே என்றிருக்கையில், சாதி எங்கே, மதம் எங்கே என வினவுகிறார். மனித குலத்தைச் சாதி என்ற பேரால் வகைப்படுத்தி வைத்துக்கொண்டு, மக்கள் அறியாமையில் வாழ்கின்றனர். அனைவரின் பிறப்புக்கும் ஒரே காரணமாக இருப்பதே "சுக்கிலம்" என்ற உண்மையை உணர்வீர்களாக. இதுமட்டுமன்றி, போலி ஒழுக்கங்களை சாடுதலும், சாத்திரங்களை சாடுதலும், சடங்குகளை சாடுதலும், கோவில் குலங்களின் போலித் தன்மைகளைச் சாடுதலும், போலி வழிபாடு பூசையையும் சாடுதல், மந்திரங்களை சாடுதல், உருவவழிப்பாட்டினை சாடுதல், தேர்த்திருவிழாவால் எழுந்த சழக்குகளை எடுத்துரைத்தல், நீர்ச்சடங்கின் போலித்தன்மையைப் புலப்படுத்துதல், தீட்டு என்ற தீண்டாமை நிலையினை தெள்ளுதின் உரைத்தல், தனிமனித ஒழுக்கத்தின் இன்றியாமையாததின் தன்மையினை அறிவுறுத்தல், சமய ஒருமைப்பாட்டினை வழியுறுத்தல் போன்றவற்றைப் பற்றி எல்லாம் அறிவியல் பூர்வமாக அணுகி,அணுகிய அவ்வனுபவங்களை அறங்களாக்கி மக்களுக்கு தம் பாடல்களில் வார்த்திருக்கிறார் சித்தர் சிவவாக்கியர் அவர்கள்.

## இயல் நான்கு : சித்தர் சிவவாக்கியரின் பாடல்களில் காணப்படும் வாழ்வியல் கூறுகள்

உலகம் நிலையாக இயங்குகிறது. இயங்கும் உலகத்தில் நிலையில்லாமல் மானுட உலகம் தொடர்கின்றது. இத்தொடர்ச்சியில், நிலையற்ற வாழ்வில் மானுடராய் பிறந்தும், மெய்வருத்தி, வாழ்வின் நிலைப்பினைக் கண்டறிந்து, புத்துலகம் கண்டவர்கள் சித்தர்கலாவார்கள்.

அறியாமையிலும், ஆசைக்கிலக்கானமையாலும், உழன்றும் சுழன்றும், பிணிமூப்பினால் நலிந்தும் இறந்தும், மறைந்தும் போகும் மக்களினத்திற்கு செம்மையான வாழ்க்கையைப் பின்பற்றும் சித்தாத்தங்களை வெளிப்படையாகவும், குறிப்பாகவும் உணர்த்தி தன்னையே சான்றாகவும் அமைத்துயர்ந்தவர்கள் சித்தர்கள் ஆவார்கள்.

சித்தர் காட்டிய சித்தாத்தங்கள் வற்புறுத்தும் முதன்மைக் கருத்து, வாழ்வியற் செம்மையாகும். அறிவுதான் ஆண்டவன் என்பதனை உணர்ந்து, அக்கோட்பாட்டின் கண் வழிப்பாட்டுத் தன்னையறிந்து, வாழ்வின் உண்மையில் ஒன்றுபட்டு நின்ற சித்தர் சிவவாக்கியர் கூறிப்போந்துள்ள வாழ்வியல் கூறுகளைக் காண்போம்.

ஒன்றே பலவாக பரிணமித்திருகிறது என்பது இந்தியத் தத்துவங்களில் பரவலாகக் காணப்படும் கொள்கை. சித்தர்களும் இக்கொள்கையினையே உலகிற்கு எடுத்துக் கூறுகின்றனர். உயிரும் உடலும் சேர்ந்து உலகியல் வாழ்வுக்கு வருவதைப் பிறப்பு என்கிறோம். இவ்விரண்டில்

உயிர் உடலெடுக்கிறதா, அல்லது உடல் உயிரெடுக்கிறதா என்பது சிக்கலான வினா ?.இச்சிக்கலான வினாவிற்கு சிவவாக்கியர் விடையினை வழங்குகிறார்.

கருவில் நாம் உருவாகும் முன் நமக்குரிய உடம்பு எங்கே காத்திருந்தது ? உருவம் உடம்பிற்கு உண்டாவதற்கு முன்பு உயிர்ப்பு எவ்விடம் இருந்தது ? என்ற வினாவினை முன்வைத்து. அவ்வினாவிற்கு விடையாக, கருவில் உடல் உண்டாகும் முன்பு அது சோதியில் இருந்தது என உணர்க, என்றும் உரு உண்டாவதற்கு முன் உயிர்ப்பு எங்கே இருந்தது என்றால் அது நீரிலேயாகும் என உணர்க. என பதில் தருகிறார்.

தானேயாய் மலர்ந்த தாதுவாகிய மூலப்பிரகிருதியிலிருந்து பூமியானது தோன்றியதும். அந்தப் பூமியில் பல பொருள்களும் கலந்து நிரம்பியது. பிறகு அவை பிரிந்ததும், ஐந்து புலன்களும், பொறிகளும் தமக்குள் கலங்கியே பூமியில் விழுந்து உடல்களாக வந்தன எனவும், இந்த உலகத்தின் தோற்றத்திற்கு காரணமாக இருக்கும் நிலையைக்கண்டு தெளிவுப்படுத்துகிறார்.

பிரபஞ்சமாகிய வெளி உமக்குள் ஒரு வட்டம் போல் ஐக்கியமாகிவிட்டது. பிண்டமாகிய உடலில் அண்டமாகிய பிரபஞ்சம் அடக்கம், அட்ட அக்கரம் கொண்டே அதை அறியலாம். ஆதியும் அந்தமுமாகிய மூலப்பிரகிதியிலிருந்து விந்துவும் நாதமும் ( ஒளியும், ஒலியும் ) தோன்றி ஐந்து பூதங்களாய் விரிந்தன. இதே போல் உடம்பிலும் மூலாதாரத்திலிருந்து ஒளியும், ஒலியும் தோன்றி ஐம்பூத ஆதாரங்களாக விரிந்தன. இவ்வாறாக அண்டத்திலும் உடலாகிய பிண்டத்திலும் மூலப்பொருள் விந்து நாதங்களாகத் தோன்றுவது அவைகளாகவே அடங்குவது சிவாயத்தாலே என்கிறார்.

அண்டமும் அதில் அடங்கியுள்ள அனைத்தும், பருப்பொருள்களால் ஆனவையாகும். இப்பருப்போருட்கள் யாவும் வேதித்தனிமங்களால் உருவாக்கப்பட்டவையாகும். இத்தனிமங்கள் ‘ மீயொளீர் விண்மீன் வெடிப்பு ‘ மூலம் மீயொளீர் விண்மீன்களில் தோன்றியவையாகும். இவ்விண்மீன் வெடித்துச் சிதறும்போது இத்தனிமங்கள் விண்ணில் சிதறி கோள்கள் உருவாகும்போது அவற்றுக்குள் சென்றிருக்கலாம் என அறிவியல் கூறுகிறது.

பரந்த இந்த அண்டம் பருப்பொருட்களால் ஆனது. இந்தப் பருப்பொருள் பல தனிமங்களால் உண்டானது. இப்பலத்தனிமங்களே வாயுக்களாக பரிணமித்தது. இந்த வாயுக்களே பஞ்சப் பூதங்கள் (தனிமங்கள்) என வழங்கப்பட்டு உலக உருவாக்கத்திற்கு அடிப்படைக் காரணம் எனக் கொள்ளப்படுகிறது. இந்தப் பஞ்சப் பூதங்களே புவியில் உயிர்களின் தோற்றத்திற்கு தோற்றுவாயாக அமைந்ததிருக்கிறது என்றும் இந்த அண்டத்தில் உள்ளதே பிண்டத்திலும் உள்ளது என்பதினை சித்தர் சிவவாக்கியர் தம் பாடல்கள வாயிலாகத் தெளிவுப்படுத்துகிறார்.

## இயல் ஐந்து : சித்தர் சிவவாக்கியரின் இறைநிலை கோட்பாடு

சிவவாக்கியர் யோகம் என்பதனை மனதை ஒருநிலைப்படுத்தி அகமுகமாக இறைவனைத் தம்முளே உணர்வதற்குரிய படிநிலையாக குறிப்பிடுகிறார். இறைவனை அடைவதற்குரிய படிநிலைகள் நான்கையும் அவற்றின் பயன்களையும் தனித்தனியாக மற்றவர்கள் கூறியிருக்க, சிவவாக்கியர் இன்ன இன்ன படிநிலைக்கு, இன்ன இன்ன பயன் பெறுவர் என்பதனைப் பொருத்திக் காட்டியிருப்பது இவரின் தனிச்சிறப்பாகும்.

வாசி என்பது உயிர்மூச்சு, வாசியோகம் என்பது உயிர்மூச்சை உள்மார்க்கமாக நெறிப்படுத்தி உயர்நிலையை அடைந்து நீண்ட நெடிய நாட்கள் பினிமூப்பின்றி வாழும் நிலையாகும் என்ற மூச்சுக்கலையின் நுட்பமான விளக்கத்தை தெளிவுபட விளக்குகிறார்.

உடம்பில் மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அனாதகம், விசுத்தி, ஆக்ஞை ஆகிய ஆறு ஆதாரங்களைச் சிவவாக்கியர் ஆறுதாமரைகள் என்றும் ஆறுமாநிலங்கள் என்றும் குறிப்பிடுகிறார். அதுமட்டுமல்லாது, இரண்டிண்டு ஆதாரங்களை ஒவ்வொரு மண்டலம் எனக்கொண்டு முறையே, ஆறு ஆதாரங்களை மூன்று மண்டலங்களாகக் காட்டுகிறார்.

குண்டலினியைச் சிவவாக்கியர், வித்து என்று குறிப்பிடுகிறார். குண்டலினிசக்தி என்பது, விந்துவின் சிறப்பு ஆற்றலாகும். இது போகத்தின்போது கீழ்நோக்கிப் பாய்ந்து சிற்றின்பம் ஆகிறது. யோகத்தின்போது மேல்நோக்கி சென்றடைந்து பேரின்பம் பயக்கிறது என விளக்குகிறார்.

மூலவினாத்தண்டு என்பது முதுகுத்தண்டு ஆகும். ஆறு ஆதாரங்களும் இம்மூல வினாத்தண்டுகளையே அமைவிடமாகக் கொண்டுள்ளன. மூலவினாத்தண்டின் நடுவில், கீழிருந்து மேலாக அமைந்துள்ள மெல்லிய நுண் குழலானது சுழிமுனை எனப்படுகிறது. சுழிமுனை என்பது மூக்கின் மேல்நுனியும் புருவங்கள் இரண்டும் இணையும் இடமாகும். இதனை சிவவாக்கியர்," மூன்றாவது கண்" என்றும் "நெருப்பறை" என்றும் குறிப்பிடுகிறார்.

யோகமுறையைக் குருவிடம் நேரில் அறிந்துணர வேண்டும் என்று வலியுணர்த்துவதோடு மண்டுமன்றி நெற்றிக்கண் நாட்டத்தில் மனதை வைத்துக் குண்டலினி சாக்தியோடு கூடிய உணர்வால், கருத்துடன் கவனித்தால் சுழிமுனையில் சுவாசம்தானே அடங்கி மனோலோயம் உண்டாகும். அப்போது சிரசினுள்ளே "செஞ்சுடர் சோதி" தோன்றித்திகழும். பலவிதமான நாத ஒலிகள் பரநாத ஒலிகள் எழுந்து பேரின்பம் பயக்கும் என்கிறார்.

மூச்சின் நீளம், உச்சிநோக்கி ஒடுங்க அட்டமாசித்திகள் எனப்படும் எண்பெரும் ஆற்றல்கள் சித்தியாகும். மூளைக்கு மேலேயும் மண்டை ஓட்டிற்குக் கீழேயும் உள்ள இடைவெளி உச்சியாகும். இதைச் சிவவாக்கியர், “வெளி” என்றும் “வட்டவீடு” என்றும் குறிப்பிடுகிறார். வாசியால் ஏறிய குண்டலினி சக்தி இந்த உச்சி வெளியாகிய பிரம்மரந்திரத்தைத் தட்டி, வெப்பம் ஆக்குகிறது. தக்க வெப்பம் கிடைத்தவுடன் உருகி அமிர்தம் கரந்து உள்ளில் இறங்கும். இவ் அமிர்தத்தை மாங்காய்ப் பால் எனக்குறிப்பிடுகிறார்.

“சமாதி” என்பது மூச்சு உள்ளில் முழுமையாய் ஒடுங்கி இவ் அமிரதபானத்தை உண்டு மரணத்தை வென்று பேரின்பத்தில் இலயித்திருப்பதாகும். இம்மேலான நிலையினை எய்திய சித்தர்கள், எத்தனை ஆண்டுகள் வேண்டுமானாலும் உயிரோடு கூடிய உடம்பு அழியாது இருப்பர். “ஊழிக்காலம் வாழ்வார்” என்று சிவவாக்கியர் கூறுகிறார். பெறற்கரிய இப்பேரின்பப் பேற்றினை அளிப்பது வாசியோகமும் அதனாலாகும் குண்டலினி யோகமுமாகும். எனவே சித்தர் சிவவாக்கியர் உணர்த்தும் சித்தர் நெறி எனும் யோக நெறி இறைவனை அடைதலும், இறைநிலையினை உணர்தலுமே ஆகும் என்பது புலனாகிறது.

பஞ்சபூதங்களின் குணங்களில் எல்லாம் இறைவனே நிறைந்து நிற்கிறான். மனித உடம்பு நமசிவய என்னும் ஐந்தெழுத்தின் அமைப்பாகப் படைக்கப்பட்டுள்ளது. 51 அட்சரங்கள், ஆறாதாரங்களுடன் தொடர்புடையன. மந்திரமாய், ஆகமமாய் நிறைவது 51 எழுத்தாகும் என்றும், எட்டும் இரண்டும் என்பது அகரம், உகரம் என்பது எட்டு அடுக்குகள் கொண்ட தூல தேகமும், இரண்டு நிலைகொண்ட பிராமணகோசமும் ஆகும் என எடுத்துரைக்கிறார்.

மனத்தை ஒருமைப்படுத்தித் தன்னை அறிதலுக்கு முறைப்படுத்த வேண்டும். அகத்துளே இறைவன் உறைகிறான். உண்மை, அறிவு என்பது ஞானமாகிய சோதியை உள்ளத்திலே இருப்பதை கண்டுணர்வதேயாகும் என்கிறார். பிறப்பதற்கு முன் உடம்பு நெருப்பிலும் உயிர்நீரிலும் ஆசை வாயுவிலும் அறிவு மூலாதாரத்திலும் இருக்கிறது எனவும், இறந்தபின் இழிவினை அடையும் உடம்பே உயிருடன் உள்ள காலத்தில் உரிய முறையில் முயன்றால் இறைவனைக் காணுதற்குரிய திருக்கோயிலாகத் திகழும்.

“மந்திரம்”‘ என்பது மூலநாடியின் வாயுவை முறைப்படிச் செலுத்தி நிலைபெறுவதேயாகும். இறைவனோடு இரண்டறக்கலக்கும் நிறைநிலையாகிய சாயுச்சியம் பெறுவதே வாழ்வின் குறிக்கோளாகும். சிவவாக்கியர் காட்டும் சித்த நெறி யாவும் யோகத்தை அடிப்படையாகக் கொண்டு இறைவனையும், இறைநிலையையும் கண்டு தெளிதலே ஆகும் என எடுத்துரைக்கிறார்.

## ஆய்வு முடிவுகள்

இயல் தோறும் கண்ட முடிவுகள் ஒவ்வொரு இயலின் தொகுப்புரையிலும், ஆய்வு முடிவுகள் நிறைவுரையிலும் தொகுத்தளிக்கப்பட்டுள்ளன. அவற்றில் சில

சமயமும், வைதீகமும் வளர்த்த பொய்மைப் பூசனைகளை எடுத்துக்காட்டி அதன் பயனின்மையினை உணர்த்தியும், சாதி சமயங்களைச் சாடியும் சமரச சன்மார்க்க நெறியினைக் காட்டிடும் புரட்சி வழிபாட்டு இலக்கியமாகவும் பாமர மக்களின் உடல் நோய்க்கு மருந்து உரைக்கும் மருத்துவ இலக்கியமாகவும், உள்ள விழைவிற்கான இரசவாதம், அட்டமாசித்திகள், யோகம் முதலியனவற்றை உரைக்கும் சித்து இலக்கியமாகவும், உயிர்கள் மேன்மையடையும் முத்திக்குறிய ஞானமுரைக்கும் ஞான இலக்கியமாகவும் நின்று தமிழ் கூறும் நல்லுலகிற்கு பன்முக இலக்கியத் தன்மையின் வழிச் செல்லும் சித்தர் இலக்கியம் தமிழ் இலக்கிய வகிமையில் செழுமையினை நிறுவியதனை இங்கு காணமுடிகிறது.

மக்கள் சமூகத்தில் நிலைத்திற்கும் அனைத்து மூடத்தனத்திற்கும் காரணமாக அமைவது கல்வியின்மையே, அதாவது சாதிமத வேற்றுமைகள், மூடத்தனமான சடங்குகள், பெண்களை இகழ்ந்துப் பேசுதல் போன்றவற்றிற்குக் காரணம் கல்வியின்மை மட்டுமே. கல்வியின்மை என்பதனையும் பொதுவாகக் கூறிடாமல் காணுமிடமெங்கும், நீக்கமற நிறைந்திருக்கும் இறையை உணரத் தேவையான ஞானக்கல்வி அல்லது ஆன்மீகக் கல்வி இல்லாமையே என்பதனை எடுத்துக்காட்டுகிறார்.

எல்லா மனிதரும் சலம்திரண்ட நீராலே உருவானவர்களே என்றிருக்கையில், சாதி எங்கே, மதம் எங்கே என வினவுகிறார். மனித குலத்தைச் சாதி என்ற பேரால் வகைப்படுத்தி வைத்துக்கொண்டு, மக்கள் அறியாமையில் வாழ்கின்றனர். அனைவரின் பிறப்புக்கும் ஒரே காரணமாக இருப்பதே ‘ சுக்கிலம் ‘ என்ற உண்மையை உணர்வீர்களாக. இதுமட்டுமன்றி, போலி ஒழுக்கங்களை சாடுதலும், சாத்திரங்களை சாடுதலும், சடங்குகளை சாடுதலும், கோவில் குலங்களின் போலித் தன்மைகளைச் சாடுதலும், போலி வழிபாடு பூசையையும் சாடுதல், மந்திரங்களை சாடுதல், உருவவழிப்பாட்டினை சாடுதல், தேர்த்திருவிழாவால் எழுந்த சழக்குகளை எடுத்துரைத்தல், நீர்ச்சடங்கின் போலித்தன்மையைப் புலப்படுத்துதல், தீட்டு என்ற தீண்டாமை நிலையினை தெள்ளுதின் உரைத்தல், தனிமனித ஒழுக்கத்தின் இன்றியாமையாததின் தன்மையினை அறிவுறுத்தல், சமய ஒருமைப்பாட்டினை வழியுறுத்தல் போன்றவற்றைப் பற்றி எல்லாம் அறிவியல் பூர்வமாக அணுகி, அணுகிய அவ்வனுபவங்களை அறங்களாக்கி மக்களுக்கு தம் பாடல்களில் வார்த்திருக்கிறார் சித்தர் சிவவாக்கியர் அவர்கள்.

பரந்த இந்த அண்டம் பருப்பொருட்களால் ஆனது. இந்தப் பருப்பொருள் பல தனிமங்களால் உண்டானது. இப்பலத்தனிமங்களே

வாயுக்களாக பரிணமித்தது. இந்த வாயுக்களே பஞ்சப் பூதங்கள் (தனிமங்கள்) என வழங்கப்பட்டு உலக உருவாக்கத்திற்கு அடிப்படைக் காரணம் எனக் கொள்ளப்படுகிறது. இந்தப் பஞ்சப் பூதங்களே புவியில் உயிர்களின் தோற்றத்திற்கு தோற்றுவாயாக அமைந்ததிருக்கிறது என்றும் இந்த அண்டத்தில் உள்ளதே பிண்டத்திலும் உள்ளது என்பதினை சித்தர் சிவவாக்கியர் தம் பாடல்கள வாயிலாகத் தெளிவுப்படுத்துகிறார். ‘

“மந்திரம்” என்பது மூலநாடியின் வாயுவை முறைப்படிச் செலுத்தி நிலைபெறுவதேயாகும். இறைவனோடு இரண்டறக்கலக்கும் நிறைநிலையாகிய சாயுச்சியம் பெறுவதே வாழ்வின் குறிக்கோளாகும். சிவவாக்கியர் காட்டும் சித்த நெறி யாவும் யோகத்தை அடிப்படையாகக் கொண்டு இறைவனையும், இறைநிலையையும் கண்டு தெளிதலே ஆகும் என எடுத்துரைக்கிறார்.

## எதிர்கால ஆய்வு

சிவவாக்கியரின் பாடல்களில் காணப்பெறும் வாழ்வியல் சிந்தனைகளை வெளிக்கொணர்வதின் மூலம் பிற சித்தர்களின் பாடல்களில் நிறைந்திருக்கும் வாழ்வியல் கருத்துக்களை ஆராய்வதற்கும், வாழ்வியல் களஞ்சியமாம் சித்தர் இலக்கியம் தன்னை எதிர்காலத்தில் முழுமையாக ஆராய்வதற்கும், ஆய்வுகள் மேற்கொள்ள முற்படவும் இவ்வாய்வு முன்னோட்டமாகத் திகழ்கின்றது.

# முதன்மைச் சான்று நூல்கள்


அறிவொளி. அ. முனைவர்.(மூ.உ) — சித்தர் பாடல்கள் இரு தொகுதிகள்,மு.ப. டிசம்பர் - 2006 வர்த்தமானன் பதிப்பகம்,சென்னை—17

மெய்யப்பன். ச. டாக்டர் (ப. ஆ) — சித்தர் பாடல்கள்,ம.ப. 1996 மணிவாசகர்பதிப்பகம்,சென்னை—600108.


## துணைநூற்பட்டியல்


அண்ணாமலை. சுப. டாக்டர். (ப.ஆ) — திருமந்திரம் (இரு தொகுதிகள்), மு.ப.1997 இந்தியப் பண்பாடு—ஆராய்ச்சிநிறுவனம். சென்னை—14

அரிசுந்தரமணி. ஆ. — அகிலத்திரட்டுஅம்மானைபாராயணஉரை, ஐயா குடும்பவெளியீடு.

அருணாசலம். ப. டாக்டர். — நம் நாட்டுச் சித்தர்கள், இ.ப 1983, பாரிபுத்தகப் பண்ணை.சென்னை—95.

அருணாசலம். மு. — தமிழ் இலக்கியவரலாறு, 14- ஆம் நூற்றாண்டு, மு.ப.2005 திபார்க்கர் வெளியீடு,சென்னை.

ஆனந்தரவிசாஸ்திரி. க.ஆ — .சித்தர்களின் சமுதாயச் சிந்தனைகள், மு.ப.2009இபாவைபப்ளிகேஷன்ஸ், சென்னை—14

இராமசாமிஇமு.பெரி.மு — திருவள்ளுவர் திருக்குறள் ஶ்ரீ இந்துப் பப்ளிகேஷன்ஸ் சென்னை 1995,ஐந்தாம் பதிப்பு

இளங்கம்பன். டாக்டர். — தத்துவக் குயில்கள்இ மு.ப.1987 பழம்நீ பதிப்பகம ,மதுரை—1

இளமதிசானகிராமன். டாக்டர். — சித்தர்களும் சமூகப்பார்வையும், மு.ப.1990 குறிஞ்சிப் பதிப்பகம்இபுதுச்சேரி—14

உமாபதிசிவாச்ச்சியார். — திருவருட்பயன், சமயம் வெளியீடு , மதுரை.

கங்காதரன். ச. — சைவசித்தாந்தஅடிப்படைக் கொள்கைகளும் வரலாறும்இமு.ப. 1993, அங்கயற்கண்ணிஅகம்,மதுரை.

கணபதி. டி.என்.பேராசிரியர். — சித்தர்களின் குறியீட்டுமொழியும், மு.ப.2008 திருமூலரின் சூனியசம்பாஷணையும், ரவிபப்ளிகேஷன்ஸ்,சென்னை—83

கணேஷ்.பொ. — சித்தர் பூமி,கங்கைபுத்தகநிலையம், மு.ப. 2004.சென்னை—17 கீதாஞ்சலிபிரசுரம்இசென்னை—26

கருணாநிதி. ஆ. முனைவர். (தொ.ஆ) — சித்தர் இலக்கியங்களில் சமூகப்பார்வை, மு.ப.2007,பார்வைபப்ளிகேஷன்ஸ், சென்னை—14

கலாவதி. இரா. டாக்டர். — சித்தர் பாடல்களில் நடப்பியல்,மு.ப.2008 காவ்யாவெளியீடு,சென்னை—24

காயரோகணர். ப.ச. டாக்டர். — சித்தர் கண்டசெம்பொருள், மு.ப.1986 நான்காம் தமிழ்ச்சித்தர் கருத்தரங்கம் வெளியீடு.மதுரை.

கானமஞ்சரிசம்பத்குமார். காலத்தை வென்ற சித்தரகளின் காயகல்பக்கலை (சாகாக் கலை) மு.ப.2008

குணங்குடி மஸ்தான்இ குணங்குடி மஸ்தான் சாகிபு. மு.ப.1939 திருப்பாடற்றிரட்டு, பி.நா.சி.பிரதர்ஸ் வெளியீடு,சென்னை.

குறுந்தொகை உவே.சா.,பதிப்பு,சென்னை 1937.

கேரி மேல்னிக், ஹார்வர்ட் ஸ்மித்ஸநியன் சென்டர் ∴பார் அஸ்ட்ரோ∵பிசிக்ஸ் அண்டடேவிட் நியுகபீல்ட். தி ஹார்ட்வேர்ட் யுனிவர்சிட்டி. ஏப்ரல். 23.1998

கைலாசபதி. க. ஒப்பியல் இலக்கியம்,மு.ப. 1969 பாரிநிலையம்,சென்னை–1

கைலாஷ்நாத்யோகி. சித்தர் களஞ்சியம், மு.ப.2010 கற்பகம் புத்தகாலயம்,சென்னை–17

கோமதி சூரியமூர்த்தி திருஞாணசம்பந்தர் தேவாரமும் சைவ சிந்தாந்தக் கருத்துக்களும் மு.ப. 1994

கோவிந்தன். த. சித்தர் பாடல்கள் ஐ.ப.1992. பூம்புகார் பதிப்பகம்,சென்னை. ஆழ்வார் நகர், மதுரை.

கோவிந்தன் மார்ஷல் பாபாஜியும் பதினெண் சித்தர் கிரியா யோக மரபும்,பாபாஜி யோக ஆசிரியர் அறக்கட்டளை, பெங்களுரு

சண்முக சுந்தரம்.சு நாட்டுப்புற இலக்கியத்தின் செல்வாக்கு மு.ப. 1976, மணிவாசகர் நூலகம்

சண்முகவடிவு.வு.ந முனைவர் சித்தர்கள் காட்டும் சமுதாயம் CIIL மானசகங்கோத்திரி மைசூர்

| | |
|---|---|
| சந்திரசேகரன்.ப | சிவலிங்கம் (எ) பீனியல்சுரபி<br>சிவம் பதிப்பகம் குமாரசாமி பாளையம்<br>நாமக்கல் மாவட்டம் |
| சந்திரசேகரன்.சீ.புலவர் | சித்தர் தரிசனம்<br>விஜயா பதிப்பகம் கோவை |
| சம்பத்.இரா | இலக்கியமும் இலக்கிய கோட்பாடும்<br>மு.ப. 2006 உமா பதிப்பகம்<br>புதுச்சேரி-13 |
| சற்குணன் சை | சித்தர் கருவூலம்<br>சைவமணி பதிப்பகம், திருச்சி-102 |
| . | |
| சாந்தி குமார சாமிகள் அ.வே தவத்திரு | குமர குருபரர்<br>பாலாஜி வாளகம் மதுரை |
| சாந்தி குமார சுவாமிகள் ஸ்ரீலஸ்ரீ தவத்திரு | முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழில்<br>சைவ சிந்தாந்தக் கருத்துக்கள்<br>பாலாஜி வாளகம் மதுரை |
| சாமிநாத ஐயர் .உவே | குறுந்தொகை<br>மு.ப 1962 உ.வே.ச நூலகம்<br>சென்னை |
| சாம்பசிவனார் .ச | திருவாசகத்தில் சைவ சிந்தாந்தக்<br>கருத்துக்கள் மு.ப.1992<br>வளவன் வெளியீடு மதுரை |
| சாரங்கபாணி,ஏ.ஆர். | சித்தர் நெறி,மு.ப. 1995<br>மணிவாசகர் பதிப்பகம்,சென்னை–600108. |
| சிங்கார வேலு முதலியார் | அபிதான சிந்தாமணி<br>ஏசியன் எசுகேஷன் சர்வீஸ் தில்லி |
| சிங்காரவேலுமுதலியார், | ஆஇஅபிதானசிந்தாமணி,<br>ஆசியான் எஜிகேஷனல் சர்வீஸஸ்<br>புதுடெல்லி, 1982 |

சிதம்பரனார். சாமி. — சித்தர்கள் கண்டவிஞ்ஞானம்,தத்துவம்,
நா.ப. 1974, இலக்கியம் நிலையம்.
சென்னை–94

சிதம்பரனார் சுவாமி — சித்தர் கண்ட விஞ்ஞானம் தத்துவம்
நா.ப. 1974
இலக்கிய நிலையம் சென்னை.

சிதம்பரனார்,சாமி — சித்தர் கண்டவிஞ்ஞானதத்துவம்
சிவகாமிசிதம்பரனார், இலக்கியநிலையம்,
சென்னை, 1974.

சித்பவானந்தர் சுவாமி — ராஜ யோக விளக்கம்
இ.ப. 1975 ஸ்ரீ இராமகிருஷ்ண தபோவனம்
திருப்பராய்த்துறை,திருச்சி

சிவ ஞான சுவாமிகள்(உ_.ஆ) — சிவஞானபோதம்
சமாஜம் வெளியீடு சென்னை

சிவபிரகாச சுவாமிகள் — பிரபுலிங்க லீலை
கழக வெளியீடு சென்னை

சிவபிரியா.முனைவர் — திருமந்திரம் ஒர் எளிய அறிமுகம்
மு.ப. 2001
சந்தியா பதிப்பகம் சென்னை-8.

சிவானந்த பரமஹம்சர்.சுவாமி — சித்த வேதம் சித்தர் சமாஷம் தலைமை
அலுவலக வெளியீடு கேரளா

சீத்தலைச் சாத்தனார் — மணிமேகலை, திருநெல்வேலி
தென்னிந்திய சைவசித்தாந்த
நாற்பதிப்புக் கழகம் லிமிடெட் சென்னை,
1975. , 1935, இரண்டாம் ’
பெருங்கதை,மிகத் காண்டம் சென்னை 15

சீத்தலைசாத்தனார் மணிமேகலை
மு.ப. 1958 வர்தமானன் பதிப்பகம்
சென்னை.

சுப்பிரமணியபிள்ளை.கே (ப.ஆ) திருஞாவுக்கரசர் தேவாரம்
திருப்பனந்தாள் மடம் திருப்பனந்தாள்

சுப்பிரமணிய நாவலர் (மால் மருகனார்) ஆதார யோகம்
மு.ப. 1979
செந்தமிழ் நிலையம் நாகர்கோவில்

சுப்பிரமணியன்.நா திருமூலர் திருநெறி
பொன்முடிப்பதிப்பகம் காரைக்குடி-1.

சுப்பு ரெட்டியார்.ந சைவ சித்தாந்தம் ஓர் அறிமுகம்
மு.ப 2001
கழக வெளியீடு, சென்னை.

சுனிதா பூபாலன் நாம் போற்றும் சித்தர்கள்
மு.ப 2007
வானதி பதிப்பகம் சென்னை – 17

செகதீசன், அ. தமிழ் இலக்கியத்தில் யோகம்,
லில்லிபதிப்பகம்,திருப்பதி, 1987.

செல்வகணபதி.இரா. டாக்டர் கோரக்கச் சித்தர் அருள் வரலாறு
மு.ப. 1986
பொது நிலைக் கழகம்
பொய்கை நல்லூர்

சேதுபதி வாழ்க்கை கணக்கு
மு.ப. 2006
பாவை பப்ளிக்கேஷன்
சென்னை-14.

சோமு. மீ ப. சித்தர் இலக்கியம்,
அண்ணாமலைப் பல்கலைக்கழக
வெளியீடு,1988.

தம்மண்ண செட்டியார்.என் காற்றே கடவுள் என்னும் சாகாக் கலை
மு.ப. 2009 நர்மதா பதிப்பகம்
சென்னை-17

திருவிளங்கம்.மு சிவஞானசித்தியார் சுபக்கம்
யாழ்பாணம் கூட்டுறவுத் தமிழ் நூற்பதிப்பு
கழகம். யாழ்பாணம்.

.திருவேங்கட பாரதி பாரதி தீபம்
மு.ப 1980
சென்னை பல்கழைகழகம்

தெய்வநாயகம்.சி.கோ. முனைவர். சித்தர் சிந்தனைகள்,மு.ப. டிசம்பர்—1998
மணிவாசகர் பதிப்பகம்,சென்னை—600108

தொல்காப்பியர் தொல்,பொருள்,
புறத்திணையியல்,ம.க.ப,
வெளியீடு,மதுரை, 1983

தேவநாதன்.சி.எஸ் உள்ளொளி பெருக்கும் சித்தர்கள்
ஶ்ரீ இந்து பப்ளிக்கேஷசன்ஸ்
சென்னை.

தேசிகாச்சார்இ டி. கே.வி.இ உடலே உன்னை ஆராதிக்கிறேன்.
விகடன் வெளியீடு,சென்னை, 1993,
இரண்டாம் பதிப்பு:

நாராயணன். க. டாக்டர் சித்தர் தத்துவம்,மாரிபதிப்பகம்,
தத்துவப் பேராசிரியர்,
மூ.ப. டிசம்பர் —2003இபுதுச்சேரி—8

நாராயணன், க. சித்தர் தத்துவம், தமிழ்ப்புத்தக நிலையம்,
சென்னை, 1988

பாலசுப்பிரமணியன். சி. டாக்டர். தமிழ்ப் பேராசிரியர். — தமிழ் இலக்கியவரலாறு,.ஒ.ப. 1998 மணிமலர்,சென்னை.

பிரேமா கிருஸ்ணசாமி — கருத்தரித்தல், உச்சி முதல் உள்ளங்கால் வரை சென்னை ஆனந்த விகடன். (2004)

புறநானூறு — திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக கழகம் லிமிடெட், சென்னை, 1977,மறுபதிப்பு,

மகாத்மாகாந்தி — அனாசக்தியோகம், திருமகள் விலாச அச்சநிலையம் , சென்னை, 1948,

மனோஸ் — தியானக்கலை, பூங்கொடிப் பதிப்பகம்,சென்னை,1993, இரண்டாம் பதிப்பு,

மாணிக்கவாசகம், இரா. — நம் நாட்டுச் சித்தர்கள், அன்னை அபிராமி அருள், சென்னை, 1978.

மாணிக்கவாசகம், இரா. — திருமந்திரஆராய்ச்சி, அன்னை அபிராமி அருள் , சென்னை, 1982.

முகம்மதுபாரூக்,கா, — மெய்ஞ்ஞானி. பீர் முகமதுஅப்பா இலக்கிய ஆய்வுக் கோவை, நன்னெறிப் பதிப்பகம், திருவிதாங்கோடு, 1976.

முத்துத்தம்பிப்பிள்ளை — அபிதானகோசம், ஆசியான் எஜிகேஷன்ஸ் சர்வீஸஸ், சென்னை, 1989, இரண்டாம் பதிப்பு. ’

மெய்யப்பன், ச, — சித்தர் பாடல்கள்இமணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1993.

ராமசுப்பிரமணியம்,கே. நவீனகாலத்தில் யோகப் பயிற்சி, நியூமென் பிரஸ்இ சென்னை. ஆண்டு இல்லை.

ராமச்சந்திரன், எஸ். பி., கல்பகாலம் வாழலாம், தாமரை நூலகம்இசென்னை, 1989,

ராஜன்.என் மக்கள் வாழ்வாங்கு வாழ சில யோகா சனங்கள்,

லாரா புளு டைம் வாட்டர்.ஃ.பௌனட் ஆன்டிஸ்டன்ப்ளேனட், ஜூலை 12, 2007

இபூங்கொடி பதிப்பகம்இசென்னை,1992

வரதராஜன், ஜி. திருமந்திரநெறிஇதெய்வதமிழ் மன்ற வெளியீடு,மாயூரம், 1976, சென்னை, 1989, இரண்டாம் பதிப்பு.

வரதராஜன் திருமந்திரம் (விரிவுரை), ஏசியன் அச்சகம்,

விவேகானந்தர், தியானமும் அதன் முறையும், ஸ்ரீராம் கிருஷ்ணமடம் , சென்னை,ஆண்டு, இல்லை. 2.

விஜயரெகுநாதன். நா. இன்றையயோகநிலையம் சித்தர் பாடல்களின் பயன்பாடும், ஜூன் –2004 திபார்க்கர் பதிப்பகம்,சென்னை–14

வேதாத்திரிமகரிஷி மனவளக்கலை, வேதாத்திரி பதிப்பகம˙,ஈரோடு, 1988,நான்காம் பதிப்பு

வேதாத்திரிமகரிஷி காயகல்பபயிற்சிகுறிப்பேடு, வேதாத்திரி பதிப்பகம்,ஈரோடு,

ஜெய்சங்கர்,எம்.ஏ — பதஞ்சலியின் யோகசூத்ரம், கடலங் குடிபப்ளிகேசன்ஸ்,சென்னை, 1993,இரண்டாம் பதிப்பு:

ஸ்ரீசுந்தரம் — ராஜயோகம், யோகாபப்ளிசிங் ஹவுஸ். பெங்களூர், 1993 35.

ஸ்ரீராமகிருஷ்ணர் — உபதேச மஞ்ஜரீ, ராமகிருஷ்ண தபோவனம், திருப்பராய்துறை,ஆண்டு இல்லை.

ஸ்பெஷல் ரிப்போர்ட் — வாட்டர் வேப்பர் இன் தி கிளைமேட் சிஸ்டம். (ஆகஸ்ட்) டிசம்பர் 1995

## வலைதளச் சான்று

விக்கிபீடியா — உயிரினங்களின் பரிணாம வரலாறு.

விக்கிபீடியா, — பாலணு

விக்கிபீடியா — உயிரணுக்கரு

விக்கிபீடியா — கருவணு

விக்கிபீடியா — பிற பாலூட்டிகள

விக்கிபீடியா — தாவரங்கள

விக்கிபீடியா — விந்து

## ஆங்கில நூல்கள்

Alain ,Danielon — Yoga – The method of Re – Integration. Page – 7

Ball. P. — The Elements. A very short introduction, Oxford University Published. (2004).

Ball. P. The Elements. A very short introduction, Oxford University Published. (2004).

Bruce Alberts Cell Movement and the Shapping of the Vertebrate Body, in chapter 21 Molecular Biology of the Cell Fourth Edition. Published by Garland Science. (2002)

Carl R. Rogers, Becoming a Person. P. 17
Karl Heim, Christian Faith and Natural Science ॰. 36 (21) Messengers scientists astromised to find water in mercury thin atmosphere plantsry society ( 2008 – 07 – 03 ) CIA – The world fact book – central intelligence agency.

Comphell Neil. A. Brad . Exploring Life Boshen Massastiusetts

Czaiya, AD, and Tripathi, AB Stormatetites and Microfossiles Precambrian

Earths Early Atmosphere Universe Today (February 5, 2012)

Emsley. J Nature's Building Block an A-Z Guids to the Elements. Oxford University Published. (2003)

Jeya .P. Works of cittars and their Place in Hindu Religious Thought and Tamil Literature. Page No : 386

Jaya.P Works of cittars and theirs places in Hindu Religious thought in Tamil Literature. Pg – 406

Jhon Wiley Hand Book of Plant Science Chichester, West Sussex, England,.2007

John Campbell Oman, The Mystics, Ascetics and Saints of India Oriental Publishers (1973)

Johnstone, Adam, Biolody, Fact and Practices for a level, Oxford University Press

Lama AnagarikaGovinda, Foundations of Tibetan Mysticism, B.I. Publications (1977)

Mosby's Medical Dictionary Germinal Stage., 8th Edition Elsevien

Moskowitz, Clara Life Building Blocks may Have formed in Dust Around Young sun space.com. (29. March 2012)

Nicholas Wade Meet Luca the Ancerstor of all living things. New York Times ( 25 July 2016 ).

Online org. Definition of Ovvum Biology Oogenesis. Dr. uzwiak New Jersey State University.

Peter Hamilton Rveen, George. Brooks Jhonson Biology MC.Graw Hill Education P. 68 ( 2002 )

P.Goldreich, W.R. Ward (1973) The Farmation of Planetesimals, Astrophysical Journal 183: 1051 – 1062

Radha Krishnan, S. Dr. History of Philosophy Eastern & Western Vol. I

Rohit Mehta The fullnes of the void (The Yoga of Theosophy) Motilal Banarsidass.

Schopf.J.W, Kudryavtsew, AB Evidence of Archean Life. Research 158 – 141 – 155. (2007)

Schopf .J.W Fossil Evidence Archean Life. Trans R. soc Land B Biol science (2006)

Sherk, Stephanie Dianne Prenatal Development Gale Encyclopedia of Childrens Health 2006

ShyamSundarGoswami, Laya Yoga Routlede&Kegan Paul London.

Sivaram, K. Saivism in Philosophical Perspective MotilalBanarasidas (1973)

Subramanian &Madhavan V.R.(Eds) Heritage of the Tamils: Siddha Medicine I.I.T.S., Madras 113 (1983)

Subaramania Ayyar. A.V. — The Poetry and the Philosophy of the Tamil Siddhars. Page No : 39

Swami Prabhavananda, — Patanjali yoga Sutras
Sri Ramakrishna Math
Madras - India.

The Biology of Prenatal Development.

Thomas J. Glover, comp. — Pocket Ref.3rd ed.(Litteton : Sequio, 2003) p.324.which in turn citties geigy scientific tables, ciba limited, based, Switzerland 1984

Tomlin, E.W.S. — Eastern Philosophers - an Introduction
Hutchinson & Co., Ltd
London

Wibur s. Cott, — Five Approches of Literary Criticism –
Pag ( ㅂ ) -123

Wikipedia — NH. Medical Encyclopedia.

Wikipedia — Fertilization

Williamson. J. Heyden, — Pearson Prentice Hall. Biology (2006)

Yahoo Education — The Ovvum Gray's Anatomy of the Human Body Ovum online Medica Dictionary Cancer WEB New Castle University.

Zaehner, R.C., — Hindu and Muslim Mysticism, The Athlone Press University of London (1980)

## ஆய்வேடுகள்

பாண்டியன்.அ — சித்தர் சிவ வாக்கியர் முனைவர் பட்ட ஆய்வேடு, அழகப்பா பல்கழைகழகம் காரைக்குடி.

பாண்டியன்.கீ — சித்தர் பாடல்களில் வாழ்வியல் உண்மைகள் முனைவர் பட்ட ஆய்வேடு, பாரதிதாசன் பல்கழைகழகம், திருச்சி